    

ஸ்ரீ:

ஸ்ரீமத்யை கோதாயை நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

அஞ்சுகுடிக்கொரு சந்ததியான ஆண்டாள் அருளிய

## திருப்பாவை மூலமும்

பதவுரையும், அதன் வ்யாக்யானங்களான

மூவாயிரப்படி (மூன்று அரும்பதவுரைகளுடன்), ஆறாயிரப்படி,

ஈராயிரப்படி, நாலாயிரப்படிகளும்

ஸ்வாபதேசவ்யாக்யானங்களும், ப்ரமாணத்திரட்டு முதலானவையும் அடங்கிய

---

# திருப்பாவை வ்யாக்யானங்கள்

# (TIRUPPAVAI COMMENTARIES)

---


கிடைக்குமிடம் & பதிப்பாசிரியர்

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி**

ஆசிரியர், "ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்"

3B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.


---


ஸ்ரீ. ர. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளிவருகிறது.




---




1991

[ விலை ரூ. 250

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17

# பதிப்பாசிரியரின் முன்னுரை

"அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள் தம் செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய், பிஞ்சாய்ப்பழுத்தாளை ஆண்டாளை" என்று மாமுனிகள் உபதேசரத்தினமாலையில் அருளியபடியே, ஆழ்வார்கள் அனைவர்க்கும் ஞானப்பெண்ணாகப் பிறந்தவள் பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையாகிற ஆண்டாள். அவள் அருளிய திவ்யப்பிரபந்தங்கள்— திருப்பாவை, நாச்சியார் திருமொழி என இரண்டு. முதல் பிரபந்தமான திருப்பாவை மார்கழியில் ஆயிரக்கணக்கான இடங்களில் பலரால் உபந்யசிக்கப்பெறும் பெருமையைப்பெற்றது.

ஸகலசாஸ்திரங்களிலுமுள்ள எல்லா அர்த்தங்களும் இத்திருப்பாவையில் பொதிந்திருக்கின்றன:— (1) "நாராயணன்" (1) ஆகையாலே மேன்மையையும் "கோவிந்தன்" (28, 29) ஆகையாலே நீர்மையையும் உடையவனே பரப்பொருள் (2) "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே ஆவோம்" (29) என்கையாலே பகவச்சேஷத்வ பாரதந்திரியங்களும், எழுப்பும் (6 முதல் 15) பாட்டுக்களின்படி பாகவதசேஷத்வமும் ஜீவஸ்ரூபம் (3) "கறவைகள்" பாசுரத்தின்படி "நாமோ பிறரோ நமக்குத் தஞ்சமல்ல; நாராயணனே உபாயமாவான்" என்னும் உபாய ஸ்வரூபம் (4) "சிற்றஞ்சிறுகாலே" (28) பாசுரத்தின்படி "உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்கிறபடியே அவனுகந்த கைங்கர்யமும், எழுப்பும் பத்துப் பாசுரங்களின்படி பாகவதகைங்கர்யமுமே பலஸ்வரூபம் (5) "போய பிழையும் புகுதருவான் நின்றனவும்" (5) எனப்பட்ட புண்யபாபங்கள் தொடக்கமாகப் பதினைந்தாம் பாட்டில் உணர்த்தப்பெற்ற பாகவதாபசாரமீறாக உள்ளவை அனைத்தும் விரோதிஸ்வரூபம் என்று அர்த்தபஞ்சகமும் இத்திருப்பாவையில் அழகாக விவரிக்கப்பெற்றன.

இந்தத் திருப்பாவைக்குப் பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை "மூவாயிரப்படி" என்னும் தலைசிறந்த வியாக்கியானத்தை அருளினார். இது காலக்ஷேபக்ரந்தமாக ஸ்ரீவைஷ்ணவர்களால் கொள்ளப்பட்டிருந்தமையால் இதற்கு மூன்று அரும்பதவுரைகள் முன்னோர்களால் இயற்றப்பெற்றன. (இவற்றில் பெரிய அரும்பதவுரை ஒன்றே தமிழில் சே. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி பதிப்பில் வெளியிடப்பட்டுள்ளது. மற்ற இரு உரைகளும் தெலுங்கு லிபியிலேயே உள்ளன. பெரிய அரும்பதவுரையும், சின்ன அரும்பதவுரையும் வ்யாக்யானம் முழுவதற்கும் உள்ளது. குட்டி அரும்பதவுரை பதினாறும் பாட்டு வ்யாக்யானம் வரையிலேயே உள்ளது.) மூவாயிரப்படிக்கு விவரணமாக வடக்குத்திருவீதிப்பிள்ளையின் இரண்டாவது குமாரராய், ஆசார்ய ஹ்ருதயகாரரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரால் ஆறாயிரப்படி வ்யாக்யானம் அருளிச் செய்யப்பட்டது. நம்பிள்ளையின் சீடரான ஈயுண்ணிமாதவரின் குமாரரும் சீடருமான பத்மநாபரின் சீடரான நாலூர்ப்பிள்ளை என்னும் ஸௌம்யநாராயணரின் குமாரரும் சீடருமான தேவராஜர் என்னும் நாலூராச்சான்பிள்ளையின் சீடரான திருநாராயணபுரத்து ஆய் என்னும் ஜநந்யாசார்யர் இத்திருப்பாவைக்கு ஈராயிரப்படி, நாலாயிரப்படி என்னும் இரு வ்யாக்யானங்களை அருளினார். இவைதவிர சுத்த ஸத்வம் தொட்டாசார்யஸ்வாமியும், வானமாமலை மடஸ்தாபகரான ஜீயர்ஸ்வாமியும் ஸ்வாபதேசவ்யாக்யானங்களை அருளியுள்ளனர். இந்த நாலு வ்யாக்யானங்களும் இரு ஸ்வாபதேச வ்யாக்யானங்களும் பலரால் பலமுறை தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் பதிப்பிக்கப்பெற்றுள்ளன. இவற்றில் ஆங்காங்கு பல பாடப்பிறழ்வுகள் உள்ளன. இவையனைத்தையும் ஒரே ஸம்புடமாகப் பாடபேதங்களுடன் ப்ரமாணத்திரட்டு முதலானவற்றுடன் பதிப்பிக்க வேண்டும் என்னும் ஆசை நமக்கு நெடுநாளாக உண்டு ஸத்ஸம்ப்ரதாய க்ரந்தப்ரகாசநஸமிதியின் தலைவரான ஸ்ரீ. உ. வே. சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்யஸ்வாமியின் நியமனத்தினால் இப்பெரும்பணியை அடியேன் ஏற்றுக்கொண்டு அச்சிடத் தொடங்கினேன்.

இதற்கு அடியேனுக்கு உதவிபுரிந்த மஹாசயர்கள் பலர். ஸ்ரீ. உ. வே. திருநாங்கூர் (ப்ரதிவாதிபயங்கரம்) P. B. K. ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி தெலுங்கு லிபியிலிருக்கும் சின்ன அரும்பதவுரையையும், குட்டி அரும்பதவுரையையும் தமிழில் பெயர்த்து எழுதுவதிலும், பிழைதிருத்தம் முதலான வகைகளிலும் உதவியருளினர். திருப்பதி ஸ்ரீ. உ. வே. தி. அ. கிருஷ்ணமாசார்யஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவ க்ரந்தமுத்ராபகஸபையாரால் தெலுங்கு லிபியில் அச்சிடப்பெற்ற மூன்று அரும்பதவுரைகளுடன் கூடிய மூவாயிரப்படி ஆறுயிரப்படி ஈராயிரப்படி நாலாயிரப்படிப் பதிப்புகள், காஞ்சி ஸ்ரீ. உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமியாலும், மயிலை மாதவதாஸனாலும் தமிழில் அச்சிடப்பெற்ற மூவாயிரப்படி ஆறுயிரப்படிப் பதிப்புகள் ஆகியவற்றிலுள்ள பாடபேதங்களையும், தம்மால் ஊகிக்கப்படும் பல பாடத்திருத்தங்களையும், பிழைதிருத்தங்களையும் குறித்து அனுப்பி மஹோபகாரம் செய்தருளினர். இப் பாடபேதங்கள் இந்நூலின் இறுதியில் தனியாக அச்சிடப்பெற்றுள்ளன. இப்பாடபேதங்களில் பல உண்மையான பாடங்களையிதக்கும் தகுதி பெற்றிருக்கின்றன. மதுரைப்பேராசிரியர் Dr. R. அரங்கராஜன் ஸ்வாமி இந்த வ்யாக்யானங்களில் காணப்படும் ஐதிஹ்யங்களைத்தொகுத்து எழுதி அவற்றில் பலவற்றுக்கு விவரணமும், தமிழ் அருஞ்சொல் அகராதியும், பெயரகராதியும் எழுதி, சில பிழைதிருத்தங்களையும் குறித்தெழுதி உதவினர். வியாக்கியானங்களில் எடுக்கப்பட்ட சில பிரமாணங்களின் ஆகரமும், முழுவடிவமும் எழுதி உதவியவர்கள் ஸ்ரீ. உ. வே. (1) N. C. V. நரஸிம்ஹாசார்யஸ்வாமி, டைரக்டர் ஸ்ரீபாகவதம் ப்ராஜக்ட், திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி. (2) கா. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசார்யர் (கா. ஸ்ரீ. ஸ்ரீ.) ஸ்வாமி, 83, ஸ்ரீநகர் காலனி, ஹைதராபாத். (3) திருப்பதி தி. அ. கிருஷ்ணமாசார்யஸ்வாமி (76, ஸந்நிதி வீதி, காஞ்சீ-3). இவை இறுதியில் ப்ரமாணாகர பரிஶிஷ்டத்தில் தாப்பெற்றுள்ளன. (திருக்குடந்தை) மேலக்கொட்டையூர் பத்மநாபய்யங்கார் ஸ்வாமி சில பிழைதிருத்தங்களைக் குறித்தெழுதி உதவினர். பல ஸ்வாமிகள் குறித்தெழுதிய பிழைதிருத்தங்களும் அடியேனால் குறிக்கப் பெற்ற பிழைதிருத்தங்களும் இந்நூலின் இறுதியில் அச்சிடப்பெற்றுள்ளன. இப்பிழை திருத்தங்களை முதலில் செய்து கொண்டு, பாடபேதங்களை அந்தந்தப் பக்கங்களின் அடியில் எழுதிக்கொண்டு க்ரந்தத்தை ஸேவிப்பது நலம். ஸுதர்சன ஞான புத்திரர்களில் ஒருவரும், நமக்குத் துணையாகப் பல வருடங்களாக நம் வெளியிடுகளுக்குப் பல வகைகளிலும் உதவிவருபவருமான திருவெள்ளறை மேலத்திருமாளிகை ஸ்ரீ. உ. வே ஸௌம்யநாராயணாசார்யஸ்வாமி திவ்யப்ரபந்த மேற்கோள்களின் ஆகரங்களைத் தேடி எழுதுவது, புருப்களைத் திருத்துவது, ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களை அகர வரிசைப்படுத்துவது முதலான பலவகைகளில் இப்பதிப்புக்கு உதவினர். இந்தஸ்வாமிகள் அனைவர்க்கும் ஸ்ரீவைஷ்ணவவுலகம் பல்லாண்டு பாடக் கடமைப்பட்டுள்ளது.

இத்திருப்பாவைக்கு ஸ்ரீ வைஷ்ணவஸுதர்ஶன ஸ்ரீ ஸூக்திமாலா ஸ்தாபகரான எந்தையார் நாற்பதுவருடங்களுக்கு முன்பே எழுதிய எளியநடைவிவரணத்தின் நான்காம்பதிப்பு அவரது நூற்றாண்டு விழா நினைவுமலராக அண்மையில் வெளியிடப்பெற்றுள்ளது. (ரூ 20 விலையில் ஸுதர்சனம் காரியாலயத்தில் கிடைக்கும்); நாச்சியார் திருமொழி வ்யாக்யானமும் எளிய நடைவிவரணத்துடன் ப்ரபவ ஐப்பசித் திருமூலத்தில் வெளியிடப் பெற்றது. (ரூ 40 விலையில்) நம் காரியாலயத்தில் கிடைக்கும்.

திருப்பாவைக்குள்ள எல்லா வ்யாக்யானங்களையும், ப்ரமாணத்திரட்டு முதலானவற்றோடு அளிக்கும் இந்நூலைப்பெற்று ஆத்திகவுலகம் பயனடைந்து, பகவத்விஷயப்பதிப்பும் இவ்வண்ணமே நிறைவடைய ஆண்டாள் கருணையைப் பிரார்த்திக்கும்படி அகில ஸ்ரீவைஷ்ணவர்களையும் பிரார்த்திக்கிறேன்.

பிரஜோத்பத்தி
விஜயதசமி (18-10-91)

தொண்டரடிப் பொடி
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்
'ஸுதர்சனம்' ஆசிரியர்.

# ஆண்டாள் வைபவம்

**கர்க்கடே (ஆஷாடே4) பூர்வப2ல்கு3ந்யாம் துளஸீகாநநோத்3ப4வாம் |**
**பாண்ட்3யே விஶ்வம்ப4ராம் கோ3தா3ம் வந்தே3 ஸ்ரீரங்க3நாயகீம் ||**

[பாண்டிய தேசத்தில் ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாருடைய துளஸித் தோட்டத்தில் தோன்றியவளாய், பூ4மிதே3வியின் அவதாரமாகத் திருவாடிப்பூரத்தில் அவதரித்தவளாய், ஸ்ரீரங்கநாதனின் பத்னியானவளான கோதை எனப்படும் ஆண்டாளை வணங்குகிறேன்.]

தே3வஸ்ய மஹிஷீம் தி3வ்யாம் ஆதௌ3 கோ3தா3முபாஸ்மஹே |
யந்மௌலிமாலிகாம் ப்ரீத்யா ஸ்வீகரோதி ஸ்வயம் ப்ரபு4: ||

[எவள் சூடிக்களைந்த மாலையை ஸர்வேஶ்வரனே உகப்புடன் ஏற்றுக் கொள்கிறானோ, விஷ்ணுவின் தி3வ்யமஹிஷியான அத்தகைய கோதையை முதலிலேயே உபாஸிக்கிறோம்.]

ஶுசிமாஸி பாண்ட்3யபு4வி பூர்வப2ல்கு3நீக3நபே4 நவீநதுளஸீவநாந்தராத் |
உதி3தாமுதா3ரகு3ணரங்க3நாயகப்ரியவல்லபா4ம் வஸுமதீமுபாஸ்மஹே ||

[பாண்டியதேசத்தில் ஆடிமாதத்தில், பூரமென்னும் சிறந்த நக்ஷத்திரத்தில், புதிய துளஸித் தோட்டத்தின் நடுவினின்றும் அவதரித்தவளாய், க3ம்பீ4ரமான கு3ணங்களையுடைய ரங்கநாதனுக்கு இனிய மனைவியாய், பூ4மிப்பிராட்டியின் அம்ஶமான ஆண்டாளை உபாஸனை செய்யக்கடவோம்.]

ஸித்3த4ாநாம் ஶரதா3ம் கலாவபக3மே வர்ஷே நளாக்2யே ரவௌ
யாதே கர்க்கடகம் வித4ாவுபசிதே ஷஷ்டே2ऽஹநி ஸ்ரீமதி |
நக்ஷத்ரேऽர்யமதை3வதே க்ஷிதிபு4வோ வாரே சதுர்த்2யாம் திதௌ2
கோ3தா3 ப்ராது3ரபூ4த3சிந்த்யமஹிமா ஸ்ரீவிஷ்ணுசித்தாத்மஜா ||

[கலியுகத்தில், 'ஸித்3த4' என்னும் இரண்டு எழுத்துக்களால் (கடபயாதி3 ஸங்க்2யைப்படி) கிடைத்த தொண்ணூற்றேழு வருடங்கள் கழிந்தவளவில், நள வருஷத்தில் ஸூர்யன் கடகராசியை அடைந்திருக்கும் ஆடிமாதத்தில், சந்திரன் வளரும் சுக்ல பக்ஷத்தில், ஆறாவது தேதியில், அர்யமாவை தே3வதையாகக் கொண்ட அழகிய பூர நன்னாளில், செவ்வாய்க்கிழமையிலே சதுர்த்தி2 திதியில் எண்ணமுடியாத பெருமையையுடைய ஸ்ரீ விஷ்ணுசித்தருடைய பெண்ணான கோ3தா3தே3வி அவதரித்தருளினாள்.]

முற்கூறிய தனியன்களிலும் வைப4வ ஶ்லோகங்களிலும் முன்னோர்கள் அநுஸந்தி4த்த ரீதியில், கலிபிறந்து தொண்ணூற்றேழு வருடங்களுக்குப் பிறகு தொண்ணூற்றெட்டாவதான நள வருடத்தில், ஆடிமாதம் ஶுக்லபக்ஷம் சதுர்த்தி2 செவ்வாய்க்கிழமை கூடிய பூரநக்ஷத்திரத்தில், பூ4மிப்பிராட்டியாரின் அம்ஶாவதாரமாய், ஸ்ரீ வில்லிபுத்தூரில் பெரியாழ்வாருடைய துளஸித்

தோட்டத்தில் திருத்துழாய் மண்ணின் கீழே தோன்றினவள் ஆண்டாள் என்று குருபரம்பரை நூல்கள் கூறும். த்ரேதாயுகத்திலே விதேஹ தேசத்தில் மிதிலா நகரில் ஸ்ரீ ஜனகமஹாராஜன் யாகசாலே அமைப்பதற்காகக் கலப்பைகொண்டு பூமியை உழுகையில் ஸ்ரீ தேவியின் அவதாரமான ஸீதாதேவி தோன்றியது போல, கலியுகத்திலே பாண்டிய நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வார் திருத்துழாய்ப்பாத்தி அமைப்பதற்காகக் களைக்கொட்டுக்கொண்டு திருநந்தவனத்தைக் கொத்துகையில் பூதேவியின் அம்ஸமாகத் திருத்துழாய் மண்ணின் கீழே இந்த கோதாதேவியும் அயோநிஜையாகத் தோன்றினாள். பிள்ளைப் பேறற்ற பெரியாழ்வாரும், பரமதரித்ரன் பெருநிதி எடுத்ததுபோலே அக்குழந்தையை எடுத்துத் தமது தர்மபத்னியின் கையில் கொடுத்து, கோதை என்று திருநாமமசாத்தி "ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள்போல வளர்த்தேன்" [பெரியாழ்-திரு 3-8-4] என்று தாமே அருளிச்செய்தபடி அக்குழந்தையை அருமையாகச் சீராட்டிப் பாராட்டிப் பாலித்து வளர்த்து அவளுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களைச்செய்து பரம ஜ்ஞானத்தையும் ஊட்டி வளர்த்தார்.

உலகெல்லாம் வியக்கும்படி இளமையிலேயே எம்பெருமானிடத்திலே பக்திப் பெருங்காதல்கொண்டு, பிஞ்சாய்ப்பழுத்தவளாய், அவனையே மணம் செய்துகொள்ளக்கருதி, அப்பெருமானது பெருமைகளையே எப்பொழுதும் நினைத்தல் துதித்தல் முதலியன செய்து நின்றாள் அச்சுரும்பார் குழற்கோதை. தினந்தோறும் விஷ்ணுசித்தர் வடபெருங் கோயிலுடையானுக்குச் சாத்துவதற்காகக் கட்டிவைத்த திருமாலையை, அவரில்லாத ஸமயம்பார்த்து எடுத்து, தன்குழலிலே தரித்துக்கொண்டு, சிறந்த ஆடையாபரணங்களையும் அணிந்துகொண்டு "அப்பெருமானுக்கு நான் பொருந்தியிருக்கிறேனோ? இல்லையோ?" என்று தன் அழகைக் கண்ணாடியிலே கண்டு பெரியாழ்வார் வருவதற்கு முன்பே மலர்மாலையைக் களைந்து முன்போலவே பூக்கூடையில் நலங்காமல் வைத்துவந்தாள். தமக்குத் தெரியாமல் நடக்கிற அதை உணராமல், ஆழ்வார் அம்மாலையைக் கொண்டுபோய்ப் பெருமாளுக்குச் சாத்திவர, பெருமாளும் உகப்புடன் சாத்திக்கொண்டிருந்தார். இப்படிப் பல நாள்கள் கழிந்தபின், ஒருநாள் வெளியிற்சென்ற ஆழ்வார் விரைவில் மீண்டு வந்தபோது கோதை பூமாலை சூடியிருப்பதைப் பார்த்துக்கோபம் கொண்டு "பெண்ணே! நீ செய்த இக்காரியம் எம்பெருமானுக்கு அபசாரமாகும். இனி இப்படிச் செய்வதற்கு நினைவும் கொள்ளாதே" என்று நங்கைக்கு நற்புத்தி சொல்லிவிட்டு, அன்று பெருமாளுக்கு மாலைசாத்தாமல், அக்கைங்கரியத்திற்கு இடையூறு நேர்ந்ததற்கு மிகவும் மனம் வருந்தியிருந்தார். அன்றிரவு வடபெரும் கோயிலுடையான் ஆழ்வாருடைய கனவிலேதோன்றி "இன்று நீர் நமக்கு மாலை கொண்டுவராதது ஏன்?" என்று கேட்க, அவர் தம் திருமகளாருடைய தவறான காரியத்தை விண்ணப்பிக்க, அது கேட்டு அப்பெருமான் "அவள் சூடிக்கொடுத்த மாலையேகாணும் நறுமணம்

தோட்டத்தில் திருத்துழாய் மண்ணின் கீழே தோன்றினவள் ஆண்டாள் என்று குருபரம்பரை நூல்கள் கூறும். த்ரேதாயுகத்திலே விதேஹ தேசத்தில் மிதிலா நகரில் ஸ்ரீ ஜனகமஹாராஜன் யாகசாலை அமைப்பதற்காகக் கலப்பைகொண்டு பூமியை உழுகையில் ஸ்ரீ தேவியின் அவதாரமான ஸீதாதேவி தோன்றியது போல, கலியுகத்திலே பாண்டிய நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வார் திருத்துழாய்ப்பாத்தி அமைப்பதற்காகக் களைக்கொட்டுக்கொண்டு திருநந்தவனத்தைக் கொத்துகையில் பூதேவியின் அம்சமாகத் திருத்துழாய் மண்ணின் கீழே இந்த கோதாதேவியும் அயோநிஜையாகத் தோன்றினாள். பிள்ளைப் பேறற்ற பெரியாழ்வாரும், பரமதரித்ரன் பெருநிதி எடுத்ததுபோலே அக் குழந்தையை எடுத்துத் தமது தர்மபத்னியின் கையில் கொடுத்து, கோதை என்று திருநாமமசாதது ''ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள்போல வளர்த்தேன்'' [பெரியாழ்-திரு 3.8-4] என்று தாமே அருளிச்செய்தபடி அக்குழந்தையை அருமையாகச் சீராட்டிப் பாராட்டிப் பாலித்து வளர்த்து அவளுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களைச்செய்து பரம ஜ்ஞானத்தையும் ஊட்டி வளர்த்தார்.

உலகெல்லாம் வியக்கும்படி இளமையிலேயே எம்பெருமானிடத்திலே பக்திப் பெருங்காதல்கொண்டு, பிஞ்சாய்ப்பழுத்தவளாய், அவனையே மணம் செய்துகொள்ளக்கருதி, அப்பெருமானது பெருமைகளையே எப்பொழுதும் நினைத்தல் துதித்தல் முதலியன செய்து நினருள் அச்சுரும்பார் குழற்கோதை. தினந்தோறும் விஷ்ணுசித்தர் வடபெருங் கோயிலுடையானுக்குச் சாத்துவதற்காகக் கட்டிவைத்த திருமாலையை, அவரில்லாத ஸமயம்பார்த்து எடுத்து, தன்குழலிலே தரித்துக்கொண்டு, சிறந்த ஆடையாபரணங்களையும் அணிந்து கொண்டு ''அப்பெருமானுக்கு நான் பொருந்தியிருக்கிறேனோ? இல்லையோ?' என்று தன் அழகைக் கண்ணாடியிலே கண்டு பெரியாழ்வார் வருவதற்கு முன்பே மலர்மாலையைக் களைந்து முன்போலவே பூக்கூடையில் நலங்காமல் வைத்துவந்தாள். தமக்குத் தெரியாமல் நடக்கிற அதை உணராமல், ஆழ்வார் அம்மாலையைக் கொண்டுபோய்ப் பெருமாளுக்குச் சாத்திவர, பெருமாளும் உகப்புடன் சாத்திக்கொண்டிருந்தார். இப்படிப் பல நாள்கள் கழிந்தபின், ஒருநாள் வெளியிற்சென்ற ஆழ்வார் விரைவில் மீண்டு வந்தபோது கோதை பூமாலை சூடியிருப்பதைப் பார்த்துக்கோபம் கொண்டு ''பெண்ணே! நீ செய்த இக்காரியம் எம்பெருமானுக்கு அபசாரமாகும். இனி இப்படிச் செய்வதற்கு நினைவும் கொள்ளாதே'' என்று நங்கைக்கு நற்புத்தி சொல்லிவிட்டு, அன்று பெருமாளுக்கு மாலைசாத்தாமல், அக்கைங்கரியத்திற்கு இடையூறு நேர்ந்ததற்கு மிகவும் மனம் வருந்தியிருந்தார். அன்றிரவு வடபெரும் கோயிலுடையான் ஆழ்வாருடைய கனவிலேதோன்றி ''இன்று நீர் நமக்கு மாலை கொண்டுவராதது ஏன்?'' என்று கேட்க, அவர் தம் திருமகளாருடைய தவறான காரியத்தை விண்ணப்பிக்க, அது கேட்டு அப்பெருமான் ''அவள் சூடிக்கொடுத்த மாலையேகாணும் நறுமணம்

மிக்கு, நமக்கு மிக உகப்பாயிருப்பது! ஆகையால் இனி நாள்தோறும் அவள்
சூடிக்களைந்த மாலையையே நமக்குக் கொண்டு வருவீர்'' என்று அருளிச் செய்
தான். உடனே கண்விழித்த பெரியாழ்வார் தாம் பெற்றெடுத்த பெண்பிள்ளை
எம்பெருமானுடைய தேவிகளில் ஒருத்தியின் அவதாரமே என்று அறுதியிட்டு
அவளுக்கு அது காரணமாக ''ஆண்டாள்'' என்றும், எம்பெருமானுக்குரிய மலர்
மாலையைத் தான் சூடிக்கொண்டு பார்த்துப் பின்பு அவனுக்குக்கொடுத்தது
காரணமாக ''சூடிக்கொடுத்த நாச்சியார்'' என்றும் திருநாமம் இட்டு அழைத்து
வந்தார்.

பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையாகிற ஆண்டாளுடைய
ஜ்ஞான பக்திகள் க்ஷணந்தோறும் பகவத்விஷயத்திலே கைவளர்ந்து வந்தன.
ஒரு கொள் கொம்பிலே சேர்க்கவேண்டும் பருவத்தையடைந்தாள். ''மானிடவர்க்
கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்'' என்னும்படியான உறுதியையுடையவ
ளானாள். அவளுக்கு வடபெருங்கோயிலுடையானுடன் தழுவி முழுசிப் பரிமாற
வேணும் என்னும் ஆற்றாமை கரைபுரண்டது. அப்பெருமானிடம் சென்றபோது
அவன் முகங்கொடாதேயிருந்தான். ''ஐஶ்வர்யார்த்திகளுக்காகத் திருவுலகளந்
தருளின களைப்பாலே சாய்ந்து கிடக்கிறான்போலும்'' என்று நினைத்துத் தன்
திருமுலைத்தடங்களாலே அப்பெருமானை நெருக்கினாள். அவ்வளவிலும் பேசக்
கண்டிலள். விசிறி முதலியவைகளாலே ஶிஶிரோபசாரம் பண்ணியும் எழுந்
திருக்கக் காணவில்லை. ''இது களைப்பல்ல; நம்மிடம் ப்ரணயாபராதத்தினாலே
முகங்கொடாதே கிடக்கிறான்'' என்றறிந்து வருந்தி ''இவனை அனுபவித்தா
ருண்டோ' என்று ஆராய்ந்தாள். ''திருவாய்ப்பாடியில் பெண்பிள்ளைகள் இவனை
அனுபவித்தார்கள்; ஆனால் அது காலாந்தரத்திலேயாகையாலே நாம் அதுக்கு உத
வப்பெற்றிலோம்'' என்று ஏங்கினாள். ''இனி அவன் உலாவிப்போன அடிச்சுவடும்,
அவனும் பெண்களுமாய்த் திளைத்த யமுனையும், அவன் எடுத்த கோவர்த்தன
மும் கிடந்ததாகில் அவற்றைக் கண்டாகிலும் உயிர்வாழ்வோம்'' என்று பார்த்து,
அவ்விடங்களுக்குப் போக பலமில்லாமையாலே கலங்கினாள். ''ஜனகராஜன்
திருமகளைப்போலே 'வில்' என்று ஒரு அவதிபெற்றிலேன்; நப்பின்னைப்பிராட்
டியைப்போலே ரிஷபங்கள் என்று ஒரு அவதிபெற்றிலேன் என்செய்வேன்?''
என்று நிலைதடுமாறினாள். அப்போது சில பெரியோர்கள் ''ராஸக்ரீடை செய்த
பிறகு க்ருஷ்ணனைப் பிரிந்த இடைப்பெண்கள் தங்கள் ஆற்றாமையாலே க்ருஷ்ண
னாகத் தங்களை பாவித்துக்கொண்டு உயிர்தரித்தார்கள்; அம்மாதிரியே நீயும் அனு
கரிப்பாயாக'' என்று உரைத்தனர். இவளும் 'க்ருஷ்ணனை அனுகரிப்பதைக்
காட்டிலும் அவனை அனுகரித்த பெண்களை அனுகரிப்பது நல்லது'' என்று
அறுதியிட்டு, ஸ்ரீவில்லிபுத்தூரைத் திருவாய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்களை
இடைப்பெண்களாகவும், தன்னை அவர்களிலே ஒருத்தியாகவும் வடபெருங்
கோயிலை ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையாகவும், வடபெருங்கோயிலுடையானை
க்ருஷ்ணனாகவும் பாவித்து இடைப்பெண்கள் நோற்ற நோன்பைத் தான்

நோற்கிருள். பூர்வநாப்ரகர்ஷத்தாலே (நினைவின் முதிர்ச்சியாலே) இவளுக்கு இடைநடையும், இடைமுடியும், இடைப்பேச்சும் முடைநாற்றமும் உண்டாயின. 'திருவாய்ப்பாடியில் மழைபொழியவேண்டும்' என்று நோன்பு நோற்கும்படி ஆயர்களால் நியமிக்கப்பெற்ற திருவாய்ப்பாடிப் பெண்கள் அதை வியாஜமாகக் கொண்டு கண்ணனைப் பெறுவதற்காக நோன்பு நோற்ற ப்ரகாரத்தை அனுகரித்து, பாதகங்கள் தீர்ப்பதாய், பரமனடி காட்டுவதாய், வேதம் அனைத்துக்கும் வித்தாவதான திருப்பாவையைப் பாடியருளினாள் ஆண்டாள்.

இவ்வநுகாரம் நாச்சியார் திருமொழியென்னும் இவளது மற்றொரு ப்ரபந்தத்திலும் தொடர்ந்தது. திருப்பாவையில் "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று முதற்பாட்டிலும், "கறவைகள் பின்சென்று" (28) "சிற்றம் சிறுகாலே" (29) என்னும் கடைசிப் பாசுரங்களிலும் எம்பெருமானே உபாயம் என்றும், அவன் உகப்புக்கான அடிமைசெய்வதே ப்ராப்யமென்றும், தன் உறுதியை அறுதியிட்டபின்பும், தான் விரும்பியபடி எம்பெருமானைப் பெருமையாலே அவனைப் பெறவேணும் என்னும் மிகுந்த த்வரை ஏற்பட்டு, அதனாலே அறிவு கலங்கி, நாச்சியார்திருமொழி முதற்பதிகமான "தையொரு திங்க"ளில் பிரிந்தாரைக் கூட்டும் இயல்புடைய காமதேவனை "அனங்கதேவா! வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே" என்று ஆஶ்ரயித்தாள். இது கண்டு பொருத எம்பெருமான் ஆனைக்கு வந்து உதவினாற்போலே விரைந்து வந்து முகங்காட்டி, ஊடலாலே தான் சிற்றில் இழைத்துக்கொண்டிருந்ததையும், அவன் பலாத்காரமாக இவளைப்பற்றி மெய்ப்பிணக்கிட்டதையும் (அணைத்ததையும்) பேசினாள் இரண்டாம் திருமொழியான நாமமாயிரத்தில். இப்பதிகத்தில் ஏற்பட்ட ஸம்ஶ்லேஷம் தொடர்ந்து நடந்தால், ஆனந்த மிகுதியினாலே அழிவை (உயிர் துரியாமையை) விளைத்துவிடும் என்று பயந்த உறவினர்கள் கண்ணனையும் ஆய்ச்சியரையும் பிரித்து நிலவறைகளிலே அடைக்க, அப்பிரிவாற்றாமையினாலே இவர்களுக்கு ப்ராணஹாநி உண்டாகும் நிலை ஏற்பட, அதுகண்ட உறவினர்கள் பெண்கள் நல்ல கணவனைப் பெறுவதற்குச் செய்யும் பனி நீராடுதல் என்னும் நோன்பைச் செய்வதற்காக இவர்களை வெளியில்விட, இவர்களும் கண்ணனைக் கூடியும் பிரிந்தும் படுகிற வருத்தங்களைத் தவிர்ப்பதற்காக அவன் அறியாதபடி ஒரு பொய்கைக்குச் சென்று ஆடைகளைக் களைந்து கரையில் வைத்துவிட்டு விரஹதாபம் ஆறும்படி பொய்கையிலே குளித்திருந்ததையும், அவனும் இவர்கள் அறியாதபடி அங்கு வந்து இவர்களுடைய ஆடைகளை எடுத்துக்கொண்டு கரையில் இருந்த குருந்தில் ஏறி வீற்றிருந்ததையும், இவர்களும் குளித்துக் கரையேறிப்பார்த்தவுடன் ஆடையாபரணங்களைக் காணாமல், இவனை மரத்தின் மேலே கண்டு, இவனை இரப்பார், ஏத்துவார், வாழ்த்துவார், சீறுவாராய்ப் பலவிதமாகக் கெஞ்சிகேட்க, அவனும் ஆடையாபரணங்களைக் கொடுத்து ஸம்ஶ்லேஷித்ததையும் பேசினாள் மூன்றாம் திருமொழியான கோழியழைப்பதில். ஸம்

ஸ்லேஷமெல்லாம் விஸ்லேஷத்திலேயே முடியுமாகையாலே, இந்தக் கூடலும் பிரிவிலே முடிய, "மறுபடியும் ஒருகால் இவனைக் கூடவல்லோமோ?" என்று கூடல் இழைத்ததைப் பேசினாள் நாலாம் திருமொழியான தெள்ளியாரில். அசேதனமான கூடல் மறுமொழி கூறாமையாலே சேதனமான குயிலைப்பார்த்து எம்பெருமான் வரும்படிக் கூவப் பிரார்த்திக்கிறாள் ஐந்தாம் திருமொழியான மன்னுபெரும்புகழில்.

குயில் கூவியும் அவன் வாராமையாலே மிகவும் வருத்தமுற்ற இவளை உயிர்தரிக்கச் செய்வதற்காக, இவள் விரும்பியிருந்த படிகளில் ஒன்றும் குறையாதபடி பாணிக்ரஹணம் ஈறாகக் கனவிலே அவன் இவளை அனுபவிக்கச்செய்ய, அவ்வநுபவத்தைத் தோழிக்குச் சொல்லி தரித்திருந்தபடியைச் சொல்லுகிறாள் ஆறும் திருமொழியான வாரணமாயிரத்தில். கனாக்கண்டவுடன் அவனோடு ஏற்பட்ட ஸம்ஸ்லேஷம் நீடிக்கப்பெறாமையாலே, அவனோடு எப்போதும் சேர்ந்திருக்கும் ஸ்ரீபாஞ்சஜன்யத்தை பகவதநுபவம் இருக்கும்படியைப் பலவாறு கேட்கிறாள் ஏழாம் திருமொழியான "கருப்பூரம் நாறுமோ"வில். அவன் வருவதாகச் சொல்லிப்போன மழைகாலத்தில் அவன் வாராமையாலே, மேகங்களைத் திருவேங்கடமுடையானுக்குத் தூதாக விட்டமையைப் பேசினாள் எட்டாம் திருமொழியான விண்ணீலமேலாப்பில். மேகங்களும் தூது செல்லாமல் நின்றவிடத்திலே நின்று மழை பொழிய, அதனாலே மழைகாலத்தில் உண்டாகும் இந்திரகோபங்கள், முல்லைகள், காயா முதலிய மலர்கள், களங்கனி முதலான கனிகள், வண்டினங்கள், பூஞ்சுனைகள் முதலானவை உண்டாகி எம்பெருமானுடைய திருமேனியையும் அவயவங்களையும் நினைவுபடுத்தித் தன்னை நலிவதைப் பேசினாள் ஒன்பதாம் திருமொழியான "சிந்துரச் செம்பொடி"யில். இப்படி இவற்றாலே நலிவு பெற்று "நமக்கு உயிர்தரிக்க வழி உண்டோ?" என்று ஆராய்ந்து, "மற்றவையெல்லாம் தப்பினாலும் பெரியாழ்வாரோடு நமக்குண்டான உறவு தப்பாது. அவன் ஸ்வாதந்த்ரியத்தையும் மாற்றி, நம்மை அவன் திருவடிகளில் சேர்த்தேவிடும்" என்று உறுதி பூண்டமையைப் பேசினாள் பத்தாம் திருமொழியான "கார்க்கோட"லில். இப்படி உறுதியோடு இருந்த பின்பும், தனக்கு முகங்கொடுக்கக் காணாமையாலே இவள் மிகவும் நோவுபட்டுகிடக்கிற நிலையைக் கண்டு தாய்மார் தோழிமார் முதலான பெண்பிள்ளைகள் இவளைக் காணவந்து திரண்டுகிடக்க "அவன் நம்மை வைத்த பரிசைப் பார்த்தீர்களா" என்று வெறுத்து வார்த்தை சொல்லி, பின்பு "நம்மைப் போன்ற சில பெண்களுக்கு உதவியவன் பெரியாழ்வார் பெற்றெடுத்த நமக்கும் உதவாதொழியான்" என்று ஒருபடி தரித்தமையைப் பேசினாள் பதினோராம் திருமொழியான "தாமுகக்கும் தம் கை"யில். இப்படி உறுதிபூண்டிருந்தும் முகம் காட்டாமையாலே, நடக்கவும் இயலாத நிலையை அடைந்து அருகில் இருப்பாரைப்பார்த்து, "அவன் இருக்கும் தேசத்திலே என்னைக்கொண்டுபோய்ச் சேருங்கள்" என்கிறாள் பனிரண்

டாம் திருமொழியான ''மற்றிருந்தீர்க''ளில், இவள் நிலையை அநுஸந்தித்து வருந்தியிருக்கையாலே, அருகில் இருந்தவர்களும் இவளைக் கொண்டுபோய் அவன் ஸம்பந்தமுள்ள மதுரைமுதலான தேசத்தில் சேர்க்கமுடியாமையாலே ''அவனோடு தொடர்புள்ள ஏதாவதொன்றைக் கொண்டுவந்து என்னைத் தொடச்செய்து உயிர்தரிக்கச் செய்யுங்கள்'' என்று அவர்களைப் பிரார்த்தித்ததைப் பேசினாள் பதின்மூன்றாம் திருமொழியான ''கண்ணனென்னும் கருந்தெய்வ'த்தில், இவளுக்குப் பரமபக்தி பர்யந்தம் விளையச்செய்வதற்காக, இவ்வளவிலும் அவன் காலதாமதம் செய்ய, அதனால் ஆற்றாமை கரைபுரண்டு, பெருவிடில் முடியும் நிலை ஏற்பட்டவளவிலே அவன் வந்து முகங்காட்டி இவளை விஷயீகரிக்க, அப்போது பிறந்த விடாயும் அதற்கு அநுகுணமாகப் பெற்ற பேறும், ஒருவரிடத்தில் வைத்துப் பேசவொண்ணாதபடி அளவிறந்திருக்கையாலே, ''கண்டீரே'' என்று கேட்கிறவர்கள் பாசுரத்தால் தனக்குப் பிறந்த விடாயையும், ''கண்டோம்' என்று பதில் சொல்லுகிறவர்கள் பாசுரத்தால் தான் பெற்ற பேற்றையும் அந்யாபதேஶத்தாலே சொல்லித் திருமொழியை நிறைவு படுத்துகிறாள் பதினாலாம் திருமொழியான 'பட்டிமேய்ந்'தில்.

இப்படி பகவதநுபவம் செய்துகொண்டு ஆண்டாள் வாழ்ந்து வருகையில், இவளுக்கு விவாஹத்துக்கேற்ற பருவம் வந்ததைக்கண்டு, பெரியாழ்வார் இவளுக்கேற்ற கணவனைக் காணப்பெறாமல் கவலைப்பட்டு, இவளையழைத்து ''நீ யாருக்கு வாழ்க்கைப்பட விரும்புகிறாய்?'' என்று கேட்க, ஆண்டாள் ''மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்'' என்று சொல்ல, பட்டர்பிரான் ''அப்படியானால் என்ன செய்வது?'' என்று கேட்க, கோதையும் ''பெருமாளையே மணம்புரிய விரும்புகிறேன்'' என்று உரைத்தனள். ஆழ்வாரும் ''நூற்றெட்டுத்திருப்பதி எம்பெருமான்களில் யாருக்கு வாழ்க்கைப்பட விரும்புகிறாய்?'' என்று கேட்க, ஆண்டாளும் ''அவரவர்களுடைய குணங்களையும், பெருமைகளையும் சொல்லியருளவேணும்'' என்று பிரார்த்திக்க, ஆழ்வாரும் வடபெருங்கோயிலுடையான் வைபவம் தொடக்கமாகப் பாண்டியநாட்டில் எம்பெருமான்கள் பெருமைகளையும், மலைநாட்டுத் திருப்பதி எம்பெருமான்களின் மேன்மைகளையும், வடவேங்கடம் தொடக்கமாகத் திருப்பிரிதி ஈறாக வடநாட்டுத் திருப்பதி எம்பெருமான்களின் வைபவங்களையும், தொண்டைநாட்டில் எம்பெருமான்களின் பெருமைகளையும், நடுநாட்டில் எம்பெருமான்களின் ஏற்றங்களையும், அழகியமணவாளன் முதலான சோழநாட்டில் எம்பெருமான்களின் சீர்மைகளையும் அருளிச்செய்ய, ஆண்டாளும் அதுகேட்டு ஆனந்தக்கண்ணீர் துளிக்க மயிர்க்கூச்செறியும் மேனியுடையளாய், அரங்கத்தின்னமுதருடைய குழலழகு வாயழகு கண்ணழகுகளைக்கேட்டுப் பெருங்காதல்கொண்டு மோஹித்து, ''வந்தானோ திருவரங்கன் வாரானோ என்றென்றே வளையும் சோரும்'' என்கிறபடியே மனமுருகி, மலர்க்கண்கள் பனிப்ப, அழகிய மணவாளனையே காமுற்று, பெருப்பெருத்த கண்ணாலங்கள் செய்யக் கணாக்கண்டு, அணியரங்கத்தம்மானுக்கே அற்றுத் தீர்ந்த காதலையுடையவளானாள்.

பெரியாழ்வாரும் ''கோதைக்குத் தக்க மணாளன் கோயிற்பிள்ளையான நம்பெருமாளே'' என்று அறுதியிட்டு, ''இது எப்படி நடக்கும்'' என்று கவலைப்

பட்டுக்கொண்டு கண்வளர்ந்தருள, திருவரங்கச் செல்வனும் ஆழ்வார் கனவிலே எழுந்தருளி, ''உம்முடைய பெண்ணை கோதையைக் கூட்டிக்கொண்டு நம் கோயிலுக்கு வாரீர். அவளுக்குத் தகுதியாக நாமே அவளைக் கைப்பிடிக்கிறோம்'' என்று அருளிச்செய்ய, ஆழ்வாரும் உகந்து கவலையற்றிருந்தார். நம்பெருமாளால் நியமிக்கப்பெற்ற திருவரங்கத்துக் கைங்கர்யபரர்கள் அவருடைய குடை சாமரம் திருவாலவட்டம் முதலான எல்லாப் பரிச்சதங்களோடும் ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்று, நம்பெருமாள் நியமனத்தை விண்ணப்பம் செய்ய, ஆழ்வாரும் மிக உகந்து ஆச்சர்யப்பட்டு வடபெருகோயிலுடையானுடைய அநுமதி கொண்டு மணிகளிழைத்த மூடு பல்லக்கிலே ஆண்டாளை எழுந்தருள்வித்துக் கொண்டு, வாத்யகோஷங்களுடன், தொண்டர்குழாம் புடைசூழ, ''ஆண்டாள் வந்தாள், சூடிக்கொடுத்தாள் வந்தாள். சுரும்பார்குழற்கோதை வந்தாள். திருப்பாவை பாடிய செல்வி வந்தாள். தென்னரங்கம் தொழும் தேசுடையாள் வந்தாள்'' என்று பலசின்னங்கள் பணிமாற வந்து, அழகியமணவாளனுடைய பெரியதிருமண்டபத்தே சென்று மூடுபல்லக்கை மூடியிருந்த தட்டுப்பாயை அகற்ற, சூடிக்கொடுத்த நாச்சியாரும் அனைவரும் காணும்படி—உதறி உடுத்த பட்டுச்சேலையும், சுற்றிய செங்கழுநீர்மாலையும், திருநெற்றியிலே கஸ்தூரி திருநாமமும், காதளவும் ஓடிக் கயல்போல் மிளிரும் கடைக்கண் விழியும் கொடியேரிடையுமாய், சிலம்பார்க்கச் சீரார்வளையொலிப்ப, அன்னமென்னடையும் கொண்டு அழகிய மணவாளன் திருமுன்பேசென்று உள்ளே புகுந்து, கண்களாரக்கண்டு, கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள் என்னும் பேறுபெற்று, நாகத்தணையை மிதித்தேறி, தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கரைச் சேர்ந்து, எப்போதும் திருவரங்கன் திருவடி வருடலாம்படி மறைந்தருள, இதைக்கண்ட ஆழ்வாரும் அவர் சிஷ்யரான வல்லபதேவர் முதலானாரும் ஆச்சர்யப்பட, திருவரங்கச் செல்வனார் ஆழ்வாருக்கு அருளப்பாடிட்டருளி, ''திருப்பாற்கடலரசனைப்போலேயும், ஜனகசக்ரவர்த்தியைப்போலேயும் நீரும் நமக்கு மாமனாராகிவிட்டீர்'' என்று மிகவும் உகந்தருளி, அவருக்குத் தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டத்துடன் ஸ்ரீசடகோபனும் பிரஸாதித்து ''வில்லிபுத்தூருறைவானுக்கே கைங்கர்யம் செய்துகொண்டு வாழ்ந்து வருவீர்'' என்று திருவாய் மலர்ந்து விடைகொடுத்தருளினார். பெரியாழ்வாரும்,

**''ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்**
**திருமகள்போல வளர்த்தேன் செங்கண் மால்தான் கொண்டுபோனான்!''**

என்று தாம் பாடியது உண்மையானதை நினைத்து ஆச்சர்யப்பட்டு ஸ்ரீவில்லிபுத்தூருக்குச்சென்று முன்போலவே செண்பகம் மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி முதலிய பல மலர்களுடன், ஆர்வமென்பதோர் பூவையும் இட்டுக்கொண்டு, எண்பத்தைந்து வருடங்கள் வாழ்ந்திருந்து, கடைசியில் திருமாலிருஞ்சோலைமலை சென்று, அழகருக்குச் சிலகாலம் கைங்கர்யம் செய்து வாழ்ந்திருந்து, பேரின்பப்பெருவீடு அடைந்தார்.

**ஸ்ரீமத்யை விஷ்ணுசித்தார்யமநோநந்தநஹேதவே ।**
**நந்தநந்தநஸுந்தர்யை கோதாயை நித்யமங்களம் ॥**

[விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வாருடைய திருவுள்ளமுகக்கக் காரணமானவளும், (அவ்விஷ்ணுசித்தரோடுள்ள உறவாகிய) பெருஞ்செல்வத்தை உடையவளும், நந்தகுமாரனுக்குப் பொருந்திய அழகுடையவளுமான கோதைக்கு என்றும் மங்களமாகுக.]

**ஆண்டாள் வைபவம் நிறைவுற்றது. ஆண்டாள் திருவடிகளே சரணம்.**

### திருப்பாவை "மூவாயிரப்படி" உரையை அருளிய

# பெரியவாச்சான்பிள்ளை வைபவம்

**ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।**
**யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப4: ஸ்ரீத4ரஸ் ஸதா3 ॥**

[எவருடைய கடாக்ஷத்திற்கு இலக்கானவர்களுக்கு ஸ்ரீத4ரன் எப்போதும் கிடைத்தற் கெளியவனோ, அத்தகையவராய், யாமுநாசார்யரின் பிள்ளையாய், ஸ்ரீமத்க்ருஷ்ணர் என்னும் பெயரையுடையவரான பெரியவாச்சான்பிள்ளைக்கு வணக்கம்.]

நம்பிள்ளைக்கு "ராமஸ்ய த3க்ஷிணோ பா3ஹு:" என்று பெருமாளுக்கு இளையபெருமாள்போலே வலதுகையாயிருந்து, அவருடைய நியமனம் பெற்று அவருடைய உபந்யாஸ வர்ஷங்களையெல்லாம் வ்யாக்2யானங்களாக ஏடுபடுத்தி யருளிய 'ஸ்ரீக்ருஷ்ணர்' என்னும் திருநாமமுடைய பெரியவாச்சான்பிள்ளை (கி. பி 1167) ஸர்வஜித் வருஷத்திலே ஆவணி மாதம் க்ருஷ்ணாஷ்டமீ ரோஹிணியிலே சோழநாட்டில் (தஞ்சை ஜில்லாவில்) உள்ள திருவெள்ளியங்குடிக்கு அருகிலுள்ள சங்கநல்லூரில் பூர்வஶிக2 ஸ்ரீவைஷ்ணவ ப்3ராஹ்மணோத்தமரான யாமுநாசார்யருக்கும் நாச்சியாரம்மனுக்கும் திருக்குமாரராய், கண்ணனுடைய அம்ஶமாய் அவதரித்தருளினர். இவருடைய ப்ரபா4வத்தைப் பற்றி 'பெரிய வாச்சான்பிள்ளை ப்ரபா4வ ப்ரகாஶிகை'' என்ற பெரிய நூலொன்று ஸுத3ர்ஶன ஸ்தாபகரான எந்தையாரால் நாற்பது வருடங்களுக்கு முன் ஸுத3ர்ஶனத்தில் தொடங்கப்பெற்று, பதினாறு பக்கங்களுடன் நின்றுவிட்டது. அதிலிருந்து ஒரு பகுதியை அடுத்தபடியாகக் கீழே அளிக்கிறோம்.

பெரியபெருமாள் ப்ரபா4வத்தைப் பேசி முடித்தாலும் முடிக்கலாம்; பெரிய வாச்சான்பிள்ளை ப்ரபா4வத்தைப் பேசி முடியாதென்பர் பெரியோர். ஸ்ரீவைஷ்ணவ ஸித்3தா4ந்தத்தைப் பரவச்செய்த ஆசாரியர்களுள் இவர்க்கு ஒப்பானவர்கள் முன் அவதரித்ததுமில்லை, இனி அவதரிக்கப் போவதுமில்லை என்று அறுதியிட்டுச் சொல்லலாம். இவருக்கு மேற்பட்டவர் 'ந பூ4தோ ந ப4விஷ்யதி' [முன் இருந்தது மில்லை; இனி உண்டாகப்போவதுமில்லை.] என்பது சொல்லாமலே விளங்கும். இவர் பல நற்குணங்களுக்கு அவதாரஸ்த2லமென்றும், சிஷ்ய லக்ஷணத்திற்கும் ஆசார்யலக்ஷணத்திற்கும் ஸீமாபூ4மி (எல்லை நிலம்) என்றும் புகழ்பெற்று விளங்கினர். இருள்தருமாஞாலம் எனப்பட்ட இந்த பூ4மி இவர் அவதரித்தபின், அருள்பெற்ற அவனியாகியது. "கு3ணைர் தா3ஸ்யமுபாக3த:" என்கிறபடியே இவருடைய கு3ணங்களுக்கு ஆட்படாதவர் அக்காலத்திலுமில்லை, இக்காலத்திலுமில்லை, எக்காலத்திலுமில்லை என்று சபதமிட்டுச் சொல்லலாம். அவருக்குப் பரமகாருணிகர், அபாரகருணாம்ருதஸாகரர் என்று எல்லாரும் ஒருமிடறாகச் சிறப்புப்பெயர் சூட்டினார்கள். ஸத்வகு3ணமே உருவெடுத்துவந்தவர் இம்மஹான். இவருடைய

விரிவான கிரந்தங்களுள் ஓரிடத்திலும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளைத் தவறென்று தூஷிப்பது கிடையாது. தம்முடன் ஸமகாலத்தில் எழுந்தருளியிருந்தவர்களையும், அவர்களுடைய கிரந்தங்களையும் தூஷிக்கும் வழக்கமும் இவரிடமில்லை.

''ஆழ்வார்கள் எல்லோரையும் போலல்லர் பெரியாழ்வார்'' என்றார் பிள்ளை லோகாசார்யர். 'ஆசாரியர்கள் எல்லாரையும் போலல்லர் பெரியவாச்சான்பிள்ளை' என்பர் பெரியோர். ரஹஸ்யங்களுக்குச் சேமவைப்பாயிருந்தார் திருக்கோட்டியூர் நம்பிகள். திருவாய்மொழியின் பொருளை விவரித்துச் சொல்ல அதிகாரியாயிருந்தார் திருமாலையாண்டான். ஸ்ரீராமாயணார்த்தத்திற்குப் பெரியதிருமலைநம்பிகளிடம் போய் ஒரு வருஷம் காலக்ஷேபம் செய்யவேண்டியிருந்தது. ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு இன்றியமையாத இம்மூன்றின் மறைபொருள்களையும் தம் நெஞ்சிலே தேக்கிவைத்திருந்து, பல்லாயிரக்கணக்கான சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்துவந்ததோடன்றியில், பின்னுள்ளோரான ஸ்ரீவைஷ்ணவர்களும் உய்யும்படி அருளிச்செயல்கள், ஸ்ரீராமாயணஸ்லோகங்கள், ரஹஸ்யங்கள், ஸ்தோத்திரங்கள், கத்யங்கள் முதலியவைகளுக்குத் தேனிலுமினிய வியாக்கியானங்களை இயற்றிப் பேதை பாமரரும் உணரும்படி செய்த ஆசாரியர் வேறு எவரிருக்கிறார்? அருளிச் செயல்களுக்கு வியாக்கியானம் செய்து, அவற்றை அருளிச்செயலாக்கின பெருமை வேறு எந்த ஆசாரியர்க்குண்டு? 'இவருடைய வியாக்கியான ரஸங்களை அனுபவிப்பவர்கள், 'இச்சுவை தவிர அச்சுவை பெறினும் வேண்டேன்' என்று ஆநந்த நிர்ப்பரராயிருப்பர்கள்.

நாலாயிர திவ்யப்ரபந்தங்களுக்கும் வியாக்கியானம் செய்தவர் இவரொருவரே. நம் தர்சனத்திற்கு அடிப்படையான ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களின் ஆழ்பொருள்களை அறிவதற்கு இவர் அருளிச்செய்த அமுதினுமினிய வியாக்கியானங்களையொழிய வேறு கதியில்லை என்பதை மத்யஸ்தர்களான மதாந்தரஸ்தர்களும் உணர்த்தியுள்ளார்கள். ஆழ்வாராசார்யர்கள் வைபவ நூலில் ''விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திலே இருக்குமவர்களுக்குத் திருப்பல்லாண்டு முதலிய திவ்யப்ரபந்தமொழிய வேறு கதியில்லை. பூர்வாசார்ய ஸம்ப்ரதாய பரம்பரையாலே வந்த திவ்யப்ரபந்த திவ்யார்த்தங்களை அறிகைக்குப் பெரிய வாச்சான்பிள்ளை செய்தருளின வியாக்கியானங்களையொழிய வேறு கதியில்லை. ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லாரும் பெரியவாச்சான்பிள்ளை ஸம்பந்தம் பெற்று, அவருக்கு சிஷ்யகோடிகளாயிருப்பார்கள்'' என்று சொல்லப்பட்டது. இவருடைய திவ்யப்ரபந்த வியாக்கியானங்களைக் காலக்ஷேபம் செய்யாத ஸ்ரீ வைஷ்ணவர்கள் இல்லையென்றே சொல்லலாம். அப்படியிருந்தார்களாகில்,

''நிந்திதஸ் ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே''

[அவன் உலகில் நிந்திக்கப்பட்டவனாகவே வாழ்கிறான். அவனுடைய மனமும் அவனை நிந்திக்கும்.] என்ற கணக்கிலேயாவர்கள்.

இவருக்கு அப₄யப்ரத₃ராஜர் என்னும் சிறப்புப்பெயர் இவருடைய வியாக்கியானங்களைச் செவிசாற்றின ஸ்ரீரங்க₃நாத₂னால் அளிக்கப்பட்டது. ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும் அதற்கு இவர் அருளிய வியாக்கியானங்களையும் கேட்பதற்கல்லவா இன்றும் திருமொழித் திருநாளாகிய அத்₄யயநோத்ஸவம் நடக்கிறது. ஸ்ரீராமாயண விஶேஷார்த்த₂ங்களைத் தனிச்லோக வ்யாக்₂யானமாகவும், ராமசரமஶ்லோக வ்யாக்₂யானமான அப₄யப்ரத₃ான ஸாரமாகவும், திவ்யப்ரபந்த வ்யாக்யானங்களில் பல ஶ்லோகங்களையெடுத்து விவரணம் செய்வதன்மூலமும் வெளியிட்டு, ஸ்ரீராமாயணப்பெருக்கர் என்று பிரஸித்திபெற்றார். அவற்றை ஸேவித்த மதாந்தரஸ்தர்களும், இவர் வால்மீகி ஹ்ருதயத்தினுள்ளிருக்கும் அந்த ராத்மாவோ. அல்லது வால்மீகியின் அபராவதாரம்தானோ என்று ஆச்சரியப்பட்டார்கள்.

மற்றுமுள்ள ஆசாரியர்கள் ஸம்ஸ்க்ருதத்திலோ, ஸம்ஸ்க்ருத வாக்யங்கள் நிறைந்த கடுந்தமிழ் நடையிலோ கிரந்தங்களும் வியாக்கியானங்களும் எழுதியிருக்கிறார்கள். வியாக்கியானங்களில்லாமல் அவற்றின் அர்த்தங்களை அறிவதுஅரிது. இம்மஹாசார்யர் வேத₃பா₄ஷாவிற்பன்னராயிருந்தபோதிலும் பேதை பாமரர்களும் அருமறைப் பொருளை அறிந்துய்யவேணும் என்கிற பொங்கும் பரிவாலே வடமொழியில் க்₃ரந்த₂ங்களியற்றுவதில்லை என்கிற விரதம் பூண்டு, முத்தும் பவளமும் போன்ற வடமொழி தென்மொழிச் சொற்கள் கலந்த மணிப்ரவாள பா₄ஷையில் எளிய தெள்ளிய நடையில் நெஞ்சையுருக்கும் வாக்யரத்னங்கள் பொருந்த வியாக்கியானரத்நமாலைகளை அருள்மாரியாகப் பொழிந்திருக்கிறார். மற்றுமுள்ள ஆசாரியர்களில் பலரும் பத்தெட்டு கிரந்தங்களுக்குமேல் அருளிச்செய்ததில்லை. நூற்றுக்கணக்கான கிரந்தங்களை இவர் அருளிச் செய்ததாக ப்ரஸித்தியிருக்கிறது. இவைகளில் அநேகம் நம் அஜாக்ரதையினால் மறைந்தன. இப்போதும் நம் பாக்கியத்தால் அறுபது கிரந்தங்களுக்குமேலிருக்கின்றன. அவை முழுவதையும் காலக்ஷேபம் செய்து அறிந்து ஆநந்திப்பதற்கு ஒரு புருஷாயுஸ்ஸும் போராது.

பெரியபெருமாள், பெரியாழ்வார், பெரியவாச்சான்பிள்ளை, பெரியஜீயர் என்று சொல்லப்பட்ட நால்வரும் அவரவர் பெருமையால் 'பெரிய' என்கிற பட்டம் அடைந்து புகழப்பட்டிருக்கிறார்கள். இப்படிப் பல பெருமைகளையுடைய இம்மஹாசார்யரின் மஹிமையையுணர்ந்த முன்னோர்கள்,

> ''வ்யாஸோ வல்மீகஜந்மா வா கு₃ருட₃: க்ருஷ்ண ஏவ வா |
> பு₃தை₄ரிதி விதர்க்யாய ஸ்ரீக்ருஷ்ணாயாஸ்து மங்க₃ளம் ||''

['இவர் வ்யாஸரோ? வால்மீகியோ? கு₃ருட₃னோ? க்ருஷ்ணன் தானேயோ?' என்று ஞானிகளால் எண்ணப்படுகிற ஸ்ரீக்ருஷ்ணஸூரிக்கு மங்க₃ளமுண்டாகக் கடவது.] என்று மொழிந்திருக்கிறார்கள். வடமொழி வேதங்களைப் பிரித்தெடுத்துச்

சிக்கறுத்து, ஸூத்ரங்களாலே அவற்றின் பொருளை விவரித்த க்ருஷ்ண த்3வைபாயனரே தமிழ்வேதப்பொருளை விவரிக்க ஸ்ரீகிருஷ்ணஸூரியாய் அவதரித்தாரோ? அல்லது ஆதி3காவ்யமாகவும் வேதோ3பப்3ரும்ஹணமாகவும் விளங்கும் ஸ்ரீராமாயணத்தைப் பாடின வால்மீகியே தம்முடைய ஹ்ருத3யத்திலிருந்த அர்த்த2ங்களை வெளிப்படுத்த அப4யப்ரத3ராஜராக அவதரித்தாரோ, அல்லது வேத3 ஸ்வரூபவிஹங்க3ராஜரான பெரிய திருவடியே மறைப்பொருளை மாண்புறச்செய்யப் பெரியவாச்சான் பிள்ளையாக அவதரித்தாரோ, அல்லது பூர்ணாவதாரமான ஸ்ரீக்ருஷ்ணப4க3வானே உபனிஷத்துக்களாகிற க்ஷீராப்3தி4யைக் கடைந்து கீ3தாம்ருதத்தைக் கொடுத்துதவினதுபோல், சரமஶ்லோகார்த்த2வ்யாக்யானம் செய்து ப்ரபத்தியின் பெருமையைப்பேசியும், ஆழ்வார்களின் அருளிச்செயல்களாகிற அமுதக்கடலைக் கடைந்து, தமிழ்வேத3 ப4ாஷ்யங்களாகிற ஆராவமுதத்தைஅவனிக் களித்தும் புகர்பெறுகைக்காகத் தன் ஜந்மதி3னமாகிய ஸ்ரீஜயந்தியிலே 'க்ருஷ்ணன்' என்னும் திருநாமத்துடனேயே திருவவதரித்தானோ என்று பு3த்3தி4மான்கள் எண்ணியெண்ணி அவருக்கு மங்களாசாஸனம் செய்வர்கள்.

[இதுவரை ப்ரப4ாவப்ரகாஶிகா ஸ்ரீஸூக்திகள்]

அவதாரரஹஸ்யம்

பெரியதிருமொழியிலே—

> ''மெய்ம்மை சொல்லில் வெண்சங்கமொன்றேந்திய
> கண்ணா! நின்தனக்கும் குறிப்பாகில்
> கற்கலாம் கவியின் பொருள்தானே'' [பெரிய-திரு 7-10-10]

என்று திருமங்கையாழ்வார் திருக்கண்ணமங்கைக் கண்ணன் தம் திருமொழியின் அர்த்த2ங்களை அறிந்துகொள்ளவேண்டுமென்று ஆசைப்படுவதை அவன் திருமுகக் குறிப்பிலிருந்து கண்டு, ''நீ என்னிடமிருந்து கவியின் பொருளைக் கற்றுக் கொள்ளலாம்'' என்று நியமித்தார். அதைக்கேட்ட பரமரஸிகனான கண்ணனும் ''அவஶ்யம் உம்மிடமிருந்து கவிப்பொருள்களைக் கற்கிறேன். ஆனால் இப்போது அர்ச்சாவதாரமாகையாலே அது கூடாது. பின்னொருஸமயத்திலே நீர் உமது அவதார திருநக்ஷத்ரமான கார்த்திகையில் கார்த்திகை நாளிலே உமது திருநாமமான 'திருக்கலிகன்றிதாஸர்' என்ற திருநாமத்துடன் இந்தச்சோழ நாட்டிலேயே அவதரிக்கப்போகிறீர். அப்போது நான் இச்சோழநாட்டிலேயே எனது அவதார நக்ஷத்ரமான ஆவணியில் ரோஹிணியிலே (கண்ணன்) க்ருஷ்ணன் என்னும் பெயருடன் அவதரித்து உம்மை ஆசார்யனாகக்கொண்டு ஆழ்வார்கள் அனைவருடையவும், ஆண்டாளுடையவும் அருளிச் செயல்களின் பொருள்களையும், மற்றுமுள்ள ரஹஸ்யார்த்த2ங்களையும், ஸ்ரீராமாயணார்த்த2ங்களையும் உம்மிடம் இருந்தே கற்றறிந்து உலகுய்ய வெளிப்படுத்துவேன்'' என்று அருளிச்செய்தான். அதன்படியே கலிகன்றியாகிய திருமங்கையாழ்வார் திருக்கலிகன்றிதா3ஸ

ராகிற நம்பிள்ளையாகவும், கண்ணன் ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வரான (க்ருஷ்ண ஸூரி எனும்) பெரியவாச்சான்பிள்ளையாகவும் அவதரித்தனர் என்று பெரியோர் பணிப்பர். இது நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளைகளின் அவதார ரஹஸ்யம். மஹாபாரதத்தைச் செய்த வேதவ்யாஸர் அக்காரணத்தையிட்டே அவரது தகப்பனாரான பராஸர மஹரிஷியால் நாராயணனுடைய அம்ஸாவதாரமாக அறுதியிடப்பட்டதுபோலே, அந்த மஹாபாரதத்தைக் காட்டிலும் சொற்பொருள் பெருமைகள் மிக்க நாலாயிர வ்யாக்யானங்களையும், ஸ்ரீராமாயண தனிஸ்லோகத்தையும், ரஹஸ்ய வ்யாக்யானங்களையும், ஸ்தோத்ரகத்ய வ்யாக்யானங்களையும் அருளிய பெரியவாச்சான்பிள்ளையை நாம் எம்பெருமானின் அவதாரமாக அறுதியிடத்தட்டில்லை.

சங்கநல்லூரில் இவரைப்பற்றின சரித்திரம் அதிகமாக வழங்கவில்லை. குடும்பத்தோடு திருமலையாத்ரை எழுந்தருளினாரென்றும், அங்கு திருமலை ஸ்ரீநிவாஸனிடம் திருவேங்கடமுடையான் விக்ரஹமொன்றைப் பெற்றாரென்றும், அவ்விக்ரஹத்தைச் சங்கநல்லூரில் ப்ரதிஷ்டை செய்தாரென்றும் அவ்வூரில் வரலாறு வழங்குகிறது. பெருமாளைக் கைப்பிடித்தபின்பு மிதிலைக்குச் சென்றறியாத ஸீதாப்பிராட்டியைப்போலே—தம்முடைய தாய் தந்தையர்களுக்குச் சரம கைங்கர்யம் செய்துவிட்டுத் திருவரங்கத்துக்கு வந்து நம்பிள்ளைதிருவடிகளை ஆஸ்ரயித்த பின்பு "தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" [நான் திருவ 63] என்று திருமழிசைப்பிரான் அருளிச்செய்த ரீதியிலே, நம்பிள்ளை திருவடிகளிலே ஸகலார்த்தங்களையும் கேட்பதிலும், அவருடைய நியமனம்பெற்று அவைகளை வ்யாக்யானங்களாக வடித்தெழுதுவதிலும், அவர் பரமபதித்தபின்பு வடக்குத்திருவீதிப்பிள்ளை முதலான ஸப்ரஹ்மசாரிகளையும் கூட்டிக்கொண்டு ஸ்ரீரங்கத்தில் தர்ஸனம் நிர்வஹிப்பதிலுமே இவருடைய காலமெல்லாம் கழிந்துவந்தபடியால், இவர் சங்கநல்லூருக்குத் திரும்பினதே இல்லை என்று கொள்ளலாம்.

ஸ்ரீரங்கத்தில் இவர் வாழ்ந்தகாலம் முன்னும் பின்னும் காணமுடியாத நல்லடிக் காலமாயிருந்தது. எம்பெருமானார் காலத்திலும், பட்டருடைய காலத்திலும் அரசர்களின் உபத்ரவம் நேர்ந்ததென்று அறிகிறோம். பிள்ளை லோகாசார்யர், வேதாந்ததேஸிகர் முதலானோர் வாழ்ந்த பிற்காலத்திலும் துருஷ்கர்களால் பேராபத்துக்கள் விளைந்தன என்று அறிகிறோம். இத்தகைய இடையூறுகளில்லாமல் பெரிய கி(ரு)தயுகம் பற்றிப் பேரின்பவெள்ளம் பெருகியதாலேயே இந்த மஹாசார்யரால் சொற்பொருள் பெருமைகள் மிக்க ஏராளமான க்ரந்தங்கள் அருளிச்செய்யப்பட்டன என்று விளங்குகிறது. இவருக்கு ஔரஸபுத்ரரில்லை. மருமகனாராய் (ஸஹோதரிபிள்ளையாய்) தத்த புத்ரரான நாயனாராச்சான்பிள்ளை இவரிடமிருந்து ஸகலார்த்தங்களையும் க்ரஹித்தருளினர். இவர் தவிர, பன்னீராயிரப்படியுரையருளிய வாதிகேஸரி அழகிய

மணவாளச் சீயரும், அஹோபிலமட₂ ஸ்த₂ாபகரான ஆதி₃வண்ஶட₂கோப ஜீயருக்குப் பரமாசார்யரான ஸ்ரீரங்க₃ாசார்யரும், பரகாலநல்லான் ரஹஸ்யம், மைவண்ண நறுங்குஞ்சிக்குப் பெரிய வ்யாக்₂யானம், ஆசார்யஹ்ருத₃யத்துக்கு முந்துறமுன்னம் வ்யாக்₂யானம் ஆகியவையருளிய பரகாலத₃ாஸர் முதலானோரும் இவருடைய சிஷ்யர்களாயிருந்தவர்கள் என்பது பெரிய திருமுடியடைவு முதலான க்₃ரந்த₂ங்களிலிருந்து விளங்குகிறது. வடக்குத்திருவீதிப்பிள்ளையும் நம்பிள்ளை காலத்துக்குப் பிறகு பெரியவாச்சான் பிள்ளையிடம் சில அர்த்த₂ விஶேஷங்கள் கேட்டதாக "ஆசார்ய ஸம்மதி" என்னும் தம்ரஹஸ்யத்தில் அருளியிருப்பதாக ப₃க₃வத்₃விஷய தனியன் வ்யாக்₂யானத்தில் காட்டப்பட்டுள்ளது. பின்பழகிய பெருமாள் ஜீயரும் நம்பிள்ளை காலத்துக்குப்பின் இவரை ஆஶ்ரயித்திருந்ததாகப் பெரிய திருமுடியடைவு கூறுகிறது. இதனால் நம்பிள்ளை காலத்துக்குப்பின்பு ஸ்ரீரங்க₃த்தில் த₃ர்ஶனம் நிர்வஹித்து வந்தவர் இம்மஹாசார்யரே என விளங்கும்.

வாதிகேஸரி ஜீயர் இவரால் உய்வுபெற்றதைப்பற்றிப் பின்வரும் செய்தியொன்று வழங்குகிறது. பூர்வாஶ்ரமத்தில் அவர் பெரியவாச்சான் பிள்ளைக்குத் திருமடைப்பள்ளி கைங்கர்யம் செய்துவந்தார். நிரக்ஷரகுக்ஷியாகவும் இருந்து வந்தார். அப்பொழுது பெரியவாச்சான்பிள்ளையை ஸேவிக்கவந்திருந்த சில பண்டிதர்கள் அவர் திருமாளிகையில் ஒருபுறத்தில் இருந்துகொண்டு க்₃ரந்த₂த்தை ஆராய்ந்துகொண்டிருந்தனர். இவர் 'அது என்ன ஸ்ரீகோஶம்?' என்று அவர்களைக் கேட்டார். நிரக்ஷரகுக்ஷியான இவர் க்₃ரந்த₂த்தின் பெயரைச் சொன்னாலும் புரிந்துகொள்ள முடியாத உலக்கைக்கொழுந்து போன்ற அறிவுடையவர் என்று சுட்டிக்காட்டிப் பரிஹஸிப்பதற்காக "முஸலகிஸலயம்" (உலக்கைக் கொழுந்து) என்று பதில் கூறினார்கள் அவர்கள். யதா₂ஶ்ருதக்₃ராஹியான இவர் உண்மையில் அப்பெயரையுடைய க்₃ரந்த₂த்தையே அவர்கள் பரிஶீலிக்கிறார்கள் என்று எண்ணி, பெரியவாச்சான்பிள்ளையிடம் "அந்த வித்₃வான்கள் அடியேன் கேட்டதற்கு முஸலகிஸலய க்₃ரந்த₂த்தைப் பரிஶீலித்துக்கொண்டிருப்பதாகச் சொன்னார்கள், அதுயார் அருளிச்செய்தது?" என்று கேட்டார். பெரியவாச்சான்பிள்ளையும் உண்மையை உணர்ந்து "அப்படியொரு க்₃ரந்த₂மில்லை; உன் பு₃த்₃தி, உலக்கைக்கொழுந்து போன்றுள்ளது என்று பரிஹஸித்திருக்கிறார்கள்" என்று வருத்தத்துடன் சொன்னார். இதைக்கேட்ட அழகியமணவாளர், பெரியவாச்சான்பிள்ளை திருவடியைப்பிடித்துக்கொண்டு 'அடியேனை எப்படியாவது வித்₃வானாக ஆக்கிவிடவேணும்' என்று ப்ரார்த்தித்தார். அப₄யப்ரத₃ராஜரும் அவரை யெழுப்பி அன்போடு அணைத்துக்கொண்டு அப₄யப்ரத₃ானம் செய்து, அன்று முதல் அக்ஷராப்₄யாஸம் தொடக்கமாகப் பல கலைகளிலும் பாடம் சொல்லி, தென்மொழி வடமொழி இலக்கண இலக்கியங்களையும், உப₄யவேத₃ங்களையும், ஸகல ஶாஸ்த்ரங்களையும் கரைகண்டவராக ஆக்கினார். அதன் பிறகு "முஸலகிஸலயம்" என்றொரு க்₃ரந்த₂ம் செய்து பரிஹஸித்த வித்₃வான்கள் நாணும்படி அவர்களிடமே காட்டினார் வரத₃ராஜர் என்று பூர்வாஶ்ர

மத்தில் பெயர் பெற்றிருந்த அவர் என்பது அந்த வ்ருத்தாந்தம். வாதி₃கேஸரீ ஜீயர் அருளிய "தத்வ நிருபணம்" என்னும் க்₃ரந்த₂த்தின் தொடக்கத்தில்,

அப₄யப்ரத₃நாமாநம் அஸ்மத்₃கு₃ருமஹம் ப₄ஜே ।
யத்கடாக்ஷாத₃யம் ஜந்து: அபுநர்ஜந்மதாம் க₃த: ॥

[ஒன்றுமறியாத விலங்குபோல் இருந்த அடியேன், எவருடைய கடாக்ஷத்தால் பிறவாமை பெற்றேனோ, அத்தகைய பெருமைபெற்ற அப₄யப்ரத₃ர் என்னும் திருநாமமுடைய நம் ஆசார்யரை அடியேன் வணங்குகிறேன்] என்று இவர் அருளிய ஶ்லோகம் இச்செய்தியை உணர்த்துவதாயுள்ளது.

கடலிலும் பெரிதான பெரிவாச்சான்பிள்ளையின் பெருமையில் ஒரு திவலையே இங்கு அநுப₄விக்கப்பட்டது. வ்யாக்₂யான சக்ரவர்த்தியான இவருடைய க்₃ரந்த₂ங்களிலுள்ள ஒவ்வொரு வாக்யமும் இவர் ஸகலஶாஸ்த்ரங்களையும் கரைகண்டவர் என்பதையும், ஆழ்வார்களாலே மயர்வறமதிநலமருளப் பெற்றவர் என்பதையும், பரமரஸிகர் என்பதையும், பரமகாருணிகரென்பதையும் பறைசாற்றுகின்றது.

இவர் தொண்ணூற்றைந்து திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்ததாகப் பெரியதிருமுடியடைவில் உள்ளதாகையால், இவரது தீர்த்த₂ம் து₃ந்து₃பி₄ வருஷம் (கி. பி. 1262) எனக்கொள்ளலாம்.

நஞ்சியர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்(கு)
எஞ்சாமை யாவைக்குமில்லையே — தம்சீரால்
வையகுரு வின்தம்பி மன்னுமண வாளமுனி
செய்யுமவை தாமும் சில. [உபதேசரத்தினமாலை 47]

பெரியவாச் சான்பிள்ளை பின்புள்ள வைக்கும்
தெரிய வியாக்கியைகள் செய்வால் — அரிய
அருளிச் செயற்பொருளை யாரியர்கட் கிப்போது
அருளிச் செயலாய்த் தறிந்து. [உபதேசரத்தினமாலை 46]

என்று மாமுனிகள் அருளிச்செய்தபடியே பெரியவாச்சான்பிள்ளையின் பேருளாலேயே பின்புள்ளாரனைவரும் அருளிச்செயற் பொருளையறிந்து ஆசார்யபத₃ம் நிர்வஹிக்கிறார்கள்.

பெரியவாச்சான்பிள்ளை வைப₄வம் முற்றிற்று.

**பெரியவாச்சான்பிள்ளை வாழித்திருநாமம்**

தண்(ண்)மை சிங்கம் ரோகிணிநாள் தழைக்க வந்தோன் வாழியே*
தாரணியில் சங்கநல்லூர் தானுடையோன் வாழியே*
புன்மை தவிர் திருவரங்கர் புகழுரைப்போன் வாழியே*
பூதூர் எதிராசர்தாள் புகழுமவன் வாழியே*
மன்புகழ் சேர் சடகோபர் வளமுரைப்போன் வாழியே*
மறை நாலின் பொருள்தன்னைப் பகுத்துரைத்தான்வாழியே*
அன்புடன் உலகாரியர்தம் அடியிணையோன் வாழியே*
அபயப்ரதராசர் தாள் அனவரதம் வாழியே.

திருப்பாவை 'ஆறுயிரப்படி" உரையை அருளிய

# அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் வைபவம்

த்3ராவிடாம்நாயஹ்ருத3யம் கு3ருபர்வக்ரமாக3தம் |
ரம்யஜாமாத்ருதே3வேந த3ர்ஸிதம் க்ருஷ்ண ஸூநுநா ||

[ஆசார்ய பரம்பராப்ராப்தமான திராவிடவேதஹ்ருதயம் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் குமாரரான அழகியமணவாளப்பெருமாள் நாயனாரால் (ஆசார்யஹ்ருத3யநூலில்) காட்டப்பட்டது.]

ஆசார்யாக்3ரேஸரரான பிள்ளையுலகாசிரியர் ஸ்ரீரங்க3த்தில் க்ரோத4ன-ஆப் (கி. பி. 1205) ஐப்பசித் திருவோணத்தில் வடக்குத்திருவீதிப்பிள்ளைக்குக் குமாரராய் அவதரித்ததாகப் பெரியதிருமுடியடைவில் உள்ளது. கி.பி. 1311ல் நிகழ்ந்த துருஷ்கர் படையெடுப்பின்போது இவர் பரமபதி3த்ததால் இவர் 106 வருஷங்கள் வாழ்ந்திருக்கவேண்டும். பதின்மூன்றும் நூற்றாண்டின் பெரும்பகுதியில் வாழ்ந்திருந்த பெரியவர் இவர். துருஷ்ககலாபத்தின்போது நம்பெருமாள் விக்ரஹத்தை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்று இடையில் ஜ்யோதிஷ்குடியென்னுமிடத்தில் ஜ்யேஷ்ட2 ஸுத்3த4 த்3வாத3ஸியில் பரமபதி3த்தார். அப்போது ஸ்ரீரங்க3த்திலிருந்து ஸ்ருதப்ரகாஸிகையை ரக்ஷித்துக் கொண்டு போன ஸ்ரீவேதா3ந்ததே3ஸிகர்க்கு சுமார் 42 திருநக்ஷத்திரமாகிறது. இப்பிள்ளையுலகாசிரியர்க்குத் திருத்தம்பியார் அழகியமணவாளப் பெருமாள் நாயனார்.

## அவதார வைப4வம்

கார்த்திகையில் கார்த்திகைநாள் காசினியில் வந்துதித்த கலிகன்றியாம் திருமங்கைமன்னனே ''கண்ண நின்தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே'' [பெரிய திருமொழி 7-10-10] என்ற தம் திருவாக்கின்படி, ஸ்ரீஜயந்தியிலேயே அவதரித்த கண்ணனும் பெரியவாச்சான்பிள்ளைக்குக் கவியின் பொருளைக் கற்பிக்கக் கார்த்திகையில் கார்த்திகை நாளிலேயே கலிகன்றியென்னும் திருநாமத்துடன் அவதரித்த பெருமையையுடைய லோகாசார்யரான நம்பிள்ளை ஒருநாள் நித்யப்படி காலக்ஷேபம் நிறைவடைந்தவுடன் நடுப்பகலில் ஏகாந்தமாய் எழுந்தருளியிருக்க, அவரது சிஷ்யரான வடக்குத்திருவீதிப் பிள்ளையின் திருத்தாயாரான அம்மி என்பவள், ''உம்முடைய சீடனுன என் பிள்ளைக்கு ஓர் கல்யாணம் செய்வித்தீரே! அவன் பத்தினியோடு வாழமறுக்கிறுன்; வம்ஸத்திற்குப் பிள்ளையில்லாமற் போய்விடும் போல் இருக்கிறதே!'' என்று

பெருவருத்தத்துடன் விண்ணப்பிக்க, அவளைத்தேற்றி அவளுடைய மணாட்டுப் பெண்ணை அழைத்துவரச்சொல்லி, திருவயிற்றைத் தம் திருக்கையாலே ஸ்பர்ஶித்து 'நம்மைப்போல் இருக்கும் ஒரு பிள்ளையைப் பெறக்கடவாய்' என்று அநுக்3ரஹித்து, வடக்குத் திருவீதிப்பிள்ளையை அழைத்து, 'உம்முடைய விஹிதவிஷய வைராக்3யத்தை உணர்ந்தோம்; ஆயினும், லோகமர்யாதைக்கு நாம் சொன்னதற்காக இன்றிராக் கூடியிரும்'' என்று நியமிக்க, அப்படியே கூடியிருந்தவளவில் உண்டான ச3ர்ப்ப4ம் பன்னிரண்டாம் மாதத்தில் பூ4லோக வைகுண்ட2மான ஸ்ரீரங்க3த்தில் ஐப்பசித் திருவோணத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்தது. ''லோகாசார்யர் பிள்ளை'' என்று நம்பிள்ளையுடைய திருநாமத்தையே சாத்தி, திருத்தமப்பனாரான வடக்குத் திருவீதிப்பிள்ளையால் ஸகலார்த்த2ங்களையும் அளித்து வளர்க்கப்பட்ட அவரே பிள்ளையுலகாசிரியர். இவர் திருத்தாயார் திருநாமம் ஸ்ரீரங்கநாச்சியார். இவர் கச்சிநகர் எழுந்தருளும் பேரருளாளனும் வரத3னின் அம்ஸாவதாரமே என்பதை மாமுனிகள் தாமே ஓர் ஐதிஹ்யத்தின் மூலம் ஸ்ரீவசநபூ4ஷண வ்யாக்2யாந ப்ரவேஶத்தில் (நமது பதிப்பு பக்கம் 33-36) நிலை நாட்டியருளினர்.

பிள்ளைலோகாசார்யருடைய அப்3த3பூர்த்திக்கு நம்பெருமாளை ஸேவிப்பதற்காகக் குழந்தையைப் பல்லக்கில் எழுந்தருளுவித்து, நம்பிள்ளை முதலான பெரியவர்களனைவரும் கோயிலுக்குச் சென்று மங்க3ளாஶாஸனம் செய்ய, பெருமாளும் நம்பிள்ளையை அர்ச்சகமுக2மாக, ''உம்மைப்போல் ஒருபிள்ளையை அருளினீரே; இனிநம்மைப்போல் ஒரு பிள்ளையை அருளும்'' என்று நியமிக்க, நம்பிள்ளையும் அதை அங்கீ3கரிக்க அவ்வநுக்3ரஹத்தாலே பிள்ளையுலகாசிரியர்க்குத் திருத்தம்பியார் அவதரித்தருளினர். அழகியமணவாளனின் பிள்ளை என்பது தோற்ற அழகியமணவாளப் பெருமாள் நாயனர் என்று அவருக்குத் திருநாமம் சாத்தி, ராமலக்ஷ்மணர்களைப்போலும், ப3லராம க்ருஷ்ணர்களைப்போலும் அவர்களை வளர்த்து வந்தனர். இது இவர்களின் அவதாரப்பெருமை.

## நிஷ்டா2வைப4வம்

திருத்தகப்பனாரைப்போலே பரமவிரக்தரான இப்பிள்ளைகளிருவரும், வைராக்3யப4ங்க3ம் ஏற்படலாகாது என்னும் திருவுள்ளத்தாலே நைஷ்டி2கப்3ரஹ்மசாரிகளாகவே இறுதிவரையில் வாழ்ந்து வந்தனர். இப்பெருமையாலேயே, க்3ருஹஸ்த2ர்களாயிருந்த மற்ற ஆசார்யர்கள் ப்ரபந்நனுக்கு விஹிதவிஷய நிவ்ருத்தி தன்னேற்றம் (சிறப்பு) என்று சொல்லத் துணியாதபோது, பிள்ளையுலகாசிரியர் ஸ்ரீவசநபூ4ஷணத்திலே இவ்வரும் பொருளை ஸூத்ரமிட்டருளினர்.

பிள்ளைலோகாசார்யரின் திருத்தம்பியாரான நாயனரின் திருநக்ஷத்ரம் மார்கழி அவிட்டம். பஞ்சஸம்ஸ்காரங்களும் நித்யாநுஸந்த4ானமும் ஸாதித்

தருளினவர் திருத்தகப்பனாரான வடக்குத்திருவீதிப்பிள்ளை. ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களும், ஸ்ருதப்ரகாஸிகையும், ரஹஸ்யங்களும், ரஹஸ்யவ்யாக்யானங்களுமாகிய ஸகலார்த்தங்களையும் ஸாதித்தருளின ஆசார்யர் நம்பிள்ளை. திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களும், அவற்றின் வ்யாக்யானங்களும் ஸாதித்தருளின ஆசார்யர் திருத்தமையனாரான பிள்ளைலோகாசார்யர். இவர் திருத்தாயார் ஸ்ரீரங்கநாச்சியார். இவர்செய்தருளின தலைசிறந்த க்ரந்தம் ஆசார்யஹ்ருதயம். ஸ்ரீவசனபூஷணத்தைப் பற்றிச் சிலர் ஆக்ஷேபிக்க, அதில் அருளப்பட்ட அர்த்தங்களை நிலைநிறுத்துவதற்காகவே அழகியமணவாளன் திருமுன்பே, அவர் திருத்தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள் நாயனாராலே ஆசார்யஹ்ருதயம் என்னும் அத்புதக்ரந்தம் அருளிச்செய்யப்பெற்று, நம்பெருமாளின் அங்கீகாரத்தையும் அநுக்ரஹத்தையும் இந்த திவ்யக்ரந்தம் அடைந்தது. திருப்பாவை ஆறாயிரப்படி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு முதலான சில திவ்யப்ரபந்தங்களுக்கு வ்யாக்யானங்கள், அருளிச்செயல் ரஹஸ்யம் ஆகியவை இவரது மற்ற க்ரந்தங்கள். ''தஞ்சீரால் வையகுருவின் தம்பி செய்யுமவைதாமும் சில'' [உபதேச 47] என்று இவர் சில திவ்யப்ரபந்தங்களுக்கு விரிவாக வ்யாக்யானம் செய்தருளியதை மாமுனிகள் எடுத்துக்காட்டினார். பிள்ளைலோகாசார்யருக்கு இரண்டு அல்லது மூன்று வருஷங்களே இளையவரான இவர் சுமார் நூறுவருடங்கள் வாழ்ந்து, பிள்ளைலோகாசார்யருக்கு முன்னதாகவே, ஸ்ரீரங்கத்தில் பரமபதித்தருளினார். பிள்ளைலோகாசார்யர் பரமபாகவதரான இவரது விஸ்லேஷத்தாலே மிகவும் வருந்தியவராய், இவர் திருமுடியைத் தம் மடியிலே வைத்துக்கொண்டு ''மாமுடும்பை மன்னு மணவாளவண்ணலொடு சேமமுடன் வைகுந்தம் சென்றக்கால்—மாமென்று தொட்டுரைத்த சொல்லும் துயந்தன்னிலும்பொருளும் எட்டெழுத்து மிங்குரைப்பாரார்?'' என்று பலவாறு புலம்பித் திருமுத்துதிர்த்து (கண்ணீர் பெருக்கி), முதலிகள் தேற்றத்தேறி நின்று, நாயனாருக்குச் சரம கைங்கர்யம் செய்து திருவத்யயனமும் நடத்தியருளினார்.

### அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் வாழித்திருநாமம்

மன்னியசீர் மதிளரங்கம் மகிழவந்தோன் வாழியே*
மார்கழியில் அவிட்டத்தில் வந்த வள்ளல் வாழியே*
மின்னுபுகழ் ஆர்யமனம் மொழிந்தருள்வோன் வாழியே*
மேன்மைமிகு திருப்பாவை விரித்துரைத்தான் வாழியே*
தென்னுரையில் உலகாரியன் திருவடியோன் வாழியே*
ஸ்ரீக்ருஷ்ணபாதகுரு செல்வமைந்தன் வாழியே*
அன்னபுகழ் முடும்பை நம்பிக் கன்புடையோன் வாழியே*
அழகியமணவாளன்தன் அடியிணைகள் வாழியே.

[ஆர்யமனம்—ஆசார்யஹ்ருதயம்]

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வைபவம் முற்றிற்று.

## திருப்பாவை "ஈராயிரப்படி" "நாலாயிரப்படி" உரைகள் அருளிய "திருநாராயணபுரத்து ஆய்" (என்னும்)

# ஜநந்யாசார்யர் வைபவம்

**ஆசார்யஹ்ருதயஸ்யார்த்த2ா: ஸகலா யேந த3ர்ஶிதா:|**
**ஸ்ரீஸாநுத3ாஸமமலம் தே3வராஜம் தமாஶ்ரயே||**

[ஆசார்ய ஹ்ருத3யத்தின் அர்த்த2ங்கள் அனைத்தையும் அருளிச்செய்தவராய், ஸ்ரீஸாநுத3ாஸர், தே3வராஜர் என்னும் திருநாமங்களை உடையவரான திருநாராயணபுரத்தாயை ஆஶ்ரயிக்கிறேன்.]

ஸ்ரீயாத3வாத்3ரி, திருநாராயணபுரம், அஷ்டோத்தரஶத ஸ்த2ானஸாரம், த3க்ஷிண ப3த3ரிகாஶ்ரமம், வைகுண்ட2வர்த்த4நக்ஷேத்ரம், இந்தி3ராக்ஷேத்ரம், ஸம்யமி ஸார்வபௌ4ம விஜயஸ்த2ானம் என்னும் பல பல திருநாமங்களால் விளங்குகிற (மேலக்கோட்டை) தி3வ்யக்ஷேத்ரத்தில், ஸேனைமுதலியார் அவதரித்த ஓங்கு துலாப் பூராட நன்னாளில் உதித்து, எம்பெருமானார் தம் திருக்கைகளாலே திருவாராத4னம் ஸமர்ப்பித்த திருநாராயணப் பெருமாளுக்கும், ராமப்ரியனும், யதிராஜ ஸம்பத்குமாரனுமான செல்வப்பிள்ளைக்கும் யஶோத3ா தே3வியைப் போலப் பாலமுதும், ஸ்ரீமாலாகாரர், ஸ்ரீவிஷ்ணுசித்தர், ஆண்டாள் முதலானவர்களைப்போலப் புஷ்பமும் ஸமர்ப்பித்துக்கொண்டு புஷ்ப க்ஷீர கைங்கர்ய நிரதராய் நம் த3ர்ஶனத்தை நிர்வஹித்துக்கொண்டு ஸத்ஸம்ப்ரத3ாய ப்ரவர்த்தகராய் விளங்கினவராய், "திருநாராயணபுரத்தாய்" "திருத்தாழ்வரைதாஸர்" (ஸ்ரீஸாநுத3ாஸர்), "ஜநந்யாசார்யர்" "மாத்ருகு3ரு" "ஆயி" "தே3வராஜர்" என்று ப்ரஸித்3தி4 பெற்றவரே இம்மஹாசார்யர்.

எம்பெருமானார் திருவவதரித்த வம்ஶம்—ஹாரீத வம்ஶம். "ஆஸூரிப் பெருமாள்" "ஆஸூரிதே3வர்" என்று ப்ரஸித்3த4ரான ஆஸூரி புண்ட3ரீகாக்ஷர் இந்த ஹாரீத வம்ஶத்தில் அவதரித்து, எம்பெருமானாரை அடிபணிந்து போந்த மஹாநுபா4வர். இவர் 74 ஸிம்ஹாஸநாதி4பதிகளில் ஒருவர். "குடீங்க்ருத்வா தஸ்மிந் யது3கி3ரிதடே நித்யவஸதி:" என்று எம்பெருமானார் பரமபத3த்துக்கெழுந்தருளுவதற்கு முன்பு நியமித்த ஆறு உபதே3ஶங்களில் நான்காவதான ஸ்ரீயாத3வகி3ரியில் நித்யவாஸத்தை ஆத3ரித்து இந்த ஆஸூரிப்பெருமாள் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளி எம்பெருமானார் திருவுள்ளத்துக்குகப்பாக அங்கே நிலையாகநின்று பெருமாளுக்கு மங்க3ளாஶாஸநபரராய், த3ர்ஶந நிர்வாஹகராய் எழுந்தருளியிருந்தார். இவர் வம்ஶத்தில் அவதரித்தவர் ஜநந்யாசார்யர். இவர் திருத்தகப்பனார் திருநாமம் லக்ஷ்மணாசார்யர். இவர் திருக்குமாரர் கேசவாசார்யர். இந்த ஆயி ஸ்வாமி ஸர்வஸங்க3 பரித்யாக3ம் பண்ணி உத்துங்க3மான ஸந்யாஸாஶ்ரமத்தையும் ஸ்வீகரித்தார்.

நம்பிள்ளையின் சிஷ்யர்களில் ஒருவராய், அவரிடமிருந்து திருவாய்மொழி யீட்டைப் பெற்றவர் ஈயுண்ணிமாதவர். இவருடைய சிஷ்யர் பரம்பரையிலேயே ஈடு ஓராண் வழியாய் உபதேசிக்கப்பெற்று வந்தது. இவருடைய குமாரர் (சிஷ்யர்) ஈயுண்ணி பத்மநாபர். இவருடைய சிஷ்யர் நாலூர்ப்பிள்ளையென்னும் ஸோமநாதோலேசர். இவருடைய குமாரர் (சிஷ்யர்) தேவராஜர் என்னும் நாலூராச்சான்பிள்ளை. இவருடைய சிஷ்யர்களில் முக்கியமானவர் திருநாராயணபுரத் தாய் என்னும் ஜநந்யாசார்யர்.

தேவராஜர்க்கு ''ஆய்'' என்று திருநாமம் வந்த வகையாவது:— இவர் தினந்தோறும் பரிவுடன் செல்வப்பிள்ளைக்கு ரஸவிசேஷம் குறையாமல் ஸுகோஷ்ணமாயும், ஏலாலவங்ககநஸாரகுங்குமபரிமளயுக்தமாயும் பாலமுது காய்ச்சி அமுது செய்யப்பண்ணிவந்தார். ஒருநாள் பாலமுது கொண்டுவரச் சிறிது தாழ்க்கவே, செல்வப்பிள்ளை அதுபொறாமல் 'நம் ஆய் (தாய்) எங்கே? இன்னம் காணோமே?' என்று அர்ச்சகமுகேந வினவினபடியாலே இவருக்கு 'ஆய்' என்றும், 'ஜநந்யாசார்யர்' என்றும் திருநாமமுண்டாயிற்று என்பர்.

பகவத்பாகவதர்களுக்குத் தாய்போலே பரிவுகாட்டி வந்தமையாலே 'ஆய்' என்றும், 'ஜநநீ' என்றும் சிறப்புப்பெயர் பெற்றவர் என்றும் கொள்ள லாம். தேவராஜர் என்பது இவருடைய இயற்பெயர். திருநாராயணபுரத்தில் அவதரித்தவராகையாலே 'திருநாராயணபுரத்து ஆய்' என்று அழைக்கப்படுவர். இவர் அருளிய ஸ்ரீவசந பூஷண வ்யாக்யாநமும், இவர் அருளிய திருப்பாவை வ்யாக்யானங்களான ஈராயிரப்படியும் நாலாயிரப்படியும் இப்போது உள்ளன. திருமாலைக்கும் ஆசார்யஹ்ருதயத்திற்கும் இவர் வ்யாக்யானமிட்டருளியுள்ளதாகப் பெரியதிருமுடியடைவு கூறும். அவை இப்போது கிடைப்பதில்லை.

ஆயி சிஷ்யர் நல்லப்பநாயன்—என்பவரை, பிள்ளைலோகம் ஜீயர் ''சச்சம் பிரதாயம்'' [உபதேச. 58] என்கிறபாட்டு வ்யாக்யாநத்தில் கூறியிருக்கிறார். 'ஆயி' பெருமை கூறும் பின்வரும் பாடலையும் எடுத்துள்ளார்.

> மாறில் முடும்பை உலகாரியன் வசனக்கலனும்
> மாறன் கருத்தின் மணவாளன் வார்த்தையும் வல்லிருளைச்
> சீறும்படி திருத்தாழ்வாரை தாதன் தெரிந்தெனக்குத்
> தேறும்படி யுரைத்தான் திருத்தாள்களென் சென்னியதே.

[வசனக்கலன்—வசநபூஷணம். மாறன் கருத்தின் மணவாளன் வார்த்தை — ஆசார்யஹ்ருதயம்] என்று பிள்ளைலோகம் ஜீயர் எடுத்துள்ள பாடல் இவரை ஆசார்யஹ்ருதயஸ்ரீவசநபூஷண ப்ரவசனத்தில் ஈடுபட்டவராகக் காட்டுகிறது.

மாமுனிகளுக்கும் இவருக்குமுள்ள ஸம்பந்தம் யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்தில் பின்வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது:—

(மாமுனிகள்) ஆசார்யஹ்ருதயத்திற்குப் பொருள் அருளிச்செய்யும்போது ''ஜ்ஞானசதுர்த்திகளின் மேலேயிறே ஆநந்தஷஷ்டிகளுக்குதயம்'' என்கிற வாக்யத்திற்கு அர்த்தம் ஸ்வரஸமாக ஆகாமையாலே, இதற்கு அர்த்தமருளிச் செய்வாரார்? என்று விசாரமுண்டாய், திருநாராயணபுரத்தாயி பக்கலிலே இவ்வர்த்தம் கேட்கவேணும் என்னும் பேராசையோடே ஆழ்வாருக்கு விண்ணப்பஞ் செய்து அவரநுமதிகொண்டு திருநாராயணபுரத்துக்குப் போவோமென்று புறப்பட்டெழுந்தருளாநிற்க, ஆயியும் ஜீயருடைய ப்ரபாவங்கேட்டு இவரை ஸேவிப்பதாகத் திருநகரிக்கு ஆஸந்நமாக மார்க்கமத்யே வந்து ஸங்கதராக அவரைக்கண்டு, ''எண்ணின பலம் எதிரிலே வரப்பெறுவதே!'' என்று பெரிய ப்ரீதியோடே தீர்க்கப்ரணமம் பண்ணிநிற்க, ஆயியும் தாளுந் தடக்கையுங் கூப்பி ஸேவிக்க, இருவரும் அந்யோந்யம் வந்தநபரராய் குஶலப்ரஶ்நம் பண்ணிநிற்க, இதைக்கண்டு ஜீயர் ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் ''பெரியநம்பியும் எம்பெருமானாரும் எதிர்ப்பட்டாப்போலாயிற்று'' என்று மிகவும் உகந்தருளினார்கள். அநந்தரம் குன்றமாடத்திருக்குருகூரேற எழுந்தருளி, ஆயி பக்கலிலே ''ஆசார்யஹ்ருதயஸ்யார்த்தாஸ் ஸகலா யேந தர்ஶிதா:| ஸ்ரீஸாநுதாஸமமலம் தேவராஜம் தமாஶ்ரயே ||'' என்று அந்த உபகாரஸ்ம்ருதிக்கு அவர் விஷயமாக ஒரு தனியனருளிச்செய்தருள; ஆயி தமக்கு அதில் அந்வயமற்றபடி தோற்ற

பூதூரில் வந்துதித்த புண்ணியனோ? பூங்கமழும்
தாதாரு மகிழ்மார்பன் முனிவனோ?—தூதூர
வந்த நெடுமாலோ? மணவாள மாமுனிவன்
எந்தையிவர் மூவரிலும் யார்?

என்று அருளிச்செய்து, ஜீயரை அவதாரவிஶேஷமென்று ஆதரித்துக்கொண்டு ஆழ்வாரையும் அநுதிநம் ஸேவித்துக்கொண்டு ஆங்கே சிலகாலமெழுந்தருளியிருக்க;

அதுவே ஹேதுவாக 'ஆயி திருநாட்டுக்கெழுந்தருளினார்' என்று திருநாராயணபுரத்திலுள்ள அஸூயாளுக்கள் திருமாளிகையிலுள்ள ஸர்வஸ்வத்தையும் செல்வப்பிள்ளை அங்கீகரித்தருளும்படி ஸ்ரீபண்டாரத்தில் சேர்க்க, அக்காலத்திலே ஆயியும் மீண்டு திருநாராயணபுரத்துக்கெழுந்தருளி இச்செய்தியைக் கேட்டு ஹ்ருஷ்டராய், '''யஸ்யாநுக்ரஹமிச்சாமி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்'' [எவனுக்கு நான் அருள்புரிய விரும்புகிறேனோ, அவனுடைய செல்வத்தை எடுத்துக்கொள்கிறேன்.] என்னும் திருமுகப்படியே ப்ரத்யக்ஷமாகச் செல்வப்

பிள்ளை இத்தைக் கைக்கொண்டருளியபின்பு நாம் இனி இரக்கத்துக்கு விஷயமென்கிறது கிப்புநர்ந்யாயஸித்₃த₄மிறே. ''யஸ்யைதே தஸ்ய தத்₃த₄நம்'' [மனைவி, புத்ரன், அடிமை ஆகியவர்களுடைய செல்வம் அவர்களுடைய யஜமானனுக்கே உரியது] அன்றோ?' என்று ஈடுபட்டு ஆநந்த₃ாஸ்ருக்கள் பனிப்ப எழுந்தருளி, ஆசார்யக்ருபாலப்₃த₄ரான ஞானப்பிரானொருவரையுமே அர்த்தி₂த்துப்பெற்று மற்றவைகளையெல்லாம் அங்குத்தைக்கு ஸமர்ப்பித்து, யாத₃வகி₃ரி நிலயனுக்கு மால்ய ஸமர்ப்பணைகநிஷ்ட₂ராய், அங்கே ப்ரீதராயெழுந்தருளியிருந்தார்.

மாதவத்தோர் வாழ்த்தும் முடும்பை மணவாளன்
தோதவத்தித் தூய்மறையோ ரானபெற்றார் — தீதற்ற
ஆசா ரியவிதயம் பெற்றார்நம் மாயியிவர்
தேசாரத் தாள்கள்நெஞ்சே! காண்.

என்று ஆசார்யஹ்ருத₃ய ஸம்ப்ரதா₃யத்தைத் தாம் (மாமுனிகள்) அனுஸந்தி₄த்தருள அப்படியே முதலிகளும்

மாதவத்தோன் மாறன் மனங்கூறும் மணவாளன்
தோதவத்தித் தூய்மறையோ ரானபெற்றார்—நீதியினால்
ஆங்கவர்தாள் சேரப் பெற்றார் ஆய்மணவாளன்
பூங்கமலத் தாள்கள் நெஞ்சே போற்று.

என்று அநுஸந்தி₄த்தார்கள்.

பூர்வாஷாடா₄வதீர்ணாய துலாயாம் யது₃பூ₄த₄ரே ।
ஸ்ரீஸாநுதா₃ஸகு₃ரவே தே₃வராஜாய மங்க₃ளம் ॥

[திருநாராயணபுரத்தில் ஐப்பசிப் பூராடத்தில் அவதரித்தவராய், திருத்தாழ்வரைதா₃ஸர் எனப்படும் தே₃வராஜருக்கு மங்களம்.]

ஜநந்யாசார்யர் வைப₄வம் முற்றிற்று.

**ஆய் என்கிற ஜநந்யாசார்யர் வாழித்திருநாமம்**

ஓங்கு துலா பூராடத் துதித்த செல்வன் வாழியே*
ஒண்மதியோன் எதிராசன் ஒண்சரணோன் வாழியே
பாங்குடனே ஞானப்பிரான் பணியுமவன் வாழியே*
பஞ்சமத்தின் பொருள் தன்னைப் பரிந்துரைத்தோன் வாழியே
தேங்குபுகழ் தேவராசர் திருவருளோன் வாழியே*
தென்மறையின் மனப்பொருளைத் தெளிவித்தான் வாழியே
தாங்கு திருக்கை திரிதண்டம் தரித்த வள்ளல் வாழியே*
திருத்தாழ்வரை தாதர் திருவடிகள் வாழியே.

[பஞ்சமம் - பஞ்சமோபாயமான ஆசார்யாபி₄மானம்; தேவராசர் - நாலூராச்சான் பிள்ளை]

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விஷயஸூசிகை

## I முற்சேர்க்கைகள் (புரோபந்தங்கள்)



## II வ்யாக்யானங்கள்

## III பிற்சேர்க்கைகள் (அநுபந்தங்கள்)

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பொதுத் தனியன்கள்.

### அழகிய மணவாளன் அருளிச்செய்தது.

ஸ்ரீஶைலேஶத3யாபாத்ரம் தீ4ப4க்த்யாதி3 கு3ணார்ணவம் ।
யதீந்த்3ரப்ரவணம் வந்தே3 ரம்யஜாமாதரம் முநிம் ॥

### கூரத்தாழ்வான் அருளிச்செய்தது

லக்ஷ்மீநாத2 ஸமாரம்ப4ம் நாத2யாமுந மத்4யமாம் ।
அஸ்மதா3சார்ய பர்யந்தாம் வந்தே3 கு3ருபரம்பராம் ॥

யோ நித்யமச்யுதபதா3ம்பு3ஜயுக்3மருக்ம-
வ்யாமோஹதஸ்ததி3தராணி த்ருணாய மேநே ।
அஸ்மத்3கு3ரோர் ப4க3வதோऽஸ்ய த3யைகஸிந்தோ4:
ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்3யே ॥

### ஆளவந்தார் அருளிச்செய்தது.

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூ4தி:
ஸர்வம் யதே3வ நியமேந மத3ந்வயாநாம் ।
ஆத்3யஸ்ய ந: குலபதேர் வகுளாபி4ராமம்
ஸ்ரீமத் தத3ங்க்4ரியுக3ளம் ப்ரணமாமி மூர்த்4நா ॥

### பராசரபட்டர் அருளிச்செய்தது.

பூ4தம் ஸரஶ்ச மஹதா3ஹ்வய ப4ட்டநாத2
ஸ்ரீப4க்திஸார குலஶேக2ர யோகி3வாஹாந் ।
ப4க்தாங்க்4ரிரேணு பரகால யதீந்த்3ர மிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ॥

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஆண்டாள் திருவடிகளே சரணம்

# திருப்பாவையின் தனியன்களுக்குப்

## பிள்ளைலோகஞ்சீயர் அருளிச்செய்த வ்யாக்யானம்.

1. **அவதாரிகை**—(நீளாதுங்கே3த்யாதி3) பரத3ஶையில் மற்றைப் பிராட்டிமார்க்குப் பெரியபிராட்டியார் முன்னிலையாக வேண்டினாற்போலே, க்ருஷ்ணாவதாரத்தில் பெரியபிராட்டியார்க்கும் ஆண்டாளுக்குமகப்பட நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக வேணும். அங்குத்தை ஐஶ்வர்யத்துக்குப் பிராட்டி ஸத்3ருஶையானாற்போலே, இங்குத்தைக்கு இவனுடைய எல்லாப் படிகளுக்கும் குலஶீலாதி3களால் ஸத்3ருஶையாயிருக்குமவள். இந்த ஶ்லோகம், ப4ட்டர் தென்னாட்டிலே எழுந்தருளியிருக்க, பெருமாளைப் பிரிந்த வ்யஸநத்தாலே திருவுள்ளங் கலங்கியிருக்கிற த3ஶையிலே திருவுள்ளம் ப்ரஸந்நமாகைக்காக, நஞ்சீயர் "ஆண்டாளை ஒரு ஶ்லோகமும் ஆழ்வார்களை ஒரு ஶ்லோகமும் அருளிச்செய்யலாகாதோ?" என்ன, அதி ப்ரீதராய்த் திருப்பாவைக்கு வாக்யார்த்த2மாக அருளிச்செய்து ஆண்டாளை ஶரணம் புகுகிற ஶ்லோகம். 'சேதநரடைய நஞ்சுண்டாரைப்போலே அநாதி3மாயையாலே மயங்கிக்கிடந்து உறங்க, இப்படியிருக்கிற ஸம்ஸாரத்துக்குள்ளே, திருவாய்ப்பாடிப் பெண்பிள்ளைகள் பரஸ்பரம் உணருவாரும் உணர்த்துவாருமாய்ப் பரமபத3த்தில் யாத்ரைபோலே செல்லாநிற்பதே!' என்று ஆண்டாள்தானும் அநுகாரத்தாலே இவர்களை உணர்த்தினவோபாதி அவன் தன்னையும் உணர்த்தினாள்.

### பராசரபட்டர் அருளிச்செய்த தனியன்.

நீளாதுங்க3ஸ்தநகி3ரிதடீ ஸுப்தமுத்3போ3த்4ய க்ருஷ்ணம்
பாரார்த்2யம் ஸ்வம் ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்3த4மத்4யாபயந்தீ |
ஸ்வோச்சி2ஷ்டாயாம் ஸ்ரஜி நிக3ளிதம் யா ப3லாத்க்ருத்ய பு4ங்க்தே
கோ3தா3 தஸ்யை நம இத3மித3ம் பூ4ய ஏவாஸ்து பூ4ய:||

நீளாதுங்க3ஸ்தநகி3ரிதடீ ஸுப்தம்—நப்பின்னைப் பிராட்டியின் உயர்ந்த திருமுலைத் தடங்களாகிற மலைச்சாரலில் திருக்கண் வளர்ந்தருளுமவனும், ஸ்வ உச்சி2ஷ்டாயாம்—தன்னால் சூடிக் களையப்பட்ட, ஸ்ரஜி — மாலையிலே, நிக3ளிதம் க்ருஷ்ணம் — விலங்கிடப்பட்டவனுமான கண்ணபிரானை, உத்3போ3த்4ய—திருப்பள்ளியுணர்த்தி, ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்3த4ம் — பற்பல வேதங்களின் தலையான பா4க3ங்களாலே தேறின [வேதா3ந்தஸித்3த4மான], ஸ்வம்— தன்னுடையதான, பாரார்த்2யம் — பாரதந்த்ரியத்தை, அத்4யாபயந்தீ — அறிவியாநின்றவளாய், ப3லாத்க்ருத்ய—வலியச்சென்று, யா கோ3தா3—யாவளொரு ஆண்டாள், பு4ங்க்தே- (அக்கண்ணபிரானை) அநுபவிக்கிறாளோ. தஸ்யை—அப்படிப்பட்ட பெருமையையுடையவளான ஆண்டாளின் பொருட்டு, பூ4யோ பூ4ய ஏவ—காலதத்துவமுள்ள வரையிலும், இத3ம் இத3ம் நம:—இந்த இந்த நமஸ்காரமானது, அஸ்து—ஆயிடுக.

(நீளா துங்க3ஸ்தநகி3ரிதடீஸுப்தம்) A "நிறைவினுல் குறைவில்லர் நெடும்பணைத் தோள் மடப்பின்னை, பொறையினுல் முலையணைவான் பொருவிடையேழடர்த்துகந்த" என்னக்கடவதிறே; ப்ராப்திக்கு உகப்பானும் அவனேயிறே. 'உத்3போ3த்4ய' என்று உணர்த்த வேண்டும்படி போ4க3பரவஶனுனன். இப்படி அந்யபரனுனவன்தான் ஆரென்னில்: — நிரதிஶயாஸுக2ரூபனுன க்ருஷ்ணனென்கிருள் — (க்ருஷ்ணம்) என்று. 1. "க்ருஷிர் பூ4வாசகஶ்ஶப்3தோ3 ணஶ்ச நிர்வ்ருதி வாசக:" என்னக்கடவதிறே. 2. "ரஸோ வை ஸ:" 3. "ஆநந்தோ3 ப்3ரஹ்ம" 4. "ஆநந்த3யாதி" B "நந்தகோபன் மகன் கண்ணன்" 5. "பரமாநந்த3ம்" என்னும்படியிறே இருப்பது. (ஸ்தநகி3ரிதடீஸுப்தம் க்ருஷ்ணம்) என்கையாலே-பொற்குப்பியின் நுனியிலே கருமாணிக்கத்தை அழுத்திவைத்தாற்போலவும், விகாஸோந்முக2மான பத்3மகோஶத்திலே ஷட்பத3ம் படிந்தாற்போலவும் இருக்கை. 6. "மஞ்ஜரீஸுப்த ப்4ருங்க3ா" C. "போதில் பொறிவண்டு கண்படுப்ப" D "தெய்வவண்டு" என்றும் 7 "ஸ்ரீரங்க3ராஜ ப்4ருங்க3:" என்றும் சொல்லக்கடவதிறே. E "மலராள் தனத்துள்ளான்" என்று ஸ்ரீஸ்தநத்திலும் F "தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையும் என்னுமிவையே முலையாவடிவமைந்த-அன்னநடைய அணங்கு" என்கிற பூ4ஸ்தநத்திலும் மக்3நனுய் G நிலையார நின்ருற்போலே நீளாஸ்தநத்திலும் ஸுப்தனுனபடி. H "வடமாமலை யுச்சியை" I "மாலிருஞ்சோலை யென்னும் மலையையுடைய மலையை" என்னக்கடவதிறே. "உத்3போ3த்4ய" என்கையாலே J "துயிலெழப்பாடி" K "உம்பர்கோமானே உறங்காதெழுந்திராய்" L "செற்ருர்க்கு வெப்பங்கொடுக்கும் விமலா துயிலெழாய்," என்று எழுப்பும்படி சொல்லுகிறது. இத்த3ஶையிலே இவர்களுணர்த்த உணர்வாருகில் ப்ரணயித்வத்துக்கு நமஸ்காரமன்ருே என்னில்—நெருப்புப்பட்டு வேவாநின்ருல் ப்ரணயிநிகள் என்னுங்காட்டில் உறங்கப்போமோ? இவர்களுடைய ஆர்த்தநாத3ம் அக்3நி ஜ்வாலை கதுவினுற்போலே கதுவ, தாய்வேறு கன்றுவேருய்த் துடித்துக்கொண்டு எழுந்திருந்தார்கள்.

இப்படி உணர்த்தினவதுக்கு ப்ரயோஜனம் சொல்லுகிறது மேல்— (பாரார்த்2யம் ஸ்வம் ஶ்ருதிஶத ஶிரஸ்ஸித்3த4ம்) தன்னுடையதாயிருந்துள்ள உபநிஷத்3 கு3ஹ்யமான பாரதந்த்ரியத்திலை. 8 "மந்த்ரப்3ரஹ்மணி மத்4யமே நமஸா பும்ஸஸ் ஸ்வரூபம்" என்கிறபடியே ஆத்மாவுக்கு நிலைநின்றதாய் ஸ்வம்மாயிறே பாரதந்த்ரியந்தானிருப்பது. 9 "யஸ்யாஸ்மி" 10 "பரவாநஸ்மி" M "தனக்கேயாக" N "உனக்கேநாமாட் செய்வோம்" என்னக்கடவதிறே. ஸ்வத்வமுண்டாருல் ஸ்வாமித்வம் தன்னடையே வரக்கடவது. 11 ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்3ரஹ்மணி ஸ்தி2தம்" இதுக்கு ப்ரமாணம் காட்டுகிருர் (ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்3த4ம்) என்று. மஹாநிதி4 பர்வதகுஹரங்களிலே ஸஞ்சிதமாய்க் கிடக்குமாபோலே, உபநிஷத்துக்களிலே ஸுரக்ஷிதமாயிருக்கிறபடி. (ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்3த4ம்) என்கையாலே—இதுதான் ஒரோ ப்ரதே3ஶங்களிலன்றிக்கே எங்குமுண்டாயிருக்கை. 12 "ஸர்வே வேதா3:" 13 "வேதை3ஶ்ச ஸர்வை:" என்னும்படி எங்குமுண்டாயிருக்கை. ஶேஷியைச்சொன்ன இடமெங்கும் ஶேஷபூ4தருமுண்டாயிறேயிருப்பது. இந்த ஶேஷஶேஷிபா4வமாகிற பரிமாற்றம் பரமபத3த்தில் பரிமாறக்கடவதாயிருக்கும். இப்படி பரமபத3த்தில் பரிமாறக்கடவதான பாரதந்த்ரியத்தை, அதுக்கு எதிர்த்தட்டான ஸ்வாதந்த்ரியமே பரிமாறும் வழிபறிக்குந் தே3ஶத்திலே இம்மஹாநிதி4யை வெளியிடுகிருள். (அத்4யாபயந்தீ) 14 'பதிம் விஶ்வஸ்ய'

---

A-திருவாய் 4-8-4, B-பெரியாழ் திரு 3-8-8, C-திருப்பாவை 3 D-திருவாய் 9-9-4 E-மூன்-திருவ 3 F-பெரியதிருமடல் 6, 7, G-பெரியதிரு 6-9-8, H-பெரிய திரு 7-10-3, I-பெரியாழ்திரு 4-3-11, J-திருப்பாவை 16, K திருப்பாவை 17, L-திருப்பாவை 20, M-திருவாய் 2-9-4, N-திருப்பாவை 29.

1. 'யஸ்யாஸ்மி' என்று ஓதிக்கிடக்கிற ஶேஷஶேஷிப$_1$ாவம் அநுஷ்டி$_2$ப்பாரில்லாமையாலே, இவர்களைப்போலே அவனும் மறந்து கைவிட்டிருக்க, A "பொற்றாமரையடியே போற்றும் பொருள்கேளாய்" என்று அவனை மறித்துவைத்து A "உன்தன்னோடுற்றோமே யாவோ முனக்கே நாமாட்செய்வோம்" என்று ஓதுவித்தாள். 2. "யோ வை வேத$_3$ாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை" B "எயிற்றிடை மண்கொண்ட எந்தை இராப்பகலோதுவித்து" என்கிற நிலை குலைந்தது, பரதந்த்ரைகளாயிருக்கிற இவர்கள் நியமிக்கப்பெறுவார்களோ? என்னில்—ஸ்வதந்த்ரரோபாதி ஆற்றாமையுடையாரும் நியமிக்கப்பெறுவார்கள். ஆர்த்தர்பாடும் ஸ்வாதந்த்ரியமேறிப் பாய்வது: 'நான் என்னது' என்று அவனையொழியவும் சொல்லுவார் பாடேயும் ஸ்வாதந்த்ரியமேறிப் பாய்வது. தம் திருவுள்ளந்தன்னை நியமிக்குங்காட்டில் ஸ்வாதந்த்ரியமாகமாட்டாதிறே. பண்டும் இப்படி நியமித்தாருண்டு. 3. "ஸ்த்ரீசாபலாதே$_3$தது$_3$த$_3$ாஹ்ருதம் மே த$_4$ர்மஞ்ச வக்தும் தவ கஸ்ஸமர்த்த$_2$:| விசார்ய பு$_3$த்$_3$த்$_4$யா து ஸஹாநுஜேநயத்$_2$ரோசதே தத்குரு மாசிரேண ||" என்றாள். அப்படியே இவளும் நியமித்து C "சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே" என்கிறாள்.

இப்படி ஸர்வஜ்ஞனுக்குங்கூட அத்$_4$யயநம் பண்ணுவிக்கிறவளுடைய வைலக்ஷண்யஞ் சொல்லுகிறது மேல்: (ஸ்வோச்சி$_2$ஷ்டேத்யாதி$_3$) தான் சாத்திக் கழித்த மாலையாகிற விலங்காலே இவனைப் பேராதபடி விலங்கிட்டு யாவளொருத்தி அவனை ப$_3$லாத்கரித்து பு$_4$ஜித்தாள்; (கோ$_3$தா$_3$ தஸ்யை நம இத$_3$மித$_3$ம் பூ$_4$ய ஏவாஸ்து பூ$_4$ய:) இப்படி வேண்டற்பாட்டையுடையளாய், எம்பெருமானுக்கு D "மார்வத்து மாலை" என்கிறபடியே நிரதிஶயபோ$_4$க்$_3$யையாயிருக்கையாலே "கோதை" என்னுந் திருநாமத்தையுடைய ஆண்டாள் திருவடிகளிலே காலதத்வமுள்ளதனையும் அடிமை (அடிமை அடிமை) என்கிறார்.

ஸ்வோச்சி$_2$ஷ்டமாவது-சூடிக்களைந்தது; E "தொடுத்த துழாய் மலர் சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம்" 4. "த்வயோபபு$_4$க்த ஸ்ரக்$_3$க$_3$ந்த$_4$—உச்சி$_2$ஷ்டப$_4$க்ஷிணோ தா$_2$ஸா:" என்னுமது ப்ரணயித்வத்தாலே மாறுடிக் கிடக்கிறது. இப்படி ஈஶ்வரன் யதே$_2$ஷ்டவிநியோகா$_3$ர்ஹனும்படி தன்னை ஒக்கிவைக்கையாலே, அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யம் தோற்றுகிறது. F பார்வண்ணமடமங்கை பத்தரிறே; G "அரங்கர்மௌலி சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவ"ளிறே; D வாசஞ்செய் பூங்குழலிலே வாஸிதமாக்கிக் கொடுத்தபடி. (ஸ்ரஜி நிக$_3$ளிதம்) மாலை மாலையாலே விலங்கிட்டாள். கால்விலங்காகிலிறே கழற்றுவது: H தந்தை காலில்விலங்கற" I "தந்தை தளைகழல" என்னக்கடவதிறே. எல்லாரையும் கர்மாநுகு$_3$ணமாகக் கட்டுமவன் காமிநி கழித்த கண்ணியாலே கட்டுண்டான். J கண்ணியார் குறுங்கயிற்றாற் கட்டுண்டபடியாய்த்து. K "மல்லிகைமாமாலை கொண்டங்கார்த்ததும்" L "மன்னிலங்குபாரத்தை மாளவூர்ந்த வரையுருவின் மாகளிற்றைப் பொன்னிலங்கு முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு!" அநுப$_4$வித்தாள், M தறியார்ந்த கருங்களிறிறே. ஸ்வேச்ச$_2$ாவிஹாரம் பண்ணித் திரிகிற க்ருஷ்ண மஹாமதங்க$_3$ஜத்தைத் தன்னுடைய குசகுட்$_3$மளமாகிற ஆளாநத்தோடே அணைத்து அநுப$_4$வித்தாள்.

(யா ப$_3$லாத்க்ருத்ய பு$_4$ங்க்தே) யாவளொருத்தி ப$_3$லாத்கரித்து பு$_4$ஜித்தாளென்கையாலே, அதுவும் அவனுகப்புக்கு உறுப்பாயிருக்கும்; 5. "அஹமந்நமந்நமத$_3$ந்தமத்$_3$மி"

---

A-திருப்பாவை 29, B-பெரியாழ் 5-2-3. C-திருப்பாவை 28. D-திருவாய் 10-10-2. E-திருப்பல்லாண்டு 9, F-திருநெடு 18, G-இராமாநுச 16. H-பெரியதிரு 8-5-1, I-பெரியதிரு 11-5-2, J-பெரியதிரு 11-5-5, K-பெரியாழ் 3-10-2, L-திருநெடு 28. M-பெரியதிரு 2-10-6.

அல்லாதபோது அவனுக்கு அனுப4வம் குலையும். (கே3ாத3ா) என்று கோதையென்றபடி. A "குழற்கோதை" என்ருரிறே; கோதை-மாலை; மாலைபோலே போ4க்3யையாயிருக்கை; ஸ்ரீமாலாகாரர் மகளாகையாலே மாலை என்னலாம்படியானுள்; மாலையான தான் தலையான மாலையை வழங்கினுள்; திருமாலை வழங்கினுளிறே. 1 "ரங்கே3நேத்ரஸரேண தாடி3ததநுஸ் ஸேதே ஸ்வயம் ஸுந்த3ரோ ப3த்3த்4ஸம்பகத்4ாமபி: குசதடே மக்3நோZஞ்ஜநாத்3 ரிஸ்வர:| போ4க3ாபாடவலஜ்ஜயா வடமஹாத4ாமா ப2ணிந்த்3ரேSபதத்ரம்யேஸஸ்தவ விஸ்மிதே.ந மநஸா கே3ாதே3 பரம் திஷ்டதி || " என்றிறே ஆண்டாள் வீறுடைமையிருப்பது.

(அத்4யாபயந்தீ) என்கையாலே- B பாமாலை பாடிக்கொடுத்தபடி சொல்லிற்று. (ஸ்ரஜி நிக3ளிதம் யா ப3லாத்க்ருத்ய பு4ங்க்தே) என்கையாலே பூமாலை சூடிக்கொடுத்த படி சொல்லுகிறது. எல்லாப்படியாலும் இவளுக்கு எம்பெருமானை வஸீகரித்து ஆத்மாக்களை ரக்ஷிப்பிக்கவல்ல புருஷகாரத்வமும், இருவருமான சேர்த்தியாலே ப்ராப்யத்வமும் சொல்லுகிறது, ஆகையாலிறே, எம்பெருமானுர் ' C நாறுநறும பொழுலல இவள் ப்ரார்த்தி2த்தபடி நடத்தியும், திருப்பாவையை நாடோறும் நடத்தியும், அத்தாலே D சூடிக் கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்வல் இராமானுசனுனதும்; அவளுக்கும் E ஆழ்வார் திருமகளானதுக்கு மேலே ராமாநுசனை அண்ணராக அபி4மாநித்த ஏற்றமும் உண்டிறே.

இப்படி எல்லாவற்ருலும் நிரவதி4க வைப4வத்தையுடைய அந்த ஆண்டாள் பொருட்டு அடிமையாய் அற்றுத்தீர்ந்து ஓரொன்றுகளிலே தம்மை எழுதிக்கொடுத்து ஆழங்காற்படுகிருர். (பூ4ய ஏவாஸ்து பூ4ய:) அவள்தான் F "எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்குமுன் தன்னேடுற்றேமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம்" என்றத்தை, தத்3விஷயத்திலே தாம் ப்ரார்த்தி2க்கிருர். 2 "நாராயணுய நம இதி ப்ரணம்யோத்த2ாயோத்த2ாய புந:புந: ப்ரணம்ய" என்றிறே எம்பெருமானுர் பரிமாற்றமிருப்பது. இதுதான் 3 'அத்ர பரத்ரசாபி நித்யம்' என்னக் கடவதிறே. அங்கும் 4 "பூ4மிநீளா நாயக" என்றும், 5 "உப4ாப்4யாம் பூ4மிநீளாப்4யாம் ஸேவித: பரமேஸ்வர:" என்றும் சொல்லக்கடவதிறே. இத்தால் திருப்பாவையின் அர்த்த2த்தை அநுஸந்தி4த்து ஆநந்த3மக்3நராய், அத்தாலே தாம் ஆண்டாளை ஸரணம் புக்கபடியை அனைவரும் அநுஸந்தி4க்கும்படி அருளிச்செய்தாராய்த்து,

2. அவதாரிகை—(அன்னவயல் புதுவை) இதில், ஆபி4ஜாத்யத்தையுடையளாய், பெரியபெருமாளுக்கு வாசிக காயிகரூப மாலாப்ரதை3யாய், "கோதை" என்று நிருபகமான சூடிக்கொடுத்தாளைச் சொல் என்கிறது. 'சொல்" என்கிறது—நெஞ்சையாதல், நெஞ்சுபோல் வாரையாதல்,

### உய்யக்கொண்டார் அருளிச்செய்த தனியன்கள்.

1. அன்ன வயற்புதுவை யாண்டா ளரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம் — இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

அன்னம் வயல்-ஹம்ஸங்கள் (உலாவுகின்ற)வயல்களையுடைய, புதுவ்வ—ஸ்ரீவில்லிபுத்தூரில் (திருவவதரித்த), ஆண்டாள்—ஆண்டாள் என்னும் திருநாமத்தை உடையவளும், பன்னு—ஆராய்ந்து அருளிச்செய்யப்பட்ட, திருப்பாவை பல் பதியம்—திருப்பாவை என்னும் பல பாட்டுக்களை; இன் இசையால் பாடி—இனிய இசையுடன்பாடி (அவற்றை), அரங்கற்கு—ஸ்ரீரங்கநாதனுக்கு, நற்பாமாலை—விலக்ஷணமான பாமாலையாக, கொடுத்தாள்—ஸமர்ப்பித்தவளும், பூ மாலை—செண்பகம் முதலிய பூக்களினுலான மாலையை, சூடி—(தான் முதலில்) சூடி, கொடுத்தாளை —(பிறகு ஸ்ரீரங்கநாதனுக்கு) ஸமர்ப்பித்தவளுமான கோதையை, சொல்லு—அநுஸந்திப்பாயாக.

---

A--நாச் திரு 9-10, B-திருப்பாவைத் தனியன், C-நாச் திரு9-6. D-இராமாநுச 16
E-உபதேச 22, F-திருப்பாவை 29,

**வ்யா:—** (அன்னவயல் புதுவை) A. மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லி புத்தூரிறே; B. அன்ன நடைத் திங்கள்முகவல்லியான ஆண்டாள் போலேயிறே அவை யிருப்பது; அன்னங்கள் ஸஞ்சரிக்கும் வயலையுடைய புதுவை, C. "புரவிமுகஞ்செய்து செந் நெலோங்கி விளைகழனிப்புதுவை...பட்டர்பிரான்," D. "தண்புதுவைப் பட்டன்" என்றிறே திருத்தமப்பனார்க்கு நிருபகம்; இவளுக்கும் அப்படியேயாயிருக்கை, (புதுவையாண்டாள்) ஸ்ரீ பூ$_4$மி நீளைகளுடைய ப்ராத$_4$ாந்யமாயிறே திருவெள்ளறை ஸ்ரீவில்லிபுத்தூர் திருநறையூ ரென்கிற த்ரிஸ்த$_2$ாநமிருப்பது. ஸ்ரீபூ$_4$மிப்பிராட்டியாரான ஆண்டாள், 1. ஶிஷ்யா த$_3$ாஸீ பு$_4$க்தைகளாய் E பாடி F வருடி G "உனக்கே நாமாட்செய்வோம்" என்று அடிமைசெய்ய H ஆழ் வார் திருமகளாராய் வந்து அவதரித்தபடி, ஆகிலும் அடியில் திருநாமமே ஆண்டா ளென்று அநுவர்த்திக்கிறது. (ஆண்டாளரங்கற்குப்பன்னு திருப்பாவைப் பல்பதியம் இன் னிசையால் பாடிக் கொடுத்தாள்) இவள் க்ருஷ்ணனையன்றே திருப்பாவை பாடிற்று; பெரியபெருமாளுக்குப் பாடிக்கொடுக்கையாவது- I "அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப் பிடித்த பெண்ணாளன் பேணுமூர் பேருமரங்கம்" என்றும்; J "செம்மையுடைய திருவரங் கர் தாம்பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை" என்றும், K பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்-மாசுடம்பில் நீர் வாரா மானமிலாப்பன்றியாந் தேசுடைய தேவர் திருவரங்கர்" என்றும். L "நிலமகள் கேள்வன்" என்றும் பூமிப்பிராட்டியான இவள் ஆதரித்துப் போரு கிற ஸ்ரீவராஹநாயனார்படியும், அநுகாரத்தாலே ஆதரித்துப்போருகிற கோபாலர்படியும் த$_4$ர்ம்யைக்யத்தாலும் ஆஶ்ரித வ்யாமோஹ கு$_3$ணத்தாலும் பெரியபெருமாளிடத்திலே காண லாயிருக்கும். இனித்தான் M பள்ளிகொள்ளுமிடத்தே N துயிலெழப்பாடித் திருப்பள்ளியுணர்த் துவதும் இங்கேயுண்டிறே; வடபெருங்கோயிலுடையானை க்ருஷ்ணனாக அநுகரித்தாற் போலே, O கோவலனாய் வெண்ணெயுண்ட வாயோடே கண்வளர்ந்தருளுகிறதாக அநுஸந் திக்கலாமிறே. M "பள்ளிகொள்ளுமிடத்தடி கொட்டிட" என்று ப்ரார்த்தித்தபடியே P பண வாளரவணைப் பற்பலகாலமும் பள்ளிகொள் மணவாளரோடு மணம்புணர்ந்து கூடினாளிறே. ஆகையாலே பாடின விஷயமும் அவரேயிறே. விஶேஷித்துப் Q ...ட்டினால் கண்டுவாழும் பாணர்பாட்டுக் கேட்குமிடமாகையாலும், இவள் அவர்மகளாகையாலும் பாடவல்ல நாச்சியா ராய் அவ்விஷயத்தையே பாடினாளாய்த்து, (அரங்கற்குப் பன்னு திருப்பாவைப் பல் பதி யம்) அர்த்த$_2$த்தின் சீர்மையாலே எல்லாராலும் ஆராய்ந்து அநுஸந்திப்பதான திருப் பாவை யென்னுதல்; ஆராய்ந்து அருளிச்செய்த திருப்பாவை யென்னுதல், நிருபித்தால், பல் பதியம்—பல பத்$_3$யமென்றபடி. R சங்கத்தமிழ் மாலை முப்பதுந் தப்பாமலிறே அருளிச்செய் தது; அதுதான் இன்னிசையாலேயாய்த்துப் பாடிக் கொடுத்தது. 2. "ஸம்ஶ்ரவே மது$_4$ரம் வாக்யம்" S "செவிக்கினிய செஞ்சொல்" என்னுமாபோலே, (நற்பாமாலை) விலக்ஷண மாய், ச$_2$ந்தே$_3$ாருபமாயிருப்பதான மாலையைப் பாடிக்கொடுத்தாள், அதாவது T "சூட்டி னேன் சொல்மாலை" என்னும்படி ப்ரஸாத$_4$ரிக்கும்படி பண்ணுகை, பூமாலை சூடிக் கொடுக்கை யாவது U செண்பக மல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சியாலும் இடையிட்டுத் V தொடுத்த துழாய் மாலையை; (சூடிக்கொடுத்தாள்) தன் W வாசஞ்செய் பூங்குழலிலே வாஸிதமாக்கிச் சூடிக்கொடுத்தாளாய்த்து. ஆகையால் திருப்பாவையநுஸந்த$_4$ாநத்துக்கு முன்னே (சூடிக் கொடுத்தாளைச் சொல்லு) என்று-அவளை அநுஸந்தி$_4$க்கச் சொல்லுகிறது. இத்தால், அவள் தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$த்திலும் அவள் திருநாமமே ப்ரத$_2$மம் அநுஸந்தே$_4$யமென்றதாய்த்து.

---

A-நாச்-திரு 5-5, B- C-பெரியாழ் 4-1-10, D-பெரியாழ் 3-8-10, E-திருப்பாவை 27, F-பெரு-திரு 1-1, G-திருப்பாவை 29, H-உப தேச 22, I-நாச்திரு 11-9, J-நாச்-திரு 11-10, K-நாச்-திரு 11-8, L-திருவாய் 7-2-9, M-நாச்-திரு 4-1, N-திருப்பாவை 16, O-அமலனாதி 10, P-நாச்-திரு 10-6. Q-அமலனாதி-தனியன், R-திருப்பாவை 30, S-திருவாய் 10-6-11, T-முதல் திருவ-1, U-பெரியாழ் 2-7-10, V-திருப்பல் 9, W-திருவாய் 10-10-2.

3. அவதாரிகை (சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே) இதில் சூடிக்கொடுத்தபடியையும் பாடிக்கொடுத்தபடியையும் சொல்லி ஸ்தோத்ரம் பண்ணி, திருவேங்கடமுடையானடியாகச் சொன்ன இதன் அர்த்த2ங்களை நாம் அதிக்ரமியாதபடி அநுக்3ரஹிக்கவேணுமென்று ஆண்டாளை அர்த்தி2க்கிறது. கீழ் "அரங்கற்கு" என்றது; இதில் "வேங்கடவற்கு" என்றது; கோயில் திருமலைகளிலேயாய்த்து, கோதை சூடிக்கொண்டிருப்பது.

2. சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய்—நாடிநீ
வேங்கடவற் கென்னை விதியென்ற விம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு.

சூடிக்கொடுத்த—(பூமாலையைத் திருக்குழலிற்) சூடி, (அதனை எம்பெருமானுக்கு) ஸமர்ப்பித்த, சுடர் கொடியே—ஒளிமயமான கொடிபோன்றவளே! தொல்பாவை—அநாதி3யான ஆசாரத்தினுல் ஸித்3த4மான நோன்பை, பாடி—(திருப்பாவை முகமாகக்) கூறி, அருளவல்ல-(அடியார் திறத்துக்) கருணை புரிய வல்லவளும், பல்வளையாய்-பல வளைகளைக் கையிலணிந்துள்ளவளுமான கோதாய்! நி—நீ. நாடி—(மன்மதனை) நாடி, என்னை வேங்கடவற்கு விதி என்ற இம்மாற்றம்—"காமதேவா! நீ என்னைத் திருவேங்கடமுடையானுக்கு வாழ்க்கைப்படுத்த வேணும்" என்று காமனைக் குறித்துக் கூறியவற்றை, நாம் கடவாவண்ணம்—யாம் மீருதொழியுமாறு, நல்கு—அருள்புரிவாயாக.

வ்யா:-(சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே) A குழற்கோதையாகையாலே அளகத்திலே வளையமாகச் சூடிக்கொடுத்தாளாய்த்து. (சுடர்க்கொடி) ரூப ஸம்ஸ்த2ாநம் பொற்கொடியென்னலாம்படியிருக்கை. 1. "ஹேமலேகா2ம்" 2. "மங்க3ளதீ3ப லேகா2ம்" (கொடி) அவனைக்கட்டலாங்கொடி. B "பெண்ணுக்கையாப்புண்டு" என்னக்கடவதிறே; (சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே) நிருபகம். (தொல்பாவை பாடியருள வல்ல பல்வளையாய்) தொல்-பழையதான, பாவை-நோன்பை; பஞ்சலக்ஷங்குடியிற்பெண்களுங் கூடி நோற்ற நோன்பை 3 "ஹேமந்தே ப்ரத2மே மாஸி நந்த3வ்ரஜகுமாரிகா:" என்று-எல்லாருங்கூடி க்ருஷ்ணனைப்பெறுகைக்கு மார்கழி நீராடி நோற்ற நோன்பை, பிற்பாடர்க்கும் அநுஸந்தே4யமாம்படி ப்ரப3ந்த4மாக, பாடியருளவல்ல-பாடி உபகரிக்க வல்லவளென்னுதல்; அன்றிக்கே, பழையதாய்ப் போருகிற திருப்பாவையென்கிற ச2ந்தே3ாருபமான ப்ரப3ந்த4த்தை என்னுதல். (பல்வளையாய்) C "பல்வளையாள்" என்னுமாபோலே வளையே நிருபகமாயிருக்கை. (நாடி நீ வேங்கடவற்கு என்னை விதி என்ற) – நீ D "திருவேங்கடத்தானை நான் சென்று நாடி" என்கிறபடியே அபி4நிவேசத்தைப் பண்ணி, E "காமதேவா" என்று - உன்னுடைய காமத்தீயாலே F "வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே" என்ற; (இம்மாற்றம்) இந்தச் சொல்லை யென்னுதல்; இந்த ப்ரகாரமென்னுதல்; ப4க3வத் காமத்தாலே சொன்ன பாசுரத்தை யென்னுதல், அர்த்த2த்தையென்னுதல். (நாம் கடவா வண்ணமே நல்கு) உனக்கு அடிமையாயிருக்கிற நாங்கள் அதிக்ரமியாத ப்ரகாரம் உபகரிக்கவேணும். நல்குதல்-கொடுத்தல்.

இத்தால்-ஆண்டாளுடைய ப4க3வத்ப்ரேமம் உண்டாக வேணுமென்று அவளை வேண்டுகிறது.

பிள்ளைலோகஞ்சீயர் திருவடிகளே சரணம்.

---

A-நாச்-திரு 9-10, B-நாச்-திரு 11-7, C-பெரியாழ் 2-2-5, D-பெரிய-திரு 6-8-1, E-நாச்-திரு 1-2, F-நாச்-திரு 1-1.

ஸ்ரீ:

பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்த

# திருப்பாவை மூவாயிரப்படி

வ்யாக்2யாநத்தின் அவதாரிகை.

a தே3ஹாத்மாபி4மாநிகளுக்கும் b ஆத்மஸ்வரூபம் கைவந்திருக்கும் ரிஷி களுக்கும் பர்வதபரமாணுவோட்டை வாசி போரும்; c ரிஷிகளுக்கும் ஆழ்வார் களுக்கும் அத்தனைவாசி போரும்; ஆழ்வார்களுக்கும் பெரியாழ்வாருக்கும் அத் தனைவாசி போரும்; d பெரியாழ்வாருக்கும் ஆண்டாளுக்கும் அத்தனைவாசி போரும். e அவர்களில் இவளுக்கு வாசியென்? என்னில்: 1 'அநாதி3 மாயயா ஸுப்த:' என்கிறபடியே ஸம்ஸாரத்திலே உறங்குகிறவர்களை எழுப்பி, எம் பெருமான் தானே தன்னைக் காட்டக் கண்டார்கள் ஆழ்வார்கள்; f இவள் தானே சென்று எம்பெருமானையெழுப்பித் தன்குறையை அறிவித்தாள்; g ஆகையாலே,

## பெரிய அரும்பத விளக்கம்

a......l. பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை திருப்பாவை என்கிற தி3வ்யப்ர ப3ந்த4த்துக்கு வ்யாக்2யானஞ் செய்தருளக் கோலி, வக்த்ருவைலக்ஷண்யத்தையும் ப்ரப3ந்த4 வைலக்ஷண்யத்தையும் ப்ரதிபாத்3யவைலக்ஷண்யத்தையும் அருளிச்செய்கிறார்-(தே3ஹாத்மாபி4 மாநிகளுக்கும் என்று தொடங்கி—அபேக்ஷிக்கிறது) என்னுமளவும்.

b (ஆத்மஸ்வரூபம் கைவந்து) என்றது, தே3ஹாதிரிக்த-ஆத்ம ஸ்வரூபத்தை யோக3த் தாலே ஸாக்ஷாத்கரித்து என்றபடி. c (ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் அத்தனைவாசி) என்றது, ரிஷிகள் ஸ்வயத்நபரராகையாலும், ஆழ்வார்கள் A மயர்வறமதிநலமருளப்பெற்று எம்பெருமானையே தஞ்சமென்றிருக்கையாலும் உண்டான வாசி என்றபடி. e, f, g 'ஆழ்வார் களனைவர்க்கும் ஆண்டாளுக்கும் ஜ்ஞாநாதி4க்யம் துல்யமாயிருக்க வாசியெங்ஙனே' என்னும் ஶங்கையை அநுவதி3த்துப் பரிஹரிக்கிறார் (அவர்களில்) இத்யாதி3வாக்யத்ரயத்தாலே. ஆழ்வார்களெல்லாரையும்போலே முன்பில்லாத ஜ்ஞாநாதிஶயம் எம்பெருமான் கடாக்ஷத் தாலே வந்ததன்றிக்கே, நித்யஸூரிகளைப்போலே ஸ்ஹஜஸித்3த4 ஜ்ஞாநாதிஶயத்தாலே அவனை எழுப்புகையாலே ஏற்றமுண்டு என்று கருத்து. அவனை யெழுப்புகையாவது— B நப் பின்னை கொங்கை மேல் வ்யாமோஹத்தாலே உறங்குமவனைத் தங்களிடத்திலும் அபி4முக2 னாகப் பண்ணிக்கொள்ளுகை.

## சின்ன அரும்பத விளக்கம்

திருப்பாவையால் செய்தது - தத்காலத்தில் கோ3பிமார் நோன்பென்கிற வ்யாஜத்தாலே க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்தைப் பண்ணின ப்ரகாரத்தை ஆண்டாள் அநுகரிக்கிறதாயிருக்கிறது. a......l. ஆழ்வார்களிற் காட்டில் ஆண்டாளுக்குண்டான ப்ரமாத்ருவைப4வத்தை அருளிச் செய்துகொண்டு இந்த ப்ரப3ந்த4த்துக்கு ஸ்வாபதே3ஶம் அருளிச்செய்கிறார்-(தே3ஹாத்மாபி4 மானிகளுக்கும்) என்று தொடங்கி (யாவதா3த்மப4ாவியாம்படி பண்ணியருளவேணுமென் றபேக்ஷிக்கிறது) என்னுமளவும். c (ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் பர்வத) இத்யாதே3: ப்ரமாணம் 2. "ஸத்கர்மநிரதாஶ்ஶுத்3தா4ஸ் ஸாங்க்2யயோக3விதஃ3ஸ் தத2ா ! நார்ஹந்தி ஶரணஸ்த2ஸ்ய கலாம் கோடிதமீமபி ||" d (பெரியாழ்வாருக்கும் ஆண்டாளுக்கும்) என்றது மற்றையாழ்வார்களுக்கும் உபலக்ஷணம்; மேலே e (அவர்களிலிவளுக்கு) என்றிருக்கையாலே.

A திருவாய் 1-1-1, B திருப்பாவை 19.

அவர்களிலும் இவள் விலக்ஷணை. h 1. "பா3ல்யாத் ப்ரப்4ருதி ஸுஸ்நிக்3த4:" என்கிறுப்போலே, தொடக்கமே பிடித்து ப4க3வத்3கு3ணங்களிலே அவகா3ஹித்துப் போரும். புருஷன் புருஷனைக்கண்டு ஸ்நேஹிப்பதிலுங்காட்டில் ஸ்த்ரீ புருஷனைக்கண்டு ஸ்நேஹிக்கை பள்ளமடையாகையாலே, ஆழ்வார்களிற்காட்டிலும் எம்பெருமான்பக்கல் பரமப4க்தியுடையளான ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவைக்குச் i கருத்து, j மார்கழி நீராட என்று ஒரு வ்யாஜத்தைக் கொண்டு, k நோன்பு என்று ஒரு வ்யாஜத்தாலே எம்பெருமான் பக்கலிலே சென்று, "உனக்கு ஶேஷமாயிருக்கிற இந்த ஆத்மா அநர்த்த2ப்படாதபடி பண்ணி, இதுக்கு ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்களையும் கொடுத்து, அதுதானும் யாவதா3த்மபா4வியாம்படி பண்ணியருளவேணும்" என்று l அபேக்ஷிக்கிறது.

இந்நோன்புக்கு m மூலம் என்னென்னில்:- n மீமாம்ஸையிலே n2 ஹோளாதி4கரணந்யாயத்தாலே ஶிஷ்டாசாரஸித்3த4ம். o A "மேலையார் செய்வனகள்" என்று ஆண்டாள் தானும் அருளிச்செய்தாள். p பொய்யே "நோற்கிறோம்" என்று சொல்லலாமோ? என்னில்: விவாஹங்களிலும் மரணபர்யந்தமான த3ஶைகளிலும் வந்தால் பொய் சொல்லலாம்.

---

பெ. அ-h...l இந்தப்ரப3ந்த4த்துக்கு அடியான ப4க்திபரீவாஹமும் இவளுக்கு ஆழ்வார்களிற்காட்டில் அதிஶயித்திருக்குமென்று உபபாதி3யாநின்றுகொண்டு, ப்ரப3ந்த4 வைலக்ஷண்யங்காட்டுகிறார் (பா3ல்யேத்யாதி3) i...l 'கருத்து' இத்யாதி3யெல்லாம் ப்ரதிபாத்3ய வைலக்ஷண்யம்; இவ்வைலக்ஷண்யமாவது—யாவதா3த்மபா4வியாய், அநர்த்த2ரூபமான இதரபுருஷார்த்த2 வ்யாவ்ருத்தமாயிருக்கை. j (மார்கழி நீராட என்று ஒரு வ்யாஜத்தைக்கொண்டு) என்றது க்ருஷ்ணஸம்ஶ்லேஷமாகிற ப2லத்தை நெஞ்சிலே வைத்து. k (நோன்பு என்று ஒரு வ்யாஜத்தாலே) என்றது அந்த ப2லத்துக்கு அவனே உபாயமென்னும் அபேக்ஷையை நெஞ்சிலே வைத்து. j (மார்கழி நீராட) என்றது நோன்புக்கு அங்க3மாகக் குளிக்கை. இத்தால் அங்கா3ங்கி3களெல்லாம் வ்யாஜமென்று கருத்து.

m (மூலமென்னென்னில்) என்றது ப்ரமாணமென்னென்னில் என்றபடி. n 2. "த4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம்" 3. "ஸ்ம்ருதிஶீலே ச தத்3விதா3ம்" 4. "ஆசாரஶ்சைவ ஸாதூ4நாம்" என்கிறபடியே ஶிஷ்டர்கள் ஆசரித்ததெல்லாம் கர்த்தவ்யமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (மீமாம்ஸையிலே இத்யாதி3) n2 (ஹோளை) யாவது — வஸந்தோத்ஸவம். இத்தை ஹோளாகமென்றும் சொல்லுவர். அதாவது பா2ல்கு3நபௌர்ணமாஸ்யநந்தரப்ரதிபத்திலே க்ரியமாணமாய், பரஸ்பர ஹரித்3ராஜலஸேசந ரூபமான உத்ஸவமென்கை. o இந்நோன்பு ஶிஷ்டாசாரமென்கைக்கு ப்ரமாணங்காட்டுகிறார் (மேலையார் இத்யாதி3) p நோன்பு என்று ஒரு வ்யாஜமாத்ரத்தாலே, க்ருஷ்ணன் பக்கலிலே ஸம்ஶ்லேஷிக்கக் கோலி, அந்நோன்பு நோற்கச்சொன்ன கோ3பவ்ருத்3த4ர்களோடே வர்ஷார்த்த2மாக நோற்கிறோமென்று சொல்லுகை, த4ர்மஸம்ஸ்தா2பநம் பண்ணப் பிறந்தவனை அடுத்திருக்கும் இவர்களுக்குக் கூடுமோவென்னும் ஶங்கையை அநுவதி3த்துப் பரிஹரிக்கிறார் (பொய்யே இத்யாதி3) ஒருத்திக்கொருத்தி க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்துக்கு க4டகைகளாயிருக்கையாலே விவாஹம் பண்ணுவிக்குமவர்களாகையாலும், க்ருஷ்ண விஶ்லேஷத்தால் மரணத3ஶையை ப்ராப்தைகளாம்படியிருக்கையாலும் பொய் சொல்லலாமென்று கருத்து.

---

சி. அ-n2 ஹோளாதி4கரணந்யாயமாவது:— ஹோளை என்று-உத்ஸவமாய், அந்த உத்ஸவம் ஶ்ருதிஸ்ம்ருதி விஹிதமன்றிக்கேயிருக்கச்செய்தேயும் ஶிஷ்டாசார ஸித்3த4ம் என்கிற ந்யாயம்.

---

A திருப்பாவை 26.

q ஆண்டாள் r இப்படி திருவவதரித்து வளர்ந்தருளுகிற காலத்திலே பெரியாழ்வார் வயிற்றிற் பிறக்கையாலும், s தானான தன்மையாலும் ஜ்ஞானப$_4$க்திகள் க்ஷணந்தோறும் இட்டுமாறினாற்போலே வடிவிலே காணலாம்படி பெருகிச்செல்லா நிற்க, t 1. ''பதிஸம்யோக$_3$ஸுலப$_4$ம் வயோ த்$_3$ருஷ்ட்வா ச மே பிதா| சிந்தார்ணவக$_3$த: பாரம் நாஸஸாத$_3$ாப்லவோ யதா$_2$ ||'' என்கிறபடியே u ஒரு கொள்கொம்பிலே சேர்க்க வேண்டும் பருவமாய், A மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழாத $u_2$ தன்மையளுமாய், vB ''கோல்தேடியோடுங் கொழுந்ததே போன்றதே மால்தேடியோடும் மனம்'' என்கிறபடியே அபி$_4$நிவேஶத்தைப் பண்ணிக்கொண்டு வடபெருங்கோயிலுடையானுடனே C தழுவி w முழுசிப் பரிமாறவேணும் என்று செல்ல; இவள் நினைத்தபடிகளுக்கு அவன் x முகங்காட்டாமையாலே மிகவும் அவஸந்நையாய், ''இவனோடு கலந்து பரிமாறப்பெற்றாருண்டோ? இல்லையோ?'' என்று ஆராய்ந்து பார்த்து, ''திருவாய்ப்பாடியிற் பெண்பிள்ளைகள் யத$_2$ாமனோரத$_2$ம் y இவனோடே அநுப$_4$விக்கப்பெற்றார்கள்'' என்று அநுஸந்தி$_4$த்து, ''அது காலாந்தரத்திலே யாகையாலே அதுக்கு உதவப்பெற்றிலோமே!'' என்று இன்னாதாய்; ''இனி z அவன் உலாவிப்போன $z_2$ அடிச்சுவடும், அவனும் பெண்களுமாகத் a திளைத்த யமுனையும், அவனெடுத்த கோ$_3$வர்த்த$_4$நமும் கிடந்ததாகில் b அவற்றைக்கண்டாகிலும் த$_4$ரிப்போம்'' என்று பார்க்க, அதுக்கு,

---

பெ.அ-q...h இப்படி கோ$_3$பிமாரைப்போலே நாய்ச்சியாரும் நோன்பு நோற்க அநுகரிக்கப்ரஸக்தி ஏதென்னும் ஜிஜ்ஞாஸாப்ரஶ்நத்துக்கு விஸ்தரேண உத்தரம் அருளிச்செய்கிறார் (ஆண்டாள் இத்யாதி$_3$—த$_4$ரிக்கப்பார்க்கிறாள் என்னுமளவும்) (இப்படி)யென்றது — நோன்பு என்ற ஒரு வ்யாஜத்தாலே எம்பெருமான் பக்கலிலே செல்லும்படியான ஜ்ஞானத்தையுடையளாய் என்றபடி. s (தானான தன்மையாலும்) என்றது ஸ்த்ரீ புருஷனைக்கண்டு மிகவும் ஸ்நேஹிக்கும்படியான ஸ்வப$_4$ாவத்தாலுமென்றபடி. t, u 1. ''பதிஸம்யோகே$_3$ந ஸுதராம் லப்$_3$து$_4$ம் யோக்$_3$யம் வய:'' என்று அக்ஷரார்த்த$_2$ம் திருவுள்ளம்பற்றி த்$_3$ருஷ்டாந்தமுகே$_2$ந தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஒரு கொள்கொம்பிலே இத்யாதி$_3$) அந்யதா$_2$ துர்லப$_4$மென்று கருத்து. $u_2$ தன்மையளுமாய்—ஸ்வப$_4$ாவத்தையுடையவளுமாய். v '' கொழுந்து கோல்தேடியோடும், மால்தேடியோடும் மனம் அதே போன்றதே'' என்று அந்வயம். w முழுசி-மிகவும் அவகா$_3$ஹித்து என்றபடி. x (முகங்காட்டாமையாலே) என்றது குளிர நோக்குதல், குஶலப்ரஶ்நம் பண்ணுதல் செய்யாமையாலே என்றபடி. y (இவனோடே அநுப$_4$விக்க) என்றது அர்ச்சாவதாரத்துக்கும் க்ருஷ்ணாவதாரத்துக்குமுள்ள த$_4$ர்மைக்யத்தைப் பற்ற. $z_2$ (அடிச்சுவடு) என்றது – திருவடிகள் பட்ட அடையாளம் என்றபடி. a திளைத்த—விளையாடின. b (அவற்றைக் கண்டாகிலும் த$_4$ரிப்போம்) என்ற விடத்தில், க்ருஷ்ணனுக்கும்

---

சி.அ-q...m இனிமேல் ஆண்டாள் ப்ராப்தயௌவனையாகக் கொண்டு வடபெருங்கோயிலுடையானோடே யத$_2$ாமனோரத$_2$ம் அநுப$_4$விக்கவேணும் என்று செல்ல, அங்கு அநுப$_4$வம் கிடையாமையாலே க்ருஷ்ணனோடே அநுப$_4$விக்கலாம் என்று விசாரிக்க, அது காலாந்தரமாகையாலே அதுக்கு உதவப்பெற்றிலோமென்று மிகவும் தளர்ந்து, கோ$_3$பிமார் திருக்குரவையிலே க்ருஷ்ணனைப் பிரிந்து அநுகரித்து த$_4$ரித்தாப்போலே, இவளும், அந்த கோ$_3$பிமார் நோன்பு நோற்ற ப்ரகாரத்தை அநுகரிக்கிறாளென்று அந்யாபதே$_3$ஶமுகே$_2$ந அருளிச்செய்கிறார் (ஆண்டாளிப்படி திருவவதரித்து வளர்ந்தருளுகிற காலத்திலே) என்று தொடங்கி (இடைப்பேச்சும் முடைநாற்றமுமாய் விட்டது) என்னுமளவும். x (முகம்காட்டாமை) என்

---

A நாச்-திரு 1-5. B இர-திருவ 27. C நாச்-திரு 13-5.

தனக்குப்போக பூலமில்லாமையாலே அவற்றை அனுஸந்தித்து மிகவும் அவஸந்நையாய், ஸ்ரீ ஜநகராஜன் திருமகளைப்போலே 'வில்' என்று ஒரு அவதி, பெறுதல், நப்பின்னைப் பிராட்டியைப்போலே 'ரிஷபங்கள்' என்று ஒரு அவதி, பெறுதல் செய்யப்பெறுமையாலே மிகவும் தளர்ந்து, 'நமக்கு தரிக்கைக்கு விரகு என்?' என்று ஆராய; சில c தார்மிகர், அவ்வளவிலே சொல்லுகிறார்கள்-- d 'திருவாய்ப்பாடியிலே க்ருஷ்ணனும் பெண்களுமாய்த் திருக்குரவைகோத்து அதிரஸம் செல்லாநிற்க, e ப்ரீதியாலே குமிழ்நீருண்டு, இனி f நற்கேடு கெடவொண்ணாது என்று இந்த ரஸம் மாறுகைக்காகப் பெண்களைப் பிரிந்து க்ருஷ்ணன் ஒளிக்க; பெண்பிள்ளைகள் தங்களாற்றாமையாலே 1. ''துஷ்ட காளிய திஷ்டாத்ர க்ருஷ்ணோऽஹமிதி சாபரா'' என்கிறபடியே அவர்கள் அநுகரித்து தரித்தார்கள்' என்றுகேட்டு, தானும் அவர்களைப்போலே அநுகரித்து h தரிக்கப்பார்க்கிறாள்.

i இவள்தான் ப்ராஹ்மணியாயிருந்துவைத்து அவர்களைப்போலே அநுகரிக்கும்படியெங்ஙனேயென்னில்:--யாகத்திலே தீக்ஷித்தவர்களுக்கு தேவதத்தாதி நாமங்களைத் தவிர்ந்து, யாகம் முடியுமளவும் ''யஜமாநன்'' என்றும் ''அத்வர்யு'' என்றும் ''ஹோதா'' என்றும் இத்யாதி j நாமங்களேயாகிறாப்போலே இவளும், ஸ்ரீவில்லிபுத்தூரே திருவாய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்கள் இடைப்பெண்களாகவும், தானும் அவர்களிலே ஒருத்தியாகவும், வடபெருங்கோயிலே ஸ்ரீ நந்தகோபர் திருமாளிகையாகவும், உள்ளே நிற்கிறவன் க்ருஷ்ணனாகவும் அநுஸந்தித்து, தன்னுடைய திருவுள்ளம் திருவாய்ப்பாடியிலே குடிபோய்,

---

பெ. அ. வடபெருங்கோயிலுடையானுக்கு மூண்டான தர்மைக்யத்தாலே அவனே இவனாயிருந்தானேயாகிலும், பெண்களோடு பரிமாறின திருமேனி அதுவாகையாலே அத்தோடு ஸம்பந்தமுடையவைகள் தரிப்புக்குடலாமென்று கண்டுகொள்வது. c தார்மிகர்—பராசர பாராசர்யாதிகள். d அவர்கள் சொல்லுகிற ப்ரகாரம் ஏதென்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடியிலே இத்யாதி) g (தரித்தார்கள் என்று) என்ற அநந்தரம் அத்தை என்று சேஷம்.

i...m ராஸக்ரீடையில் க்ருஷ்ணன் மறைந்தபோது கோபிமாரில் 1. 'துஷ்ட காளிய' என்றொருத்தியை ஸம்போதித்து ஒருத்தி 1, ''க்ருஷ்ணோऽஹம்'' என்று சொல்லக்காண்கையாலே காளியனென்றே நினைவும் க்ருஷ்ணனென்றே நினைவும் தோன்றுகையால் அவர்களுக்கு அந்நினைவேயானாற்போலே, ப்ராஹ்மணி என்று தன்னை எண்ணிக்கொண்டிருக்கும் ஆண்டாளுக்கும் அந்த நினைவு உண்டாய் அநுகரிக்கிறாளோ? என்னும் ப்ரஶ்நத்தை அநுவதித்து த்ருஷ்டாந்தமுகேந உத்தரம் அருளிச்செய்கிறார் (இவள்தான் இத்யாதி-முடைநாற்றமுமாய் விட்டது என்னுமளவும்) j (நாமங்களேயாகிறாப்போலே) என்றது நாமங்களே உண்டாய் அவற்றை அநுஸந்திக்கிறாப்போலே என்றபடி. k (அவைதானேயாய்) என்றது அவையேயாக

---

சி. அ. றது—குளிர நோக்குதல் குஶலப்ரஶ்நம் பண்ணுதல் செய்யாமை. z (அவனுலாவிப்போன அடிச்சுவடும்) என்றது—அவன் ஸஞ்சரித்த பூமியுமென்றபடி. a (திளைத்து) விளையாடி. c (தார்மிகர்) வ்யாஸாதிகள், புராணங்களிலே சொன்னார்கள் என்றபடி. e (ப்ரீதியாலே குமிழ்நீருண்டு) உத்மஸ்தகமாக அநுபவித்து. f (நற்கேடு) என்றது—கேடான நல்மாய், ஆஶ்ரயத்துக்கு ஹாநிவரும்படியான ஆநந்தம்.

ப$_4$ாவநாப்ரகர்ஷத்தாலே அநுகாரம் முற்றி k அவைதானேயாய், இடைநடையும் இடைமுடியும் l இடைப்பேச்சும் m முடைநாற்றமுமாய்விட்டது.

n ஶ்ரிய:பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஸ்ரீவைகுண்ட$_2$நிகேதநனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், நஷ்டமாய்க்கிடக்கிற ஜக$_3$த்தை க்ருபையாலே ஸ்ருஷ்டித்து, ஆத்மாக்களுக்குக் கரணகளேப$_3$ரங்களைக் கொடுத்து; 1. "ஶாஸநாத் ஶாஸ்த்ரம்'' என்று சொல்லுகிறபடியே, வேத$_3$ஶாஸ்த்ரங்களைத் தன்னைப்பெறுகைக்கு உபாயமாகக் காட்டிக்கொடுக்க; அவற்றைக் காற்கடைக்கொண்டு விஷயாந்தரங்களிலே மண்டி அநர்த்த$_2$ப்பட்டுப்போகிற த$_3$ஶையிலே தான்வந்து பிறந்தருளி, தன்னுடைய ஸௌந்த$_3$ர்யத்தாலும் ஶீலாதி$_3$கு$_3$ணங்களாலும் இந்த ஜக$_3$த்துக்களை ஈடுபடுத்தி o வாரிப்பிடியாகப் பிடித்துக்கொண்டுபோவானொருவனாகையாலே, தத$_3$ர்த்த$_2$மாகத் திருவாய்ப்பாடியிலே க்ருஷ்ணனாய்வந்து திருவவதாரம்பண்ணி, தன்னுடைய ஸௌந்த$_3$ர்யத்தாலும் கு$_3$ணசேஷ்டிதங்களாலுமாக, பஞ்சலக்ஷங்குடியிலுள்ள பெண்களைத் தோற்பித்துக்கொண்டு, ஒத்தபருவத்திற்பெண்களும் தானுமாய் வளர்ந்தருளுகிற காலத்திலே தானும் ப்ராப்தயௌவநனாய், அவர்களுக்கும் யௌவநம்வந்து தலைகாட்டினவாறே, கோ$_3$பவ்ருத்$_3$த$_4$ரெல்லாரும் கூடி, "க்ருஷ்ணன் தூ$_4$ர்த்தனாயிரா நின்றான். இவன்முகத்திலே பெண்கள் விழிக்கலாகாது'' என்று பார்த்து, இவர்களைக்கொண்டுபோய் நிலவறைகளிலேயடைக்க, பெண்களும் க்ருஷ்ணனும்பண்ணின ப$_4$ாக்$_3$யத்தாலே வர்ஷமின்றிக்கேயொழிய, பெண்கள் இருந்து மநோரதி$_2$க்கிறார்கள்; - " p கோ$_3$ாத$_4$நராயிருக்கிற இடையர் வர்ஷார்த்த$_2$மாக நம்மை நோற்கச்சொல்லக்கடவர்கள். க்ருஷ்ணன் இதுக்குக் q கடைக்கூட்டனாகவுங்கடவன், நமக்கு ஒரு r து$_3$:க்க$_2$மில்லை'' s என்று

பெ. அ—அத்$_4$யவஸித்து என்றபடி. l இடைப்பேச்சு என்றது A"நெய்யுண்ணோம் பாலுண்ணோம்'' என்ற ஜாதிப்பேச்சு என்றபடி. m B "ஆயர் சிறுமியரோம்' என்றத்தாலே முடைநாற்றம் அர்த்த$_2$ஸித்$_3$த$_4$ம்.

n...b$_4$ கோபிமார் நோற்ற ப்ரகாரத்தை ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார் (ஶ்ரிய:பதி இத்யாதி$_3$) o (வாரி) என்றது திரட்டி என்றபடி; (பிடியாக) என்றது ஒரு பிடியாக என்றபடி. இத்தால் 2. "பூர்வம் ஸது$_3$ர்வமப$_4$ஜந்த ஹி ஜந்தவஸ்த்வாம்'' என்கிறபடியே சக்ரவர்த்தித் திருமகனாய்க் கொண்டுபோந்தவனாகையாலே என்கை. p...r மநோரதி$_2$க்கும் ப்ரகாரத்தை அருளிச் செய்கிறார் (கோ$_3$ாத$_4$நர் இத்யாதி$_3$ — து$_3$:க்க$_2$மில்லை இத்யந்தம்) q கடைக்கூட்டன்—நிர்வாஹகன். s (என்று) என்ற அநந்தரம், இப்படி என்று ஶேஷம்.

சி. அ-n...b அவர்களநுகரித்தாப்போலே இவளுமநுகரித்தாள் என்றதே. அநுகார்யைகளான இடைப்பெண்கள் ஸ்வரூபமெப்படி? அவர்கள் நோன்பு நோற்றார்களோ, என்ன. அவர்கள் நோன்பு நோற்றுப$_2$லம்பெற்ற ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் (ஶ்ரிய:பதியாயித்யாதி$_3$) o (வாரிப்பிடியாக) எல்லாரையும் கூட்டி என்றபடி. p...r பெண்கள் மனோரத$_2$ந்தானேதென்ன அருளிச்செய்கிறார் (கோ$_3$ாத$_4$நராயித்யாதி$_3$) q (கடைக்கூட்டு) ஸஹகாரி.

A திருப்பாவை-2, B திருப்பாவை-16

பெண்கள் ப்ரீதைகளாய் த₄ரித்திருக்கிற த₃ஶையிலே; வர்ஷமின்றிக்கேயிருக்கிற படியைக் கண்டு, கோ₃பவ்ருத்₃த₄ரெல்லாரும் திரண்டு, ''பசுக்களும் மநுஷ்யரும் பிழைக்கும் விரகு ஏதோ?'' என்று பார்த்து, ''வர்ஷார்த்த₂மாக நோற்க வர்ஷ முண்டாம்'' என்று, ''இவ்வூரில் பெண்களடைய நோற்கக்கடவர்கள்; இந்நோன்புக்கு இங்குத்தைக்கு அதி₄பனான ஸ்ரீநந்த₃கோ₃பர் மகன் க்ருஷ்ணன் க₃டகனுவான்'' என்று அத்₄யவஸித்து, பெண்பிள்ளைகளையடைய அழைத்து, க்ருஷ்ணனையும் அழைத்து, பெண்களை நோற்கச்சொல்லி, ''இவர்கள் நோன்புக்கு நீ க₃டகனாக வேணும்'' என்று க்ருஷ்ணனை அபேக்ஷிக்க; அவன், ''எனக்கு க்ஷமமன்று'' என்ன, ''இத்தனையும் செய்யவேணும்'' என்று மறுக்கவொண்ணாதபடி நிர்ப்ப₃ந்தி₄க்க அவனும் இசைந்தபின்பு, எல்லாரும் திரள இருந்து, ''பெண்கள் நோற்பார்; இதுக்கு வேண்டுவது க்ருஷ்ணன் ஸஹகரித்துக் கொடுப்பான்'' என்று t ஓமறைந்து u க்ருஷ்ணன் கையிலே பெண்களைக் காட்டிக்கொடுத்து கோ₃பவ்ருத்₃த₄ரெல்லாரும் போனபின்பு, பெண்களும் க்ருஷ்ணனும் கூட v இருந்து ''திருக்குரவைகோத்த ராத்ரிபோலே, பெண்காள்! இதுவும் நமக்கு ஒரு ராத்ரியே!'' என்று க்ருஷ்ணன் கொண்டாடி, ''இனி w அசிர்ப்புப் பிறக்க xவைகல் இருப்போமல்லோம்; இப்போது எல்லாரும் போய் அபரராத்ரியிலே வந்து எழுப்புங்கோள் நோன்புக்குக் குளிக்கலாம்படி'' என்று அருளிச்செய்து, க்ருஷ்ணனும் பெண்களைப் பிரிந்துபோய் த₄ரிக்க மாட்டாமே yநப்பின்னைப் பிராட்டி திருமாளிகையிலே புக்கான். பெண்களும் பரஸ்பர ஸம்ஶ்லேஷத்தாலே கால்நடை தந்துபோய்த் தந்தம் மாளிகையிலே புக்கு உறங்கப்புக்கவிடத்தில் கண்ணுறங்காமையாலே, முற்படவுணர்ந்தவர்கள், க்ருஷ்ண கு₃ணசேஷ்டிதங்களை நினைத்து எழுந்திருக்கமாட்டாதே கிடக்கிறவர்களை உணர்த்த,

---

**பெ. அ-t (ஓமறைந்து)என்றது கோ₃பவ்ருத்₃த₄ர்களும் மற்றுமுண்டான கோ₃பருங்கூட ஸம்மதித்து என்றபடி. u (க்ருஷ்ணன் கையிலே பெண்களைக் காட்டிக்கொடுத்து) என்றதுக்கு கோ₃க்களும் தாங்களும் பிழைக்கவேண்டி க்ருஷ்ணனால் வந்த அபவாத₃த்தையும் பொறுக்கக்கடவோமென்று நோன்புக்காகக் காட்டிக்கொடுத்தார்களென்று கருத்து. v (இருந்து) என்ற அநந்தரம், 'பின்' என்று அத்₄யாஹாரயம். w (அசிர்ப்பு) என்றது அதிஶங்கை என்றபடி. x (வைகல்) என்றது நெடும்போது என்றபடி. y A ''நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த'' என்று க்ருஷ்ணனையெழுப்பும்போது சொல்லுகையைப்பற்ற (நப்பின்னைப் பிராட்டி திருமாளிகையிலே) என்றது. நந்த₃கோ₃பர் க்₃ருஹத்தில், நப்பின்னையுந் தானுமாகக் கண்வளர்ந்தருளுகிற க்₃ருஹத்தில் என்றபடி.**

---

**சி அ.—w (அசிர்ப்பு) ஸந்தே₃ஹம்.**

---

A திருப்பாவை 19.

தனித்தனியே சென்று எழுப்பி, எல்லாருங்கூடி, உத்3தே3ஶ்யமான ஸ்ரீநந்த3கோ3பர் திருமாளிகையிலேசென்றுக்ருஷ்ணனை எழுப்பித் z தங்கள் அபேக்ஷிதத்தையறிவித்து, a 1. ''யாவதா3வர்த்ததே சக்ரம்'' என்று ஸ்ரீப4ரதாழ்வான் பெருமாள் திருவடிகளிலே விழுந்து $a_2$வேண்டிக்கொண்டாற்போலேயும், b அர்ஜுநன் ஷட்கத்ரயத்திலுங்கூட $b_2$எடுப்பும் சாய்ப்புமாய்ச் சென்று சரமஶ்லோகம் $b_3$கேட்டு த4ரித்தாற்போலேயும் $b_4$ அபேக்ஷிதம் பெற்று முடிக்கிறது.

c இவள்மடலூராதே நோன்பிலே கைவைப்பானென்னென்னில் : d ''ராஜமஹிஷி உஞ்ச2வ்ருத்திபண்ணி ஜீவித்தல் ராஜாவுக்கு அவத்3யாவஹமாமாபோலே மடலிலுங்காட்டில் இது அவத்3யாவஹமாகையாலும், e சக்ரவர்த்தித்திருமகனைப்போலே $e_2$கு3ணவ்யஸநியன்றியே தானும் ஒக்கமடலெடுப்பானொரு $e_3$சுணைக்கேடன்

---

பெ. அ.-z (தங்களபேக்ஷிதத்தை அறிவிக்கை)யாவது A ''இறைவா நீதாராய்'' என்று தங்கள் புருஷார்த்த2த்துக்கு நீயே உபாயமாகவேணுமென்று அறிவிக்கையும், B ''உனக்கே நாமாட்செய்வோம்'' என்று தங்கள் புருஷார்த்த2 ஸ்வருபத்தை அறிவிக்கையுமென்று கண்டுகொள்வது. z, $b_4$(தங்களபேக்ஷிதத்தை அறிவித்து அபேக்ஷிதம்பெற்று முடிக்கிறது) என்று அந்வயம். a, b அபேக்ஷிதம் பெற்று முடிக்கையிலே இரண்டு த்3ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (யாவதி3த்யாதி3) $a_2$ (வேண்டிக்கொண்டாற்போலேயும்) என்றது 1. ''ஸ்வாமித்வமநுவர்த்தய'' என்று வேண்டிக்கொண்டு அபேக்ஷிதமான உபேயத்தைப் பெற்றாற்போலேயும் என்றபடி, $b_2$(எடுப்பும் சாய்ப்பும்) என்றது ஶோகாவிஷ்டனான அர்ஜுநனை க்ருஷ்ணன் எடுக்கவும் மீள அர்ஜுநன் ஶோகிக்கவும் என்றபடி. $b_3$(கேட்டு த4ரித்தாற்போலேயும்) என்றது உபாயத்தைக் கேட்டு த4ரித்தாற்போலேயும் என்றபடி. $b_4$(பெற்று முடிக்கிறது) என்றது—பெற்று முடிக்கிறார்கள் என்றபடி.

c, d, e ஆண்டாள், தமப்பன்மாரைப்போலே எம்பெருமான் முகங்காட்டாவிடில் மடலூர வொண்ணாதோ? கோ3பிகாநுகாரத்தாலே நோன்பிலே கைவைப்பானென்? என்னும் ஶங்கையை அநுவதி3த்து, அதுக்கு இரண்டுவிதமாகப் பரிஹரிக்கிறார் (இவள் மடலூராதே இத்யாதி3) $e_2$ (கு3ணவ்யஸநியன்றியே) என்றது கு3ணத்துக்கு ஹாநி எங்கே வருகிறதோ? என்னும் வ்யஸநமுடையனன்றிக்கே என்றபடி. $e_3$ சுணைக்கேடன்—லஜ்ஜாஹீநன்.

---

சி. அ—$b_2$ (எடுப்பும் சாய்ப்பும்) என்றது ஜ்ஞானத்தினுடைய தலையெடுப்பும் சாய்ப்பும் என்றபடி. $e_2$(கு3ணவ்யஸநியன்றியே) என்றது-கு3ணஹாநியாகிறதென்கிற வ்யஸநமின்றியிலே என்றபடி.

---

A திருப்பாவை 28, B திருப்பாவை 29,

ஆகையாலும், மடல் இவ்விஷயத்தில் ப2லியாது என்று பார்த்து நோற்கிறார்கள். f உத்3தே3ஶ்யம் வேறொன்றாய் நோன்பு வ்யாஜமாத்ரமாகில் இவர்களுக்கு தே3வதை வர்ஷிக்குமோ? என்னில்? g வ்ரதோபவாஸ கர்ஶிதமான வடிவைக் கண்டால் சேதநமன்றோ, வர்ஷியாதோ! என்று பார்த்தார்கள்.

அவதாரிகை முற்றிற்று.

---

பெ. அ-f (உத்3தே3ஶ்யம்) என்றது க்ருஷ்ணஸம்ஶ்லேஷம். 9 (வ்ரதோபவாஸ கர்ஶிதமான வடிவைக் கண்டால் சேதனமன்றோ வர்ஷியாதோ) என்றது-கோ3பவ்ருத்3த4ர்களுக்கு வர்ஷார்த்த2மாக அநுமதிபண்ண, பரதந்த்ரைகளாய் வ்ரதத்தை ஆசரிக்கும் பெண்களுக்கு அந்த ப2லம் அநுத்3தே3ஶ்யமாகிலும் பண்ணிவைக்கும் கோ3பவ்ருத்3த4ருக்கு உத்3தே3ஶ்யமாகையாலே வர்ஷிக்கவேணுமென்று அறிந்து வர்ஷிக்கும் என்றபடி,

---

சி. அ. இப்ரப3ந்த4த்தால் சொல்லியற்ற வேதா3ர்த்த2மாவது — அவதார ஸ்த2லமே ஸமாஶ்ரயணீய ஸ்த2லம் என்றும், அவதீர்ணனானவனழகே ருசிஜநகம் என்றும், ருசியுடையார் ப்ராப்யத்வரையாலே அவனை மேல்விழுந்து அபேக்ஷிக்கை ப்ராப்தமென்றும், இவ்விஷயத்திலிழிவார்க்கு ருசியுடையாரடங்க உத்3தே3ஶ்யர் என்றும், ப்ராப்யமாகிறது—அநுப4வஜநித ப்ரீதிகாரிதமாய் யாவதா3த்மபா4வியான கைங்கர்யம் என்றும், இதுக்கு ஸாத4நம் அவன் திருவடிகள் என்றும் சொல்லிற்றாயிற்று.

திருப்பாவையில் முதற்பாட்டால்-நோன்புக்கடைத்த காலத்தைக் கொண்டாடி, இரண்டாம்பாட்டால்—இன்னதுசெய்வோம் இன்னது தவிர்வோம் என்றும், மூன்றாம் பாட்டால்-நோன்புக்கு ஸஹகரிப்பார்க்கு ப2லிக்கும் ப2லமும், நாலாம்பாட்டால்—வர்ஷ தே3வதையை நியமித்து இன்னபடியும் இன்னபடியும் செய்யவேணுமென்றும், அஞ்சாம் பாட்டால்—நோன்பிலே இழியவே விரோதி4 பாபங்கள் நசிக்குமென்றும், மேல்பத்துப் பாட்டால்—பத்துப் பெண்களை எழுப்பி, பத்துப்பெண்களும் பஞ்சலக்ஷம் பெண்களுக்கும் உபலக்ஷணம், மேல் பதினஞ்சுபாட்டால் கோயில்காப்பானையும், திருவாசல் காப்பானையும், ஸ்ரீநந்த3கோ3பரையும், யஶோதைப்பிராட்டியையும், நம்பி மூத்த பிரானையும், நப்பின்னைப் பிராட்டியையும், க்ருஷ்ணனையும் எழுப்பி மங்க3ளாஶாஸநம் பண்ணி வேண்டுமவை ப்ரார்த்தி2த்துத் தலைக்கட்டுகிறது.

---

# அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச்செய்த

# ஆறாயிரப்படி வ்யாக்2யானம்

அவதாரிகை.

[பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த மூவாயிரப்படி வ்யாக்2யானம் அவதாரிகையையே அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் ஏற்றுக்கொண்டு அருளினார்.]

திருநாராயணபுரம் "ஆய்" ஜநந்யாசார்ய ஸ்வாமி
அருளிச்செய்த

# ஈராயிரப்படி வ்யாக்யானம்

## அவதாரிகை

எம்பெருமானாரை "ஒருரு திருப்பாவைக்கு அர்த்தம் அருளிச் செய்ய வேணும்" என்ன, "திருப்பல்லாண்டுக்கு ஆள்கிடைக்கிலும், திருப்பாவைக்கு ஆள்கிடையாது" என்று அருளிச்செய்தார். "மோவாயெழுந்தமுருடர் கேட்கைக்கு அதிகாரிகளல்லர்; முலையெழுந்தார் கேட்க வேணும்; அவர்களிலும் எம்பெருமானைத் தாங்கள் அநுபவிக்கவேணுமென்றிருக்கும் பரிவாணிச்சிகளான பிராட்டிமார்க்கும் கேட்க நிலமல்ல; பலசொல்லியென்? பத்து ஆழ்வார்களுடைய ஸாரபூதையான தானே சொல்லித் தானே கேட்குமித்தனை" என்று அருளிச்செய்தார்.

ஒரு பர்வதத்துக்கும் பரமாணுவுக்கும் உள்ள வாசிபோரும் ரிஷிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்கும். அத்தனை வாசிபோரும் ஆழ்வார்களுக்கும் ரிஷிகளுக்கும். அப்படியே பெரியாழ்வாருக்கும் ஆழ்வார்களுக்கும். அத்தனை வாசி போரும் பெரியாழ்வாருக்கும் திருமகளாருக்கும். பதின்மருடைய ஜ்ஞானமும் ஸ்த்ரீதனமாக இவள்பக்கலிலேயிறே குடிகொண்டது. பத்துப்பேர்க்கு ஒரு பெண்பிள்ளையிறே.

ஆழ்வார்கள் எம்பெருமானாலே மயர்வற மதி நலமருளப் பெற்றனர். இவள் தான் எம்பெருமானுக்கு மயர்வற மதிநலமருளினாள்; இவள் அருளுகையாவது எம்பெருமானை எழுப்பித் தன்குறையை எம்பெருமானுக்கு விண்ணப்பம்செய்கை.

இளையபெருமாள்படி ஆழ்வார்களது; ஸ்ரீபரதாழ்வான்படி பெரியாழ்வாரது; ஸ்ரீஸத்ருக்னாழ்வான்படி அவர் திருமகளது. ஆழ்வார்களும் இளையபெருமாளும் பகவதநுபவத்தை ஆசைப்பட்டார்கள்: ஸ்ரீபரதாழ்வானும் பெரியாழ்வாரும் பகவத்ஸம்ருத்தியை ஆசைப்பட்டார்கள்; ஸ்ரீஸத்ருக்னாழ்வானும் நாய்ச்சியாரும் ஸ்ரீமதுரகவிகளோடொப்பர்கள். நாய்ச்சியார் பெரியாழ்வாரையே உபாயமாக விஶ்வஸித்திருப்பர்.

இளையபெருமாள் 1. "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த" ரானாப் போலே இவளும் தொடக்கமே பிடித்து ஸ்நேஹித்துப் போரும். இப்படி விலக்ஷணையான நாய்ச்சியார் அருளிச்செய்த ப்ரபந்தமிறே திருப்பாவை.

இப்ரபந்தத்துக்குக் கருத்து—மார்கழி நீராட என்கிற இத்தை ஒரு வ்யாஜமாகக் கொண்டு நோன்பு முன்னாக எம்பெருமானை, "உனக்கு ஶேஷமாயிருக்கிற இவ்வாத்மா அநர்த்தப்படாதபடி பண்ணி இதற்கு ஸ்வரூபானுகுணமான கைங்கர்யத்தையும் கொடுத்து அதுதான் யாவதாத்மபாவியாம்படி பண்ணியருளவேணும்" என்று அபேக்ஷிக்கிறாள்.

அர்ஜுனன் ஷட்கத்ரயத்தாலுங்கூட 2. "மாமேகம் ஶரணம் வ்ரஜ" என்று அவனைக்கொண்டு உபாயத்தை அறுதியிடுவித்தாப்போலே, இவளும் முதற்பாட்டில் A "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்று உபாயத்தை அறுதியிட்டுக்

---

A திருப்பாவை 1.

A 'சிற்றஞ்சிறு காலே'யிலே உபேயத்தை அறுதியிட்டுக்கொண்டு நடுவே தேஹயாத்ரைக்கு உடலாக்கிவிடுகிருள். B "அன்றெனக்கவை பட்டினி நாள்" என்னுமவர் மகளிறே. C "ஒழிவில் காலமெல்லாம்" என்றுமுண்டிறே. மாலாகாரர் மகளிறே.

ஆழ்வார்களுக்கு அந்யாபதேசம் ஆண்களாயிருக்கச் செய்தே பெண்களாகை. இவளுக்கு அந்யாபதேசம் ப்ராஹ்மணியான இவள் இடைச்சியாகை. D "குலம்தரு"மிறே. E "பண்டைக்குலத்தைத் தவிர்ந்து" என்றுமுண்டிறே.

இவளுடைய ஜ்ஞானபக்திகள் க்ஷணந்தோறும் பகவத்விஷயத்திலே கைவளர, வடபெருங்கோயிலுடையான் முகங்கொடாதேயிருக்க, இவளும் "ஐச்வர்யார்த்திகளுக்காக எல்லேநடந்து கொடுத்து இளைப்பாலே கிடக்கிருன்" என்று புத்தி பண்ணித் தன் திருமுலேத்தடங்களையிட்டு நெருக்கினாள், அத்தாலும் எழுந்திருந்து ப்ரதிவசனம் பண்ணக் கண்டிலள். காணுமையாலே வ்யஜநாதிகளாலே மீளவும் சிசிரோபசாரம் பண்ணினுள். அத்தாலும் எழுந்திருக்கக் காணுமையாலே "இது நோவல்ல; நம் பக்கல் ப்ரணயாபராதத்தாலே கிடக்கிருன்" என்று நினைத்து மிகவும் தளர்ந்து, திருவாய்ப்பாடியில் பெண்பிள்ளைகளை அநுஸந்தித்துப் பார்த்தாள். அது காலாந்தரத்திலேயாகையாலே உதவப்பெற்றிலோம் என்று தளர்ந்து மிகவும் அவஸந்நையாய், 'நமக்கு தரிக்கைக்கு விரகு என்?' என்று கூப்பிடச்செய்தே சில சாபுராணிப்ரப்ருதிகள் க்ருஷ்ணுவதாரத்திலே க்ருஷ்ணனேடே கலந்து பிரிந்த பெண்கள் தங்களாற்ருமையாலே 1. "துஷ்ட காளிய திஷ்டாத்ர க்ருஷ்ணோஹமிதி சாபரா" என்று க்ருஷ்ணனே அநுகரித்து தரித்தாப்போலே இவளையும் அநுகரித்து தரிக்கச் சொல்ல, இவளும் 'க்ருஷ்ணனே அநுகரிப்பதிலும், க்ருஷ்ணனே அநுகரித்த பெண்களை அநுகரிக்கை நன்று' என்று பார்த்து அநுகரித்து தரிக்கிருள். அவ்வநுகாரம் முற்றி இடை முடியும், இடை நடையும், இடைப்பேச்சும், முடை நாற்றமுமாய் விட்டது. இப்படி தானிருந்த ஸ்ரீவில்லிபுத்தூரே திருவாய்ப்பாடியாகவும், வடபெருங்கோயில் ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையாகவும், வடபெருங்கோயிலுடையானே க்ருஷ்ணனுக்கவும், தன்னைப் பிராட்டியாகவும் தோழிமாராகவும் அநுகரித்துக்கொண்டு நோற்கிருள்.

நோன்புக்கடியென்னென்னில்? மீமாம்ஸையிலே ஹோளாகாதிகரணந்யாயத்தாலே சிஷ்டாசாரஸித்தம். F "மேலையார் செய்வனகள்" என்று, நோன்பு நோற்க அறுதியிட்ட வாயாலே எல்லே நிலத்திலே நிற்கிற நாய்ச்சியார்தாமே அருளிச்செய்தார். பொய்யே நோற்கிருேமென்று சொல்லலாமோ? என்னில்; விவாஹ ஸமயத்திலும் ப்ராணுந்திக ஸமயத்திலும் பொய் சொல்லலாமென்று சாஸ்த்ரமுண்டு. உண்டென்று சொல்ல வேணுமோ? அநுஷ்டானமேயன்ரே ப்ரதானம். இவ்விரண்டுக்கும் கைம்முதல் வேறே தேட வேணுமோ? இவர்களுடைய ஆற்ருமைதான் என் செய்யாது?

அழகிது, இதுதான் இங்கு விளைந்தபடியென்னென்னில்: ஸ்ரிய:பதியாய், அவாப்த ஸமஸ்தகாமனுய், புருஷோத்தமனுய், புண்டரீகாக்ஷனுய், ஸ்ரீவைகுண்டநிகேதனனுய், ஸாத்விகைஸ்ஸேவ்யமானனுயிருக்கிற ஸர்வேச்வரன் தன் க்ருபையாலே நிர்ஹேதுகமாக வந்துபிறந்தருளி, தன்னுடைய லீலாதிகளாலே ஜனங்களை

A திருப்பாவை 29, B பெரியாழ்-திரு 5-1-6, C திருவாய் 3-3-1, D பெரிய-திரு 1-1-9, E திருப்பல்லாண்டு 5, F திருப்பாவை 26.

ஈடுபடுத்தி வாரிப்பிடித்துக்கொண்டு போவானொருவனுகையாலே ததர்த்தமாகத் திருவாய்ப்பாடியிலே வந்து திருவவதரித்துப் பெண்களும் தானுமாய் வளர்ந்தருளுகிற காலத்திலே க்ருஷ்ணனும் ப்ராப்தயௌவனனாய், பெண்களும் குமாரிகளாயிருக்கிற இருப்பைக் கண்டு "இவனிப்படி தூர்த்தனாயிரா நின்ருன்; இவன் பாடு பெண்கள் சேரக் கடவர்களன்று" என்று எல்லாருமாகத் திரண்டு இப் பெண்பிள்ளைகளை நிலவறைகளிலே அடைத்தார்கள். க்ருஷ்ணன் பிறந்த பின்பு வெண்ணெய்களெல்லாம் மறைய வைத்தார்கள். இப்படி வெண்ணெயும் பெண்களும் க்ருஷ்ணனும் பிரிந்த தர்மஹாநி கண்டாவது, இவர்கள் பண்ணின பாக்யமாவது நாடு வர்ஷமின்றிக்கே நோவுபட்டுப் பசுக்களுக்கு ஊணின்றிக்கே ப்ராணனின்றிக்கே ஸஸ்யவ்ருத்திகளுமில்லையாய்த்து. நாடுவர்ஷமின்றிக்கே இருக்கிறபடி கண்டு கோபவ்ருத்தர்களெல்லாரும் திரண்டு, "பசுக்களும் மனுஷ்யரும் பிழைக்கைக்கு விரகென்?" என்று விசாரிக்க, அஶரீரிபோலே புருஷவாக்யம் "தேவதை த்ருப்தனாக வர்ஷமுண்டு" என்று பிறக்க, இவர்களும் "வர்ஷார்த்தமாக இவ்வூரில் பெண்பிள்ளைகளுடைய நோற்கக் கடவர்கள்" என்றார்கள். இக்ரமம்—1. "அபி வ்ருக்ஷா: பரிம்லாநா:" என்றது போய், 2. "அகாலபலிநோ வ்ருக்ஷா:" என்று புண்யகாலம் வந்தாப்போலேயிருந்தது. அநந்தரம் வர்ஷார்த்தமாக நோற்கைக்காக நிலவறைகளிலே அடைத்த பெண்களைப் புறப்படவிட்டு, நந்தகோபர் வ்ருத்தராகையாலே எல்லாவற்றுக்கும் கடவனாக க்ருஷ்ணனையும் ஸாந்த்வவாதனம் பண்ணிப் பெண்களையும் க்ருஷ்ணனையும் சேரவிட்டு ஶரணம் புக, க்ருஷ்ணனும் 3. "கோபீபரிவ்ருதோ ராத்ரிம் ஶரச்சந்த்ரமநோரமாம்" என்று சொல்லுகிறபடியே தண்டலிட்ட நிலவும், வெள்ளலிட்ட நாண்மலர்ச் செறிவும், இருண்ட சோலையும், பளிங்குப்பாறையும், செங்குன்றுத்தாழ்வரையும், பரப்புமறப்பூத்த காவியோடையும், நாயடியிட்டுப் புகுந்த தென்றலுமாயிருக்கிற யமுனா தீரத்திலே பஞ்சலக்ஷம் குடியில் பெண்களையுடைய மெய்க்காட்டிக் கொண்டு கழகமிருந்து "இனி நாம் வைகலிருக்கில் மாதாபிதாக்கள் அதிஶங்கை பண்ணுவர்கள்; உந்தமகங்களிலே போய்ச் சேருங்கோள்" என்று தானும் நப்பின்னைப் பிராட்டி திருமாளிகை சேர, பெண்களும் தந்தாமகங்களிலேபோய்ப் படுக்கையிலே சேர, படுக்கை அடிகொதித்து A 'மென்மலர்ப் பள்ளி வெம் பள்ளி'யாய் மத்யராத்ரியிலே எழுந்திருந்து சிலர் உறங்குகிற பெண்பிள்ளைகளை எழுப்புகிறார்கள்.

"உறங்குகிறார் யார்? எழுப்புகிறார் யார்?" என்னில்: குணவித்தர் உறங்குகிறார்கள், கைங்கர்யபரர் எழுப்புகிறார்கள். ராமஶரம் ஒருபடிப்பட்டிராதிறே; 4. "ஶ்ருங்கம் ப்ருங்கம்" அப்படி க்ருஷ்ணகுணங்களும் நாநாவாயிறே இருப்பது. இரண்டு ப்ரகாரமும் பரமபதத்திலுமுண்டு. B 'அமரரும் முனிவரு'மிறே. முனிவரோடொப்பார் உறங்குகிறார்கள். அமரரோடொப்பார் எழுப்புகிறார்கள்.

ஆக, நோன்புக்குக் காலத்தைச் சொல்லி, இதுக்குச் செய்யக் கடவன சொல்லி, அனுமதி பண்ணினார்க்குண்டான நன்மை சொல்லி, வர்ஷிக்கும்படியை நியமித்து, "நாம் இதிலே அந்வயிக்கவே ஸகல ப்ரதிபந்தகங்களும் போம்" என்று சொல்லி, மேல் பத்துப்பாட்டாலே ஒருவரையொருவர் எழுப்புகிறார்கள். மேல் விஶதமாக விருக்கும்.

ஈராயிரப்படி அவதாரிகை முற்றிற்று.

---

A திருவாய் 9-9-4, B திருவாய் 10-9-9.

திருநாராயணபுரம் 'ஆய்'' ஜநந்யாசார்யஸ்வாமி

அருளிச் செய்த

# நாலாயிரப்படி வ்யாக்யானம்

## அவதாரிகை.

1. "அநாதிமாயயா ஸுப்த: யதா ஜீவ: ப்ரபுத்யதே" என்கிறபடியே அநாதிகாலம் ஒருபோகியாக உறங்கினவன் இனி அநந்தகாலம் ஒருபோகியாக உணர்ந்தேயிருக்கும்படி சொல்லுகிறது. உணர்ந்தது எம்பெருமானையாகையாலே உணர்த்திக்கு பாதகமில்லை. ப்ரக்ருதியைச் செறியச்செறிய இருள் மிகும்; எம்பெருமானைச் செறியச்செறிய உணர்த்தி மிகும். ஜ்ஞாநாநந்தமயமான ஆத்மஸ்வரூபத்துக்குத் திரோதாநம் பிறந்த வித்தனையிறே பண்டு செய்தது. ஸ்வரூபஸித்தியேயன்றோ ப்ராப்யம். A "பகற் கண்டேன் நாரணனைக் கண்டேன்"—உறங்காத என்னையும் கண்டேன். அஸ்தமியாத ஆதித்யனையும் கண்டேன். 2. "பாஸ்கரேண ப்ரபா யதா". B 'திருக் கண்டேன்' என்ற பின்பு, B 'பொன்மேனி கண்டேன்' என்றாரிறே. ப்ரபையை முந்துறக் கண்டிறே ஆதித்யனைக் காண்பது. 3. "ஸுப்ரபாதா ச மே நிசா" என்று அக்ரூரனுக்கும் கம்ஸஸம்பந்தத்தாலே விடிவு காணவொண்ணாத ராத்ரியும் விடிந்து அஸ்தமியாத பகலாய்த்து. கும்பகர்ணனுக்கு உறக்கம் தேட்டம். விபீஷணாழ்வானுக்கு உணர்த்தி தேட்டம், ராவணனுடைய உணர்த்தியில் கும்பகர்ணனுடைய உறக்கம் நன்றாயிருந்தது; உணர்ந்தால் எம்பெருமான்பக்கலிலே செல்லுகைக்கு இருக்குமத்தனையிறே. 4. "ஆஜகாம முஹூர்த்தேந யத்ர ராமஸ்ஸலக்ஷ்மண:" 5. "ஸுப்ரபாதாத்ய ரஜநீ மதுராவாரயோஷிதாம்" என்று அங்குள்ளார்க்கு நல்விடிவும் நமக்கு விடியாத ராத்ரியுமாய்த்து என்றார்களிறே. ஆதித்யனுண்டானாலும் கண்ணுள்ளார்க்கிறே விடிவுள்ளது.

ஆண்டாளுக்குப் பத்துத் தமப்பன்மாருக்கு உண்டான ஆற்றாமையும் ஸ்த்ரீதநமாகப் பெற்று இவள்பக்கலிலே குடிகொண்டது. ஆழ்வார்களுக்கு தரிக்கைக்கும் ஒரு பொற்றையுண்டு. தாங்களான தன்மை அழிந்திருக்கச் செய்தே நாய்ச்சியார்தசையாக அந்யாபதேசத்தாலே பேசியனுபவித்தார்கள். இவள் C "பிறந்திட்டாள்" என்னுமாபோலே அந்யாபதேசத்தாலே அநுபவிக்கவேண்டாதே அவனைப் பருத்திபட்ட பன்னிரண்டும் படுத்தவல்ல ஸ்த்ரீத்வத்தை உடையளாயிருக்கும்; அவர்களிற்காட்டில் ஆற்றாமை தன்னேற்றம், (எம்பெருமான் தன்னழகையும் குணங்களையும் இவளுக்குக் கொடுத்தான்,) பிராட்டிமாரும் தங்களுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களையும் இவளுக்குக் கொடுத்தார்கள்; தமப்பன்மாரைப்போலே ஆக்கனை பெண்மையன்று இவளது.

---

A இர-திருவ 81, B மூன்-திருவ 1, C திருவாய் 6-5-10.

இவளுக்கு ஓர் அந்யாபதேசமுண்டு; அதாகிறது ப்ராஹ்மணி இடைச்சியாகை. A "குலந்தரும்" என்று அவனுக்கு அண்ணிய குலமிறே குலமாவது.

1. "பதிஸம்யோகஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா।
சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாதாப்லவோ யதா ॥"

என்கிறபடியே ஒரு கொள்கொம்பிலே சேர்க்கவேண்டும் பருவமாய், B "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்னும் தன்மையையுடையளாய், C "கோல் தேடியோடும் கொழுந்ததே போன்றதே மால்தேடியோடும் மனம்" என்கிறபடியே அபிநிவேசத்தைப் பண்ணிக்கொண்டு 'வடபெருங் கோயிலுடையானோடே D தழுவி முழுசிப் பரிமாற வேணும்' என்று இவள் செல்ல, இவள் நினைத்தபடிகளுக்கு அவன் முகங்காட்டாமையாலே மிகவும் அவஸந்நையாய், 'இவனோடு கலந்து பரிமாறப் பெற்றாருண்டோ, இல்லையோ?' என்று ஆராய்ந்துபார்த்தவிடத்தில், 'திருவாய்ப்பாடியில் பெண்பிள்ளைகள் யதாமநோரதம் இவனோடு அநுபவிக்கப் பெற்றார்கள்' என்று கேட்டு 'அதுக்கு நாம் உதவப் பெற்றிலோம்' என்று இன்னாதாக;

2. "கோவர்த்தநோ கிரிவர:" அவன் பருப்பன பன்னிரண்டுங் காட்டின மலை கிடந்தது. 2. "யமுநா நதீ ஸா" அவனும் பெண்களும் புக்குக் கலக்கின நீர் இன்னமும் தெளிந்ததில்லை, மஞ்சளும் குங்குமாதிகளும் இப்போதும் காணலாம். அநந்தாழ்வான் திருமுக்குளத்திலே புக்குத் தடவினார். 'இது வென்' என்ன, 'அப்பெண்பிள்ளைகள் குளித்ததொரு மஞ்சட் கொழுந்தாகிலும் கிடைக்குமாகக் கருதிக் காண்' என்றார். 2. "ப்ருந்தாவநம் ச" அவனாலும் பெண்களாலும் பருத்தி பட்ட பன்னிரண்டும்பட்ட ஸ்ரீப்ருந்தாவநத்தில் திருக்குரவைகோத்த அடிச்சுவடும் இன்னமும் அழிந்ததில்லை. 2. "மதுரா ச புரீ புராணீ" ஆஸ்ரிதர்க்கு வயிறெரித்தலான தேசம். கொடுந்தேசமென்றுமாம். ஆனை படும் ஆசரம்போலே ஸர்வேஸ்வரன் படும் ஆகரம். 2. "அத்யாபி ஹந்த ஸுலபா: க்ருதிநாம் ஜநாநாம்" கால்நடைதரும் பாக்யவான்களுக்கு இப்போதும் காணலாம் கிடீர்.

வைலக்ஷண்யத்துக்கு த்ருஷ்டாந்தம்-(தேஹாத்மாபிமானத்துக்குக் கூனியும் கைகேயியும்; தார்மிகத்வத்துக்கு சக்ரவர்த்தி; ஆத்மஜ்ஞாநத்துக்கு வஸிஷ்டாதிகள்,) கைங்கர்யத்துக்கு இளையபெருமாள், பாரதந்த்ர்யத்துக்கு ஸ்ரீபரதாழ்வான், பாகவத பாரதந்த்ர்யத்துக்கு ஸ்ரீஸத்ருக்நாழ்வான். இளையபெருமாள்படி ஆழ்வார்களது. ஸ்ரீபரதாழ்வான்படி பெரியாழ்வாரது. ஸ்ரீஸத்ருக்நாழ்வான்படி ஆண்டாளது. பெரியாழ்வார் பகவத்ஸம்ருத்தியை ஆசைப்பட்டார். இவள் பாகவத ஸம்ருத்தியை ஆசைப்பட்டாள். முந்துறவே E "பல்லாண்டு" என்றார் அவர். இவள் F "நீராடப் போதுவீர்" என்றாள். உபாயத்திலும் இவர்க்கு G "மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்". இவளுக்கு உபாயம் H "விட்டு சித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேலது காண்டும்". பெரியாழ்வார் தம்மையழித்து இவனைப்பெறவிருக்க, இவள் தன்னையழித்து அவர்களைப் பெறப்பார்க்கிறாள், நம்மாழ்வார் i நெடுமாற்கடிமையிலும் j வேய்மருதோளிணையிலும் கடைகோழி(கடைக்கோடி?) நிலையிட்ட அர்த்தம் இவளுக்கு முற்பட்டது.

---

A பெரியதிரு 1-1-9. B நாச்-திரு 1-5, C இர திருவ 27, D நாச்-திரு 13-5, E திருப்பல்லாண்டு 1, F திருப்பாவை 1, G நாச்-திரு 11-10 H நாச்-திரு 10-10 I திருவாய் 8-10. J திருவாய் 10-3.

க்ருஷ்ணனைப் பிரித்த இத்தர்மஹாநி கண்டு மாரி மறுத்தது; கூடினால், 1. "ப்ரஹ்ருஷ்டமுதிதோ லோக:"; பிரிந்தாலும், 2. அபி வ்ருக்ஷா: பரிம்லாநா:" என்னும்படியாமிறே. முன்பே மழை பெய்யாமைக்கு நோற்றார்களாகவுமாம். A "மேலையார் செய்வனகள்" என்று வ்ருத்தாசாரங்களை நினைக்கிறது ஆழ்வார்களை. அர்ஜுநன் உபாயத்தைக் கடைகோழி (கடைக்கோடி?) நிலையிடுவித்துக்கொண்டாப்போலேயும், ஸ்ரீபரதாழ்வான் உபேயத்தை நிலையிடுவித்துக்கொண்டாப்போலேயும் B "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று (உபாயத்தை) முதலிலே நிலையிட்டு, முடிவிலே C "உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்று உபேயத்தை நிலையிட்டு, நடுவே தேஹயாத்ரைக்கு உடலாக்கி விடுகிறாள் ஆண்டாள்.

D "வில்லிபுத்தூருறைவான் தன் பொன்னடி காண்பதோர் ஆசையினால் என் பொருகயற்கண்ணிணை துஞ்சா" என்பானென்னென்னில்; ஸத்ப்ரக்ருதியாகையாலே காணில் மோஹிக்குமென்று வடபெருங் கோயிலுடையான் திருவடிகளில் புகாதபடி அடக்கிக் கொண்டிருப்பர்கள். E மயர்வற மதிநலமருளப் பெற்றபோதே "ப்ராப்ய ப்ராபகங்கள் அவனே" என்று நினைவிட்டிப்பர்கள். இது ஆழ்வார்களுக்கும் ஒக்கும். ஆண்டாளுக்கும் ஒக்கும், எம்பெருமானையொழிய அரை க்ஷணமும் தங்களுக்கு தேஹயாத்ரை நடவாமையாலே கிடந்து அலமந்து கூப்பிட்ட பாசுரங்கள் இப்ரபந்தங்கள். ஸாக்ஷாத் ப்ரமேயம் இது. அல்லாதன பகவதபிப்ராயத்தாலே அர்த்தாத் ஸித்தங்கள்.

ஸ்ரீஜநகராஜன் திருமகளுடைய ஆற்றாமை பிறந்த பாசுரங்கள் சக்ரவர்த்தித் திருமகனைப் பெறுகைக்கு உடலாக விழுந்தாப்போலே, ஆண்டாளுடைய ஆற்றாமை பிறந்த பாசுரங்கள் பெரிய பெருமாள் திருவடிகளை ப்ராபிக்கைக்கு உடலாய் விழுந்தது.

ஸ்வாபதேசாதிகளால், பகவத்த்யாநத்துக்கு எல்லை பெரியாழ்வார்படி; அந்யாபதேசத்துக்கு எல்லை அவர் மகள்படி.

மடலெடுக்கப்பாராதே நோன்பிலே கையை வைத்தது, க்ருஷ்ணன் மடலெடுக்கக் காணில் "நாமும் வீறுடையோம்" என்று உபேக்ஷித்திருக்கும்; 'இதரோபாயங்களை விட்டு என்னைப்பற்று' என்கையாலே நோன்பென்னில்; ஒன்றும் ஸஹியான்; இவர்கள் தங்களுக்கு தேஹயாத்ரையாயிருக்கிலும் நாட்டார் 'தர்மம்' என்று அடுத்துக் கட்டுமதும் பொறுக்க மாட்டான், அப்போதே கலந்துகொடு நிற்கும்.

**நாலாயிரப்படி அவதாரிகை முடிந்தது.**

---

**A** திருப்பாவை 26, **B** திருப்பாவை 1, **C** திருப்பாவை 29, **D** நாச் திரு 5-5, **E** திருவாய் 1-1-1.

ஸ்ரீ:

# மூவாயிரப்படி

அவதாரிகை—முதற்பாட்டில் a இந்நோன்புக்கு ஒருகாலம் நேர்படுவதே! என்று காலத்தைக் கொண்டாடுகிறார்கள். b ''மார்கழித்திங்கள்'' என்று தொடங்கி, ''சிறுமீர்காள்'' என்னுமளவும் ப்ராப்யம்; மேல் ப்ராபகம்; ப்ராப்ய ப்ராபகஸங்க்3ரஹமென்றுமாம்.

## முதற்பாட்டு

மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாளால்*
நீராடப்போதுவீர் போதுமினோ நேரிழையீர்*
சீர்மல்கு மாய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்
கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்*
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்*
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்*
நாராயணனே நமக்கே பறைதருவான்*
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய். 1.

பதவுரை:-சீர் மல்கும் ஆய்ப்பாடி-செல்வம் நிறைந்துள்ள திருவாய்ப்பாடியில், செல்வச் சிறுமீர்காள் — கைங்கர்யமாகிற செல்வத்தையும் இளம் பருவத்தையுமுடைய பெண்காள்! நேர் இழையீர் — சிறந்த ஆபரணங்களை அணிந்துள்ளவர்களே! மார்கழி திங்கள் — (மாதங்களிற் சிறந்த) மார்கழி மாஸமும், மதி நிறைந்த நன்னாள் — பூர்ண சந்திரோதயத்தையுடைய (சுக்கில பக்ஷத்தில்) நல்ல நாளும் (நமக்கு வாய்த்திராநின்றன); கூர் வேல் — கூர்மை பொருந்திய வேலாயுதத்தையுடையவனும், கொடும் தொழிலன் — (கண்ணபிரானுக்குத் தீங்கு செய்யவரும் க்ஷுத்ர ஜந்துக்கள் பக்கலிலுஞ் சீறிக்) கொடுமைத் தொழிலைப் புரியுமவனுமான, நந்தகோபன் குமரன் — நந்தகோபனுக்குப் பிள்ளையும், ஏர் ஆர்ந்த கண்ணி — அழகு நிறைந்த கண்களையுடையளான. அசோதை இளஞ் சிங்கம்— யசோதைப் பிராட்டிக்கு சிங்கக்குட்டி போலிருப்பவனும், கார் மேனி — காளமேகத்தோடொத்த திருமேனியையும், செம் கண் — செந்தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையும், கதிர் மதியம் போல் முகத்தான் — ஸூர்யனையும் சந்திரனையும்போன்ற திருமுகத்தையுமுடையனுமான, நாராயணனே — ஸ்ரீமந் நாராயணன்தானே, நமக்கே — ('அவனால் பேறு' என்றிருக்கிற) நமக்கே, பறை—பறையை (கைங்கர்யத்தை), தருவான்—கொடுக்குமவனாயிரா நின்றான், ஆல் — ஆதலால், பாரோர் புகழ—இவ்வுலகத்தவர்கள் கொண்டாடும்படி, படிந்து நீர் ஆட போதுவீர் — நன்கு நீராட வர விருப்பமுடையீர்களே! போதுமின் — வாருங்கள். ஏல் ஓர் எம்பாவாய்! — (இது நோன்புக் குறிப்பு).

---

பெ-அ.-முதற்பாட்டு (மார்கழி இத்யாதி3) a ''திங்கள்—மார்கழி, நாள்—மதிநிறைந்த நல்நாள் ஆல்-ஆஸ்சர்யம்'' என்று திருவுள்ளம்பற்றி, இப்பாட்டுக்குக் காலத்தைக் கொண்டாடுகையே ப்ராத4ாந்யேந ப்ரதிபாத்3யமென்று ப4ாவம் அருளிச்செய்கிறார் (இந்நோன்புக்கு இத்யாதி3) இத்தால் - ப4க3வத்ஸமாஸ்ரயணத்துக்கு அநுகூலமான காலம் நேர்படுவதே! என்று ஸ்வாபதே3ஸம் கண்டுகொள்வது. b திருவாய்மொழியிலே முதற்பாட்டு மேல் பரக்கச் சொல்லுகிற அர்த்த2ங்களுக்கு ஸங்க்3ரஹமாமாபோலே, இப்பாட்டும் மேல் ப்ரதிபாதி3க்கப்படும் ப்ராப்யப்ராபகங்களுக்கு ஸங்க்3ரஹம். காலத்தைக் கொண்டாடுகை அதுக்கு ஸேஷமென்று திருவுள்ளம்பற்றி, தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ப்ராப்யேத்யாதி3). -''மார்கழித் திங்கள்'' என்று தொடங்கி, ''செல்வச்சிறுமீர்காள்'' என்னும்ளவும் ப்ராப்யத்தை ஸங்க்3ரஹித்தபடி; மேலெல்லாம் ப்ராபகத்தை ஸங்க்3ரஹிக்கிறது; ''பறை'' என்றத்தாலே—அடிமையென்று மேல்சொல்லுகிறது ப்ராபகத்துக்கு ஸேஷமாக என்று கருத்து.

வ்யாக்2யானம்: (மார்கழித்திங்கள்) c 1. ''நாதிஶீதா ந க4ர்மத3:'' என்கிற ந்யாயத்தாலே அத்யுஷ்ணமாதல் $c_2$ அதிஶீதளமாதலன்றிக்கேயிருக்கும் மாஸம், d நாளுக்கு ப்3ராஹ்மமுஹூர்த்தம்போலே ஸம்வத்ஸரத்துக்கு இம்மாஸமாகையாலே $d_2$ ஸத்த்வோத்தரமான காலம். e 2. ''மாஸாநாம் மார்க்க3ஶீர்ஷோऽஹம்'' என்று ''மாஸங்களில் வைத்துக்கொண்டு மார்கழிமாஸமாகிறேன்'' என்று அவன்தானே அருளிச்செய்கையாலே, வைஷ்ணமான மாஸம். f ஸர்வ வஸ்துக்களும் $f_2$ அங்குரிக்கும் காலமாகையாலே, தங்களுடைய $f_3$ உந்மேஷத்துக்கு அர்ஹமான காலம். (மார்கழித்திங்கள்) g கோ3பவ்ருத்3த4ர் குளிருக்கு அஞ்சிப் புறப்படமாட்டாத காலம்.

---

பெ.அ: c...y. இப்பாட்டு ப்ராப்யப்ராபக ஸங்க்3ரஹமாம்போது காலவிஶேஷம் விஹிதமல்லாமையால் காலமெல்லாம் ஒத்ததாயிருக்க, காலவிஶேஷத்தைக் கொண்டாட ப்ரஸக்தி என்? என்ன; அதுக்கு அஞ்சுபடியாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நாதிஶீதேத்யாதி3) $c_2$ (அதிஶீதளமாதலன்றிக்கே) என்றது 3. ''மகரே குண்ட3லாக்ருதி'' என்கிற மாஸம்போலன்றிக்கேயிருக்கை. இத்தால் 1. ''நாதிஶீதா ந க4ர்மத3:'' என்கிற நாள் எம்பெருமானோட்டைஸாத்3ருஶ்யத்தாலே ப்ராப்யமென்று கொண்டாடுகிறார்களென்கை. d உத்தராயணம் தே3வர்களுக்குப் பகலாகையாலே அதுக்குப் பூர்வமாஸம் ப்3ராஹ்மமுஹூர்த்தமென்று திருவுள்ளம் பற்றி, இத்தால் ஸாத்விகப2லஸித்3தி4க்கு உறுப்பான ஸாத்விககாலமென்று கொண்டாடுகிறார்கள் என்று (நாளுக்கு) இத்யாதி3 வாக்யத்துக்குக் கருத்து. e (மாஸாநாம்) இத்யாதி3க்கு ப்ராப்யபூ4தன் அபி4மாநிக்கையாலே உத்3தே3ஶ்யதமமென்று கொண்டாடினார்களென்று தாத்பர்யம். f ஸர்வஸஸ்யங்களும் ப2லிக்குங்காலமாகையாலே, தங்கள் பே4க3வர்த்த4கமான மனோரத2மும் ப2லிக்கும் காலமென்று கொண்டாடுகை (ஸர்வவஸ்துக்களும்) இத்யாதி3க்குக் கருத்து. $f_2$ (அங்குரிக்கும்) என்றது ப2லிக்கும் என்றபடி. அந்யாபதே3ஶத்திலே விரோதி4 நிவ்ருத்திக்குடலான காலமென்று கொண்டாடுகையை ப்ரதீகக்3ரஹண பூர்வகமாக அருளிச் செய்கிறார் (மார்கழி இத்யாதி3) இவையெல்லாவற்றாலும் விஹிதமான காலங்களில் உத்தமமான காலமென்று கொண்டாடினார்கள் என்றதாய்த்து.

h தங்களுக்கு ப்ரதா4ந உத்3தே3ஶ்யமான ப்ராப்ய ப்ராபகங்களைக் கொண்டாடாதே தது3பயுக்தமான காலத்தைக் கொண்டாடுவானென்? என்கிற ஶங்கையை அநுவதி3த்து த்3ருஷ்டாந்தமுகே2ந பரிஹரிக்கிறார் (தங்களுக்கு இத்யாதி3) $h_2$ (ஸம்ருத்3தி4யைப் பற்ற) என்றது திருவபி4ஷேகத்துக்கு உடலான அதிஶயங்களைப்பற்ற என்றபடி. இத்தால்— பெருமாளுடைய திருவபி4ஷேகோத்ஸவத்தில் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே தது3பயுக்தமான காலத்

---

சி. அ.—முதற்பாட்டு d (நாளுக்கு ப்3ராஹ்மமுஹூர்த்தம் போலே) என்றது தைமாஸத்துக்குப் பூர்வமாகையாலே தை உத்தராயணத்துக்கு அடியிறே. $d_2$ தே3வர்கள் பகலுக்கு ப்3ராஹ்ம முஹூர்த்தமாகையாலே இம்மாஸத்தை ஸத்த்வோத்தரகாலம் என்கிறது. c...f அத்யுஷ்ணமாதல் அதிஶீதலமாதலன்றிக்கேயிருக்கும் காலமென்னுதல்; ஸத்த்வோத்தர காலமென்னுதல்; வைஷ்ணவமாஸமென்னுதல்; தங்களுடைய உந்மேஷத்துக்கும் ஹர்ஷத்துக்கும் யோக்3யமான காலமென்னுதல். $f_2$ அங்குரிக்கையாவது ப2லவத்தாகத் தோற்றுகை. $f_3$ உந்மேஷமாவது—உத்3தே3ஶ்யஸித்3தி4. g (கோ3பவ்ருத்3த4ர்) இத்யாதி3யால்—தங்களுக்கு க்ருஷ்ணனோடே யதே2ஷ்டம் விநியோகி3க்கலாம் என்றபடி. c...g ஆக, 'மார்கழித்திங்கள்' இத்யாதி3க்குத் தாத்பர்யம் அஞ்சு.

h-தங்களுக்கு உத்3தே3ஶ்யம் கிடக்கக் காலத்தைக் கொண்டாடுகிறதென்? என்னில்: 1. ''சைத்ரஶ் ஶ்ரீமாநயம் மாஸ:'' என்று ஒரு h, ஸம்ருத்3தி4யைப்பற்றக் காலத்தைக் கொண்டாடிற்றிறே, i [சைத்ர;] j அல்லாதாரிற்காட்டில் பெருமாளுக்கு உள்ள ப்ராத4ாந்யம்போலே மாஸங்களெல்லாவற்றுக்கும் முதலான மாஸம். [ஶ்ரீமாந்] k அவர் எல்லாருக்கும் k2 ராஜாவாக ப்ராப்தராளுற்போலே, சைத்ரமாஸம் ஸர்வர்க்கும் ஸுக2கரமாகையாலே, மாஸங்களுக்கெல்லாம் ராஜாவென்கிறது. l [அயம் மாஸ:] m அபி4ஷேகமநோரத2 ஸமயத்திலே ஸந்நிஹிதமான தன்னேற்றம். n அங்கு, ஶேஷியை ஶேஷபூ4தர் லபி4க்கைக்குக் கொண்டாடுகிற கொண்டாட்டம்; o இங்கு ஶேஷபூ4தரை ஶேஷி லபி4க்கைக்குக் கொண்டாடுகிற o2 கொண்டாட்டம். [புண்ய: புஷ்பிதகாநந:] 2, ''பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ'' என்றும் 3, ''பும்ஸாம் த்3ருஷ்டிசித்தாபஹாரிணம்'' என்றும் அவர்க்கு இரண்டாகாரமுண்டானாற்போலே, இக்காலமும் பாவநமுமாய் போ4க்3யமுமாயிருக்கை. p [புஷ்பிதகாநந:] q படை வீடுபோலே நாம் அலங்கரிக்கவேண்டாதே தானே அலங்கரிக்கை. p [புஷ்பிதகாநந:] r பெருமான் பொன்முடிசூட, காடு பூமுடிசூடிற்று.

---

பெ.அ.தைக்கொண்டாடினாற்போலே. இவர்களும் கொண்டாடினார்கள் என்றதாய்த்து. i, j ''அயம் மாஸ:'' என்ன அமைந்திருக்கவும், (சைத்ர:) என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அல்லாதார் இத்யாதி3) J அல்லாதார்-ப4ரதாதி3கள். இத்தால்-பெருமாளுக்குத் தக்கது என்றதாய்த்து, k காலத்துக்கும் பெருமாளுக்கும் முதன்மையாலே ஸாத்3ருஶ்யம் உபபாதி3த்து 4.''ப்ரஜாஸுகி2த்வே சந்த்3ரஸ்ய'' என்கிறபடியே, ஸுக2கரத்வத்தாலேயுண்டான ஸாத்3ருஶ்யத்தை அருளிச்செய்கிறார் (அவர் எல்லார்க்கும் இத்யாதி3) k2 (ராஜாவாக ப்ராப்தராளுற்போலே) என்றது - ரஞ்ஜகதயா வந்த ஸுக2கரத்வமென்கிற கு3ணஸாம்யத்தாலே ப்ராப்தராளுற்போலே என்றபடி. l, m ''அயம்'' என்றத்தாலே அதீதாநாக3த சைத்ரமாஸாபேக்ஷயா வ்யாவ்ருத்தியுண்டாகையாலும் ஓரதிஶயமுண்டு என்கிறார் (அபி4ஷேகேத்யாதி3) l, n, o ''அயம்'' என்கிறது பு3த்3தி4ஸ்த2பராமர்ஶியாகையாலே, அவதார ஹேதுவான சைத்ரமாஸமே இதுவென்று அக்ஷரார்த்த2ம் திருவுள்ளம் பற்றித் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அங்கு இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) 5. ''ததஶ்ச த்3வாத3ஶே மாஸே சைத்ரே நாவமிகே திதௌ2'' என்று அவதார காலத்தில் 5. ''சைத்ரம்'' என்ற விஶேஷணத்தாலே, இந்த லோகத்தில் ஜநங்களுக்கு ஒரு ராஜாவைச் சக்ரவர்த்தி பெற்றானென்று ரிஷி கொண்டாடினமை தோன்றுகையாலே ஶேஷியான பெருமாளை ஶேஷபூ4தரான ஜநங்கள் லபி4க்கைக்குத் தக்க மாஸமென்று கொண்டாடின கொண்டாட்டம் என்று முதல் வார்த்தைக்குக் கருத்து; அப்படி கொண்டாடப்பட்ட மாஸமே இப்போதும் பெருமாள் அபி4ஷிக்தராய் ஜநங்களை லபி4க்கைக்கும் அர்ஹமாயிற்று என்று சக்ரவர்த்தி கொண்டாடின கொண்டாட்டம் என்று-இரண்டாம் வாக்யத்துக்குத் தாத்பர்யம். o2 (கொண்டாட்டம்) என்ற அநந்தரம் ''சொல்லிற்று'' என்று ஶேஷம்; p, q ''புஷ்பிதம்'' என்றது-ஸஞ்ஜாத புஷ்பமென்று அர்த்த2மாகையாலே, தானே புஷ்பிதமென்று தோன்றுகையாலே, பெருமாளுடைய போ4க்3யதையைப்போலே காட்டில் போ4க்3யதையும் ஸ்வாபா4விகமென்கைக்காக வ்யாவ்ருத்திபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (படைவீடித்யாதி3) p, r ''புஷ்பிதம்'' என்றதுக்கு ஸ்வாபா4விகமான அர்த்த2ம் அருளிச்செய்து, ரஸோக்தியாக அர்த்த2ம் அருளிச்செய்கிறார் (புஷ்பிதகாநந: இத்யாதி3)

s (மதிநிறைந்த) t மாஸம் நேர்பட்டாற்போலே யிருந்ததீ பக்ஷமும் நேர்பட்டபடி. u 1. "ஆபூர்யமாணே பக்ஷே புண்யே நக்ஷத்ரே' என்று மங்கள கார்யம் செய்வார்க்கு விதிக்கிற விதியும் இவர்களுக்குக் கோல்விழுக் காட்டிலே சேர விழுந்தது. v பகவத்ப்ரவணராயிருப்பாருடைய தேஹயாத் ரையை விதிதான் பின்செல்லக்கடவதாயிறேயிருப்பது, w 2. த்வதீயகம்பீர மநோநுஸாரிண:" என்னக்கடவதிறே. x ஒருவரையொருவர் முகங்கண்டு அநுப விக்கைக்கும், எல்லாருங் கூடிச்சென்று க்ருஷ்ணனை எழுப்புகைக்குமாக நிலா உண்டாகப்பெற்றது. y A "நள்ளிருட்கண்" என்னவேண்டாவிறே இவர்களுக்கு; விரோதிக்கக்கடவ அவ்வூராரே இசைந்து மேலெழுத்திடப் z பெற்றதிறே.

a (நன்னாளால்) b மாஸத்துக்கும் பக்ஷத்துக்கும் b, நாயகக்கல் போலே யிருப்பதொரு நாள் நேர்பட்டபடியென்! c நம்மை க்ருஷ்ணனோடு கிட்டவொட் டாதவர்கள் தாங்களே, க்ருஷ்ணனோடு சேருகைக்கு c, ப்ரமாணம் பண்ணிக் கொடுத்த நாளாகப்பெற்றதே! d பகவத் ப்ரஸாதத்துக்கு இலக்காகப்பெற்ற நாளிறே இவ்வாத்மாவுக்கு நன்னாளாகிறது; e 3. "க்ஷிபாமி" என்ற அவன்தானே 4. "ததாமி" எனப்பெற்ற நாளிறே. f ஸர்வேஶ்வரனோடே எதிரம்பு கோக்கை

---

பெ. அ. s,t கீழ்ப்பதத்தோடே ஸமபிவ்யாஹார தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (மாஸம் இத்யாதி) u,v,w பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணிக் கைங்கர்யம் பண்ணுமவர்களுக்கு ஶுக்லபக்ஷம் விஹிதமென்று கொண்டாடக்கூடுமோவென்ன அருளிச் செய்கிறார் (ஆபூர்ய மாணே இத்யாதி வாக்யத்ரயத்தாலே;) w "த்வதீயாநாம் கம்பீரம் மந:" என்று விவக்ஷிதம். x விஹிதமென்று கொண்டாடாதே போனால் எத்தாலேதான் கொண்டாடுகிறார்கள்? என்ன அருளிச்செய்கிறார் (ஒருவரை இத்யாதி) y,z நிலாவாலே கோபவ்ருத்தர் காணாரோ? அதுக்கு இருள் வேண்டாவோ? என்ன அருளிச்செய்கிறார் (நள்ளிருட்கண் இத்யாதி.)

a,b மதிநிறைந்த நாளாகையாலே ப்ரகாஶகமாய் ஆநந்தகரமாயிருக்கையே நாளுக்கு நன்மையென்று திருவுள்ளம் பற்றி த்ருஷ்டாந்தபூர்வகமா அருளிச்செய்கிறார் (மாஸத்துக்கும் இத்யாதி). b2 (நாயகக்கல்போலே) என்றது ப்ரகாஶகமாயிருக்கையாலே யென்று கண்டு கொள்வது, a. c கழிந்தநாளோ, க்ருஷ்ணனோடே தங்களைச் சேரவொட்டா மையால் தீயது; இது அங்ஙனன்றிக்கே, க்ருஷ்ணனோடே சேருகைக்கு அவர்களே நிர்ணயம் பண்ணிக்கொடுத்த நாளாகையாலே நல்ல நாளென்று அந்யாபதேஶத்திலே தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (நம்மை இத்யாதி) c2 ப்ரமாணமென்றது-"ப்ரமிதி: ப்ரமாணம்" என்கிற பாவே வ்யுத்பத்தியாலே நிஶ்சயம் என்றபடி. a, d ஸ்வாபதேஶத்திலே, நன்மைக்கு அர்த்

---

சி. அ. s 'மதிநிறைந்த"-ஶுக்லபக்ஷம் என்றபடி, u அநந்யஸாதநரான இவர்கள் புண்ய காலம் தேடுகிறதென்? என்ன (ஆபூர்யமாணே இத்யாதி) v,w அதுக்கு த்ருஷ்டாந்தம் (பகவத் ப்ரவணராயித்யாதி) y, z அபிஸரித்து க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்தில் அபேக்ஷையுள்ளவர்களா யிருக்கிறவர்களுக்கு இருளொழிய நிலா உத்தேஶ்யமோ? என்ன அருளிச்செய்கிறார் (நள்ளிருட் கண் இத்யாதி-பெற்றதிறே என்னுமளவும்) a "நன்னாள்' என்று திவஸமாதல், நக்ஷத்ர மாதல். a,b நக்ஷத்ரபக்ஷே (மாஸத்துக்குமித்யாதி) திவஸமென்ற பக்ஷத்திலே மூன்று தாத் பர்யம்; c அதில் முந்தினது (நம்மையித்யாதி) இது அந்யாபதேஶத்திலே; d, f (பகவத் ப்ரஸாதத்துக்கு) இத்யாதியும் (ஸர்வேஶ்வரனோடே) இத்யாதியும் ஸ்வாபதேஶத்திலே.

---

## குட்டி அரும்பத விளக்கம்

[இவ்வரும்பத விளக்கம் இதுமுதலாகவே காண்கிறது.]

y,z அபிஸாரிகைக்கு இருளன்றோ தேட்டமென்ன (நள்ளிருட்கணென்ன வேண்டா இத்யாதி) a (நன்னாளால்) என்றது திவஸமாதல், நக்ஷத்ரமாதல், f இரண்டாம் தாத் பர்யம் (ஸர்வேஶ்வரனோடே எதிரம்பு இத்யாதி) மூன்றும் தாத்பர்யமென்னவுமாம்.

தவிர்ந்து ''அவன் நமக்கு ரக்ஷகன்'' என்னும் விஶ்வாஸம் பிறந்த நாளிறே நன்ளாகிறது. g 1. ''அத்3ய மே ஸப2லம் ஜந்ம ஸுப்ரப4ாதா ச மே நிஶா'' என்று g2 'கம்ஸன் சோறுண்டு வளர்ந்த எனக்கு, இங்ஙனேயொரு நல்விடிவு உண்டாகப் பெறுவதே!' என்றானிறே அக்ரூரன்.

h மாஸத்தைக் கொண்டாடுவது, பக்ஷத்தைக்கொண்டாடுவது, நாளைக் கொண்டாடுவதாய், இதிலே இவர்களுக்குக்கிடக்கிற h2 த்வரைவெள்ளம் என் தான்! i இவர்கள் ப்ராப்யருசி இருக்கிறபடி.

j (நீராட) k க்ருஷ்ணவிரஹத்தால் பிறந்த தாபம் ஆறும்படி போய்க் குளிக்கை; l இத்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ண ஸம்ஶ்லேஷம்; m தமிழரும் கலவியை, m2 ''சுனையாடல்'' என்றார்கள். n 2. ''ஏஷ ப்3ரஹ்ம ப்ரவிஷ்டோ஽ஸ்மி க்3ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரத3ம்'' என்று ப4க3வத் ஸம்ஶ்லேஷத்துக்கு க்3ரீஷ்மகாலத்தில் குளிர்ந்த மடுவை த்3ருஷ்டாந்தமாகச் சொல்லிற்றிறே. o தாங்கள் நினைத்த

---

பெ.அ. த2ம் அருளிச்செய்கிறார் (ப்4ந3வதி3 த்யாதி3) e ஆகில், உங்களுக்கு இந்நாள் எப்படிப் பட்டதோ என்ன அருளிச்செய்கிறார் (க்ஷிபாமி இத்யாதி3) இத்தால் ப்ராதிகூல்ய ஸங்கல்பம் தவிர்ந்து தங்கள் விஷயத்தில் ஆநுகூல்ய ஸங்கல்பம் பண்ணின நாள் என்றதாய்த்து. f இன்று இப்படி ஸங்கல்பிக்கைக்கு நிதா3னம் அருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனோடே இத்யாதி3) தாத்பர்யாந்தரமாகவுமாம். g இப்படி நாளைக்கொண்டாடினமைக்கு த்3ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (அத்3ய மே இத்யாதி3) g2 'மே-நிஶா-ச-அத்3ய-ஸுப்ரப4ாதா'' என்கையாலே கழிந்த நாளையில் விடிவு ஸுப்ரபா4தையல்லவென்று தோற்றுகையால், அதற்கு ஹேதுவை 'மே' என்றதுக்கு அர்த்த2மாக அருளிச்செய்யாநின்றுகொண்டு, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கம்ஸன் இத்யாதி3) 3. ''வரம் ஹுதவஹஜ்வாலாபஞ்ஜராந்தர் வ்யவஸ்தி2தி:। ந ஶௌரிசிந்தாவிமுக2ஜந ஸம்வாஸ வைஶஸம் ॥'' என்கிறபடியே ப4க3வத்3 த்3வேஷியான கம்ஸன்சோறுண்டு அவனோட்டை ஸஹவாஸம் பண்ணுகையால் கழிந்த நாளையில் விடிவு விடிவன்றென்று கருத்து.

h காலத்தைக் கொண்டாடவேண்டினால் 1. ''ஸுப்ரப4ாதா ச மே நிஶா'' என்றாற் போலே ''நன்னாள்'' என்று நாளைக் கொண்டாடுகையேயன்றிக்கே மாஸத்தையும் பக்ஷத்தையும் சேர்த்துக்கொண்டாடுகைக்கு ஹேதுவை அருளிச்செய்துகொண்டு ஈடுபடுகிறார் (மாஸத்தை இத்யாதி3) h2 (த்வரைவெள்ளம்) என்றது–கொண்டாடுகையில் இச்சா2 ஸந்தாநமென்றபடி. i இந்த த்வரைவெள்ளத்துக்குத்தான் ஹேதுவென்னென்ன அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி3)

j, k. 'நீராட' என்றதற்கு நோன்புக்காகக் குளிக்கை வாக்யார்த்த2மாய் இத்தைச் சொல்லுமவர்களுடைய ஹார்த்த3மான த்4வந்யர்த்த2த்தை அருளிச்செய்கிறார் (க்ருஷ்ண இத்யாதி3) l ஜலத்தில் குளித்தால் விரஹதாபமாறும்படி கண்டதில்லையேயென்ன அருளிச்செய்கிறார் (இத்தால் இத்யாதி3) இத்தாலென்றது 'நீராட' என்றத்தால் என்றபடி. m 'நீராட' என்ற அர்த்த2த்தால் ஸம்ஶ்லேஷம் த்4வநிக்குமென்கைக்கு நியாமகம் அருளிச்செய்கிறார் (தமிழர் இத்யாதி3) m2 சுனையாடலாவது - பர்வதத்திலே தேங்கின சுனைகளிலே குளிக்கை. n 'நீராட' என்றதுக்கு ஸ்வாபதே3ஶார்த்த2த்தை அருளிச்செய்கிறார் (ஏஷ இத்யாதி3) o கோ3பிமார் தங்களோடொத்த தோழிமார்களை 'குளிக்க' என்று சொல்லாயிருக்க, கௌரவித்து 'நீராட' என்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (தாங்கள்

---

சி-அ. h (மாஸத்தைக் கொண்டாடுவது!) என்று தொடங்கி அருளிச்செய்ததற்குத் தாத்பர்யம்-ப4க3வத்ஸம்ஶ்லேஷத்துக்கு உறுப்பாகையாலே இவற்றைக் கொண்டாடுகிறார்களென்று. j,l 'நீராட' என்றதுக்கு ஸ்வாபதே3ஶம் (இத்தாலித்யாதி3)

படி சொல்லுகைக்கு ஈடான o முறை உண்டாயிருக்கச் செய்தேயும் அத்தைத் தவிர்ந்து ப4க3வத் ஸம்ப3ந்த4த்தையே பார்த்து கௌ3ரவித்து, 'நீராட' என்கிறார்கள், p புத்ரர்களாகவுமாம், ஶிஷ்யர்களாகவுமாம், ப4க3வத்ஸம்ப3ந்த4முடையாரை கௌ3ரவ்யர் என்கிறது; q A. ''பொற்றாமரைக்கயம் நீராடப்போனாள்'' என்னக்கடவதிறே. இத்தால், தங்கள் ப்ராப்யத்தைச் சொல்லுகிறது.

r ''அல்பப2லமான ஸ்வர்க்கா3நுப4வத்துக்கு அதி4கார்த்த2மாகப் r2 பண்ண வேண்டும் தேவைகளுக்கு ஒரெல்லையில்லை; இந்த நிரவதி4க ஸம்பத்தைப் பெறுகைக்கு எவ்வளவு யோக்3யதை வேணும்?'' என்னில்: s (போதுவீர் போதுமினோ) t இச்சை2யே அதி4காரம். u அது அப்ராப்த விஷயமாகையாலே அதி4காரிஸம்பத்தி உண்டாக்கிக்கொண்டு இழியவேணும்; v இது வகுத்த விஷயமாகையாலே இச்சை2க்கு மேற்பட வேண்டுவதில்லை. w நெடுங்காலமிழந்ததும் இவன்பக்கல் இச்சை2யில்லாமை. x ஆகையாலே இந்த இச்சை2யே வேண்டுவது. y ஶக்தியும் ப்ராப்தியும் அத்தலையிலே பூர்ணமாகையாலே இச்சை2க்கு மேற்பட வேண்டுவதில்லை. z இனி இவன் சேதநனான வாசிக்கு இச்சை2யேயிறே வேண்டுவது. a அது இல்லையாகில் இவனுக்கு இது புருஷார்த்த2மாக மாட்டாதிறே. b க்ஷுத்3ரவிஷயாநுப4வத்துக்குத் தனித் தேட்டமானாற்போலே, அபரிச்சி2ன்னமான விஷயத்துக்குத் துணை

---

பெ. அ. நினைத்தபடி இத்யாதி3) $o_2$ முறை-அநுப3ந்த4ம். p கௌ3ரவித்துச் சொன்னதால் ப2லிதமான ஸ்வாபதே3ஶத்தை அருளிச்செய்கிறார் (புத்ரர்களாகவுமாம் இத்யாதி3) q உக்தார்த்த2 ஸம்வாத3ம் காட்டுகிறார் (பொற்றாமரை இத்யாதி3) இவ்விடத்தில், பட்டர் ஸ்ரீபாத3த்தைக் கழுவித் தீர்த்த2ங்கொள்ளும் ஆண்டாளுடைய அநுஷ்டா2நமும், எம்பெருமானார் பெருங்கூட்டத்தோடே எழுந்தருள, பெரியநம்பி ஆளவந்தாராக நினைத்துத் தண்டனிட்டதும் அநுஸந்தே4யம்.

r மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (அல்பேத்யாதி3) $r_2$ (பண்ணவேண்டும் தேவைகளுக்கு) என்றது - கூஶ்மாண்ட3 க3ண ஹோமாதி3களுக்கு என்றபடி; கூஶ்மாண்ட3 க3ணம் மந்த்ர (மாத்ரு) விஶேஷம். s,t ''போதுவீர் என்றதுக்கு-போகையிலே இச்சை2யுடையவர்களென்று அக்ஷரார்த்த2ம் திருவுள்ளம்பற்றி. கீழ்ஶங்கைக்குப் பரிஹாரம் அருளிச்செய்கிறார் (இச்சை2யே இத்யாதி3) t, u, v, 'இச்சை2யே' என்ற அவதா4ரணார்த்த2த்தை ஹேதுபூர்வகமாக உபபாதி3க்கிறார் (அது இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) w, x ஆனால் இச்சை2 தவிர வேறு கர்த்தவ்யமில்லையாகில் நெடுங்காலம் இவன் இழந்து போவானென்? என்ன அருளிச்செய்கிறார் (நெடுங்காலம் இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) y 'இவனுக்கு இச்சை2யுண்டாகிலும் ஸஹகார்யந்தரமின்றிக்கே ப2லங்கொடுக்கமாட்டுமோ?' என்றும், 'வகுத்த விஷயமாகிலும் நியமேந பித்ராதி3கள் கார்யம்செய்யக் கண்டிலோம்' என்றும் வருகிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (ஶக்தியும் இத்யாதி3) பித்ராதி3கள்ப்ராப்தி கர்மோபாதி4கமாகையாலே, பூர்ணமன்றென்று கருத்து. z, a. ஆகில், இச்சை2தான் வேணுமென்கிற நிர்ப்ப3ந்த4மென்னென்ன அருளிச்செய்கிறார் (இனி இவன் இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) b 'போதுமின்' என்று சொல்லும் இவர்களும் க்ருஷ்ண ஸம்ஶ்லேஷார்த்தி2களாயிருக்க, அவர்களை மாத்ரம் போகச் சொல்லக் கூடுமோ? என்னும் ஶங்கையிலே 'போதுமின்' என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்

---

சி. அ. y, z இச்சா2மாத்ரம் போருமோவென்ன அருளிச்செய்கிறார் (ஶக்தியும் ப்ராப்தியுமித்யாதி3) சேதனனானவாசிக்கு அப்ரதிஷேத4மே வேண்டுவதென்று தாத்பர்யம். b காமுகர்க்குத் துணை அஸஹ்யமன்றோவென்ன அருளிச்செய்கிறார் (க்ஷுத்3ரவிஷயாநுப4வத்துக்கு இத்யாதி3) c, d போதுமினென்றதே 'போதுமினோ' என்ற ஸ்வரத்துக்கு அர்த்த2ம் (ப்ரதிகூல

---

A. திருநெடு 19.

தேட்டமாகையாலே, ஸ்ஹகாரிகளைச் சொல்லுகிறார்கள். c (போதுமினோ) d ப்ரதிகூலரையுமகப்பட 1. "தேந மைத்ரீ ப4வது தே யதி3 ஜீவிதுமிச்ச2ஸி" என்னுமவர்கள் அபி4முக2ரைப் பெற்றால் விடுவர்களோ? e (போதுமினோ) f நாங்கள் வாழும்படி புறப்பட்டு இங்ஙனே நடக்கலாகாதோ? g அவர்கள் முன்னேபோக, அந்நடையழகு கண்டு தாங்கள் பின்னே போகவிறே நினைக்கிறது.

h (நேரிழையீர்) விலக்ஷணமான ஆப4ரணத்தையுடையீர்! i இவர்கள் "போதுமினோ" என்றபின்பு, அவர்கள் வடிவிலே பிறந்த புதுக்கணிப்பு இருந்தபடி. j அன்றிக்கே, A "கொங்கைமேற் குங்குமத்தின் குழம்பழிய" என்கிறபடியே க்ருஷ்ணனுடைய வரவைக் கடாக்ஷித்து, 'அவன் எப்போது வந்து மேல்விழும்?' என்று அறியாதபடியாலே, தங்களை எப்போதும் அலங்கரித்தபடியேயிருப்பர்களென்றுமாம். k 2. "வஸதி ஹ்ருதி3 - ஸௌம்யரூப:" என்னுமாபோலே முன்புத்தை க்ருஷ்ணனோட்டைக் கலவியால் பிறந்த புகர் இப்போது தோற்றும்படியிருக்கையாலே சொல்லவுமாம்.

---

பெ. அ. (க்ஷுத்3ரேத்யாதி3). c, d "போதுவீர்" என்றத்தாலே - இச்சை2யுடையவர்களென்று தோற்றுகையாலே அபி4முக2ராயிருக்குமவர்களை "போதுமினோ" என்று விதி4த்துச் சொல்லவேணுமோவென்ன அருளிச்செய்கிறார் (ப்ரதிகூலரையும் இத்யாதி3) பிராட்டியைப்போலே இவர்களும் க4டகராகையாலே திருத்துகை இவர்களுக்கு ஸ்வபா4வமென்று கருத்து. e,f,g, வம்மின் என்னுதே "போதுமினோ" என்றதுக்குக் கருத்து அருளிச்செய்கிறார் (நாங்கள் இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே.)

h, i, j, k "விலக்ஷணமான விஷயத்தை க்ஷணகாலம் விஶ்லேஷிக்கும்போதும் விஶ்லேஷவ்யஸநம் பெரிதாயிருக்க, இப்போது ஆப4ரணம் பூண்டிருப்பாரோ? 'நேரிழையீர்' என்று ஸம்போ3தி4க்கும்படியென்? என்ன, இதற்கு மூன்று பரிஹாரம் அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி3 வாக்யத்ரயத்தாலே) ஸம்ஶ்லேஷார்த்த2மாகப் போகையிலுண்டான த்வராதிஶயத்தாலே ஆப4ரணங்களிடும் அவயவங்களை மாறடிப் பூண்கையாலே வடிவிற் புதுக்கணிப்பு என்று-முதல் வாக்யத்துக்குக் கருத்து. 2. "வஸதி ஹ்ருதி3 ஸநாதநே ச தஸ்மிந் ப4வதி புமாந் ஜக3தோऽஸ்ய ஸௌம்யரூப:। க்ஷிதிரஸமதிரம்யமாத்மநோऽந்த: கத2யதி சாருதயைவ ஶாலபோத:॥" என்கிறபடியே ஒரு நாளையிற் கலவியில் ஆநந்த3ம் இவர்களுக்கு அநுவர்த்திக்கையாலே விஶ்லேஷவ்யஸநம் தோற்றாமையால் தங்களை எப்போதும் அலங்கரித்திருப்பர்களென்று மூன்றாம் வாக்யத்துக்குக் கருத்து.

---

சி. அ. -ரையுமித்யாதி3). அன்றிக்கே, தங்களுக்கு உத்3தே3ஶ்யராகையாலே கௌ3ரவ்யதை தோற்றச் சொல்லுகிறார்களாகவுமாம். e, f 'ஓ' என்ற ஸ்வரத்துக்குத் தாத்பர்யாந்தரம் (நாங்கள்வாழும்படி இத்யாதி3)

h "இழை" - ஆப4ரணம். i,j,k விஶ்லேஷத3ஶையில் ஆப4ரணமுண்டோவென்ன, அதற்கு மூன்று வகையாகப் பரிஹரிக்கிறார் (இவர்கள் போதுமினோ) என்கிற வாக்யத்ரயத்தாலே. k 2. "வஸதி ஹ்ருதி3 ஸநாதநே ச தஸ்மிந் ப4வதி புமாந் ஜக3தோऽஸ்ய ஸௌம்யரூப:। க்ஷிதிரஸமதிரம்யமாத்மநோந்த: கத2யதி சாருதயைவ ஶாலபோத:॥"

---

கு. அ. - b காமுகர்க்குத் துணை அஸஹ்யமன்றோ என்ன (க்ஷுத்3ர விஷயாநுப4வத்துக்கு இத்யாதி3) d இந்த ஶங்கைக்கு ஸ்வாபதே3ஶத்திலே தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ப்ரதிகூலரையும் இத்யாதி3)

---

A. நாச்-திரு 8-7.

l (சீர்மல்கு மாய்ப்பாடி) m இவ்வூரில் ஐஶ்வர்யம் வழிந்துபோய் வேறேரூர்க்கு வெள்ளமிடப்போந்திருக்கை. அதாவது - க்ருஷ்ணனுடைய இங்குத்தை நீர்மை பரமபத3த்திலும் சென்று n அலையெறியும்படியாயிருக்கை. o வஸ்துவுக்கு o2 கு3ணத்தாலேயிறே உத்கர்ஷம்; p அங்கு தன்னிற் குறைந்தாரில்லாமையாலே கு3ணத்துக்கு விஷயமில்லை; q ஆகையாலே, த4ர்மியைப் பற்றிக் கிடக்குமத்தனை அங்கு; r அந்த4காரத்தில் தீ3பம்போலே ப்ரகாஶிப்பதும் இங்கேயாகையாலே, ஐஶ்வர்யம் பூர்ணமாய்த்து இங்கேயிறே. s த்ரிபாத்3 விபூ4தியிலடங்காத வஸ்து, தன்னை நியாம்யமாக்கி வர்த்திக்கிற ஊரிறே. t பண்டே கோ3ஸம்ருத்3தி4யுண்டாயிருக்கச்செய்தே, பிள்ளைகள் கால் நலத்தாலே கறப்பன கடைவனவற்றால் குறைவற்றிருக்கை; u நாழிப்பால் நாழிநெய் போருகையென்றுமாம்.

v (ஆய்ப்பாடி) w பரமபத3ம்போலே தே3ஹாந்தரபரிக்3ரஹம் பண்ணிச் சென்று அநுப4விக்கவேண்டாத ஊர். x ஆசாரப்ரதா4நரான வஸிஷ்டா2தி3கள் வர்த்திக்கிற திருவயோத்4யை போலன்றிக்கே, இடக்கையும் வலக்கையுமறியாத இடையர் வர்த்திக்கிற ஊர். y பெருமாள் கு3ணங்கண்டு உகக்கும் ஊர் போலன்றியே, க்ருஷ்ணன் தீம்புகண்டு உகக்கும் ஊர்.

---

பெ. அ. l,m,t "சீர்" பத3ம் — ஸம்ருத்3தி4யைச் சொல்லுகிறதாய், அதுதானும் - க்ருஷ்ணனுடைய கு3ணஸம்ருத்3தி4யென்றும் ஆய்ப்பாடிக்கு உண்டான கோ3ஸம்ருத்3தி4யென்றும் திருவுள்ளம்பற்றி முந்துற கு3ணஸம்ருத்3தி4பரமாகத் தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (இவ்வூரில் இத்யாதி3) n (அலையெறியும்படியாயிருக்கை)யாவது - அங்குத்தையில் நாய்ச்சிமார்களும் வைதி3கபுத்ராநயந முக2த்தாலே கண்டு அநுப4விக்கலாம்படியிருக்கை என்றபடி. o பரத்வாதி3கு3ணங்களை அநுப4வித்துக் கொண்டிருக்கிற நாய்ச்சிமார்க்கு நீர்மை காணவேண்டியிருந்ததோவென்ன அருளிச்செய்கிறார் (வஸ்துவுக்கு இத்யாதி3) o2 (கு3ணத்தாலே) என்றது - ஸௌலப்4யத்தாலே என்றபடி. p,q,r இக்கு3ணந்தான் அங்கே தானே அநுப4ாவ்யமாயிராதோவென்ன அருளிச்செய்கிறார் (அங்கு இத்யாதி3, வாக்ய த்ரயத்தாலே). s இங்கு ஸௌலப்4யம் ப்ரகாஶிக்கிறபடியை உபபாதி3க்கிறார் (த்ரிபாத்3 விபூ4தியில் இத்யாதி), t, u கோ3ஸம்ருத்3தி4 பரமான இரண்டாம் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (பண்டே இத்யாதி3)

v,w,x,y, "ஆய்ப்பாடி" என்று - இடைச்சேரியைச் சொன்னால் அதிஶயம் சொல்லத்தக்கதென்னென்ன, அதுக்குத் தாத்பர்யம் மூன்று ப்ரகாரத்தாலே அருளிச் செய்கிறார் (பரமபத3ம் இத்யாதி3 வாக்யத்ரயத்தாலே).

---

சி. அ. l "சீர்" - ஐஶ்வர்யமும், அழகும்; "பாடி" - ஊர்; l,m,t,u, "சீர்மல்கு" என்றதுக்கு மூன்று தாத்பர்யம் - க்ருஷ்ணனுடைய ஸௌலப்4யாதி3 கு3ணத்தாலே வந்த பூர்த்தி யென்னுதல். க்ருஷ்ணனவதரிக்கையாலே கோ3ஸம்ருத்3தி4யினுடைய மிகுதியைச் சொல்லுதல், நாழிப்பால் நாழி நெய்யாம்படியான அதிஶயத்தின் மிகுதியென்னுதல்.

v,w,x,y, "ஆய்ப்பாடி" என்றதுக்கு மூன்று தாத்பர்யம் (பரமபத3ம் போலே) இத்யாதி3 வாக்யத்ரயம். x,y ஆய்க்குத் தாத்பர்யாந்தரம் (ஆசாரப்ரதா4நரித்யாதி3) என்னவுமாம். v,y "ஆய்ப்பாடி" என்று கூட்டி ப2லிதமான தாத்பர்யம் (பெருமாளித்யாதி3)

z (செல்வச்சிறுமீர்காள்) a இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற ஐஶ்வர்யமாவது ப$_4$க$_3$வத் a ப்ரத்யாஸத்தியிறே. b ராஜ்யத்தைவிட்டு வெறுங்கையோடே பெருமாள் பின்னேபோன இளையபெருமாளை 1. "லக்ஷ்மணோ b$_1$ லக்ஷ்மிஸம்பந்ந:" என்றதிறே. c ராவண ப$_4$வநத்தினின்றும் கால்வாங்கிப் பெருமாளிருந்த தே$_3$ஶத்தைக் குறித்து வருவதாக 2. "பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச த$_4$நாநி ச" என்று ஸர்வத்தையும்விட்டு ஆகாஶஸ்த$_2$னை விபீ$_4$ஷணாழ்வானை 3. "அந்தரிக்ஷக$_3$த: ஶ்ரீமாந்" என்றதிறே. d அவனை ரக்ஷகனாக அத்$_4$யவஸித்துத் தன் பக்கல் முதலற்றுக் கைவாங்கின ஶ்ரீக$_3$ஜேந்த்$_3$ராழ்வானை 4. "ஸ து நாக$_3$வர: ஶ்ரீமாந்" என்றதிறே. e அப்படியே இவர்களும். f இங்கு ஐஶ்வர்யமாகச் சொல்லுகிறது க்ருஷ்ணப்ரத்யாஸத்தியை. g அதாவது — g$_2$ வலிபாதி, g$_3$ வழக்குபாதி, g$_4$ த$_4$ர்மம்பாதியாகப் பஞ்சலக்ஷம் குடியிற் பெண்களில் இவனால் பு$_4$ஜிக்கப்படாதாரொருவருமில்லை. வலியாகிறது — h தன் செல்லாமை; வழக்காகிறது — மைத்துனமை; த$_4$ர்மமாவது i ஆந்ருஶம்ஸ்யம்.

---

பெ. அ. z, a 'செல்வ' என்றதுக்கு-ஸ்வாபதே$_3$ஶத்திலே அர்த்த$_2$ம் அருளிச்செய்கிறார் (இவ்வாத்மாவுக்கு இத்யாதி$_3$) a$_2$ ப்ரத்யாஸத்தியாவது-ஸம்ப$_3$ந்த$_4$ம். b, c, d ப$_4$க$_3$வத்ஸம்ப$_3$ந்த$_4$த்தைச் செல்வமாகச் சொல்லுகைக்கு மூன்று த்$_3$ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (ராஜ்யத்தை இத்யாதி$_3$)b$_2$1. "லக்ஷ்மிஸம்பந்ந:" என்றது ப$_4$க$_3$வத்ஸம்ப$_3$ந்த$_4$மாகிற ஶ்ரீயாலே அதிஶயித்தவரென்றபடி, லக்ஷ்மீஶப்$_3$த$_3$ம் ஆர்ஷமாகையாலே 'லக்ஷ்மி' என்று குறுகிக் கிடக்கிறது. அந்யஶேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ரியங்களிரண்டும் பா$_3$ல்யந்தொடங்கி இன்றிக்கே யிருக்குமவர்க்குக் கைங்கர்யபரதையென்றும், ஸ்வாதந்த்ர்யமின்றிக்கே அந்யனான ராவணனுக்குப் பரதந்த்ரரானவர்க்கு அந்த (அந்ய) ஶேஷத்வம் கழிகையென்றும், அந்யஶேஷத்வமின்றிக்கே ஸ்வரக்ஷணே ஸ்வாதந்த்ர்ய நிஷ்ட$_2$ரானவர்க்குப் பின்பு அதுவுமழிந்திருக்கை யென்றும் த்$_3$ருஷ்டாந்தங்களுக்கு பே$_4$த$_3$ம் கண்டுகொள்வது. e உக்தார்த்த$_2$த்தை ப்ரக்ருதத்திலே நிக$_3$மிக்கிறார் (அப்படியே இவர்களும் என்று) f அந்யாபதே$_3$ஶத்திலே 'செல்வம்' என்றதுக்கு அர்த்த$_2$ம் அருளிச்செய்கிறார் (இங்கு இத்யாதி$_3$) h (தன்செல்லாமை) என்றது அவர்களோடு ஸம்ஶ்லேஷியாவிடில் த$_4$ரியாமை. i ஆந்ருஶம்ஸ்யமாவது-தன்னோடு கலவாவிடில் த$_4$ரியாத பெண்களிடத்தில் பண்ணும் காருண்யம்.

j, k இவர்களுடைய சிறுமையையிட்டு இப்படி ஸம்போ$_3$தி$_4$க்கை யசோதையிளஞ்சிங்கமான க்ருஷ்ணனுடைய போ$_4$க$_3$த்துக்கு உடலாயிருக்கும் பருவமென்று தோற்றுகைக்காக என்று அர்த்த$_2$ம் அருளிசெய்கிறார் (க்ருஷ்ணன் இத்யாதி$_3$) l பருவம் ஒத்திருந்

---

சி. அ. g க்ருஷ்ணப்ரத்யாஸத்தி எப்படி? என்ன அருளிச்செய்கிறார் (அதாவது வலி என்று) g$_2$ (வலி) 5. "நாஶேஷ புருஷகாரேண" இத்யாதி$_3$. g$_3$ (வழக்கு) 6. "பதிம் விஶ்வஸ்ய" 7. "ஸ்வாமித்வாத் ப்ரஹ்மணி" இத்யாதி$_3$. g$_4$ (த$_4$ர்மம்) 8. "ஆந்ருஶம்ஸ்யம் பரோ த$_4$ர்ம:" 9. "க்ருபா காப்யுபஜாயதே" இத்யாதி$_3$. 10. "ஶக்தேஸ் ஸுபஸத$_3$த்வாச்ச க்ருபாயோக$_3$ாச்ச ஶார்ங்கி$_3$ணி । ஈஶேஶிதவ்யஸம்ப$_3$ந்த$_4$ாத் அநித$_3$ம்ப்ரத$_2$மாத$_3$பி ॥"

---

கு. அ.—g$_2$ (வலி) என்ற இடத்தில் 5. "நாஶேஷ புருஷகாரேண", g$_3$ (வழக்கு) என்ற இடத்தில் 6. "பதிம் விஶ்வஸ்ய" 7. "ஸ்வத்வமாத்மநி", g$_4$ (த$_4$ர்மம்) என்ற இடத்தில் 8. "ஆந்ருஶம்ஸ்யம் பரோ த$_4$ர்ம:" 9. "க்ருபா காப்யுபஜாயதே" இத்யாதி$_3$ நினைப்பது. 10. "ஶக்தேஸ் ஸுபஸத$_3$த்வாச்ச" இத்யாதி$_3$யிலே இம்மூன்றுமுண்டு.

j (சிறுமீர்காள்) k க்ருஷ்ணனேடொத்த பருவமாயிருக்கை. l 1. ''துல்ய-ஶீலவயோவ்ருத்தாம்'' என்கிறபடியே எல்லாவற்றிலும் அவனுக்கு ஈடாயிருக்கை. m பருவம் நிரம்பின ஸ்த்ரீகளேயும் m, புருஷர்களேயும் கண்டால், $m_3$ தே₃வ தாந்தரப₄ஜநம் பண்ணினரையும், m, தந்தாமுக்காக நினைத்திருப்பாரையும் போலே நினைத்திருக்கும்; n தனக்கு அநந்யார்ஹைகளாக நினைத்திருப்பது இவர்களே. o இத்தால், அவனுக்கேயாயிருக்கிற யோக்₃யதையைச் சொன்னப₄. p 2. ஜ்ஞாநலவ து₃ர்வித₃க்₃த₄ரன்றியே இடக்கையும் வலக்கையும் அறியாத கந்யகை களாயிருக்கை; இவனுடைய விஷயீகாரத்தாலே இளகிப்பதிக்கை. (அங்கோலத் தைலத்திற் குறைந்த க்ருஷ்ணகடாக்ஷமில்லேயிறே. அதாவது — A ''கோவிந்த னுக்கல்லால் வாயில்போகாதிருக்கை.)

q (கூர்வேற்கொடுந்தொழிலன் நந்தகோபன்) r ஸ்ரீ நந்த₃கோ₃பர், முன்பு பசும்புல் சாவ மிதியாதவராய்த்து; s நம் சிறியாத்தானைப் போலே ஆந்ருஶம்ஸ்ய ப்ரத₄ாநராயாய்த்துப்போருவது. t பிள்ளைகள் பிறந்தபின்பு அவர்கள் மேலுண்டான வாத்ஸல்யத்தாலே 'அவர்களுக்கு என் வருகிறதோ!' என்று அஞ்சி, வேலைப்

---

பெ. அ. தாலும் ஶீலவ்ருத்தாதி₃கள் ஒத்திராவிடில் போ₄கா₃த்துக்கு உடலாகமாட்டா தென்று அத்தை உபலக்ஷணமாக்கித் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (துல்யேத்யாதி₃) m பெண்கள் பருவம் க்ருஷ்ணன் பருவத்துக்கு ஒத்ததாயிருக்கவேணுமோ? போ₄கா₃ர்ஹ மாய் விஞ்சியிருக்கலாகாதோ? என்ன அருளிச்செய்கிறர் (பருவம் இத்யாதி₃) $m_2$ (புருஷர் களையும்) என்றது - த்₃ருஷ்டாந்தார்த்த₂ம். $m_3$ (தே₃வதாந்தரப₄ஜநம் பண்ணினரையும்) என்றதுக்கு-பருவம் நிரம்பினவர்கள் ப₁ர்த்ருபரிக்₃ரஹம் பண்ணியிருப்பர்கள் என்று தாத் பர்யம். $m_4$ (தந்தாமுக்காக நினைத்திருப்பாரையும்) என்றது-ஸ்வதந்த்ரரையும் என்றபடி. j, n, o, p பெரியோர்களுக்குச் சிறியவர்கள் வஶ்யராயிருப்பர்களாகையால், அத்தைப்பற்ற ''சிறு மீர்காள்'' என்றதுக்கு - இவர்கள் வஶ்யர்களென்று ஶப்₃தா₃ர்த்த₂ம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (தனக்கு இத்யாதி₃ வாக்யத்ரயத்தாலே)

q, r, s, t ''நந்தகோபன் குமரன்'' என்ன அமைந்திருக்க, இப்போது நந்த₃ கோ₃பரை ''கூர்வேற்கொடுந்தொழிலன்'' என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிறர் (ஸ்ரீநந்த₃கோ₃பர் இத்யாதி₃ வாக்யத்ரயத்தாலே) $t_2$ (புகரெழுக்கடந்து) என்றது

---

சி. அ. என்ற ஶ்லோகத்தில் மூன்றுமுண்டு. j ''சிறுமீர்காள்'' – சிறுபெண்காள்! k (க்ருஷ்ண னேடொத்த பருவம்) என்றது 'இளஞ்சிங்கம்' என்றத்தை நினைத்து. 'சிறுமை'-ஒத்தபருவ மாதல்; அநந்யார்ஹதையாதல்.

---

கு.அ.— k (க்ருஷ்ணனேடொத்த பருவம்) என்றது 'இளஞ்சிங்கம்' என்றத்தை நினைத்து. (பக் 29) k 3. ''வஸதி ஹ்ருதி₃ ஸநாதநே ச தஸ்மிந் ப₄வதி புமாந் ஜக₃தோऽஸ்ய ஸௌம்யரூப: | க்ஷிதிரஸமதிரம்யமாத்மநோऽந்த: கத₂யதி சாருதயைவ ஸாலபோத: ||'' (பக் 30) l ''சீர்மல்கும்'' என்றது குணஸம்ருத்₃தி₄யாதல், நாழிப்பால் நாழி நெய்யாகிற சீராதல். (பக் 30) v ''ஆய்ப்பாடி'' என்றது — பரமபத₃த்தில் வ்யாவ்ருத்தியாதல், திருவ் யோத்₄யையில் வ்யாவ்ருத்தியாதல்; திருவயோத்₄யையில் வ்யாவ்ருத்தி சொன்னபக்ஷத்திலும் இரண்டுபடியாகக்கொள்வது. (பக் 30) v,w,x அன்றிக்கே 'பாடி' என்னுமதுக்குத் தாத்பர்யம் (பரமபத₃ம் இத்யாதி₃); 'ஆய்' என்றதுக்குத் தாத்பர்யம் (ஆசாரப்ரத₄ாநரான இத்யாதி₃) என்னவுமாம். j,n ''சிறுமீர்'' என்கையாலே அநுபபு₄க்தமானவர்களாகையாலே அநந்யார்ஹ ஶேஷத்வம் சொல்லுகிறது.

---

A-நாச்-திரு. 12-4,

$t_1$ புகரெழக்கடைந்து பிடிக்கத்தொடங்கினர். (கொடுந் தொழிலன்) u தொட்டிற் கீழே எறும்பு புகுரிலும் ஸிம்ஹத்தின் மேலே விழுமாபோலே சீற்றத்தின் மிகுதியாலே $u_2$ உதிரக்கையரானர். v 1. "ந ஹிம்ஸ்யாத் ஸர்வாபூ4தாநி" என்கிற ஸாமாந்யவிதி4, 2. "அக்3நீஷோமீயம் பஶுமாலபே4த" என்கிற $v_2$ விஶேஷத்தில் வாராதிறே; $v_3$ ஸ்வார்த்த2மாகச் செய்யுமன்றிறே நிஷித்3த4மாவது: w 'அத்தலைக்கு என்வருகிறதோ!' என்று அஞ்சிச் செய்யுமன்று அவை த4ர்மமாகக்கடவது; 3. "மந்நிமித்தம் க்ருதம் பாபம்" இத்யாதி3. A "நின்பால் x பொறுப்பரியனகள் பேசில்... ஆங்கே - தலையை அறுப்பதே $x_2$ கருமங் கண்டாய்" என்றதிறே. y (நந்தகோபன்) - பிள்ளையைக்கண்ட ப்ரீதியாலே ஆநந்த3த்தையுடையரென்று சொல்லுதல்; நாமதே4யமாதல். z இப்போது இவரைச் சொல்லுவானென்னென்னில்; உத்3தே3ஶ்ய வஸ்துவை $z_2$ நோக்கித் தருமவரென்னும் ப்ரீதியாலே. aB "நந்தகோபாலாவெழுந்திராய்" என்று எழுப்பிக் கார்யங்கொள்ளலாம்படியிறே இவர்களுக்கு அவர் விதே4யராயிருக்கும்படி. b (குமரன்) c 'வெண்ணெய்

---

பெ. அ. தேஜிஷ்ட2மாம்படி சாணைபிடித்து என்றபடி. u 'கூர்வேல்தொழிலன்' என்ன அமைந்திருக்க, 'கொடும்' என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (தொட்டில் இத்யாதி3) $u_2$ (உதிரக்கையர்) என்றது அவற்றை ஹிம்ஸிக்கையாலே வேல்வழியே வந்த ரக்தத்தைக் கையிலேயுடையவரென்கை. v அந்யாபதே3ஶத்தில் பிள்ளைகளிடத்தில் பரிவாலே கொடுந்தொழிலனானென்று அர்த்த2ம் அருளிச்செய்கிறர் என்கையாலே, ஸ்வாபதே3ஶத்திலும் ப4க3வத்2விரோதி4 விஷயத்திலே இப்படி கொடுந்தொழிலனாயிருக்கை ப2லிக்கையால், அதில் ஹிம்ஸை நிஷித்3த4மன்றோவென்று வரும் ஶங்கையைப் பரிஹரிக்கிறர் (ந ஹிம்ஸ்யாதி3த்யாதி3) $v_2$ (விஶேஷத்தில் வாராது) என்றது விஹிதமான பஶ்வாலம்ப4நத்தை நிஷேதி4யாதென்கை. $v_3$ ஆகில் இதுக்கு நிஷேத்4யந்தான் ஏதென்ன அருளிச்செய்கிறர் (ஸ்வார்த்த2மாக இத்யாதி3) w அக்3நீஷோமீயஹிம்ஸையைப்போலே ப4க3வத்3விரோதி4ஹிம்ஸை விஹிதமான த4ர்மமோ? என்ன அருளிச்செய்கிறர் (அத்தலைக்கு இத்யாதி3) x (பொறுப்பரியனகள்) - து3ஸ்ஸஹங்கள்; $x_2$ கருமங்கண்டாய் - கர்த்தவ்யங்கிடாய் என்றபடி. z க்ருஷ்ணன்பக்கல் பரிவாலே நந்த3கோ3பர் கூர்வேல் கொடுந்தொழிலனாகிலும் பெண்கள் இப்போது அத்தையிட்டு விஶேஷித்து அவரைச் சொல்லுகைக்குக் காரணம் ஏதென்னும் ப்ரஶ்நத்தை அநுவதி3த்து உத்தரம் அருளிச்செய்கிறர் (இப்போது இத்யாதி3) $z_2$ (நோக்கித்தருவர்) என்றது ரக்ஷித்துத்தருவர் என்றபடி. பெரியாழ்வாரைப்போலே நந்த3கோ3பரும் பரிவராய் நோக்கித் தருவராகையாலே பெரியாழ்வார் பெண்பிள்ளைதானே கோ3பிமார் ப்ரசுரத்தாலே பேசுகையால் அவரிடத்தில் ப்ரீதியுண்டென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம். a "கூர்வேல் கொடுந்தொழிலனுடைய குமரன் எனனுதே 'நந்தகோபன்' என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறர் (நந்தகோபாலா இத்யாதி3) b,c 'நந்தகோபனிளஞ்சிங்கம்' என்னுதே, 'குமரன்' என்றத்தாலே சிறுபிள்ளையாய்,

---

சி. அ. $u_2$ (உதிரக்கையரானர்) என்றது - ஹிம்ஸிப்பர் என்றபடி. v 'ஹிம்ஸைபண்ணலாமோவென்ன அருளிச்செய்கிறர் (ந ஹிம்ஸ்யாதி3த்யாதி3) z,z (இப்போதிவரைச் சொல்லுவானென்? என்னில்) க்ருஷ்ணனை ரக்ஷிக்கிறவராகையாலே யென்னுதல், எழுப்பிக்கார்யம் கொள்ளலாம்படி புருஷகாரமாகையாலே என்னுதல். d நந்தகோபன் கோபிக்குமோவென்ன

---

கு. அ. y நந்த3கோ3பரைச் சொன்னதற்கு இரண்டு தாத்பர்யம்.

---

A திருமாலை-8. B திருப்பாவை-17.

களவுகண்டான், பெண்களைக் களவு கண்டான், ஊரை மூலையடியாக்கினன்' என்று எல்லோரும் வந்து முறைப்பட்டால், 'என் கண்வட்டத்திலே வந்து தோற்றின ளாகில் நியமிக்கக்கடவேன்' என்று பெரிய உத்₃யோக₃த்தோடேயிருந்தால், அவன் முன்பு தோற்றும்போது ஸவிநயமாகத் தோற்றுகையாலே 'கெட்டேன்! இவனையோ இங்ஙனே பழியிட்டது!' என்று அவர்களையே பொடியும்படியாயிருக்கை. d யசோதைப்பிராட்டி பொடியும்போதும் $d_2$ A 'உந்தமடிகள் முனிவர்' என்றன்றே பொடிவது. eB ''படிறுபலசெய்து இப்பாடியெங்குந் திரியாமே கொடியேனென் பிள்ளையைப்போக்கினேன்'' என்றிறே இவள் இருப்பது.

f (ஏரார்ந்தகண்ணி யசோதை) g யஶோதைப்பிராட்டி கண்ணிலே அழகு குடிகொண்டாய்த்திருப்பது. h பிள்ளையை மாறாதே பார்த்துக்கொண்டிருக்கையாலே $h_2$ அவ்வாசியடையக் கண்ணிலே தோற்றும்படியாயிருக்கை. C ''அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும்.... தொழுகையும் இவை கண்ட'' கண்ணிறே. iD ''அம்பன்ன கண்ணாளசோதை'' என்னக்கடவதிறே. (யசோதை) E''யசோதாய் அறிவுறாய்'' என்று எழுப்பிக் கார்யங்கொள்ளலாம்படியிறே இவர்கள் திறத்தில் அவள் அநுகூலித்திருக்கும்படி.

(இளஞ்சிங்கம்) ஶ்ரீநந்த₃கோ₃பர் ஹிதகாமராகையாலே அங்கு விநயந் தோற்ற நின்றபடியைச் சொல்லிற்று; இவள் ப்ரியமே நடத்துமவளாகையாலே, j செருக்கும் k மேனாணிப்பும் தோற்ற நின்ற நிலையைச் சொல்லுகிறது. lF அஞ்ச $l_1$ உரப்பாளசோதை $l_2$ ஆணாட விட்டிட்டிருக்கும்'' என்று இவன் செய்ததெல்லாம்

---

பெ. அ.—அத்தாலே ப₄வ்யதை தோன்றுகையாலே ப₂லிதார்த்த₂த்தை அருளிச்செய்கிறார் (வெண்ணெய் இத்யாதி₃) d, e நந்த₃கோ₃பன் பக்கலிலே போய் ஊரார் முறைப்படும்படி பெற்றதாய் தீப்புகண்டு முனியாதே விட்டிருக்குமோ? என்ன அருளிச்செய்கிறார் (யஶோதை₃ இத்யாதி₃ வாக்யத்₃வயத்தாலே).

f, g ''ஏர்'' என்று அழகாய், ''ஆர்தல்'' பூர்த்தியாய், அத்தாலே ப₂லிதத்தை அருளிச்செய்கிறார் (யசோதைப்பிராட்டி இத்யாதி₃) f, h ''யசோதையிளஞ்சிங்கம்'' என்ற ஸந்₃ச்சேர்த்தியைத் திருவுள்ளம்பற்றி அழகுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (பிள்ளையை இத்யாதி₃) $h_2$ (அவ்வாசி) என்றது ஹர்ஷவிஶேஷம். i (அம்பன்ன) என்றது அம்புதைத்து ஈடுபடுத்துமாபோலே அழகாலே ஈடுபடுத்துகையாலே அம்புபோன்ற என்றபடி.

---

கி. அ. அருளிச்செய்கிறார் (யஶோதைப்பிராட்டி பொடியும்போதுமித்யாதி₃) eA 'உந்தமடிகள்' என்று யஶோதை கோபிக்கவில்லையோவென்ன (படிறுபலவித்யாதி₃) b குமரன்-சிறுபிள்ளை.

f (ஏரார்ந்தகண்ணியித்யாதி₃) ஏரென்று-அழகு; f, g, h ஆர்தல் மிகுதியாய், அழகின் மிகுதிக்கு ஹேதுவென்? என்ன? ஸ்வாப₄ாவிகம் வா, க்ருஷ்ணத₃ர்ஶநாத்₃வா; இவ்விரண்டையுமடைவே அருளிச் செய்கிறார் (யஶோதைப் பிராட்டி கண்ணிலே இத்யாதி₃ வாக்யத்₃வயத்தாலே) i அவனுடைய தெ₄ளர்த்யாதி₃கள் பார்க்கும் என்னுமதுக்கு ப்ரமாணம் (அம்பன்ன) என்று; அம்பன்ன - அம்பு தைத்து ஈடுபடுத்துமாபோலே அழகாலே ஈடுபடுத்துகை.

---

கு. அ.—eA ''உந்தமடிகள்'' என்கிறதென்? யஶோதைப்பிராட்டி கோபிக்கவில்லையோ? என்ன (படிறுபலசெய்தித்யாதி₃) f ''ஏரார்ந்த'' என்றது அழகு இரண்டுவிதமாதல், ஒன்றே என்னுதல்.

---

A பெரிய-திரு 10-4-8. B பெரியாழ்-திரு 3-2-6. C பெரு-திரு-7-8. D பெரிய-திரு-6-8-6. E திருப்பாவை-17. F நாச்-திரு-3-9.

உத்$_3$தே$_3$ஶ்யமாகவிறே இவள் நினைத்திருப்பது. m ஆரேனும் வந்து முறைப்பட்டால் (அஞ்சவுரப்பாள்) இவன் தீம்பிலே n தகணேறும்படியாகவாய்த்து உரப்புவது. o (இளஞ்சிங்கம்) p சிறுமியர்க்கு ஒத்தபருவமா யிருக்கை. q ‘சிங்கக்குருகு’ என்று ப$_4$ட்டர் அருளிச்செய்வர்.

r (கார்மேனி) s நம்முடைய ஸகலதாபங்களும் ஆறும்படியான வடிவு A ‘‘தூநீர் முகில்போல் தோன்றாய்’’ என்று ப்ரார்த்தி$_3$த்த வஸ்துவிறே இவர்களுக்கு $s_2$ ப்ரத்யக்ஷித்து நிற்கிறது. t மாதாபிதாக்கள் தங்களை மறைத்து வைத்தாலும் விடவொண்ணாத வடிவழகு.

u (செய்கண்) v அத்திருமேனிக்குப் பரபா$_4$க$_3$மான சிவப்பையுடைய திருக்கண்கள், w அகவாயில் வாத்ஸல்யமடையத் திருக்கண்களிலே தோற்றும்படியாயிருக்கை. x ஐஶ்வர்யத்தாலும் குதறியிருக்குமிறே, y வடிவாலே அணைத்துக் கண்ணாலே குளிரநோக்குகையிலேயிறே கருத்து.

z (கதிர்மதியம் போல் முகத்தான்) a ப்ரதாபத்துக்கும் குளிர்ச்சிக்கும் ஆதி$_3$த்யனுடைய $a_2$ புகரை ஊட்டின சந்த்$_3$ரனைப் போலேயாய்த்துத் திருமுகம் இருக்கும்படி. b ப்ரதிகூலர்க்கு அநபி$_4$ப$_4$வநீயனாய், அநுகூலர்க்குக் கிட்டிநின்று

---

பெ. அ. j (செருக்கு) என்றது ‘‘இளம்’’ என்ற பத$_3$த்தாலே லப்$_4$யமான ஹர்ஷாதிஶயம்; k (மேனாணிப்பு) என்றது சிங்கபத$_3$த்தாலே தோற்றுகிற தேஜோ விஶேஷம். l ‘‘ப்ரியமே நடத்துமவள்’’ என்றதுக்கு ப்ரமாணம் அருளிச்செய்கிறார் (அஞ்ச இத்யாதி$_3$) $l_2$B உரப்பான்—அதட்டாள். $i_3$B ஆணாட-ஆண்பிள்ளைத்தனங் கொண்டாட, l, m, n எடுத்த பாசுரத்துக்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (ஆரேனும் இத்யாதி$_3$ வாக்யத்தாலே) n (தகணேறும்படியாக) என்றது முற்றும்படியாக என்றபடி. o, p ‘‘இளஞ்சிங்கம்’’ என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (சிறுமியர்க்கு இத்யாதி$_3$) q இளமையையுடையவனைச் ஸிம்ஹம் போன்றவனென்று தோன்றுமைக்காக ஸம்வாத$_3$ முகே$_2$ந ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் அருளிச் செய்கிறார் (சிங்கக்குருகு இத்யாதி$_3$) குருகு-குட்டி.

$s_2$ (ப்ரத்யக்ஷித்து) என்றது ப்ரத்யக்ஷமாய் என்றபடி. r, s, t ‘‘கார்’’ என்றதுக்கு மேக$_4$ம் அர்த்த$_2$மாய் அதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்து, அழகு என்று ஶப்$_3$த$_3$ார்த்த$_2$மாய்த் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (மாதாபிதாக்கள் இத்யாதி$_3$)

u, v ‘‘செங்கண்’’ என்றதுக்கு ஸ்வாபா$_4$விகமான சிவப்பு ஶப்$_3$த$_3$ார்த்த$_2$மாய் ‘‘கார்மேனி’’ என்ற பத$_3$ஸமபி$_4$வ்யாஹார தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அத்திருமேனிக்கு இத்யாதி$_3$) w தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அகவாயில் இத்யாதி$_3$) x மூன்றாம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஐஶ்வர்யத்தாலும் இத்யாதி$_3$) r, u, y இவர்கள் இப்போது ‘‘கார்மேனி’’ என்றும் ‘‘செங்கண்’’ என்றும் அநுஸந்தி$_4$த்ததுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (வடிவாலே இத்யாதி$_3$)

---

சி. அ. l, m, nB ‘‘அஞ்சவுரப்பாள்’’ என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆரேனும் இத்யாதி$_3$) l ‘‘அஞ்ச உரப்பாள்’’ என்கையாலே வ்யதிரேகத்தாலே தீம்பிலே அதிஶயிக்கும்படி உரப்பும் என்று கருத்து. q (குருகு) குட்டி.

r, s, t ‘‘கார்’’ மேக$_4$மும், அழகும், u, v, w, x ‘‘செங்கண்’’ என்றதுக்கு மூன்று தாத்பர்யம், அன்றிக்கே இரண்டு தாத்பர்யமாய், முந்தினது ஶப்$_3$த$_3$ார்த்த$_2$மாகவுமாம். z, a, b, d ‘‘கதிர்மதியம்’’ என்றதுக்கு மூன்று தாத்பர்யம்; c முந்தினதிலே ப்ரமா

---

கு. அ. q (ப$_4$ட்டர்சிங்கக்குருகு) என்றது ஸம்வாத$_3$ம். u, w, x (செங்கண்) என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்.

---

A திருவாய் 8—5—3. B நாச்-திரு 3-9

அநுப4விக்கலாம்படியிருக்கை. c 1. ''தத்ர கோ3விந்த3மாஸீநம் $c_2$ ப்ரஸந்நாதி3த்ய வர்ச்சஸம்'' என்னக்கடவதிறே. (கதிர்மதியம் போல் முகத்தான்) d ப்ரகாஶக முமாய் ஆஹ்லாத3கரமுமான முக2த்தையுடையவனென்னவுமாம், e (முகத்தான்) f அவ்வளவிலும் உபமாநம் $f_2$ நேர்நிற்கமாட்டாமையாலே $f_3$ உபமேயந்தன்னையே சொல்லுகிறது.

g (நாராயணனே) h கோ3வர்த்த4நோத்3த4ரணாதி3 அதிமாநுஷ சேஷ்டிதங்களாலே ஸர்வேஶ்வரத்வம் பெண்களுக்கும் தெரியும்படியாயிறே இவ்வவதாரந்தானிருப்பது. i தே3வதாந்தரங்களையறியாத கோ3பவ்ருத்3த4ர்கள் நோன்புக்கு அங்க3மாக ஜபிக்கும் மந்த்ரமாக $i_2$ உபதே3ஶிக்கையாலே சொல்லுகிறார்களென்னவுமாம், j இன்னமும், தன்னுடைய $j_2$ தமப்பன்மார் சொல்லவும் கேட்டிருக்குமிறே; k A ''நன்மை தீமைகளொன்றுமறியேன் நாரணனென்னுமித்தனையல்லால்'' என்றும், B '' நான் கண்டு கொண்டேன் நாராயணாவென்னும் நாமம்'' என்றும், C ''திண்ணம் நாரணம்'' என்றும், D ''நாரணனை $k_2$ நன்கறிந்தேன்'' என்றும்.

---

பெ. அ.-$a_2$ (புகரை யூட்டின) என்றது தேஜஸ்ஸை ஏறிட்ட என்றபடி. b, c ப்ரதிகூலர்க்குக்கிட்ட அரியனாய் அனுகூலர்க்குஎளியனானமைக்குப்ரமாணம் அருளிச்செய்கிறார் (தத்ரேத்யாதி3), $c_2$ 1. 'ப்ரஸந்ந' என்றது சந்த்3ரனுடைய தெளிவையுடைய என்றபடி. 2. ''ப்ரஸாத்3ஸ்து ப்ரஸந்நதா'' என்று சந்த்3ரனுடைய தெளிவைச் சொல்லிற்றிறே. 7, a, d ''கதிர்'' என்று ஸூர்யகிரணங்களாய் அத்தையுடைய சந்த்3ரனைப்போலே என்று அபூ4தோபமையாக்கி அத்தாலே ப2லிதத்தையும் அருளிச்செய்து, ''கதிர்'' என்று ஸூர்யனாய் ''மதி'' என்று சந்த்3ரனாய், அவர்களைப்போலேயென்று பத3ார்த்த2மாய், அத்தாலே தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ப்ரகாஶகமும் இத்யாதி3) e, f திருமுகமண்டலத்தைக் கதிர்மதியாகவே விவக்ஷித்து, கதிர்மதியுடையவனென்று அருளிச்செய்யாமல், உபமாநந்தன்னிலும் பே4த3ந்தோற்ற ''முகத்தான்'' என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவ்வளவிலும் இத்யாதி3) f அவ்வளவிலும்—உபமானத்தைச் சொன்னவளவிலும். $f_2$ (நேர் நிற்கமாட்டாமையாலே) என்றது பூர்ணஸத்3ருஶமாக மாட்டாமையாலே என்றபடி. $f_3$ (உபமேயந்தன்னையே சொல்லுகிறது) என்றதுக்கு உபமாநத்தையிட்டு மறைத்துச் சொல்லாமல் உபமேயத்தைத் தானே ஸ்பஷ்டமாகச் சொல்லுகிறதென்று கருத்து.

g, h, i, j இடைப்பெண்கள் க்ருஷ்ணனை ஸர்வேஶ்வரனென்று அறிய ஸம்பா4வனையில்லாமையாலே இப்படி ஸம்போ3தி4க்கக் கூடுமோ? என்ன, அதுக்குப்பரிஹாரம் மூன்று வகையாக அருளிச்செய்கிறார் (கோ3வர்த்த4நேத்யாதி3 வாக்யத்ரயத்தாலே) $i_2$ (உபதே3ஶிக்

---

சி. அ. ணம்(தத்ர கோ3விந்த3மித்யாதி3) b, c 1. ''ப்ரஸந்ந'' என்கையாலே அநுகூலர்க்குக் கிட்டலாயிருக்கும். 1. ''ஆதி3த்யவர்ச்சஸம்'' என்கையாலே ப்ரதிகூலர்களுக்கு அநபி4ப4வநீயனாயிருக்கும். d ''கதிர்'' என்கிற ஶப்3த3த்தாலே ப்ரகாஶத்தைச் சொல்லி, அநுகூலர்க்கு ப்ரகாஶகரமுமாய், ஆஹ்லாத3கரமுமாயிருக்கு மென்னுதல், a, b அன்றிக்கே (ப்ரதிகூலர்க்கு) என்கிற வாக்யம் முந்தின வாக்யத்துக்கு விவரணத்வேந ப2லிதார்த்த2மாய், அதிலே ப்ரமாணமாகவுமாம். அப்போது தாத்பர்யமிரண்டு. g, h, i, j க்ருஷ்ணனை நாராயணனென்று சிறு பெண்களறிந்தபடியென்? என்ன அருளிச்செய்கிறார் (கோ3வர்த்த4நோத்3த4ரணாதி3) என்று. $j_2$ (தமப்பன்மார்) ஆழ்வார்கள். k அவர்கள் அப்படி அருளிச்செய்வார்களோ?

---

கு.அ: g,h சிறுபெண்கள் நாராயணன் என்று அறிந்தபடி என்? என்ன (கோ3வர்த்த4நோத்3த4ரணம் இத்யாதி3).

---

A பெரியாழ்-திரு 5—1— 3, B பெரிய-திரு 1-1-1, C திருவாய் 10-5-1, D நான். திருவ 96.

l இவ்வர்த்த2த்திலே ரிஷிகளும் 1. "நாராயண ஶப்3த3மாத்ரம்" என்றும், 2. "ஏஷ நாராயண:ஶ்ரீமாந்" என்றும்; ஶ்ருதியும் 3. "நாராயண பரம்ப்3ரஹ்ம" என்றும் பலவிடத்திலும் l2 சொல்லிற்று. m (நாராயணனே நமக்கே பறை தருவான்) n ஸர்வஸ்வாமியானவனே நம்முடைய அபேக்ஷித ஸம்வித4நம் பண்ணுவான். o இத்தலை இசையாதவன்றும் தான் விட மாட்டாத வாத்ஸல்யம். அவத3ரணத்துக்குக் p கருத்து - q ஸமிதை4 பாதி ஸாவித்ரி பாதியன்றிக்கே தானே சென்று தலைக்கட்டவல்லனென்கிற ஸாத4ந நைரபேக்ஷ்யம் சொல்லுகையிலே நோக்கு. r நாராயணத்வம் ஸர்வஸாத4ரண மன்றோவென்னில்: s (நமக்கே) t "அத்தலையாலே பேறு" என்றிருக்கிற நமக்கு என்றபடி; u அகிஞ்சநராய் அவன் கைபார்த்திருக்கிற நமக்கே என்றுமாம்.

---

பெ. அ. கையாலே சொல்லுகிறார்களென்னவுமாம்) என்றதுக்கு கோ3பவ்ருத்3த4ர் "நாராயண னென்று உபதே3சிக்கும் மந்த்ரப்ரதிபாத்3யன் க்ருஷ்ணனே" என்றுசொல்லுகையாலே "நாரா யணனே" என்கிறார்களென்று கருத்து. கோ3பவ்ருத்3த4ர்க்கு க்ருஷ்ணன்பக்கல் பரத்வஜ்ஞா நாஜ்ஞாநங்கள் கலந்திருக்குமென்றது ப்ரமாணஸித்3த4மிறே. j2 (தமப்பன்மார் சொல்லவும்) என்றது க்ருஷ்ணனை ஸர்வேஶ்வரனென்று சொல்லவும் என்றபடி. k, l2 க்ருஷ்ணன் ஸர்வேஶ் வரனேயாகிலும், திருநாமங்கள் மற்றும் பலவுமுண்டாயிருக்க இத்திருநாமத்தை அருளிச்செய் கைக்கு ஆழ்வார் முதலானோர் ஆத3ரித்த தென்னுமத்தை நியாமகமாகக் காட்டுகிறார் (நன்மை என்றுதொடங்கி, சொல்லிற்று என்னுமளவும்) k2 (நன்கறிந்தேன் என்றும்) என்ற அநந்தரம் "ஆழ்வார்கள் அருளிச் செய்தார்கள்" என்று கூட்டிக்கொள்வது.

m, n, o நாராயண ஶப்3த3த்துக்குத் தத்புருஷ ப3ஹுவ்ரீஹ்யர்த்த2ங்களை உட் கொண்டு, க்ரமேண ஶப்3தா3ர்த்த2ம் அருளிச்செய்கிறார் (ஸர்வ ஸ்வாமி இத்யாதி3 வாக்யத் தாலே) o ப3ஹுவ்ரீஹ்யர்த்த2மான அந்தர்யாமித்வத்துக்கு வாத்ஸல்யம் ஹேது வென்று கண்டுகொள்வது, p (கருத்து) என்ற அநந்தரம் "என்னென்னில்" என்று ஶேஷம். q ப்3ரஹ்மசாரிகளுக்கு ஆயிரம் ஸமிதை4யும் ஆயிரம் ஸாவித்ரியுமாகக் கூட்டி ஒரு ப்ரத்ய வாயபரிஹாராதி3யான ப2லத்தையுண்டாக்குமாபோலேயன்றிக்கே நிரபேக்ஷனுக்கவே ப2லத்தைக்கொடுக்குமென்று அருளிச்செய்கிறார் (ஸமிதை4 இத்யாதி3) m, r "நமக்கே" என்று நிரபேக்ஷனுகப் ப2லங்கொடுக்குமென்று நிஶ்சயிக்கக் கூடுமோ? நாராயணத்வம் ஸர்வஸாத4ரணமன்றோ? என்னும் ஶங்கையை அநுவதி3க்கிறார் (நாராயணத்வம் இத்யாதி3) s, t அவனாலேதானே பேறு. வேறுரக்ஷகராரேனுமல்லவென்று அநந்யக3திகளாயிருக்கும் நமக்கே என்று ஶப்3தா3ர்த்த2ம் திருவுள்ளம்பற்றி ப்ரஸ்துதஶங்கைக்குப் பரிஹாரம் அருளிச்செய்கிறார் (அத்தலை இத்யாதி3) u உபாயாந்தரஶூந்யரென்று ஶப்3தா3ர்த்த2ம் திருவுள் ளம் பற்றி, பரிஹாராந்தரம் அருளிச்செய்கிறார் (அகிஞ்சநர் இத்யாதி3) t யத்3வா, ஶக்தியுண்டா யிருக்க ஸ்வரூபவிருத்3த4மென்று உபாயாந்தர ஶூந்யரான நமக்கே என்று (அத்தலை யாலே) என்ற வாக்யத்துக்குக் கருத்து. u ஶக்தியின்றிக்கே அவன்கைபார்த்திருக்கிற

---

சி. அ. என்ன அருளிச்செய்கிறார் (நன்மைதீமைகள்) என்று. m, n, o 'நாராயணன்' என் றதுக்கு, தத்புருஷ ப3ஹுவ்ரீஹி வ்யுத்பத்திஸித்3த4மான அர்த்த2த்3வயத்தையும் அருளிச் செய்கிறார் (ஸர்வஸ்வாமியானவனே) என்கிற வாக்யத்தாலே. t, u நமக்கே ஶக்தியுண்டாய் அவன் கைபார்த்திருத்தல், ஶக்தியின்றிக்கே அவன்கை பார்த்திருத்தல் ஆகிஞ்சந்யமும் அநந்யக3தித்வமும். t (அத்தலையாலேபேறு) என்றது அநந்யஸாத்4யமாகையாலே. u (அகிஞ்சநராய்) என்றது ஸ்வபாரதந்த்ர்யத்தாலே.

---

கு. அ. m, n, o 'நாராயணன்' என்றது ஸ்வாமி என்னுதல், வத்ஸலன் என்னுதல்; s, t, u (நமக்கு) என்றது ஆகிஞ்சன்யமாதல், அநந்யக3தித்வமாதல்.

தீருகைக்காகவிறே நித்யஸூரிகள் இங்கேவந்து அநுப4விக்கிறது. அவதாரத்தில் l நீர்மையிலே அகப்பட்டார்க்கும் மற்றேரிடம் பொருதபடியாயிருக்கும். m 1. "ப4ாவோ நாந்ய்த்ர க3ச்ச2தி" என்றுளிறே திருவடி. A "அச்சுவை பெறினும் வேண்டேன்" என்றுருமுண்டிறே. B "கண்ட கண்கள் மற்றென்றினைக் காணவே" என்றுரிறே. n அத2வா, மருபூ4மியில் தண்ணீர்போலே C இருள்தருமாஞாலமான n, ஸம்ஸாரத்திலேயிருந்துவைத்து க்ருஷ்ணனுப4வம் பண்ணி வாழப்பிறந்தீர்காள்! என்றுமாம். o (வாழ்வீர்காள்) p அவ்வூர்தன்னில் பிறந்துவைத்துப் பருவம் நிரம்பியிருக்கையன்றிக்கே, அவனுடைய கடாக்ஷத்துக்கு இலக்காம்படி ஒத்த பருவமாயிருக்கை. q க்ருஷ்ணவதாரத்துக்கு முன்னுதல் பின்னுதலன்றிக்கே ஸமகாலத்திலே பிறக்கப்பெறுவதாம்; r அதுதன்னிலும் இவ்வூரையொழிந்தவிடத்தேயன்றியே இவ்வூரிலே பிறக்கப்பெறுவதாம்; s அதுதன்னிலும் அவனோடொத்த பருவமாகப் பெறுவதாம்; t இது ஒரு ப4ாக்3யாதிஶயம் இருக்கும்படியென்! (வாழ்வீர்காள்) u அவ்வூரில் வர்த்தநமென்றும் வாழ்ச்சியென்றும் இரண்டில்லைகாணும்! v அவன் நித்யவாஸம் பண்ணுமிடத்தில் வர்த்தநமே வாழ்ச்சியாயிருக்குமிறே; w D "வேங்கடத்தைப்பதியாக வாழ்வீர்காள்" என்னக்கடவதிறே. x இது கோயிலில் வர்த்தநம்போலே காணும். சொல்லுகிற தங்களுக்கும் வாழ்ச்சி ஒத்திருக்க, "வாழ்வீர்காள்" என்று பிறரைச் சொல்லுகிறதென்? என்னில்: —

---

பெ.அ. னமையை உபபாதிக்கிருர் (த்3யநீயர் இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே.) k இவ்விடத்தில் வாழ்ச்சி விஞ்சியிருக்குமென்றதுக்கு நியாமகங்களைப் பலபடியாகக் காட்டுகிருர் (அக்குறை இத்யாதி3) l (நீர்மையிலே) என்றது - த3யாதி3கு3ணங்களுக்கும் உபலக்ஷணம். j, m ஆதி3 ஶப்3த3த்தாலே விவக்ஷித்த கு3ணத்தை அருளிச்செய்கிருர் (ப4ாவ இத்யாதி, 1. "ப4க்திஸ்ச நியதா வீர" என்றுனிறே என்று கருத்து. n "வையத்துக்கு உண்டான ப4க3வத்3நுப4வ விரோதி4த்வத்தைத் திருவுள்ளம் பற்றி, 'வையத்து' என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிருர் (அத2வா இத்யாதி3) o "வையத்திலுள்ளீர்" என்னுதே "வாழ்வீர்" என்கைக்குத் தாத்பர்யத்தை "சிறுமீர்காள்" (1) என்றதுக்கு அநுகு3ணமாக அருளிச்செய்கிருர் (அவ்வூர் இத்யாதி3) q, r, s, t, உக்தார்த2ங்களை வ்யாவ்ருத்திபூர்வகம் அநுஸந்தி4யாநின்றுகொண்டு வ்யாக்2யாதா ஈடுபடுகிருர் (க்ருஷ்ணவதாரத்துக்கு இத்யாதி3 வாக்யசதுஷ்டயத்தாலே) u, v, w, x ஒத்தபருவமாய்

---

சி.அ. n மூன்றுவது-லீலாவிபூ4திக்கு உபலக்ஷணம். g "ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்" (1) என்று திருவாய்ப்பாடியிலே க்ருஷ்ணனுய் வந்தவதரித்துத் தன்னைத்தாழவிட்டுப்பரிமாறுகிற காலத்திலே வாழப்பிறந்த ப4ாக்2யவதிகாள் என்னுதல். n மருபூ4மியில் தண்ணீர்போலே C இருள்தருமாஞாலமான ஸம்ஸாரத்திலேயிருந்து க்ருஷ்ணநுப4வம்பண்ணி வாழ்வீர்காள்; என்னுதல்; q, r, s, t எல்லாவற்றுலும் ப2லிதமானத்தை அருளிச்செய்கிருர் (க்ருஷ்ணவதாரத்துக்கு இத்யாதி3) f2, g, p வாழ்ச்சி வாழ்வுதானேயாதல்; u, v, w, x வர்த்தனமாதல், g, p வாழ்ச்சி சொன்ன பக்ஷத்திலே வாழ்ச்சியை இரண்டு ப்ரகாரமாகக் கொள்வது. x (இது

---

ரு.அ. "சீர்மல்கும்" என்றத்தைக் கடாக்ஷித்து. n மூன்றுவது ஶப்3த3ஸ்வப4ாவத்தாலே. g முந்தின அர்த்த2த்துக்கு "வையம்" என்று திருவாய்ப்பாடி மாத்ரத்திலே ஒதுக்கிக் கொள்வது. f2, g...x வாழ்ச்சிக்கு இரண்டு பொருள்; g, p வாழ்ச்சிதன்னையே என்னுதல்;

---

A திருமாலை 2. B அமலனுதி 10. C திருவாய் 10-6-1. D நாச்-திரு. 8-9.

தாங்கள் தனியே அநுப4விக்கும் அநுப4வம் ரஸாநுப4வமாய்த் தோற்றுமையாலே அத்தை ரஸமாக்கித் தருமவர்களைக் கொண்டாடுகிறார்கள்.

y (நாமும்), z ''அத்தலையாலே பேறு'' என்று இருக்கிற நாமும். a அவ னாலே பேறுகிலும் ருசி இருந்தவிடத்தில் இருக்கவொட்டாதிறே; b இந்தப் ப3லம் ஒருநாள்வரையிலே கைவந்ததாகவற்றே! என்று இருக்கிற நாமும் என்ன வுமாம். c (நம்பாவைக்கு) நம்முடைய நோன்புக்கு. d அவனையும் அவனுடை யாரையும் அழிக்கைக்குப் பண்ணும் இந்த்3ரஜித் த்3 ப்ரப்4ருதிகளுடைய யாக3ம் போலன்றியே, ததீ3யரும் அவனும் வாழுகைக்குப் பண்ணும் யாக3ம்; e ப்ரயோ ஜநாந்தரபரமான நோன்பன்றியே, க்ருஷ்ணனும் க்ருஷ்ணவிபூ4தியும் e2 உண்டா கைக்குப் பண்ணு-ிற நோன்பு.

(செய்யுங்கிரிசைகள்) f பண்ணக்கடவ க்ருத்யங்கள். g சேதநனுக்கையாலே, ப்ராப்யஸித்3தி4யளவும் காலக்ஷேபத்துக்காக இழிந்து அநுப4விக்கக்கடவ அநுஷ் டா2நமென்றபடி. h ஆரம்பி4த்துத் தவிருமவையல்ல; i பத்தும் பத்தாகச்செய்து

---

பெ.அ. பிறந்தவன், போ4க3த்துக்கு இலக்காமளவும் வேண்டாவிறே, அவன் பிறந்த ஊரிலி ருப்பே வாழ்ச்சியென்ன அமையுமென்று விவக்ஷித்துத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அவ்வூரில் இத்யாதி3 வாக்யசதுஷ்டயத்தாலே)

y ''நாமும்'' என்றதுக்கு இரண்டு அர்த்த2ம் — ''நாராயணனே நமக்கே பறைதரு வான்'' என்று உபாயாத்4யவஸாயத்தையுடைத்தான நாமும் என்றும், உபேயாத்4வஸாய விசிஷ்டர் என்றும்; z முந்தினது (அத்தலையாலே இத்யாதி3) a, b இரண்டாவது (அவனாலே இத்யாதி3 வாக்யத்3வயம்) c, d ''பாவைக்கு'' என்ன அமைந்திருக்க, ''நம்'' என்று விசே ஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவனையும் இத் யாதி3) d3 ப்ரப்4ருதிகளென் றது-பௌண்ட்3ரக வாஸுதே3வாதி3களைச் சொல்லுகிறது. அவனிறே க்ருஷ்ணனையும் த்3வா ரகையையும் நலிகைக்காக யாக3ம்பண்ணி க்ருத்யையைப் பிறப்பித்தான். e கீழே ''நம்'' என்றத்துக்கு - ப4க3வத்3விரோதி4 வ்யாவ்ருத்திபரமாக ஒரு யோஜநை அருளிச்செய்து, ப்ர யோஜநாந்தரபர வ்யாவ்ருத்திபரமாகத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ப்ரயோஜ நேத்யாதி3) e2 உண்டாகையானது—பெண்களையும் அவனையும் எழுப்பிக் கூட்டிப் பேரோ லக்கத்திலே இருத்திக் காண்கை. f, g ஸித்3த4 ஸாத4ந நிஷ்ட2னுக்குக் கர்த்தவ்யமுண்டோ வென்ன அருளிச்செய்கிறார் (சேதநனுகையாலே இத்யாதி3) h,i, j காலக்ஷேபார்த்த2மாகச் செய் கிறக்ரியைகளென்று கீழ் அருளிச்செய்து ''செய்யும்'' என்றதுக்கு-அவஶ்யம் செய்யத் தக்கதென்று விவக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஆரம்பி4த்து இத்யாதி3 வாக்யத்ர யத்தாலே)

---

சி.அ.கோயிலில் வர்த்தனம்போலே) என்ற இடத்தில் 'இது' என்று திருவாய்ப்பாடியைச் சொல்லுகிறது. c,d,e ''நம்பாவை'' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம் வாக்யங்களிலே கண்டு கொள்வது. f,g ஸித்3தோ4பாய நிஷ்ட2ருக்குச் செய்யத்தக்க வ்யாபாரமொன்றுமில்லையிறே; ஆயிருக்கச் செய்தேயும் ''கிரிசைகள்'' என்கிறதென்? என்ன அருளிச்செய்கிறார் (சேதன னுகையாலே இத்யாதி3) h ''செய்யும்'' என்கிற வர்த்தமாநார்த்த2ம் (ஆரம்பி4த்துத்தவிரும்

---

ரு.அ. u,v,w,x, வர்த்தனம் என்னுதல், g, p வாழ்ச்சி சொன்னபக்ஷத்தில் வாழ்ச்சி இரண்டுப்ர காரமாகக் கண்டு கொள்வது. c,d.e ''நம்பாவை'' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்; முந்தின வதில்-ஶத்ருக்கள் செய்கிற ஆபி4சாரிக வ்யாவ்ருத்தி. h, i, j வர்த்தமானத்துக்குத் தாத்பர்யம் (ஆரம்பி4த்துத்தவிருமவையல்ல இத்யாதி3)

அறவேணும்; j மடல்போலக் காட்டிவிடுமதல்ல. k (கேளீரோ) l " 'பெண்கள் கிடாய், க்ருஷ்ணன்கிடாய்' என்று நிஷேதிக்கிற ஊரிலே l, இங்ஙனே ஒருசேர்த்தி யுண்டாவதே! l, பகவத் விமுகர் கோலாஹலத்திலே க்ருஷ்ணனுபவத்துக்கு இத்தனைபேருண்டாவதே!" என்று அவர்கள் இந்த லாபாநுஸந்தாநத்தாலே ஸ்தப்தைகளாயிருக்கையாலே "கேளீரோ" என்கிருர்கள். m மேய்ச்சல் தலையிலே அசையிடுவாருண்டோ? இந்த நாலுநாளும் போனல் நம்மை ஒருவரை யொருவர் சேரவொட்டுவர்களோ? (கேளீரோ) n 1. "ஸம்ஶ்ரவே மதுரம் வாக்யம்" என்னும் படியே ஶ்ரவணந்தானே ப்ரயோஜநமாயிருக்கிறபடி. o 2. " புருஷார்த்தோऽய-மேவைக: யத் கதாஶ்ரவணம் ஹரே:" என்ருனிறே. p சொல்லுகிறவர்கள்தான், ஆசார்யபதம் நிர்வஹிக்கைக்காகச் சொல்லுகிருர்களல்லர்; q கேட்கிறவர்கள் தங்களுக்கு அஜ்ஞாதமாய்க் கேட்கிறவர்களல்லர். r 3. "போதயந்த: பரஸ்பரம்" என்று இங்ஙனேயல்லது போதுபோகாமலிருந்தபடி.

---

பெ.அ. k, l "வாழ்வீர்காள்!" என்று ஸம்போதித்து, "செய்யும் கிரிசைகள்" என்ன அமைந்திருக்க, "கேளீரோ" என்றதுக்குக் கருத்து அருளிச்செய்கிருர் (பெண்கள் கிடாய் இத்யாதி3) "க்ருஷ்ணனோட்டைச் சேர்த்தி தங்களுக்கு உண்டாவதே!" என்றும் "க்ருஷ்ணநுபவத்துக்கு இத்தனைபேர் துணையுண்டாவதே!" என்றும் பரவசைகளாயிருக்கையாலே கேளீரோ என்கிருர்களென்று கருத்து. m "கேளீரோ" என்றதுக்கு ஹார்த்தபாவத்தை அருளிச்செய்கிருர் (மேய்ச்சல்தலையிலே இத்யாதி3) மேய்ச்சல்தலை என்றது-க்ருஷ்ணஸம்ஶ்லேஷம் பண்ணும் காலம். n ஆசையுடனே ஸ்தப்3தை4களாயிருக்க, "கேளீரோ" என்கிறதென்று கீழ் ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, அங்ஙனன்றிக்கே 'பரமனடிபாடுகை' முதலானவை தங்களுக்கு ரஸ்யமாகையாலே "கேளீரோ" என்கிறதென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிருர் (ஸம்ஶ்ரவ இத்யாதி3) o ஸம்வாதா3ந்தரம் அருளிச்செய்கிருர் (புருஷார்த்த2 இத்யாதி3) அதாவது-மஹாபா4ரதத்திலே ஸபாதலக்ஷக்ரந்தத்தாலும் த4ர்மார்த்த2 காம மோக்ஷங்களைச் சொல்லி, அவற்றில் எது புருஷார்த்த2மென்றிருந்தாய்? என்று வைஶம்பாயநப4க3வான் தன் ஶிஷ்யனான ஜநமேஜயனைக் கேட்க, "நீ ப4க3வத்3கு3ணங்களைச் சொல்ல நான் கேட்கை இது ஒன்றுமே புருஷார்த்த2மாக நினைத்திருந்தேன்" என்ருனென்கை. p,q,r ப4க3வத்3கு3ணஜ்ஞராயிருப்பவர்களை, அஜ்ஞர்க்கு உபதேஶிக்கிறப்போலே "கேளீரோ" என்று உபதேஶிக்கக்

---

சி.அ. இத்யாதி3) k, l அந்யபரராயிருக்கிறவர்களைச் சொல்லுமாபோலே "கேளீரோ" என்பானென்? என்ன அருளிச்செய்கிருர் (பெண்கள்கிடாய் இத்யாதி3) l2 (இங்ஙனே ஒரு சேர்த்தியுண்டாவதே) என்று அந்யாபதே2ஶம். l3 (ப4க3வத்3விமுக2ர் கோலாஹலத்திலே) என்றும், n (ஸம்ஶ்ரவே மது4ரம் வாக்யம்) இத்யாதி3யும் ஸ்வாபதே3ஶம். p முன்னே ப4க3வத3னுப4வத்தால் ஸ்தப்3த4ராயிருக்கிறவர்களை "கேளீரோ" என்கிறதென்? என்ன அருளிச்செய்கிருர் (சொல்லுகிறவர்கள்தான் இத்யாதி3) k "கேளீரோ" இத்யத்ர 4. "கோநு நாம ஹரேர் விஷ்ணோ: தேவதேவஸ்ய சக்ரிண:| ஶ்ருண்வந் ஸ்மரந் வா கத2யந் த்ருப்திம் யாதி தி3வாநிஶம் ||" 2. "புருஷார்த்தோ2யமேவைகோ யத் கத2ாஶ்ரவணம் ஹரே;" இத்யாத்3யநுஸந்தேயம். s (எங்களுக்கேதானல் நல்லது) என்றதுக்குத் தாத்பர்யம் "நாங்

---

கு.அ. k, l அந்யபரராயிருக்கிறவர்களைச் சொல்லுமாபோலே "கேளீரோ" என்கிறதென்? என்ன (பெண்கள் கிடாய் க்ருஷ்ணன் கிடாய் இத்யாதி3) l3 ஸ்வாபதே3ஶத்திலே தாத்பர்யாந்தரமருளிச்செய்கிருர் (ப4க3வத்3விஷயவிமுக2ர் கோலாஹலேத்யாதி3) n "ஸம்ஶ்ரவே மது4ரம் வாக்யம் வைதே3ஹ்யா வ்யாஜஹார" என்கிறது ஸ்வாபதே3ஶத்தில் தாத்பர்யம்.

s ''எங்களுக்கு ஏதானுல் நல்லது, ஆகில் சொல்லலாகாதோ?'' என்ன ? மேல் சொல்லுகிறுர்கள் — t (பாற்கடலுள் பையத்துயின்ற) u பரமபத₃த்தில்நின்றும் ஆர்த்தரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலளவும் ஒரு பயணமெடுத்துவிட்டு ஜக₃த்₃ ரக்ஷணசிந்தையிலே அவஹிதனுய், ஆர்த்தத்₄வநிக்குச் செவிகொடுத்துக்கொண்டு கிடக்கிறபடி. (பையீத்துயின்ற) vA ''வெள்ளைவெள்ளத்தின் மேலொருபாம்பை மெத்தையாக விரித்து அதன்மேலே - கள்ளநித்திரைகொள்கின்ற'' என்னக்கடவதிறே. இவ்வுறக்கத்தின் உண்மையறிந்தவர் A ''கள்ளம்'' என்று வெளியிட்டாரிறே. w(பையத்துயின்ற) x பிராட்டிமாரோட்டை பே₄ாக₃த்துக்கு இடங்கொடாதே ''ஆராலே ஆருக்கு என்ன நலிவு வருகிறதோ?'' என்று அதிலே அவஹிதனுய்க் கொண்டு சாய்ந்தபடி. முதற்பாட்டில் - நாராயணத்வஞ்சொல்லி, இப்பாட்டில் அங்கு நின்றும் திருவவதாரார்த்த₂மாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்தபடியைச் சொல்லுகிறது. y(பரமன்) z தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளின பின்பு வடிவிற்பிறந்த புகரின் பெருமையைச் சொல்லுகிறது. a அன்றியே, ஜக₃த்₃ரக்ஷணர்த்த₂மாக வந்து கண்வளர்ந்தருளுகையாலே கு₃ணத்தினேற்றத்தைச் சொல்லிற்றுகவுமாம். b ஸர்வத்தாலும் அதி₄க

---

**பெ.அ.** கூடுமோ? என்ன, காலக்ஷேபத்துக்கு உடலாக ''கேளீரோ'' என்கிறதென்று மூன்றுந் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறுர் (சொல்லுகிறவர்கள்தான் இத்யாதி₃ வாக்யத்ரயத்தாலே)

s மேலுக்கு அவதாரிகை (எங்களுக்கு ஏதானுல் இத்யாதி₃) ஏதானுல் நல்லதோ அத்தையாகில் சொல்லுங்கோள் என்றபடி. அன்றிக்கே, ஏதானுலும் நல்லதாகில் சொல்லலாகாதோ என்று சகாரத்தை அத்₄யாஹரித்துக்கொண்டு யோஜிக்கவுமாம். t,u, ''பரமனடிபாடி'' என்ன அமைந்திருக்க, ''பாற்கடலுள்பையத்துயின்ற'' என்றதுக்கு பூ₄ர்வம் அருளிச்செய்கிறுர் (பரமபத₃த்தில் இத்யாதி₃) தாங்களும் ஆர்த்தைகளாகையாலே, ஆர்த்தரக்ஷணத்துக்கு உபயுக்தமான ஆகாரத்தையிட்டுப் பாடுகிறுர்களென்று விஶேஷணமிட்டதென்று கருத்து.

w, x ''பைய'' என்றதுக்கு - பராக்கில்லாமை அர்த்த₂மாய், அந்தப் பராக்குக்கு ப்ரஸக்தி அருளிச்செய்யா நின்றுகொண்டு. தாத்பர்யம் அருளிச்செய்கிறுர் (பிராட்டி இத்யாதி₃) c, d 'பரமனைப்பாடி' என்னுதே. ''அடி'' என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர் (அவனுடைய இத்யாதி₃)

---

**சி.அ.** களே அனுப₄வித்தோமாதல், நீங்கள் சொல்ல அனுப₄வித்தோமாதல் எங்களுக்கேதானுல் நல்லது'' என்று. t, u ''பாற்கடலுள் பையத்துயின்ற'' என்ற பத₃த்துக்கெல்லாம் தாத்பர்யம் (பரமபத₃த்தில் நின்றும் இத்யாதி₃) y, z, a b ''பரமன்'' என்றதுக்கு மூன்று தாத்பர்யம். அதாவது—முந்தினது ''துயின்றபரமன்'' என்று. இரண்டாவது ''பையத்துயின்ற பரமன்'' என்று. மூன்றும் தாத்பர்யம்—கீழ்ச்சொன்ன விக்₃ரஹ கு₃ணங்களாலும், ஸ்வரூப கு₃ணங்களாலும், ஸர்வத்தாலும் பெரியவன் என்றபடி. v அப்படி ஸஹஜ நித்₃ரையின்றிக்கே ஆர்த்தத்₄வனிக்குச் செவிகொடுத்துக்கொண்டு கிடக்கிருனே? என்ன அருளிச்செய்கிறுர்

---

**கு.அ.** u ''பைய'' என்ற பத₃த்துக்குத் தாத்பர்யம் கூட்டி அருளிச்செய்கிறுர்(பரமபத₃த்தில் நின்றும்) என்று தொடங்கி. v''பைய'' என்றதுக்கு ப்ரமாணம் (பாம்பை மெத்தையாக இத்யாதி₃) y,z,a,b பரமன்'' என்றதுக்கு மூன்று தாத்பர்யம் என்றருளிச்செய்வர்; அதாவது — முந்தினதுக்கு ''துயின்ற பரமன்'' என்று கருத்து. இரண்டாவது – ''பையத்

---

A பெரியாழ் திரு 5-1-7.

-னென்றபடி. c (அடிபாடி) d அவனுடைய ஆதி4க்யத்தினெல்லையை அநுஸந்தி4த்தால், பின்னை தங்கள் தாழ்ச்சியினெல்லையிலே நிற்குமத்தனையிறே. e ஔசித்யத்தாலும் e2 போ4க்3யதையாலும் க்ருஷ்ணன் திருவடிகளைப் பாடாதே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவனைப் பாடுவானென்னென்னில்: இரண்டிடமும் ஒருவனேயாகையால், ''நோன்புநோற்கப்புக்கவர்கள் க்ருஷ்ணனைப் பாடாநின்றார்கள்'' என்று சொல்லாமைக்காக ஒரு தைவத்தின்பேரைச் சொல்லிற்றாகச் சொல்லுகிறார்கள்.

f (பாற்கடலுள் பையத்துயின்ற) g க்ருஷ்ணனை அநுப4விக்கப்புகுந்து க்ஷீராப்3தி4நாத2னைச் சொல்லுகிறது என்னென்னில்:—''க்ருஷ்ணனைச் சொல்லிப் பண்டே ஶங்கித்திருக்கிற இடையர் நமக்கு தைவம் தந்த இசசோதநயை அழிக்கிறார்களோ! '' என்று பயப்பட்டு, க்ருஷ்ணனுக்கடியான க்ஷீராப்3தி4நாத2னைச் சொல்லுகிறார்கள். 1. ''ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந: । நாக3பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக3தோ மது2ராம் புரீம் ॥'' என்னக்கடவதிறே, h (அடிபாடி) i மஹிஷிகளோடு அல்லாதாரோடு வாசியற ஶேஷத்வம் ஸமாநமாயிருக்கையாலே, திருவடிகளைப்பாடி என்கிறார்கள்; i2 A ''பள்ளிகொள்ளுமிடத்தடிகொட்டிட'' என்னக்கடவதிறே. j அவனுடைய வடிவழகை ப்ரீதிப்ரேரிதைகளாய்க்கொண்டு பாடி.

பெ.அ. f, g உக்தஶங்கா பரிஹாரங்களை விவரியாநின்றுகொண்டு ப்ரமாணம் சொல்லுவாராக ப்ரதீகக்3ரஹணம் பண்ணுகிறார் (பாற்கடல் இத்யாதி3) h, i உத்தமநாயகிகளாயிருக்குமவர்கள் தங்கள் போ4க்3யதையாலே அவனைத் தொழுவித்துக் கொள்ளுமவர்களாயிருந்துவைத்து, அடிபாடக்கூடுமோ ? என்ன, அருளிச்செய்கிறார் (மஹிஷிகள் இத்யாதி3) j ''அடி'' என்றது-உபலக்ஷணமாய், திருமேனியில் ஸௌந்த3ர்யத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அவனுடைய இத்யாதி3)

சி.அ. (பாம்பை மெத்தையாக) என்று. e க்ருஷ்ணனை நோன்புக்கு வேண்டின உபகரணங்களை அபேக்ஷிக்கிறவர்களாகையாலே (ஔசியத்தாலும்) என்கிறார். e2 2.''க்ருஷிர் பூ4வாசகஶ் ஶப்3த3: ணஶ்ச நிர்வ்ருதி வாசக: । விஷ்ணுஸ்தத்3பா4வயோகா3ச்ச க்ருஷ்ண இத்யபி4தீ4யதே ॥'' என்கையாலே (போ4க்3யதையாலும்) என்கிறார். c ''அடிபாடி'' என்றது பத்நீத்வஶேஷத்வங்களுண்டாகையாலே 3. ''அஹம் ஶிஷ்யா ச தா3ஸீ ச ப4க்தா ச த்வயி மாத4வ । மத்க்ருதே ஸர்வபூ4தாநாம் லக்ஷ4பாயம் வத3 ப்ரபோ4 ॥''. f, g ப்ரமாணம் சொல்லுகைக்காக மீளவும் பதோ3பாதா3நபூர்வகமாக அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனை இத்யாதி3) i2 மஹிஷியானவளுக்குத் திருவடிகள் உத்3தே3ஶ்யமாயிருக்குமோ? என்ன அருளிச்செய்கிறார் (பள்ளிகொள்ளுமிடத்து இத்யாதி3) k ''உண்ணோம்''—உண்ண அறியோமென்னுதல்,

கு.அ. துயின்ற பரமன்'' என்று தாத்பர்யம். மூன்றுவது-கீழ்ச்சொன்ன விக்3ரஹ கு3ணங்களாலும் ஸ்வரூபகு3ணங்களாலும் ஸர்வத்தாலும் பெரியவன் என்றபடி. e (ஔசித்யத்தாலும்) என்றது நோன்புக்குக்கடைக்கூட்டுகையாலே. e2 (போ4க்3யம்) என்றது. 2. ''க்ருஷிர் பூ4வாசகஶ்ஶப்3த3: ணஶ்ச நிர்வ்ருதிவாசக: । விஷ்ணுஸ்தத்3பா4வயோகா3ச்ச க்ருஷ்ண இத்யபி4தீ4யதே ॥''—நிர்வ்ருதிக்கு பூ4மி என்றபடி. b ''அடிபாடி'' என்றது பத்நீத்வமும் ஶேஷத்வமுமுண்டாகையாலே. 3. ''அஹம் ஶிஷ்யா ச தா3ஸீ ச ப4க்தா ச த்வயி மாத4வ । மத்க்ருதே ஸர்வபூ4தாநாம் லக்ஷ4பாயம் வத3 ப்ரபோ4 ॥''

A நாச்-திரு 4-1,

k (பாடி நெய்யுண்ணேம் பாலுண்ணேம்) l போ$_4$க்$_4$யாந்தரங்களில் அந்வயி யோம்; $l_2$ உண்டார்க்கு உண்ணவேண்டாவிறே. இவர்கள் உண்டார்களோ? என்னில்;:-ஓம்; $l_3$A ''உண்ணுநாள் பசியாவதொன்றில்லை-நமோநாரணவென்று- உளபாதம் நண்ணுநாள் - அவை பட்டினிநாளே'' என்றும், B ''எல்லாம் கண் ணன்'' என்றும், C ''கூறைசோறிவை வேண்டுவதில்லை'' என்றும், 1. பாதே$_2$யம் புண்ட$_3$ரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்'' என்றும், 2. ''வாஸுதே$_3$வ: ஸர்வம்'' என்றும் இப்படியேயிறே ஜ்ஞாநம் பிறந்தால் இருப்பது. m ''குடியோம்'' என் ணுதே, ''உண்ணேம்'' என்பானென்? என்னில்: — ''உண்ண'' என்று-குடிக் கைக்குச் சாதிப்பேச்சு; ஆகையிறே, ''நெய்யுண்டான், வெண்ணெயுண்டான்'' என்று க்ருஷ்ணனுக்குப் பேராகிறது. n முதல் தன்னிலே க்ருஷ்ணன் பிறந்த பின்பு n, அதில் வ்யுத்பத்தியில்லாமை. o அவன் வருமளவும் உபவாஸக்ருஸை

பெ.அ. k, l அடிபாடுகை ''நெய்யுண்ணேம்'' இத்யாதி$_3$க்கு ஹேதுவென்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார் (போ$_4$க்$_3$யாந்தரங்களில் இத்யாதி$_3$) m அந்யாபதே$_3$ஶத்திலே ஶங் கித்துப் பரிஹரிக்கிறார் (குடியோம் இத்யாதி$_3$) n பரிஹாராந்தரம் அருளிச்செய்கிறார் (முதல்தன் னிலே இத்யாதி$_3$) $n_2$ (அதில்) என்றது-''குடிக்கக்கடவது, உண்ணக்கடவது'' என்ற பே$_4$த$_3$த் தில் என்றபடி; அதாவது - இவர்கள் பூ$_1$ர்த்தாக்கள் காமரஸமறியிலாய்த்து க்ருஷ்ணைகபோ$_4$க$_3$ ரான இவர்கள் இத்தையறிவது என்றபடி. o ''நெய்யுண்ணேம் பாலுண்ணேம்'' என்கிற

சீ.அ. உண்ணவேண்டோமென்னுதல் k, $l_2$ ''பாடி உண்ணேம்'' என்கையாலே பாடித்ருப்தி பிறந்ததாகை (உண்டார்க்கு உண்ணவேண்டாவிறே) என்கிறார். $l_3$(உண்ணுநாள் இத்யாதி$_3$) ப்ராக்ருதமான அன்னாதி$_3$கள் உண்ணுதபோது பசியாவதொன்றுமில்லை என்று. k, m, n ''உண்ணேம்'' என்று ஜாதிப்பேச்சாலே சொல்லுகிறதாதல், க்ருஷ்ணன் பிறந்தபின்பு தமக்கொன்றும் கிடையாதே உண்கிறதுக்கும் குடிக்கிறதுக்கும் வாசியறியாதே சொல்லு

ரு. அ. k, n ''நெய்யுண்ணேம்'' என்றதுக்கு க்ருஷ்ணன் பிறந்த பின்பு அதில் வ்யுத்பத்தியில்லாமையாலாகிறது, * ''இவ்விடத்தில் ப்$_3$ராஹ்மண வைஶ்ய ஶூத்$_3$ரர் களுடைய கன்றுகள் வார்த்தையை நினைப்பது'' என்று அருளிச்செய்வர். o தாத்பர்யாந்

* **இக்கதை பின்வருமாறு.**—ஒருநாள் நடுப்பகலில் அந்தணர் வீட்டுக் கன்று ஒன்றும், வைஶ்யர்வீட்டுக் கன்று ஒன்றும், நான்காம் வர்ணத்தைச் சேர்ந்த இடையர் வீட்டுக் கன்று ஒன்றும் பேசிக்கொண்டிருந்தபோது, இடையர் கன்று 'நான் பால் குடித்துவிட்டு வருகிறேன்' என்று சொல்லிற்று; அதற்கு அந்தணர் கன்று ''எங்கள் வீட்டில் காலையிலும், மாலையிலும் மட்டுமே என்னைச் சிறிது பால் ஊட்டச்செய்து என் தாயின்பாலைக் கறந்துகொண்டு, மற்ற வேளைகளில் என்னைத் தாயிடமிருந்து பிரித்துக் கட்டிவிடுகிறார்கள்; நீ எப்படி இப்போது பால் குடிக்கப்போகிறாய்?'' என்று கேட்டது. இடையர் கன்று ''எங்கள் வீட்டில் என்னைக் கட்டுவதேயில்லை; நான் விரும்பியபோதெல் லாம் என் தாய்ப்பாலைக் குடிக்கலாம்'' என்று பதில் கூறிற்று. இப்பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த வைஶ்யர் கன்று ''எனக்குத் தாய்ப்பாலின் ருசியே தெரியாது. என்வீட்டில் எப்போதுமே என்னைத் தாயைவிட்டுப் பிரித்தேவைத்து, என் தாய்ப்பாலைக் கறந்து விற்று விடுகிறார்கள்'' என்று கூறிற்று. கண்ணன் பிறந்தபின்பு ஆயர் சிறுமியர் வைஶ்யர் கன்று போல் ஆனார்கள் என்பது இவ்வைதிஹ்யத்தின் கருத்து.

A பெரியாழ் திரு 5-1-6. B திருவாய் 6-7-1. C பெரியாழ்திரு 5-1-4.

களாயிருக்கக்கடவோம். இவர்கள்தாம் ஆரைக் கெடுக்கப் பட்டினிகிடக்கிறது? என்னில்: – இவர்கள் உண்ணுதொழிந்தால் பட்டினிவிடுவான் அவன்போலே காணும். ஆகையிறே இவர்கள் இங்ஙனே சொல்லுகிறது,

p (நாட்காலே $p_2$ நீராடி) q அவன் வந்தால் குளிக்க இராதே, முன்பே தத்3பே4ாக3யோக்3யமாகக் குளித்து. விடிவோரை போய்க் குளிக்கக் கடவோம்; r அவன் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தருளினதை அஸத்ஸமமாக்கக்கடவோம்; மஹிஷியானவள் ஸ்வரக்ஷணத்திலே ப்ரவர்த்திக்கும்படியாக இருக்கைக்கு மேற்படப் புருஷனுக்கு அவத்3யமில்லையிறே; அதாவது-தங்கள் த்வரையாலே அத்தலையில் உபாயபூ4ாவத்தை அழிக்கிறார்கள்; A "ஓதிநாமங்குளித்துச்சி தன்னாலொளிமாமலர்ப் பாதநாளும் பணிவோம் நமக்கேநலமாதலில்" என்கிறார்கள். s ஸ்ரீப4ரதாழ்வானைப்போலே, விரஹதாபமாறுகைக்காக "நோன்பு" என்று ஒரு வ்யாஜத்தையிட்டுக் குளிக்கத் தேடுகிறார்களிறே; $s_2$ 1 "அத்யந்தஸுக2ஸம்வ்ருத்3த4: ஸுகுமார: ஸுகே2ாசித: । கதம் ந்வபரராத்ரேஷு ஸரயூமவகா3ஹதே ॥" என்கிறபடியே.

t (மையிட்டெழுதோம்) u முதலிலே B மையகண்ணாளிறே, இனி அஞ்ஜனமிடுவதும் மங்க3ளார்த்த2மாகவிறே; அது தவிரக்கடவோமென்கையாலே-அவனுக்கு அவகாஶப்ரதா3நம் பண்ணக்கடவோமல்லோம் என்கிறார்கள்; இவர்கள்

---

பெ.அ. வற்றுக்கு-நெய்முதலானவையும் அறியோமென்று கீழே அருளிச்செய்து, அங்ஙனன்றிக்கே, "உண்ணோம்" என்றதுக்கு உண்ணவேண்டோமென்று ஶப்3தா3ர்த்த2ம் திருவுள்ளம் பற்றித் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (அவன் வருமளவும் இத்யாதி3) நாச்சியார்க்கு கோ3பிமார்த3ஶை செல்லாநிற்கச் செய்தேயும் தாமான தன்மையில் தம்முடைய க்ருஷ்ணவ்யஸநம் பின்னால் வருகையாலே, தம்முடைய தோழிமார்களைக் குறித்து இப்படி அருளிச்செய்தாரென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம்,

$p_2$,q,r,s "நீராடி" என்றதுக்கு மூன்று தாத்பர்யம்—பே4ாக3ார்த்த2மென்றும், அவனைப் பெறுகைக்கு ஸாத4நமென்றும், விரஹதாபமாறுகைக்கென்றும். q அதில் முந்தினது (அவன் வந்தால் இத்யாதி3) r இரண்டாம் தாத்பர்யம் (அவன் திருப்பாற்கடலிலே இத்யாதி3) s மூன்றாம் தாத்பர்யம் (ஸ்ரீப4ரதாழ்வானை இத்யாதி3) ஸ்ரீப4ரதாழ்வான் அபரராத்ரியிலே ஸ்நாநம்பண்ணுமாபோலே இவர்களும் விரஹதாபமாறும்படி க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்தைத் தேடுகிறார்களென்று கருத்து.

t, u "நெய்யுண்ணோம்" என்கிறவிடத்தில் உண்ணக்கடவோமல்லோமென்று விரஹது3ஶைக்கு அநுகூ3ணமாக ப்ரணயரோஷம்தோற்றச் சொன்னாற்போலே, "மையிட்டெழுதோம்" என்றதும் ப்ரணயரோஷத்தாலே சொல்லும் பாசுரமென்று தாத்பர்யம் அருளிச் செய்கிறார்

---

சி.அ. கிறார்களாதல். p, q, r, s 'நாட்காலே நீராடி"—பே4ாக3ார்த்த2மாதல், ஸாத4நார்த்த2மாகவாதல், விரஹதாபமாறுகைக்காகவாதல், $s_2$ ஸ்ரீ ப4ரதாழ்வான் ப்ராத:காலத்திலே நீராடுவரோ? என்ன அருளிச்செய்கிறார் (அத்யந்தஸுக2ஸம்வ்ருத்3த4:) என்று.

t, u மையெழுதுகிறது அலங்காரத்துக்காகவோ? என்னில் (முதலிலே இத்யாதி3)

---

கு. அ. தரம் (அவன் வருமளவுமித்யாதி3) p "நாட் காலே" — நாளினுடைய காலத்திலே. $p_2$, q, r, s "நீராடி" என்றதுக்கு மூன்று தாத்பர்யம். s மூன்றும் தாத்பர்யம் (ஸ்ரீப4ரதாழ்வான் என்று தொடங்கி) u அலங்காரத்துக்கோ? என்னில் அருளிச்செய்கிறார் (முதலிலே என்று

---

A பெரிய திரு 9-3-9. B திருவாய் 4-5-2.

அஞ்ஜனமெழுதப்புக்கால் குறையும் தலைக்கட்டுவான் அவனேயிறே. v பரிபூர்ண விஷயத்தில் இப்படி அவகாஶப்ரதா3நம் பண்ணப்பெறாதவன்று கிஞ்சித்கரித்ததாக விரகில்லையிறே. w அவனும் பரமப்ரணயியாகையாலே 'இங்கே கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் பெறவேணும்' என்றிருக்கும்.

(மலரிட்டு நாம் முடியோம்) x A ''சுரும்பார் குழற் கோதை'' என்றும், B ''வாசஞ்செய் பூங்குழலாள்'' என்றுமிறே இருப்பது. இனி, பூவுக்குத்தான் நாற்றங்கொடுக்கைக்காகவாய்த்துப் பூ முடிப்பது; அது செய்யக்கடவோமல்லோம் என்கை, y (நாம் முடியோம்) z அவன்தான் மாலையைக் கொடுவந்து மயிரை முடித்து அலங்கரித்து $z_2$ விரல்கவ்வி 'இது வாங்காதொழியவேணும்' என்னுமாகில், செய்யலாவதில்லை; a அவன் தீம்பாலே செய்யுமத்தை நம்மால் செய்யலாவதில்லையே; நாமாகச் செய்யாதொழியுமித்தனையிறே வேண்டுவது. b 1. ''அத்ரோபவிஶ்ய ஸா தேந காபி புஷ்பைரலங்க்ருதா । அந்யஜந்மநி ஸர்வாத்மா விஷ்ணுரப்4யர்ச்சிதோ யயா ॥'' என்னக்கடவதிறே,

---

பெ.அ. (முதலிலே இத்யாதி3) v,w இவர்கள் இப்படி அவகாஶப்ரதா3நம் பண்ணவேண்டுவானென்? அவன்தானும் இவ்வளவைக்கொண்டு மேல்விழுவானென்? என்ன, அருளிச்செய்கிறார் (பரிபூர்ண இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) இத்தால் – சேதநனுக்கு ஆபி4முக்2யமும், அவனுக்கு அதுகொண்டு கார்யம் செய்கையும் ஸ்வரூபம் என்றதாய்த்து.

y, z ''முடியோம்'' என்றத்தாலே ஸித்3த4மாயிருக்க, ''நாம்'' என்று சொன்னதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவன்தான் இத்யாதி3) $z_2$ ''விரல்கவ்வி'' என்றது – ப்ரணமம்பண்ணிப் பெருவிரலைத் திருப்பவளத்தாலே ஸ்பர்ஶித்து என்றபடி; இத்தால் வேண்டிக்கொண்டு என்றதாய்த்து. a தங்கள் ஸ்வரூபத்துக்குச் சேராதத்தை அவன் செய்தால் அதுக்கு இசையக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (அவன் தீம்பாலே இத்யாதி3) b அவன்தான் இப்படி தான் உகந்த விஷயத்திலே அலங்கரித்ததுண்டோ? என்ன, ஸம்வாத3ம் காட்டுகிறார் (அத்ர இத்யாதி3)

---

சி. அ. v,w இவர்களுக்கு இது வேண்டுவானென்? அவனும் இவ்வளவுகொண்டு மேல்விழவேண்டுகிறதென்? என்ன அருளிச்செய்கிறார் (பரிபூர்ணவிஷயத்திலித்யாதி3) இத்தால் இவனுக்கு ஆபி4முக்2யமும், அவனுக்கு அதுகொண்டு கார்யம் செய்கையும் ஸ்வரூபமென்றதாய்த்து. v ''இவர்கள் அவகாஶப்ரதா3நம் பண்ணுவிட்டால் கிஞ்சித்கரிக்க விஷயமில்லையோ? என்ன அருளிச்செய்கிறார் (பரிபூர்ண விஷயத்தில் இத்யாதி3) w இவர்களன்றோ அவன் விஷயத்தில் கைங்கர்யம்பண்ணி ஸத்தைபெறவேண்டுவது, அவன் இவர்களுக்குக் கிஞ்சித்காரம் பண்ணவேணுமென்று அபேக்ஷிக்கக்கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (அவனும் பரம ப்ரணயியாகையாலே இத்யாதி3) x 'பூ முடியோம்' என்று பரிமளத்துக்கோ பூமுடிக்கிறதென்ன அருளிச்செய்கிறார் (சுரும்பார்குழல் இத்யாதி3) $z_2$ (விரல்கவ்வி) காலில் விரலைக்கவ்வி என்றபடி. b அவன் இப்படி புஷ்பங்களையிட்டு அலங்கரிக்குமோ? என்ன அருளிச்செய்கிறார் (அத்ரோபவிஶ்ய இத்யாதி3)

---

கு. அ. தொடங்கி) v ''இவர்கள் அவகாஶ ப்ரதா3னம் பண்ணுவிட்டால் இவனுக்கு அலங்கரிக்க விஷயமில்லையோ?'' என்ன (பரிபூர்ண என்று தொடங்கி) w இவர்களன்றோ அவன் விஷயத்தில் கைங்கர்யம் பண்ணி ஸத்தை பெறவேண்டுவது, அவன் இவர்களுக்குக் கைங்கர்யம் பண்ணவேணும் என்று அபேக்ஷிக்கக் கூடுமோ? என்ன (அவனும் பரம ப்ரணயியாகையாலே இத்யாதி3) x பரிமளத்துக்கோ பூ முடிக்கிறதென்ன அருளிச்செய்கிறார் (சுரும்பார் குழல் கோதை) என்று. $z_2$ (விரல் கவ்வி) என்றது காலில் விரல் கவ்வி என்றபடி. b அவனப்படிச் செய்யுமோ? என்ன (அத்ரோபவிஶ்ய என்று தொடங்கி) c ''செய்யாதன

---

A நாச்-திரு 9-10 B திருவாய் 10-10-2.

c (செய்யாதன செய்யோம்) d விதி$_4$யுண்டாகிலும், பூர்வர்கள் ஆசரித்ததற்கு மேற்பட ஆசரிக்கக்கடவோமல்லோம்; e அதாகிறது 1, ''ஸுஹ்ருத$_3$ம் ஸர்வபூ$_4$தாநாம்''என்று-அவன் ஸர்வபூ$_4$தஸுஹ்ருத்தாக இருந்தானேயாகிலும், ததீ$_3$யரை முன்னிட்டுக்கொண்டல்லது அவனைக் கிட்டக்கடவோமல்லோமென்கை, f பெண்களில் முற்படவுணர்ந்தார் ஒருவரையொருவர் எழுப்பி, எல்லாருங்கூடியல்லது க்ருஷ்ணனைக் கிட்டக்கடவோமல்லோமென்கை. g 2. ''நிவேத$_3$யத மாம் க்ஷிப்ரம்'' என்றும் 3, ''பிதாமஹம் நாத$_2$முநிம் விலோக்ய ப்ரஸீத$_4$'' என்றும் இவையிறே ப்ரமாணங்கள். h ஸ்ரீப$_4$ரதாழ்வானை முடிசூடச் சொன்னவிடத்தில் ஸர்வப்ரகாரத்தாலும் யோக்$_3$யதையுண்டாயிருக்க, ''இக்குடியில் இதுக்கு முன்பு செய்யாதன நான் செய்யமாட்டேன்'' என்றானிறே.

i (தீக்குறளை சென்றோதோம்) j பிறர்க்கு அநர்த்த$_2$ாவஹமாகப் j$_2$ பொய் சொல்லக்கடவோமல்லோம்; பிராட்டி பெருமாள்பக்கல் ஏகாந்தத்திலும் ஏகாக்ஷி ஏககர்ணிகள் நலிந்தபடி சொல்லிற்றாக இல்லையே ஸ்ரீராமாயணத்தில். k நம்மில் நாம் ''நப்பின்னை நங்காய்''(20) என்றும், k$_2$ ''நாயகப்பெண்பிள்ளாய்''(7) என்றும், ''பேய்ப்பெண்ணே''(7) என்றும் ஒருவர்க்கொருவர் இட்டீடுகொண்டு சொன்னவை க்ருஷ்ணன் செவிப்படுத்தக்கடவோமல்லோம்.

---

பெ. அ. c, d ''செய்யாதன செய்யோம்'' என்கைக்குச் செய்ய ப்ரஸக்தியுண்டோ? என்ன, அத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, அர்த்த$_2$ம் அருளிச்செய்கிறார் (விதி$_4$ இத்யாதி$_3$) இது தொடங்கி ப்ரணயரோஷத்தாலேயன்றிக்கே அதி$_4$காரிஸ்வரூபத்தைச் சொல்லுகையென்று கண்டுகொள்வது. e, f ஸ்வாபதே$_3$ஶத்திலும் அந்யாபதே$_3$ஶத்திலும் தாத்பர்யத்தை விவரிக்கிறார் (அதாகிறது இத்யாதி$_3$ வாக்ய த்$_3$வயத்தாலே) g புருஷகாரத்தை முன்னிட்டுக் கொள்ளுகை பூர்வர்கள் செய்தார்களென்கைக்கு ப்ரமாணங்காட்டுகிறார் (நிவேத$_3$யத இத்யாதி$_3$) h செய்யாதன செய்யாதிருக்கைக்கு உத$_3$ாஹரணங்காட்டுகிறார் (ஸ்ரீ ப$_4$ரத இத்யாதி$_3$) i, j$_2$ ''குறளை'' என்றதன் அர்த்த$_2$ம் (பொய்) என்றது; அதாவது-குற்றமென்றபடி. k. ப்ரக்ருதத்திலே கோ$_3$பிமார்க்குக் குற்றத்துக்கு ப்ரஸக்தியுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (நம்மில்நாம் இத்யாதி$_3$) k$_2$ (நாயகப் பெண்பிள்ளாய்) என்றதுக்கு ''நிர்வாஹகையாயிருந்தபடி இதுவோ?'' என்று வெறுத்துச் சொல்லுகையாலே குற்றமென்று கண்டுகொள்வது.

---

சி. அ. c ''செய்யாதன செய்யோம்'' என்றதுக்கு உபாயாந்தரங்கள் செய்யோமென்று A ''இதுகாண்மினன்னைமீர்'' என்ற பாட்டிலே வ்யாக்$_2$யானம் பண்ணினார்கள். g ததீ$_3$யர் முகே$_2$ந ஆஶ்ரயிக்கைக்கு நியாமகமுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (நிவேத$_3$யத இத்யாதி$_3$) h பூர்வர்கள் ஆசரித்ததே ஆசரித்துக்கொண்டு போந்தவர்களுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (ஸ்ரீ ப$_4$ரதாழ்வான் இத்யாதி$_3$) i தீக்குற(ளு)ளைக்கு இரண்டு பொருள்— பிறர்க்கு அநர்த்த$_2$ாவஹமான பொய் என்னுதல்.*(அத$_2$வா) இத்யாதி$_3$யாலே குற்றமென்னுதல்.

---

கு. அ. செய்யோம்'' என்றதுக்கு ''உபாயாந்தரங்கள் செய்யோம்'' என்று, A''இது காண்மின் அன்னைமீர்'' என்றபாட்டில் வ்யாக்$_2$யானம் பண்ணினார்கள். h பூர்வர்கள் ஆசரித்ததே ஆசரித்துக் கொண்டு போனவர்களுண்டோ? என்ன் (ஸ்ரீப$_4$ரதாழ்வான் என்று தொடங்கி);

---

A திருவாய் 4-6-3. * மூலத்தில் இப்பாட$_2$ம் காணவில்லை.

l (ஐயமும் l2 பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி) ஐயமாவது—யோக்3ய விஷயத்திலே கு3ருவாக வ்யயிக்குமது; பிச்சையாகிறது — ப்3ரஹ்மசாரிகளுக்கும் ஸந்யாஸிகளுக்கும் இடுமது, m "இங்கு க்ருஷ்ணநுப4வம் பண்ணுவோம்" என்பார்க்கு அவனை அநுப4விப்பித்தும் "ததீ3யரையநுப4விப்போம்" என்பார்க்கு அவர்களை அநுப4விப்பித்தும் போரக்கடவோம். n (ஆந்தனையும்) o அவர்கள் கொள்ளவல்லராந்தனையும்; o2 அர்த்தி2கள் ஆமளவும். p (கைகாட்டி) q ஸர்வத்தையும் கொடுத்தும் "ஒன்றும் செய்யப் பெற்றிலோம்" என்றிருக்கை; r இவர்களை க்ருஷ்ணநுப4வம் பண்ணிவைத்தும், "இவர்கள் திறத்தில் ஒன்றும் செய்யப் பெற்றிலோம்" என்றிருக்கையைச் சொல்லுகிறது. s அத2வா, ஐயமாகிறது — s2 ஈஶ்வரனுடைய ஸ்வரூபகு3ணவிஷய ஜ்ஞானம்; பிச்சையாகிறது — ஆத்மஸ்வரூபமாத்ரஜ்ஞானம்; இவற்றைத் தனக்கு உள்ளவளவும் உபதே3ஶிக்கையென்றுமாம். (கைகாட்டி) t இப்படி ஜ்ஞானோபகாரகனானாலும் அவ்வுபகாரம் தன்னெஞ்சில் தட்டாதிருக்கை.

(உய்யுமாறெண்ணி) இந்த ப்ரகாரங்களினாலே உ ஜ் ஜீ வி க் கு ம் ப டி க ளை எண்ணி; ப4க3வத்3விஷயத்திலே உள்புக்கவன்றிறே இவன் உஜ்ஜீவித்தானாகிறது; அது இல்லாதபோது, 1."அஸந்நேவ"விறே. (எண்ணியுகந்து) மநோரத2வேளையே தொடங்கி ரஸிக்கிறபடி. 2, "ஸுஸுக2ம் கர்த்துமவ்யயம்" என்கிறபடியே-ஸ்மர்த்தவ்யவிஷயத்தின் ரஸ்யதையாலே ஸ்ம்ருதிவேளையே தொடங்கி ரஸிக்குமிறே. "எண்ணியுகந்து-செய்யுங் கிரிசைகள் கேளீரோ" என்று அந்வயம். 2.

---

பெ.அ. l, m "ஐயம்" என்றது-விபு4வான க்ருஷ்ணனை அநுப4விக்கை என்றும், "பிச்சை" என்றது-அணுஸ்வரூபரான ததீ3யரை அநுப4விக்கை என்றும் திருவுள்ளம்பற்றி, ப்ரக்ருதத்திலே ஏறிடுகிறார் (இங்கு இத்யாதி3) o2 யோஜநாந்தரம் அருளிச்செய்கிறார் (அர்த்தி2கள் இத்யாதி3) அதாவது – அர்த்தி2களாக வந்தவர்களெல்லார்க்கும் கொடுத்து, இனி அர்த்தி2கள் இல்லையென்னுமளவும் என்றபடி. p, q 'கொடுத்து' என்றதே, "கைகாட்டி" என்றதுக்குப் ப2லிதத்தை அருளிச்செய்கிறார் (ஸர்வத்தையும் இத்யாதி3) இப்பாட்டிலே, "ஏல், ஓர், எம்பாவாய்" என்றதெல்லாம் பாத3த்தைப் பூரித்துக்கிடக்கிறது. 2.

---

சி. அ. l,m,s "ஐயம்" — க்ருஷ்ணநுப4வமாதல். ப4க3வத்3விஷய ஜ்ஞானமாதல். l2,m,s "பிச்சை"யாவது — பா4க3வதாநுப4வமாதல், ஸ்வஸ்வரூபஜ்ஞானமாதல். n,o "ஆந்தனையும்" இரண்டு பொருள்; அர்த்தி2களுக்கு அபேக்ஷையுள்ளவளவும் என்னுதல், கொடுக்கிறவர்கள் தங்களுக்குள்ளவளவும் என்னுதல். யதா2மதி என்னவுமாம். o2 (அர்த்தி2களானவும்) அர்த்தி2கள் கொள்ளுமளவும். P.q. r "கைகாட்டி" கையைமறித்துக் காட்டிக்கொடுக்கிறதுக்கு இரண்டு பொருள் (ஸர்வத்தையுமித்யாதி3) (இவர்களை இத்யாதி3) s2 ஜ்ஞான தாரதம்யம் அருளிச்செய்கிறார் (ஈஶ்வரனுடைய இத்யாதி3) 2.

---

கு.அ. l,m,s "ஐயம்" க்ருஷ்ணநுப4வமாதல், ப4க3வத்3விஷயஜ்ஞானமாதல், l2,m,s பிச்சையாவது—பா4க3வதாநுப4வமாதல், ஸ்வரூபஜ்ஞானமாதல் என்றபடி; n.o. "ஆந்தனையும்" என்றதுக்கு இரண்டு பொருள் அர்த்தி2களுக்கு அபேக்ஷையுள்ளவளவும் என்னுதல், கொடுக்கிறவர்கள் தங்களுக்குள்ளவளவும் என்னுதல், P. q. r. "கைகாட்டி" என்றதுக்கு இரண்டு பொருள். s...h "செய்யாதன செய்யோம்" என்றதுக்கு இரண்டு தாத்பர்யமாகவுமாம். ஒன்றேயாகவுமாம். '...k "தீக்குறளை" என்றதுக்கும் அப்படி கொள்வது. 2.

# ஆறுயிரப்படி-இரண்டாம்பாட்டு.

2 அவ: — இரண்டாம்பாட்டு, முதற்பாட்டு ப்ராப்யப்ராபகஸங்க்,ரஹம், இரண்
டாம்பாட்டில் க்ருத்யாக்ருத்யவிவேகம்பண்ணுகிறார்கள். மூன்றும்பாட்டு - ப்ராபகஸங்க்,ர
ஹம். இப்பாட்டில், க்ருத்யாக்ருத்யவிவேகம்பண்ணுகிறார்கள். இதரவிஷயங்களில்
விடுமவற்றோடு பற்றுமவற்றோடு வாசியில்லை. துல்யப,லமாயிருக்கும். ஆயாஸத்தாலே
பெறுமதாகையாலும், நிலையில்லாமையாலும். இங்கு A ''மாற்பால்மனஞ் சுழிப்ப மங்
கையர்தோள் கைவிட்டு'' இறே.

வ்யா: — (வையத்துவாழ்வீர்காள்) 1. ''பு,த்,தி,நாஶாத் ப்ரணஶ்யதி'' என்
கிறபடியே இதர விஷயத்திலே மண்டி முடியும் நிலத்திலே, வகுத்த விஷயமே அநு
ப,விக்கப் பெற்றவர்களன்றோ. B ''பல நீ காட்டிப் படுப்பாயோ'' என்றும், B''இன்
னங்கெடுப்பாயோ'' என்றும் உணர்ந்தவர்கள் கூப்பிடும் நிலமிறே. நாட்டார் பெரு
விடில் முடியும்படியான விஷயங்களினுடைய த,ர்ஶநத்திலே முடிகிறார்களிறே
இவர்கள். (வையத்து வாழ்வீர்காள்) இந்தளத்தில் தாமரைபோலே. (வையத்து
வாழ்வீர்காள்) க்ருஷிபூ,மியிலே ப,லம் பு,ஜிப்பதே! வானிலேபோய்ச்
சிறையிராதே, க்ருஷ்ணகு,ணங்கள் திருவாய்ப்பாடியிலே ஆழமோழையாய்ப்
பரிமாறுநிற்க, வானிலிருப்பாகிறது - பெருமாள் காடேற எழுந்தருள,
திருவயோத்,யையிலிருப்புப்போலவும், க்ருஷ்ணன் திருவாய்ப்பாடியிலே வளர்ந்தருளா
நிற்க, ஸ்ரீமது,ரையிலிருப்புப்போலவுமிறே. 2. ''அயோத்,யாமடவீம் வித்,தி,'' என்று
திரு அயோத்,யை பட்டது பட்டிறே அங்கு கிடக்கிறது; அங்கு மேன்மை; இங்கு நீர்மை.
கு,ணாதி,க்யத்தாலேயிறே வஸ்துவுக்கேற்றம். 3. ''ந ச புநராவர்த்ததே'' என்றும்,
C ''மீட்சியின்றி'' என்றும், D ''ஏற்றிவைத் தணி வாங்கி'' என்றும் சொல்லுகிற
படியே அங்குள்ளார்க்கு இங்கு வரவொண்ணாதே. இங்குள்ளார்க்கு மேன்மையும்
காணலாம். ஆகையிறே E ''விண்ணுளாரிலும் சீரியரே'' என்கிறது. F ''முழுதுமித்
யாதி, - இறுதி கண்டாளே'' 4. ''நித்யாஞ்ஜலிபுடா:'' என்று-நாம் தொழுமத்தனை
யிறே அங்கு; ஶீலகு,ணத்துக்கு அகப்பட்டார் மற்றொரு கு,ணத்துக்கு ஆளாகாரிறே.
5. ''ஸ்நேஹோ மே பரம:''—அங்குப்போருமளவல்லகாணும்; என்னது ஸ்நேஹம்
என் படுத்தாதுதான்! G''என்றனளவன்றால் யானுடைய அன்பு'' என்கிறது. ஆஶ்
ரயத்தினளவல்ல காணும் ஸ்நேஹம். 5.''ராஜந் த்வயி''-இதுதான் பரத்வத்திலேயோ?
என்னில்: ப்ரதிகூலரானவர்களும் 6. ''ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:'' என்று மட
லெடுக்கும் உம்முடைய பக்கலிலே. இப்போது தவறியிருந்தோமாகில், இனி ஒரு
கால் அங்குக்கொள்ளுகிறோமென்றார்—5. ''நித்யம் ப்ரதிஷ்டி,த;''—காத,ாசித்கமன்று
காணும்; ஸ்வரூபாந்தர்க்க,தங்காணும். 5.''ப,க்திஶ்ச நியதா''—ஸ்நேஹமாகிறதேது?
ப,க்தியாகிறதேது? என்னில்; நில் என்ன, முடிந்தேன் என்று முறையழியப் பரி
மாறின இளையபெருமாள்படி-ப,க்தி; ஸ்நேஹமாகிறது — ஒன்றறிந்தன்றிக்கே,
வ்யதிரேகத்தில் மூச்சடங்கும்படியான சக்ரவர்த்திபடி. ''இப்படி வ்யதிரேகத்தில்
முடியும்படியானவன் மோக்ஷப,லம் பெறுதொழிவானென்?'' என்று நஞ்ஜீயர்
ப,ட்டரைக் கேட்க; ''இவனுக்குள்ளது நரகமே; பெரும்மாளாந்ருஶம்ஸ்யத்தாலே

---

A மூன்-திருவ 14. B திருவாய் 6-9-9 & 8. C திருவாய் 4-10-11. D பெரியாழ்-
திரு 4-9-3. E திருவிருத்தம் 79. F பெரு-திரு 7-8. G இர-திருவ 100.

ஸ்வர்க்க,ஸ்த,ஞனன்!'' என்றருளிச்செய்தார். 1. ''ஸ ஸத்யவசநாத்'' 2. ''ராமோ விக்,ரஹவாந் த,ர்ம:'' என்று-பரமத,ர்மத்தைவிட்டு வசநத்தைப்பற்றினனுகையாலே, 3. ''வீர'' — இவர்தாம் தோற்ற துறையிருக்கிறபடி, 3, ''ப,ாவோ நாந்யத்ர க,ச்ச,தி'' — ''அநயத்ர'' — என்கிறன்-பேருங்கூட அஸஹ்யமானபடி.

(வாழ்வீர்காள்!) பெருமாள் 4. ''ஏகாம் த,ரணிமாஶ்ரிதௌ'' என்றுப்போலே ஒரு பூ,மியிலே ஆகப்பெறுவதாம்; ஸமகாலத்திலே பிறக்கப்பெறுவதாம்; ஒரு ஊரிலேயாவதாம்; அதிலும் அவன் காணவேண்டாத ஆண்களாகவும், பருவங் கழிந்த பெண்களாகவுமன்றிக்கே, ஒத்த பருவமாகப்பெறுவதாம்; திருவயோத்,யையிலுள்ளார்க்குப்போலே, விஶ்லேஷவ்யஸநம் இல்லாதவையாகப் பெறுவதாம்; இதொரு வாழச்சியருநதபடியென்தான்! என்கிறுர்கள். ''வாழவீர் காள்'' என்ற பன்மைக்குக் கருத்து-அதொரு விபூ,தியாக ப,க,வத,நுப,வமே யாத்ரையாயிருக்குமாபோலே, இதுவும் ஒரூராக இதுவே யாத்ரையாகப் பெறுவதே! ஒரூருக்கொருவனையிறே பெற்றது — 5. ''விபீ,ஷணஸ்து த,ர்மாத்மா'' என்று. 6. ''வக்தா ஶ்ரோதா ச து,ர்லப,:'' என்று, சொல்லுவாரொருவனேயாய்க் கேட்பாரில்லாத லங்கைபோலன்றிக்கே, த்ரிபாத்விபூ,தி ஒருநாடாகச் சமைந்தாப் போலே இதொரு ஊராகச் சமையப்பெறுவதே!

(நாமும்) நம்மில் நாம் வக்தாக்களும் ஶ்ரோதாக்களுமாக இருந்தோமே யாகிலும், லாப,ாலாப,ங்களில் ஸமது,:க்க,ஸுக,ராம்படியிருக்கிற நாமும். ''நாரா யணனே'' (1) - என்று-அத்தலையில் ந்யஸ்தப,ரரான நாமும். (நாமும் நம் பாவைக்குச் செய்யும் கிரிசைக .) ''ப்ராப்ய ப்ராபகங்கள் அவனே'' என்று அறுதியிட்டபின்பு செய்யுமவை ப்ராப்யத்திலே புகுருமத்தனையிறே; இனி பேற்றுக்குடலாகச் செய்வ தொன்றில்லை: அச்சமுறுத்திக் கார்யங்கொள்ளப் பார்க்கிறுர்களிறே, த்வரை இருந்த விடத்தில் இருக்கவொட்டாமையாலே. ப்ராப்யப்ரதிபத்தி பண்ணியே ப்ராபக ஸ்வீ காரம் பண்ணுகிறது, ஆறியிருந்தானுகில் ப்ரதிபத்திபண்ணிற்றிலனுமத்தனையிறே. அதி,காரிதான் முமுக்ஷுவே: ஜ்ஞாநப,லமுண்டாகவேணும்: த்யாக,மாத்ரத்தையே ஸ்வீகரித்து, ப்ராப்யத்திலே ருசியின்றிக்கே, தான் நினைத்தபடியே நடக்கில் நாஸ்தி கத்வமே ப,லித்துவிடுமத்தனையிறே. க்ஷுத்,ரவிஷயத்திலே பிறந்த ஶ்ரத்,தை, செய ளவும் ப,லியாநின்றது; அது ப,க,வத்,விஷயத்திலே வேண்டாததன்றிறே. ''செய் யுங்கிரிசைகள்'' என்கையாலே-அவனும் அவனுடையாரும் வாழும்படியாயிருக்கை.

(கேளீரோ) ''க்ருஷ்ணன்கிடாய், பெண்கள்கிடாய்'' என்கிறவூரிலே கோ,ப வ்ருத்,த,ர்கள் அநுமதிபெற்று க்ருஷ்ணனேடேகூட அநுப,விக்கப்பெறுவதே! என்கிற ப்ரீத்யதிஶயத்தாலே பரவஶக,ாத்ரைகளாய்க்கிடக்க, ''கேளீரோ'' என்கிறுர்கள். மேய்ச்சல்தலையிலே அசையிடுவாருண்டோ? பெற்ற அம்ஶத்துக்கு த்ருப்தராமத் தனையோ? மேன்மேலன பரகுபரகு என்று வரவேண்டாவோ? கேட்கையே உத்,தே,ஶ்யமாயிருந்தபடி. நாங்களும் வாய்படைத்த லாப,ம்பெற்று, நீங்களும் செவி படைத்த லாப,ம் பெறவேண்டாவோ? 6. ''புருஷார்த்தோ,ாயமேவைகோ யத்கத,ா ஶ்ரவணம் ஹரே:'' — ஸபாத, லக்ஷக்,ரந்த,த்தாலே த,ர்மார்த்த, காம மோக்ஷங்களைச்

சொல்லி ''இவற்றில் உன்நெஞ்சில்பட்டதென்?''என்ன;''நாலிலும் ஒன்றுமன்று, பகவத்குணவித்தராயிருக்கும் உன்போல்வாரைப் பேசவிட்டு, தென்றலும் சிறுதுளியும் பட்டாப்போலே குளிரச் செவிமடுத்துக்கேட்டுக் கிடக்கவமையும் என்றுபட்டது'' என்ருன்.

1. ''ஸம்ஶ்ரவே மதுரம்'' — ஜ்ஞாநப்ரஸரத்வாரா இந்த்ரியங்கள் புறப்பட்டு, பாஹ்யவிஷயங்களை க்ரஹித்து, பின்பிறே ரஸிப்பது; அங்ஙனன்றிக்கே, தென்றலும் சிறுதுளியும் பட்டாப்போலே, பட்ட இடமேபிடித்து ரஸிக்கை. A ''கேட்டாரார்'' என்னுமாபோலே. 1. ''மதுரம்''—அறிவு கொடுத்து ரஸிப்பிக்கவற்ருயிருக்கை. 1. ''வாக்யம்'' பூர்வாபரஸங்கதி வேண்டாதே, தனியே இனிதாயிருக்கை. 1. வைதேஹ்யா:'' — குடிப்பிறப்புவாசி தோற்ற உடம்புபெருதே இருந்தபடி. 1. ''வ்யாஜஹார''—உடம்பில்லாதார்க்குச் செவியில்லையிறே. செவிகொடுத்து வார்த்தை சொன்னுளென்கிறது. (கேளீரோ) செவிபடைத்த லாபம் பெறவேண்டாவோ? (பாற்கடலுள்) சொல்லுகிறபடிதான் கீழே ''நாராயணன்'' (1) என்ருர்களே; அந்த நாராயண ஶப்தவாச்யனை ஸர்வேஶ்வரன் திருப்பாற்கடலிலே ப்ரஹ்மாதிகளுடைய கூக்குரல் கேட்கும்படி குடில்கட்டிப் பயிர்நோக்கும் க்ருஷிகனைப்போலே, தோள்தீண்டியாக வந்து கண்வளர்ந்தருளுகிருனென்கிருர்கள். ''மன்னுவடதுரை மைந்தன்'' (5) என்று மேலே சொல்லப்புகுகிருர்களாகையாலே ''நாராயணன்''(1) என்பது, ''பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்'' என்பதாகாநின்ருர்கள்; ஸ்ரீபீஷ்மர் பரத்வமே பிடித்து உபபாதித்துக்கொண்டுவாராநிற்க, 2. ''ஸ ஏஷ ப்ருதுதீர்க்காக்ஷஸ் ஸம்பந்தீ தே ஜநார்த்தந:'' என்று முதலித்துக் காட்டினுற்போலே 3.''அபரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:'' என்ற அர்ஜுநனுக்குத் தானும் அருளிச்செய்தான். (பைய) B ''மெள்ளத்துயின்றுனை'' என்னுமாபோலே ஆர்த்தநாதம் கேட்கும்படி அசங்காதே கிடக்கிறபடி, (துயின்ற) தமோகுணபிபவத்தாலே வந்த உறக்கமன்றே: ஆர்த்தநாதம் கேளாதபோதுகாணும் பிராட்டிமார் போகமும். 4. ''மதுரா மதுராலாபா'' என்று பிச்சேறப்பண்ணுமவள் பேச்சும் அஸஹ்யமாம் - ஜகத்ரக்ஷணத்தில் திருவுள்ளம் பற்றினபோது. (பரமன்) இருந்தருளினபோதையிலும் சாய்ந்தருளினபோதுகாணும் அங்கப்ரத்யங்கங்களில் புக்கு அநுபவிக்கலாவது. நாட்டார்க்கு மற்றப்படியே; இங்கு C ''கிடந்ததோர் கிடக்கை'' என்றும் D ''கோலந்திகழக்கிடந்தாய்'' என்றும் சொல்லலாம்படியிருக்கும் ஸர்வாதிகனென்று தோற்றுமாய்த்துக் கண்வளர்ந்தருளும்போது. 5. ''ஸ:''-அழகில் ப்ரஸித்தி, 5. ''மயா போதித:'' — காகமென்று ஒரு வ்யாஜமிடுகிறேனித்தனை; என்னுலே கெட்டேன். 5. ''ஸ்ரீமாந்'' — கண்வளர்ந்தருளுகிறபோதை காந்தி ப்ராசுர்யம். 5. ''ஸுகஸுப்த:'' — படுக்கைக்கீடாயிறே உறக்கமிருப்பது. 5.''பரந்தப:'' — எழுப்பிக்கொள்ள நினைத்த கார்யத்துக்கும் உறக்கமேயமையுங்கிடீர். ஸிம்ஹம் உறங்கும்போதும் துஷ்டம்ருகங்கள் அணையமாட்டாதே. 6. ''கௌஸல்யா ஸுப்ரஜா ராம'' — உண்ணப்புக்கு வாயை மறந்தாரைப்போலே, வந்த காரியத்தை மறந்தான்; ஒரு திருவாட்டி பிள்ளைபெறும்படியே! என்கிருன். E ''படுத்தபைந் நாகணை''.(பரமன்) கிட்டவந்துகிடக்கிற குணாதிக்யத்தாலே வந்த ஏற்றமாகவுமாம்.

---

A திருவாய் 10-6-11. B மூன்-திருவ 93 C திருமாலை 23. D திருவாய் 5-8-1, E திருப்பல். 9.

(அடிபாடி) ''பரமன்'' என்கிறார்களே; அவனுடைய ஶேஷித்வத்தை அநுஸந்தி₄த்தால் நடுவு தங்குமவர்களில்லாமை திருவடிகளிலே விழுகிறார்கள். அவனுடைக்கம் புருஷோத்தமத்வத்துக்கு ஸூசகமானாற்போலே, இவர்களும் நாரீணாமுத்தமைகளான மைக்கு ஸூசகம் திருவடிகளைப்பாடுகை. அவன் ஶேஷித்வத்துக்குச் சமைந்தாற்போலே, இவர்கள் ஶேஷத்வத்துக்குச் சமைந்தபடி. ஸ்தநந்த₄யப்ரஜை முலையிலேயிறே வாய் வைப்பது. A ''செவ்வடி செவ்வி திருக்காப்பு'' என்னுமவர்களிறே.

(அடிபாடி நெய்யுண்ணோம்) அடிபாடுவதுக்கு முன்பு போலே அவை த₄ாரகமாவது; B ''எல்லாங்கண்ணன்'' என்றிறே பின்னையிருப்பது. 1. ''வாஸுதே₃வஸ் ஸர்வ''மிறே, எல்லாமவனே என்றிருக்கையாலே C. ''கூறைசோறிவை வேண்டுவதில்லை'' என்றார் தமப்பனார்; இவள், அவரிலும் உள்புக்கு, இடைச்சியான முறுக்கத்தாலே ''நெய்யுண்ணோம் பாலுண்ணோம்'' என்கிறாள். (அடிபாடி நெய்யுண்ணோம் பாலுண்ணோம்) உண்டார்க்கு உண்ண வேண்டாவே. ''குடிக்கக்கடவது, உண்ணக்கடவது'' என்று அறிகிறிலள் முதல் தன்னிலே வ்யுத்பத்தியில்லாமையாலே. இவர்கள் ஸௌகுமார்யந்தான் திருவடிகளைப் பாடுதல் நெய்யும் பாலும் குடித்தாற்போலே. (நெய்யுண்ணோம்) அவன் ஜீவநம் வாங்கோமென்கிறார்கள். (நெய்யுண்ணோம்) இவர்கள் யாரைத்தான் பட்டினிகொள்ளப் பார்க்கிறது? இவர்கள் உண்டால் பசிகெடுவது அவனுக்குப்போலே. ஶரீரத்துக்கு வரும் நன்மை ஶரீரிக்கிறே. 2. ''யஸ்யாத்மா ஶரீரம்''

(நாட்காலே நீராடி) ப்₃ராஹ்மமுஹூர்த்தத்திலே குளிக்கக்கடவோம். அவன் திருப்பாற்கடலிலே கிடந்தகிடை என்னுச்சுதுதான்? மஹிஷியானவள் குளித்து விரல் முடக்குமதிற்காட்டில் மடலுண்டோ? D ''ஓதிநாமம்'' – அவனையழிப்பார் வார்த்தைகளிருக்கும்படியிறே. (நாட்காலே நீராடி) அதில் அவனைப் பிற்பாடனுக்கக்கடவோம். 3. ''நமே ஸ்நாநம்'' — ப₄ர்த்தாவின் அஸந்நிதி₄யிலே குளிக்கு இருய்க்கும் பா₄ர்யையைப்போலே 3. ''வஸ்த்ராண்யாப₄ரணநி ச''—உடம்புதானே மிகையாயிருக்க, அதுக்குமேலே அந்தரமானவற்றைச் செய்யவோ? E '' உடம்பினால் குறைவிலமே'' என்றுகாதேயிருக்கிறது, 3. '' தம் விநா'' — குளிப்பார்க்கு ப்ரத₄ாநோபகரணம் வேண்டாவோ? 3.''கைகயீபுத்ரம்;'—''நடுவிலாய்ச்சி பிள்ளையை நலிந்தாள்'' என்ன, நாமும் அவனை நலியவோ? 3. ''கைகயீபுத்ரம்''—ரிஷிகளோடே ஸம்ப₄ாஷிக்கவும், அவர்கள் விரோதி₄களைப் போக்கவும், அத்தால் வந்த புகழும், அவளால் வந்ததன்றோ; அவள் பெற்றபிள்ளையன்றோ. 3.''ப₄ரதம்''—அவள் ஸம்ப₃ந்த₄ம் மிகையென்னும் படியன்றோ அவன்தன்படி. 3.''த₄ர்மசாரிணம்''—நம்மைப்பிரிந்தால் அவனிருக்கும் படியிருந்தால், அவனைப்பிரிந்தால் நாமிருக்கும்படி இருக்கவேண்டாவோ? இப்படி ஶேஷபூ₄தர் அஸந்நிதி₄களிலே ஶேஷிகள் குளிக்கு இருய்ப்பார்களிறே; அத்தைப் பொய்யாக்கி அவனையொழிய நாங்கள் குளிக்கக்கடவோமென்கிறார்கள். (நாட்காலே நீராடி) ஸ்ரீப₄ரதாழ்வானைப்போலே; 4.''அத்யந்தஸுக₂ஸம்வ்ருத்த₄:'' இத்யாதி₃. 5.''ஶேதே ஶீதே மஹீதலே'' 6.''ப₄ரதஸ்ய வதே₄ தோ₃ஷம்'' என்றவன் வார்த்தையிறே. ''அநுகூலன்'' என்று அறிந்தவாறே ''நாம் தழைமுறித்திட்டாகிலும் கிடப்புதோம்; அவன் தறைக்கிடை கிடக்கிறான்'' என்கிறான்.

A திருப்பல்-1. B திருவாய் 6-7-1. C பெரியாழ்-திரு 5-1-4. D பெரிய திரு 9-3-9. E திருவாய் 4-8-9.

(மையிட்டெழுதோம்) A மையகண்ணாளிறே. இனி, அதுதனக்கு நிறங்கொடுக்கையிறே உள்ளது. அவனைக்கெடுக்கிறாள் காணும். இவர்கள் தொடங்கினலிறே அவன் குறையும் கற்பிப்பது; அவன் கிஞ்சித்காரத்துக்கு அவகாஶப்ரதாநம் பண்ணாமென்கிறார்கள். ஶேஷிக்குக் கிஞ்சித்கரியாதபோது ஶேஷத்வமில்லை. அவன் நிரபேக்ஷனாகையாலே கிஞ்சித்காரத்துக்கு இடமில்லை; இவன் ஸ்வரூபலாபத்துக்காகவே அவன் ஸாபேக்ஷரைப் போலே இவர்கள் கிஞ்சித்காரங் கொள்ளக்கடவன். இவன் ஶேஷத்வம் தன்னுடைய ஶேஷித்வத்திலே சேருகையாலே இது ஸ்வரூபாந்தர்கதம். (மலரிட்டு நாம் முடியோம்) B "சுரும்பார்குழற்கோதையிறே. அப்போதலர்ந்த செவ்விப்பூவினின்றும் வண்டுகள் கால்வாங்கி இவள் குழலிலே படியும்படியிறே திருக்குழலிற் செவ்வியிருப்பது. தான் "மாலைசூட" என்று தொடங்கினல், குறையும் அவன் வந்து சூட்டி அலங்கரிக்குமிறே; அதுக்கு அவனுக்கு அவகாஶம் வையோமென்கை. (நாம் முடியோம்) அவன்தானே வந்து சூட்டில் செய்யலாவதில்லையே.

(செய்யாதன செய்யோம்) வசநஸித்தமேயாகிலும் பூர்வர்கள் அநுஷ்டாநமேயொழிய வேறு செய்யக்கடவோமல்லோம். "ப்ரஸக்தத்துக்கிறே ப்ரதிஷேதமுள்ளது, இது இப்போதென்?" என்னில்; ஸ்வரூபகதநம். ஆழ்வான் "எங்கள் பூர்வர்கள் தேவதாந்தரபஜநம் பண்ணாமையாலே" என்றாணும். 1. "ப்ரதிபுத்தா ந ஸேவந்தே" இறே. ப்ராப்யப்ராபகங்கள் அவனேயாகிலும், அநாத்மகுணங்கள் தவிருகையும் ஆத்மகுணங்களுண்டாகையும் தவிராதே, சேதநனாகையாலே. 2, "ஸர்வ பூதாத்மகே தாத"— கார்யகாரணங்களினுடைய அநந்யத்வத்தைச் சொல்லுகிறது. 2. "ஜகந்நாதே," — ஜகத்துக்கும் அவனுக்கும் ஸம்பந்தம் ஶேஷஶேஷி பாவத்தாலேயென்கிறது. 2. "ஜகந்மயே" — ஶரீரஶரீரிபாவத்தாலே இஸ்ஸம்பந்தமென்கிறது. 2. "பரமாத்மநி" — இவற்றுக்குத்தான் வ்யாபகனானாற்போலே தனக்கு வ்யாபகாந்தரமில்லையென்கிறது. 2. "கோவிந்தே"— இவ்வைஶ்வர்யத்தைக்கொண்டு கடக்கவிராதே கிட்டநிற்குமவனென்கிறது. 2. "மித்ராமித்ரகதா குத:" — ஸம்பந்தம் இதுவானபின்பு மித்ரத்வ ப்ரதிஸம்பந்தியான அமித்ரத்வமுமில்லையென்கிறது. முக்தனுக்கு ததீயத்வாகாரத்தாலே லீலாவிபூதி உத்தேஶ்யமாகாநிற்கச்செய்தே த்யாஜ்யமுமாகிறதிறே. விபூதி மாத்ரமே உத்தேஶ்யமாமன்று, அவனுக்குத் தநுபூதரான ப்ரஹ்மாதிகளோடொக்க C "நீராய் நிலனாய்" என்கிறதுவும் உத்தேஶ்யமாமிறே. இவை ஆஶ்ரயணீயமானாலும் ஈஶ்வராபிமாநிகள் த்யாஜ்யரிறே. அக்நிஹோத்ராக்நிக்கும் ஶ்மஶாநாக்நிக்கும் அக்நிஸாம்யமுண்டாயிருக்கச்செய்தே, விதிதந்த்ரங்களிலே ஒன்று நிஷித்தமாகவும் ஒன்று ஶுத்தமாகவும் சொல்லாநின்றதிறே. இப்படி பூர்வர்கள் அநுஷ்டாநமுண்டிறே. 3 "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே ப்ராப்தி உண்டாகிலும் ஒருவர் ஒருவரை எழுப்பி, எல்லாரும் திரளவல்லது அவன் முன்பு நிற்கக்கடவோமல்லோம்; நாம் தனியே சென்று நிற்கில் வைரூப்யா

A திருவாய் 4-5-2. B நாச்-திரு 9-10. C திருவாய் 6-9-1.

வஹமாம். (செய்யாதன செய்யோம்) 1. ''ஸர்வாத்மநா பர்யநுநீயமாந:'' என்று இளையபெருமாளைப்போலேயும், சக்ரவர்த்திபும் பெருமாளும் கொடுக்கையாலே ராஜ்யம் பண்ணுகை ஶாஸ்த்ரார்த்த₂மாயிருக்க, ''இவ்வம்ஶத்தில் முறை தப்புவாரில்லை'' என்று ஸ்ரீப₄ரதாழ்வான் முடிக்கு இருப்த்தாப்போலேயும்.

(தீக்குறளை சென்றோதோம்) ''பேய்ப்பெண்ணே''(7) என்று வையவுங் கடவோம்; ''நாயகப்பெண்பிள்ளாய்''(7) என்று காலிலே விழவுங்கடவோம்; அவன் செவிப்படுத்தோம். பத்து மாஸம் சுற்றுமிருந்து ராக்ஷஸிகள் பண்ணின தர்ஜன ப₄ர்த்ஸநாதி₃களை ஏகாந்தத்திலும் பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்யாத பிராட்டியைப்போலே. (சென்றோதோம்) அவன்தான் கலந்து நின்று அறியுமாகில் செய்யலாவதில்லை. (சென்றோதோம) பிறர் செய்யுமவை அறிவிக்கச் சென்றாலும் அவன் முக₂த்தில் தண்ணளிகண்டால் அறிவிக்கவொண்ணாதபடியிருக்குமே. 2. ''ஸ ச நித்யம் ப்ரஸந்நாத்மா'' என்றிறேயிருப்பது.

(ஐயமும் பிச்சையும்) ப்ராப்தகாலங்களிலே ஆர்த்தரையும் யோக்₃யரையும் பார்த்து இடுமவை. (ஆந்தனையும்) அவர்கள் கொள்ளவல்லராந்தனையும் கொடுத்து. (கைகாட்டி) எல்லாம் கொடுத்தாலும், கொடுத்ததுண்டோ? என்றிருக்கை. அதாவது-ஒருவரையொருவர் எழுப்புகையும், அவர்களுக்கு ஸர்வஸ்வதா₃நமாகத் தங்களைக் கொடுக்கையும், எல்லாரையும் கொண்டுபோகையும், க்ருஷ்ணாநுப₄வம் பண்ணி வைக்கையும், இவையெல்லாம் செய்தாலும் ஒன்றும் செய்யப்பெற்றிலோமென்றிருக்கையும்.

(உய்யுமாறெண்ணி) 3. ''அஸந்நேவ ஸ ப₄வதி'' என்றிறே முன்பு கிடந்தது; 3. ''ஸந்தமேநம் ததோ விது₃:'' என்கிறபடியாகை. (எண்ணி உகந்து) மநோரத₂மே பிடித்துத் தித்தியாநிற்கும்போலே! A ''நின்புகழ்'' இத்யாதி₃. உன்னுடைய கல்யாணகு₃ணங்களை அநுஸந்தி₄க்கும் அநுஸந்த₄நத்தோடு ஒக்குமோ நீ போரப்பொலியக் கொடுக்கும் பரமபத₃ம்? B ''மாலே படிச்சோதி மாற்றேலினி— மறப்பின்மை யான் வேண்டும் மாடு.'' ''உகந்து — செய்யுங்கிரிசைகள் கேளீர்'' என்கிறார்கள். விதி₄பூர்வகமாகச் செய்கையன்றிக்கே ப்ரீதிபூர்வகமாகச் செய்கை. 2.

## ஈராயிரப்படி — இரண்டாம்பாட்டு

வ்யா:—இரண்டாம்பாட்டு. (வையத்து வாழ்வீர்காள்) வழியடியுண்கிற தே₃ஶத்திலே முடிவைத்துக்கொண்டிருக்கிற ப₄ாக்₃யவதிகாள்! க்ருஷிபண்ணும் பூ₄மியிலே ப₂லம் பு₄ஜிக்கப் பிறந்த ப₄ாக்₃யவதிகாள்!

(நாமும்) ''இந்தப்ப₂லம் நமக்கொருநாள் கைவரவற்றே?'' என்றிருந்த நாமும். அவனாலே அவனைப் பெறவிருக்கிற நாமும். (நம் பாவைக்கு) நம்முடைய நோன்புக்கு. ''இந்த்₃ரஜித்து நிகும்பிலையிலே ஹோமம் பண்ணினாற் போலேயன்றிக்கே சக்ரவர்த்தி நாலாஹுதி பண்ணி நாலு ரத்னத்தைப் பெற்றாற்போலே நமக்கொரு நோன்பு கூடுவதே'' என்று கொண்டாடுகிறார்கள். (செய்யும் கிரிசைகள்) செய்து தலைக்கட்டும் க்ரியைகள். (கேளீரோ) கேட்கைதானே உத்₃தே₃ஶ்யம். ஸ்ரீ நாரத₃

A பெரிய திருவ 53. B பெரிய திருவ 58.

பகவான் ஸ்ரீ ராமாயணத்துக்குப் போக்குவிட்டாற்போலே சொல்லியல்லது தரிக்கவொண்ணாதாயிருக்கிறபடி. இவள் ஆசார்யத்வம் ஆசைப்பட்டன்று; இவர்கள் "சொல்லாய்" என்னச் சொல்லுகிறிலள்.

(பாற்கடலுள் பையத்துயின்ற) திருப்பாற்கடலிலே ஆர்த்தருடைய ஆர்த்தநாதம் செவிப்படும்படி அவஹிதனாய்க்கொண்டு மெத்தெனக் கண் வளர்ந்தருளினபடி; ஜகத்ரக்ஷண சிந்தையிறே. (துயின்ற பரமன்) உறக்கத்துக்கு ஆலத்திவழிக்க வேண்டியிருக்கை. A "நம் பாற்கடல் சேர்ந்த பரமன்" இறே. B "கிடந்ததோர் கிடக்கை"யிறே. அநாஶ்ரிதர்க்குப் புலியுறங்கினாற்போலே, ஆஶ்ரிதர்க்கு என்றும் அபயமாயிருக்கும். தொட்டிற்காற்கடையிலே படுத்துக் கொள்ளும் தாயைப்போலே ஸம்ஸாரார்ணவத்தின் நடுவே கிடக்கை. (பரமன்) தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே திருவநந்தாழ்வான் மேலே சாய்ந்தபின்பு நிறம் பெற்றபடி.

(பரமனடிபாடி நெய்யுண்ணோம் பாலுண்ணோம்) உண்டார்க்கு உண்ண வேணுமோ? பாலைக்குடித்து வேப்பங்காயைத் தின்னவேணுமோ? ஆனால் க்ருஷ்ணனைச் சொல்லாதே க்ஷீரார்ணவஶாயியைச் சொல்லுவானென்னென்னில்: கோபவ்ருத்தர்கள் தளும்பாமைக்காக ஒரு தேவதையின் பேரையிட்டுச் சொல்லுகிறார்கள்.

(நெய்யுண்ணோம் பாலுண்ணோம்) திருவடிகளைப் பாடுகையாலே தெகுட்டி இவற்றால் கார்யமின்றிக்கேயிருக்கை. "நெய்யுண்ணோம்" என்கிறது—க்ருஷ்ணன் பிறந்த பின்பு முதலிலே வ்யுத்பத்தியில்லாமை. (நெய்யுண்ணோம்)பாலில் ஸாரமான நெய்யைத் தவிர்த்தவர்கள் பாலைத் தவிர்க்கக் கேட்க வேணுமோ? (நாட்காலே நீராடி) 1. "ப்ராஹ்மே முஹூர்த்தே" இத்யாதிப்படியே ராம விரஹத்தாலே பிறந்த வெக்கையை ஆற்றுகைக்காக ஸ்ரீபரதாழ்வான் நீராட்டுப்போலே க்ருஷ்ண விரஹம் தின்ற உடம்பை நீரிலே தோய்க்கவென்கிறார்கள். ஸாத்விகாக்ரேஸரர் எழுந்திருக்குமாபோலே எழுந்திருக்கை.

(மையிட்டெழுதோம்) அஸிதேக்ஷணைகளாகையாலே வேண்டுவதில்லை. அஞ்ஜநபர்வதத்தின் அந்தராத்மாவைப் பிடித்தாய்த்துக் கொள்ளீர் இவள் மையெழுதுவது. (மலரிட்டு நாம் முடியோம்) மாலை முடியோம். பறப்பதின் குட்டி தவழுமோ? C சூடிக்களைந்தன சூடுவர்களிறே. மாலாகாரர்மகளிறே.

(செய்யாதன செய்யோம்) விதியுண்டேயாகிலும் பூர்வர்களாசரித்தபடியை யொழிய செய்யக்கடவோமல்லோம். "முடி சூடுகை ஶிஷ்டாசாரமல்ல" என்றிருந்த பரதாழ்வானைப்போலே பஞ்சலக்ஷம் குடியிலே உள்ள பெண்களிலே ஒருத்தி குறையிலும் க்ருஷ்ணன் பக்கல் போகோமென்கிறார்கள். (தீக்குறளை சென்றோதோம்) நம்மில் நாம் "பேய்ப் பெண்ணே" (7)என்று சொன்னோமாகிலும் க்ருஷ்ணன் செவிகேட்க ஒரு குறைசொல்லோம். ஸ்ரீ வைஷ்ணவர்கள்பக்கல் தோஷங்கண்டால் கண்டது நெஞ்சோடே கூட்டோமென்கிறார்கள். நெஞ்சோடே கூட்டுகை யாவது—அவனுக்குச் சொல்லுகை. D "என் நெஞ்சகம் கோயில் கொண்ட" இறே. அந்தர்யாமியிறே. E "என் நெஞ்சு நிறையப் புகுந்தான்" இறே. ஆகையாலே நெஞ்சோடே கூட்டோமென்கிறார்கள்.

---

A திருவாய் 3-7-1 B திருமாலை 23 C திருப்பல் 9 D பெரியதிரு 9-5-10
E திருவாய் 10-8-1 .

(ஐயமும் பிச்சையும்) முகந்து இடுகையும், பிடித்து இடுகையும்; ஐயமாவது-
யோக்₃யருக்கு இடுமது. பிச்சையாவது—ஸந்யாஸிகளுக்கு இடுமது. (ஆந்தனை-
யும்) கொள்வாரைப் பெறுந்தனையும்; கொடுக்கக் கொள்ளுவார் கொள்ளவல்ல-
ராந்தனையும். (கைகாட்டி) எல்லாம் கொடுத்தாலும் "நாம் கொடுத்ததுண்டோ?"
என்று அத்தை அநாத₃ரிக்கை. ஔதா₃ர்யத்தின் மிகுதியிருக்கிறபடி. (உய்யுமா-
றெண்ணி) இப்படிகளாலே பிழைக்கும் விரகெண்ணி. (உகந்து) ப்ரீதைகளாய்,
(எண்ணியுகந்து) அநுப₄விக்கும்படியை மநோரதி₂த்து; "உகந்து செய்யும்
கிரிசைகள் கேளீரோ" என்று அந்வயம்.

## நாலாயிரப்படி—இரண்டாம் பாட்டு.

2. அவ:— இரண்டாம் பாட்டு. விடுமவற்றை விடுகையும் செய்யுமவற்றைச்
செய்கையும் இரண்டும் ப்ரியமாகையாலே க்ருத்யாக்ருத்யவிவேகம் பண்ணுகிறது.

வ்யா:—(வையத்து வாழ்வீர்காள்) A "கொடுவுலகம்" என்ற இவ்விடத்தே வாழப்
பெற்ற பா₄க்₃யவதிகாள்! "இங்கேயிருந்து ப்ராக்ருதபோ₄க₃ங்களை பு₄ஜிக்கிற உங்க-
ளுக்கு மேல்சொல்லுகிற அப்ராக்ருதபோ₄க₃ம் இவ்வுடம்போடே ஸித்₃தி₄ப்பதே!" என்-
கிறார்கள். இங்கே க்ருஷ்ண கு₃ணங்கள் ஆழமோழையாய்ச் செல்லாநிற்க, வானிலே
போய்ச்சிறையிராதே. அந்த இருப்பு தட்டிலிருப்பாரைப் போலே; இது ராஜ்ய-
ப்ராப்திபோலே. அவன் காற்கடைக் கொண்ட பரமபத₃மொழிய இங்கே பிறக்கப்
பெற்றிகோளே! என்கிறது. 1, "அயோத்₄யாமடவீம் வித்₃தி₄". (வாழ்வீர்காள்) திரு-
வயோத்₄யையில் உள்ளாரைப்போலே வாழக்கோலிப் ப₄லையாண்டு தரைக்கிடை
கிடந்தாற்போலே கிடத்தல், அவர்களைப்போலே வாரிப்பிடியாகப் பிடியுண்டுபோய்
அநர்த்த₂ப்பட்டாற்போலே படுதல் செய்யாதே அவனோடொக்கப் பிறந்த பா₄க்₃யவதி-
களன்றோ. திருவடி 2. "பா₄வோ நாந்யத்ர க₃ச்ச₂தி" என்றிலனோ? B "அச்சுவை
பெறினும் வேண்டேன்" என்றும், C "வானுயரின்பம்" என்றும் அவ்விடம் இவர்-
களுக்கு ஸம்ஸாரமாய்த்து; அவனிருந்தவிடத்தே வாழலாமித்தனையிறே; சேதன-
னுக்கு அரியதானவிடம்; இவ்விடம் அவன்தானே வந்து தன்னைப் பெறுகிறவிட-
மான தன்னேற்றமுண்டு. D "உயர்வறவுயர் நலமுடையவன்" என்றபோது தெளி-
வோடேயிருந்தார். E "உரலினோடிணைந்திருந்தேங்கிய எளிவு" என்றபோது
E "எத்திறம்" என்று மோஹித்தார். தெளியப்பண்ணும் விஷயமே மோஹிக்கப்
பண்ணும். விஷயமோ சீரியது; அங்கு அவனைத் தொழுமித்தனை. இங்கு, F "தொழுகை-
யும் இவைகண்ட அசோதை தொல்லையின்பத்திறுதிகண்டாளே" என்று அவன்
தொழவும் காணலாம்; ஆகையாலேயன்றோ இங்குள்ளார் G "விண்ணுளாரிலும் சீரிய-
ராய்த்து. 'வாழ்வீர்காள்' என்கிற பன்மையாலே ஒரு விபூ₄தியாக ப₄க₃வத₃நு-
ப₄வமே யாத்ரையாயிருக்குமாபோலே, ஊராக இதுவே யாத்ரையாயிருக்கை. H "அடியோ-
மோடும் நின்னோடும்". I. "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்" என்று கூட்டுத்தேடி-
னார் தமப்பனார்; இவளுக்கு இங்கே வாழுகைக்குக் குழாங்களுண்டானபடி. 3. "ஏகாம்

A திருவாய் 4-9-7 B திருமாலை 2 C திருவாய் 8-1-9 D திருவாய் 1-1-1 E திருவாய் 1-3-1 F பெருதிரு 7-8 G திருவிருத்தம் 79 H திருப்பல் 2 I திருப்பல் 3.

தர்மிமார்களே" என்று நீங்களும் அவனும் ஒரு மண்ணிலே பிறக்கப்பெற்றி கோளே என்றுமாம். க்ருஷ்ணனொளிக்கவேண்டும் ஆணாகாதே பெண்ணாகப்பெற்றி கோளே! அதுக்குமேலே பருவங்கழிந்த பெண்களாகாதே அவனுக்கும் பருவத்தில் பெண்ணாகப் பெற்றிகோளே! என்றுமாம்.

(நாமும்) நமக்கும் சில க்ருத்யாக்ருத்யங்களுண்டு; உபாயோபேயங்கள் அவனே யாகையாலே இவை அவற்றில் புகாது. வேறொன்றைக் கொண்டு போதுபோக்க வொண்ணாது; ருசி கிடந்தவிடத்தில் கிடக்கவொட்டாது. (நாமும்) அதனாலே அல மருகிற நாமும். 'நாராயணனே உபாயம்' என்று அறுதியிட்டு, A "இன்று வந்தித் தனையும் அமுது செய்திடப்பெறில் நானொன்று நூறாயிரமாக் கொடுத்துப் பின்னு மாளும் செய்வன்" என்று பேற்றை அறுதியிட்ட நாமும்.

(நம்பாவைக்கு) அவனையும் அவனுடைமையையும் அழிக்க நினைத்த இந்த்ர ஜித்தின் நோன்புபோலன்றியே அவனையும் அவனுடையாரையும் உண்டாக்கும் நோன்பு. பெண்களையும் அவனையும் எழுப்பிக் கூட்டி ஓலக்கமிருத்திக் காண்கையே ப்ரயோஜனமாயிருக்கை. பெரிய திருவடியைப்போலே ஸாத்யமே ஸாதநமாயிருக்கை. B "தூயவமுதைப் பருகிப் பருகி என்மாயப் பிறவி மயர்வறுத்தேனே". தர்மம் மேல் பலம் தருமதாயிருக்கை. 1. "ஸுஸுகம் கர்த்தும்" — கைக்கூலி கொடுக்கவேண்டி யிருக்கை; கரும்பு தின்னக் கருப்புக்கட்டி கூலியாமாபோலே. 1. "அவ் யயம்"—'தன்னையும் உபயவிபூதியையும் கொடுத்தாலும் போராது இவன் பண்ணின உபகாரத்துக்கு' என்று இவன் பண்ணின அஞ்ஜலியை நினைத்திருக்கை; 2. "ருணம் ப்ரவ்ருத்தமிவ மே" 3. "ந ஜாது ஹீயதே"

(செய்யும் கிரிசைகள்) விஹிதத்திலே ப்ரதிஷேதமுள்ளது; இச்சைக்கு விதேயத்வமுண்டோ? நாமுகந்து செய்யும் க்ருத்யங்கள். (செய்யும் கிரிசைகள்) மடல்போலே காட்டி நடுவே விடுவதல்ல; செய்து தலைக்கட்டியே விடவேணும். (கேளீரோ) 'க்ருஷ்ணனையும் நம்மையும் சேர ஸம்மதிப்பதே! இதொரு லாபமே!' என்று இத்தைக் கொண்டாட; 'மேய்ச்சல் தரையிலே அசையிடாதே இத்தைக் கொள்ளுங்கோள்' என்கை: 4, "ஸ்ரூயதாமிதி சாமந்த்ர்ய ப்ரஹ்ருஷ்டோ வாக்யமப்ரவீத்" என்று தொடங்கி 5. "புருஷார்த்தோயமேவைகோ யத்கதாஸ்ரவணம் ஹரே:" என்னுமளவும் மஹா பாரதத்திலே ஸபாதலக்ஷக்ரந்தத்திலும் தர்மார்த்த காமமோக்ஷங்களைச் சொல்லி, 'இவற்றில் நீ எது புருஷார்த்தமாயிருந்தாய்' என்று வைஸம்பாயந பகவான் தன் ஸிஷ்யனான ஜனமேஜயனைக் கேட்க, 'நீ பகவத்குணங்களைச் சொல்லி, நான் கேட்கும தொன்றுமே புருஷார்த்தமாக நினைத்திருந்தேன்' என்றான். (கேளீரோ) இழிந்த துறை தோறும் ஆழங்கால். அவர்கள் கேட்க க்ஷமரல்லர். இவள் சொல்லாதிருக்க க்ஷமை யல்லள். இவள் ஆசார்யத்வம் ஆசைப்பட்டல்ல. அவர்கள் அறியாது கேட்கையல்ல. 6. 'போதயந்த: பரஸ்பரம்" பண்ண; 7. "ஸம்ஸ்ரவே மதுரம் வாக்யம்"

உங்கள் வயிறுவளர்க்க அமையுமோ? என்ன; "சொல்லீரோ" என்றார்கள். (பாற்கடலுள் பையத்துயின்ற) கீழ் 'நாராயணன்' (1) என்றது; இங்கு அவன் கிடந்தபடி சொல்லுகிறது. 8. "ஸ்தா பஸ்யந்தி" என்று தன்னைப் பிரியில் வாடுமவர்களை விட்டுப்

---

A நாச்-திரு 9-7. B திருவாய் 1-7-3.

யுடைய எம்பெருமானுடைய திருக்கையிலேயிருக்கிற திருவாழியாழ்வானைப் போலே, காருண்யஸ்ருஷ்டிக்குக் கடவரான எம்பெருமானுரை யோகபலத்தாலே ஸாக்ஷாத்கரிக்கையால் வந்த மிக்க புகரையுடையராய். (வலம்புரிபோல் நின்று அதிர்ந்து) இவ்விடத்திலேயும் ''பற்பநாபன் கையில்'' என்று அநுஷங்கிக்க வேணும். அவன் கையில் வர்த்திக்கும் ஸ்ரீ பாஞ்சஜந்யம்போலே இடைவிடாமல் த்வநித்து; அதாவது-ப்ரணவார்த்தத்தை அனைவரும் அறியும்படி திருவாய் மொழிமுகத்தாலே வெளியிட்டு அருளிச்செய்கை.

(தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல்) ப்ரவிச்சிந்நமாக ஸார்ங்கம் வர்ஷித்த பாணவர்ஷம்போலே. ப்ரணவத்தில் ஸேஷஸேஷிபாவ ஸம்பந்த ப்ரயுக்தமான பகவத்காருண்ய வர்ஷத்தை. (வாழ) லௌகிகரெல்லாரும் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்து வாழும்படி. (உலகினில்) லௌகிகரிடங்களிலே. (பெய்திடாய்) பகவத்குணகதாம்ருதத்தை வர்ஷிக்கக்கடவாய்.

(நாங்களும் மார்கழி நீராட) பகவத்கைங்கர்யைகபோகரான நாங்களும், ''நோன்பு'' என்கிற வ்யாஜத்தாலே பகவத்ஸம்ஸ்லேஷத்தைப் பண்ணி. (மகிழ்ந்து) மகிழக்கடவோம். அதாவது-''பகவதநுபவஸ்ஹகாரிகள் இத்தனை பேருண்டாவதே!'' என்று அவர்களோடு கலந்து பகவதநுபவத்தைப்பண்ணி ஆநந்திக்கை.

இப்பாட்டில், வர்ஷதேவதைக்கு அவன் அதிகரித்த கார்யத்தையே தங்களுக்கு இஷ்டமாக நியமிக்கையாலே, பகவத்பாகவத் இஷ்டத்வேத நித்யநைமித்திகாதி தர்மங்களை யதாவாக அநுஷ்டிக்கை, ப்ரபந்நாதிகாரிகளுக்கு ஆவஸ்யகமென்றதாய்த்து. 4.

## மூவாயிரப்படி — அஞ்சாம்பாட்டு

அவதாரிகை :— அஞ்சாம்பாட்டு:— a பெண்பிள்ளைகளிலே ஒருத்தி, ''நாம் இப்படியே கன்க்கப்பாரித்துக்கொண்டு இழியாநின்றோம்; நமக்குத்தான் இது தலைக்கட்டுகைக்கு a2 விஸ்வாஸமென்? அநாதிகால ஸஞ்சிதமான கர்மங்கள் இதுக்கு விரோதத்தைப் பண்ணாதோ? a3 1. ''ஸ்ரேயாம்ஸி பஹுவிக்நாநி'' அன்றோ?'' என்று ப்ரஸ்நம்பண்ண; அவர்களிலே வேதாந்தஜ்ஞாநமுடையா ளொருத்தி ''நாம் நம்முடைய விரோதிகளைப் போக்கிக்கொண்டு வந்து இதிலேயிழிகையென்று ஒரு பொருளில்லை; நமக்கு அடைத்த பகவதநுபவத்தைப்

---

பெ. அ. அஞ்சாம்பாட்டு (மாயனை இத்யாதி) a ''செப்பு'' என்று – ஒருத்தியைப் பார்த்துச் சொல்லுகிறதாக இருக்கிற பாசுரத்துக்குச் சேரவேண்டி, ஒருத்தி ப்ரஸ்நம் பண்ணினதாகவும், அவனைக்குறித்துப் பலர் சொல்லுமளவில் பலமிட்ருக்கையால் விஸதமாகத் தெரியாதென்று ஒருத்தியே சொன்னளாகவும் பூர்வம் அருளிச்செய்கிருர் (பெண்பிள்ளைகளிலே இத்யாதி) a2 விஸ்வாஸமென் – நிஸ்சயஹேதுவென்? a3 'பஹுவிக்நாநியன்றோ' என்றதுக்கு- சக்ரவர்த்தித் திருமகன் திருவபிஷேகத்துக்கு வஸிஷ்டன் முஹூர்த்தமிட்டவும், பாக்யாதிகரான பெருமாள் முடிசூட இருக்கவும், ஜகத்தடைய 2.'' ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி'' என்று ப்ரார்த்திக்கவும், பெரியபெருமாள் ஆஸ்ரயணீயராயிருக்கவும், 1. ஸ்ரேயாம்ஸி பஹுவிக்நாநி பவந்தி மஹதாமபி'' என்று அங்கும் விக்நம்வந்தபடி கண்டோமே

## ஐந்தாம் பாட்டு

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்று மணிவிளக்கைத்
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனைத்
தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்.

பதவுரை:—மாயனை—ஆச்சரியமான செயல்களை உடையவனும், மன்னு வடமதுரை மைந்தனை (நித்யமான ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄த்தாலே) விளங்காநின்றுள்ள வடமதுரைக்கு அரசனும், தூய பெரு நீர்—பரிசுத்தமானதும், ஆழம் மிக்கிருப்பதுமான நீரையுடைய, யமுனைத் துறைவனை—யமுனைக்கரையிலே விளையாடுபவனும், ஆயர் குலத்தினில் தோன்றும்—இடைக்குலத்தில் திருவவதரித்த, அணி விளக்கை—மங்க₃ளதீ₃பம் போன்றவனும், தாயை குடல் விளக்கம் செய்த—தாயாகிய யசோதைப்பிராட்டியின் திருவயிற்றை விளங்கச் செய்த, தாமோதரனை—(கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய) எம்பிரானை, நாம்—(அவனால் அநுகத்தக்க) நாம், தூயோம் ஆய் வந்து—பரிசுத்தர்களாகக் கிட்டி, தூ மலர் தூவி — நல்ல மலர்களைத் தூவி, தொழுது — வணங்கி, வாயினால் பாடி — வாயாரப்பாடி, மனத்தினால் சிந்திக்க — மனத்தாலே தியானிக்க, போய பிழையும் — (ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄முண்டாவதற்கு) முன்செய்த பாபங்களும், புகுதருவான் நின்றனவும்— பின்பு (நம்மையறியாமல்) வருபவையும், தீயினில் தூசு ஆகும் — நெருப்பிலிட்ட பஞ்சு போலே உருவழிந்துபோகும்; செப்பு—(ஆகையாலே) அவனைப்பாடு.

பண்ணுநின்றால், b சேர்பால் பே₄ாக₃ரூபமாகப் பருகுமவனுக்குத் தன்னடையே பித்தம் போமாபோலே, இவை c தன்னடையே விட்டு ஓடிப்போம்; ஆனபின்பு, இனி அயோக்₃யதையைப் பார்த்து d அகலவேண்டா'' என்கிறாள்.

e ''மாயனைமன்னு வடமதுரை மைந்தனைத் தூயபெருநீர்யமுனைத் துறைவனை ஆயர்குலத்தினில் தோன்று மணிவிளக்கைத் தாயைக் குடல்விளக்கஞ்செய்த தாமோதரனைச் செப்பு; போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்'' என்கிறாள்.

பெ.அ. யென்று கருத்து. b சேர்பால்- குழம்புப்பால். c (தன்னடையே விட்டு ஓடிப்போம்) என்றதுக்கு - எம்பெருமான் தன் ஸங்கல்பத்தை அழியமாறி ஸ்ரீபீ₄ஷ்மார்ஜு₂நஸங்கல்பத்தை முடிய நடத்துமவனாகையாலே, நாம் இம்மஹோத்ஸவத்திலே அதி₄கரித்துச் செல்லாநிற்கவே அதுக்கு விக்₄நங்களைத் தன்னடையே போக்குமென்று கருத்து. பெருமாள் தாம் முடி தவிர்ந்தது, மஹாராஜர்க்கும்ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானுக்கும் முடிசூட்டுகைக்காக என்று கண்டுகொள்வது.

d. e ''அகலவேண்டா என்கிறாள்'' என்றத்தை அந்வயமுகே₂ந விவரிக்கிறார் (மாயனை இத்யாதி₃) ''செப்பு'' என்றது - பாடு என்றாய், அது உபலக்ஷணமாய், தூமலர் தூவித்தொழுது, பாடு - சிந்தி என்றபடி. ''செப்பு'' என்ற அநந்தரம், ''தூயோமாய்'' இத்யாதி₃யையும் கூட்டிக்கொள்வது. ஏல் - இப்படி, எம்பாவாய் - எம்வார்த்தையைப் பின் சென்று, ஓர் - த்₃ருட₄மாக விசாரித்துக்கொள். அன்றிக்கே, ஏல்பாவாய் - வாராய் பெண்ணே! ஓர் - நன்றாக பு₃த்₃தி₄பண்ணு என்று இங்ஙனேயாகவுமாம்.

f ''மாயன்'' என்றதுக்கு - க்ருத்ரிமனென்று சொல்லுகை ப்ரக்ருதத்துக்குச் சேராமையாலே ஆச்சர்யபூ₄தனென்று திருவுள்ளம்பற்றி, ஈடுபாடாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பரமபத₃த்திலே இத்யாதி₃) g க்ருஷ்ணாவதாரத்திலே ப்ரவணரான இவர்கள் பரமபத₃த்திலிருப்பை நினைக்க ப்ரஸக்தி ஏதென்ன

வ்யாக்2யானம்:— (மாயனை) f பரமபத3த்திலே A அயர்வறுமமரர்களதிபதி யாய்க்கொண்டு தன் ஐஶ்வர்யவ்யாவ்ருத்தி தோற்றவிருக்கும் இருப்பை நினைத்து, அதுதான் வாசாமகோ3சரமாயிருக்கையாலே "மாயன்" என்கிறது. g க்ருஷ்ணாவதாரத்தில் நீர்மை தங்களுக்கு நிலமல்லாமையாலே பரமபத3த்திலே அநுப4விக்கக்கோலி, அதுதானும் நிலமல்லாமையாலே B "எத்திறம்!" என்கிறார்கள். (மாயனை) h ஒருருக்குத் தன்னைக் கொடுத்த நீர்மையிறே இது; ஒரு நாட்டுக்காகத் தன்னைக் கொடுத்துக் கொண்டிருக்கிற நீர்மையாகையாலே ஏற்றமுண்டே அங்குத்தைக்கு. i அன்றிக்கே, i2 1. "ஜாதோऽஸி தே3வதே3வேஶ ஶங்க2சக்ரக3தா3த4ர" என்கிறபடியே நித்ய ஸூரிகளுக்கும் நேர்நின்று பார்க்கவொண்ணாத நிரங்குஶ ஐஶ்வர்யத்தையுடையவன்கிடீர் அவதரித்தான் என்று, அவதாரஸௌலப்4யத்தை அநுஸந்தி4த்து அந்த ஆஶ்சர்யத்தைச் சொல்லுவதற்கு முன்பே ஆழங்காற்பட்டு B "எத்திறம்!" என்கிறார்களாகவுமாம். (ஜாதோஸி) J தே3வகிவயிற்றில் பன்னிரண்டுமாஸம் குடியிருந்துபிறந்த பிள்ளைத்தனத்தில் J2 குறைவறப் பிறந்தவனுக்கும் இல்லைசெய்யவொண்ணாதபடி மூதலித்துக்கொடுக்கலாயிருக்கை. (தே3வதே3வேஶ) k இப்படி

---

பெ. அ. அருளிச்செய்கிறார் (க்ருஷ்ண இத்யாதி3) h பரமபத3த்தில் நீர்மையை அநுஸந்தி4த்து ஈடுபடுகிறார்களென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஒருருக்குஇத்யாதி3) i2, J 1. "ஜாதோऽஸி தே3வதே3வேஶ ஶங்க2சக்ரக3தா3த4ர। தி3வ்யம் ரூபமித3ம் தே3வ ப்ரஸாதே3நோபஸம்ஹர ॥" "தே3வ இத3ம் ரூபம் உபஸம்ஹர" என்று - இவ்வளவே சொல்ல அமைந்திருக்க, "ஜாதோऽஸி" என்று பிறந்திருக்குமதைச் சொல்லுகைக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தே3வகி இத்யாதி3) "நான் உன்மந்த்ரத்தில் பிறக்கையால் கம்ஸாத்3பீ4தனாய் உபஸம்ஹரிக்கச் சொல்லாநின்றாய்; இந்த தி3வ்யரூபம் ஏது? மநுஷ்யரூபமேது? நான் உன் க்3ருஹத்திலே பிறக்கையென்று ஒரு பொருளுண்டோ?" என்று இல்லைசெய்யப்போகிறானென்று வஸுதே3வர் மூதலித்துக் கொடுக்கிறாரென்று கருத்து. k "தே3வதே3வேஶ" என்றவிடத்தில் இரண்டு தே3வபத3மிருக்கையாலே முந்தினது 2. "தீ3வ்யந்தீதி-தே3வா:" என்கிற வ்யுத்பத்தியாலே ஸநாதநத்3யோதமாநத்வம் த4ாத்வர்த்த2மாய், ஆக்கரான தே3வர்களைச் சொல்லுகையன்றிக்கே அகர்ம

---

சி. அ. அஞ்சாம்பாட்டு (மாயனை இத்யாதி3) f, g பரத்வம் சொல்லி க்ருஷ்ணனுடைய ஸௌலப்4யம் சொல்ல வேண்டுகையாலே "மாயன்" என்றதுக்கு முந்தின அர்த்த2ம் பரத்வம், இரண்டாமர்த்த2ம் பரமபத3நாத2னுடைய ஸௌலப்4யம். அவ்விரண்டையும் சொல்லுகிறது (க்ருஷ்ணாவதாரத்திலே இத்யாதி3) f பரனானவனுடைய ஸௌலப்4யமே அதிஶயகரமாகையாலே "மாயன்" என்று பரத்வம் சொல்லுகிறது என்று முந்தின பொருள். g க்ருஷ்ணாவதாரத்தின் நீர்மை தங்களுடைய பேச்சுக்கு நிலமல்லாமையாலே பரமபத3நாத2னுடைய ஸௌலப்4யம் சொல்லுகிறதென்று இரண்டாமர்த்த2ம். i (அன்றிக்கே)என்கிற வாக்யம் க்ருஷ்ணனுடைய ஸௌலப்4யம் சொல்லுகிறது. ஆக "மாயன்" என்றதுக்கு மூன்று தாத்பர்யம், j2 "அஸி" என்றதுக்குத்தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பிறந்

---

கு. அ. அஞ்சாம்பாட்டு (மாயனித்யாதி3) i2, j2 (ஜாதோஸி குறைவற) இத்யாதி3 வாக்யத்துக்குத்தாத்பர்யம் குறையில்லாதபடி பிறந்த பிறவியை, பிறந்த ஸர்வேஶ்வரனாலே இல்லைசெய்யவொண்ணாதபடி என்றபடி. 5.

---

A திருவாய் 1-1-1. B திருவாய் 1-3-1.

யிருக்கிறவன் ஆரென்னில்: ஒருகாலத்திலும் கர்மஸ்பர்ஶமில்லாத நித்யஸூரி பரிஷந் $k_1$ நிர்வாஹகனை $k_1$ A அயர்வறுமமரர்களதிபதி என்கை. அது அறிந்த படி என்னென்னில், (ஶங்க2சக்ரக3தா3தா4ர) 1. "தமஸ: பரமோ தா4தா ஶங்க2சக்ர க3தா3த4ர:" என்று । பரமபத3நிலயமுமாய் ஸூரிநிர்வாஹகமுமான வஸ்துவுக்கு அஸாதா4ரண சிஹ்நமான ஆழ்வார்களோடே அவதரிக்கையாலே.

m (மன்னுவடமதுரை) n ப4க3வத்ஸம்ப3ந்த4ம் மாருத தே3ஶம். $n_2$ முன்பு ஸித்3தா4ஶ்ரமமாய் ஸ்ரீவாமநன் நெடுங்காலம் தபஸ்பண்ணி, ஶத்ருக்4நாழ்வான் வன்னியமறுத்துப் படைவீடுசெய்து, ஸர்வேஶ்வரன் எப்போதும் இப்படி அவதரித்துப் போருவதொரு தே3ஶம். (வடமதுரை) o 2. "மது4ரா நாம நக3ரீ புண்யா பாபஹரீ ஶுபா4 । யஸ்யாம் ஜாதோ ஜக3ந்நாதே2ா ஸாக்ஷாத்3 விஷ்ணு: ஸநாதந: ।" (மது4ரா நாம) B "நலமந்தமில்லதோர்நாடு" என்னுமாபோலே; பரமபத3ம்போலே போ4க்3யதையால் ப்ரஸித்3த4மான ஊர். (நக3ரீ) பரமபத3ம் $o_2$ கலவிருக்கை என்னும்படி பிறந்து விரும்பின படைவீடு. (புண்யா) அவனைத்தருகைக்குஉபாயமாகை. (பாபஹரீ) விரோதி4நிரஸநத்துக்கும் தானேயாகை. (ஶுபா4) ப்ராப்யமும் தானேயாகை. (யஸ்யாம் ஜாத;)இத்தனைக்கும் அடி திருவவதரித்தருளுகை. (ஜக3ந்நாத2:) தன் ப்ரஜைகள்பட்ட ஆபத்தை நீக்குகைக்கு அவர்களை இழக்கமாட்டாமல் பிறந்தபடி. (ஸாக்ஷாத்) C "அங்குவைத்து இங்குப்பிறந்த" என்னுமாபோலே அஜஹத்ஸ்வபா4வனாய்க்கொண்டு. (விஷ்ணு:) வ்யாபகவஸ்து வ்யாப்யைகதே3ஶத்திலே அந்தர்ப்ப4வித்தபடி. (ஸநாதந:) நித்யனானவன் ஆஶ்ரிதஸஜாதீயனாய்ப்

---

பெ.அ. வஶ்யரைச் சொல்லுகிறதென்றும், இரண்டாம் தே3வபத3ம் 3. "தே3வயதி மோத3யதி" என்கிற வ்யுத்பத்தியை அவலம்பி3த்து ஆநந்த3ஜநகத்வத்தாலே வந்த நிர்வாஹகத்வத்தைச் சொல்லுகிறதென்றும், ஈஶபத2ம் - இந்த நித்யஸூரிகளுக்கு ஸ்வாமி என்னும் அர்த்த2த்தைச் சொல்லுகிறதென்றும் 4. "தே3வஶ்சாஸாவீஶஶ்ச தே3வேஶ:. தே3வாநாம் தே3வேஶ: தே3வதே3வேஶ:" என்று திருவுள்ளம்பற்றி ஶங்காபூர்வகமாக அர்த்த2ம் அருளிச்செய்கிறார் (இப்படி இத்யாதி3) $k_2$ இரண்டாம் தே3வ பத3ார்த்த2ம் (நிர்வாஹகனை என்றது) $k_3$ ஈஶபத3ார்த்த2ம் (அயர்வறுமித்யாதி3) 1. (தமஸ: பரம:) ப்ரக்ருதிமண்ட3லத்துக்கும் அவ்வருகேயிருக்குமவன். 1.(தா4தா) ஸ்வாநுப4வப்ரதா3நத்தாலே அங்குள்ளாரை த4ரிப்பிக்குமவனென்னுதல்; போஷிக்குமவனென்னுதல். "டுதா4ஞ்-தா4ரண போஷணயோ:" என்றிறே தா4து. இத்தால்-தே3வதே3வத்வம் சொல்லிற்றாய்த்து; । இத்தைச் சொல்லுகிறார் (பரமபத3 நிலயமுமாய் ஸூரிநிர்வாஹகமுமான வஸ்துவுக்கு என்று.) m, n "மன்னு" என்றதுக்கு - வர்த்தி4க்கப்பட்ட என்று அர்த்த2மாய், ப2லிதார்த்த2ம் அருளிச்செய்கிறார் (ப4க3வதி3த்யாதி3) o D "மல்லைமூதூர்வடமதுரை" என்று ஆழ்வார் ஈடுபடுமாபோலே, இவர்களும் "மன்னுவடமதுரை" என்று ஈடுபடுகிறார்களென்று திருவுள்ளம் பற்றி, ரிஷி ஈடுபட்டமையை ஸம்வாத3மாக அருளிச்செய்கிறார் (மது4ரா நாம இத்யாதி3)

---

சி.அ. தவனுக்குமித்யாதி3) m, n "மன்னு வட மதுரை" ப4க3வத்ஸம்ப3ந்த4த்தோடே கூடின வட மதுரை என்று பொருள். $n_2$ அத்தை உபபாதி3க்கிறார் (முன்பு இத்யாதி3) o "மது4ரா" என்கையாலே போ4க்3யத்வம் "நாம" ப்ரஸித்3தி4 $o_2$ (கலவிருக்கை) ஓலக்கமிருக்கை.

---

A திருவாய் 1-1-1 B திருவாய் 2-8-4 C திருவாய் 3-5-5 D திருவாய் 9-1-6

பிறந்த மெய்ப்பாடு. p (மைந்தனை) q மிடுக்கனை; A ''தந்தைகாலிற் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட்கண், வந்தவெந்தை'' என்று மாதாபிதாக்கள்காலில் விலங்கு கழலவந்து திருவவதரித்தபடி. r பிள்ளை யென்றுமாம்; s திருவவதரித்து எனக்கு உபகரித்தபின்பு இளகிப் பதித்தபடியாதல்; t ராஜாவென்றுமாம். u தன்னழகைக்காட்டி இருந்ததே குடியாக்த் தன்வஶமாக்கினபடி.

(தூயபெருநீர்யமுனைத்துறைவனை) v விரஜைபோலே $v_2$ போந்தவிடத்துக்கு ஓராறு உண்டானபடி. $v_3$ (தூய) 1. ''வஸுதே2வோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோத3கோ யயௌ'' என்று ஸ்ரீவஸுதே2வர் எழுந்தருளுவித்துக்கொண்டு போகிற போது பாங்காக $v_4$ வற்றிக்கொடுத்தபடி. w க்ருஷ்ணனும், பெண்களும் மாறிமாறிக் கொப்பளிக்கையாலேவந்த தூய்மையாகவுமாம். 2. ''ப்ரஸாத3ம் நிம்நகா3 யாதா'' என்று-நீரில் தெளிவைச் சொல்லிற்றாகவுமாம். (பெருநீர்) x 3. ''யமுநாம் சாதிக3ம்பீ4ராம் நாநாவர்த்த ஜ2ஷாகுலாம்'' என்று அத்யகா3த4மான ஆறு பாங்காக வற்றிக்கொடுத்தது; $x_2$ மநோஹரமாகையாலும் பாவநமாகையாலும் ஶ்லாக்4யதையைச் சொல்லிற்றாகவுமாம். (யமுனைத்துறைவனை) $x_3$ திருக்குரவைஸ்தா2நமாகையாலே $x_4$ பெண்கள் படும் துறையையுடையவனை.

---

பெ.அ. p...t ''மைந்தன்'' என்றதுக்கு நாலர்த்த2ம்; மிடுக்கனென்றும், பிள்ளையென்றும், யுவா வென்றும்; ராஜாவென்றும்; இத்தைக்காட்டுகிறார் (மிடுக்கனை இத்யாதி3 வாக்யபஞ்சகத்தாலே) u ''ரஞ்ஜயதி'' என்கிற வ்யுத்பத்தியை உட்கொண்டு உபபாதிக்கிறார் (தன்னழகை இத்யாதி3)

vB கலங்காப்பெருநகரம் விட்டு வந்தவனுக்குத் திருவாய்ப்பாடியென்றொரு அஞ்சிறைன் புகலிடமுண்டானாற்போலே, விரஜையை மறக்கும்படி ஓராறு உண்டாவதே! என்று ஈடுபடுகிறார்களென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (விரஜை இத்யாதி3) w 4. ''வல்லவீவத3நோச்சி2ஷ்ட பவித்ராத4ரவித்3ருமஃ'' என்கிறபடியே - க்ருஷ்ணன் திருப்பவளத்துக்குப் பவித்ரதையையுண்டாக்கும் இடைப்பெண்களுடைய எச்சில் ஆற்றுக்கு உண்டாக்கச் சொல்லவேண்டாவிறே என்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனும் இத்யாதி3) x ''தூய'' என்ற பத3ச்சேர்த்தியைத் திருவுள்ளம்பற்றி முதலர்த்த2த்துக்கு அநுகு3ணமாக ஈடுபாடுதோற்றத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (யமுநாம் இத்யாதி3)

---

சி. அ. p,q,r,t ''மைந்தனை'' என்றதுக்கு மூன்று பொருள் வாக்யத்தில் வ்யக்தம். u நாலாவது (தன்னழகை இத்யாதி3) $v_2$ (போந்தவிடத்துக்கு) அவதரித்தவிடத்துக்கு. $v_3$ தூய்மைக்கு மூன்று பொருள் வ்யக்தம். $x_2$ அதில் ப்ரஸன்னமாயிருக்கும் என்ற அர்த்த2த்தில் ''பெருநீர்'' என்றதுக்குத் தாத்பர்யம் (மனோஹரமாகையாலுமித்யாதி3) $v_4$,x (வற்றிக் கொடுத்தபடி) என்ற அர்த்த2த்துக்குச் சேர அருளிச்செய்கிறார் (யமுநாம் ச இத்யாதி3) x, $x_2$ பெருமைக்கு இரண்டு பொருள் அகா3த4மென்னுதல், ஶ்லாக்4யதையைச் சொல்லுதல். $x_3$ (திருக்குரவை ஸ்தா2னமாகையாலே) என்றது யமுநாதடத்திலே ராஸக்ரீடை3 பண்ணுகையாலே திருக்குரவைக்கு ஸ்தா2னமென்றபடி. $x_4$ கேவலம் துறையன்றிக்கே ''முத்துப்படும் துறை'' என்னுமாபோலே பெண்கள் படும் துறை என்றபடி. ''துறைவன்'' நெய்தல் நிலத்துத் தலைமகன்.

---

A பெரியதிரு 7-5-1- B மூன் திருவ-51.

y (ஆயர்குலத்தினில்தோன்று மணிவிளக்கை) z பரமபத₃த்திற்காட்டில் ஆ₃ணங்கள் இடைச்சேரியிலே அத்யுஜ்ஜவலமானபடி; அந்த₄காரத்தில் தீ₃பம் போலே.z, (தோன்றும்) z,1 "அச்யுத ப₄ாநுநா தே₃வகீ பூர்வஸந்த்₄யாயாமாவிர்பூ₄தம்" என்றுகொண்டு க₃ர்ப்ப₄த்தில் தொற்றில்லாமை. z, கீழைதி₃க்குக்கு ஆதி₃த்யனோடு உள்ள ஸம்ப₃ந்த₃ம் இவளோடு அவனுக்கு உள்ளது. a ஸ்ரீமது₄ரையிலே அவத ரித்திருக்கச்செய்தே திருவவதாரப்ரகாஶம் திருவாய்ப்பாடியிலே சென்றது என்றுமாம். ம(அ)ணிவிளக்கை) b திருவாய்ப்பாடிக்கு மங்க₃ளதீ₃பமென்றுமாம்.

c (தாயைக் குடல்விளக்கஞ்செய்த தாமோதரனை) d வயிற்றில் தழும்பாலே யசோதைப்பிராட்டியை விளங்கப்பண்ணினவனை. (தாயைக் குடல்விளக்கஞ் செய்த) e 2. "கௌஸல்யா ஶுஶுபே₄ தேந புத்ரேணாமிததேஜஸா" என்றும், A "என்ன நோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்" என்றும் நாட்டார் புகழ்ச்சியாலே பெற்ற வயிற்றுக்குப் பட்டங்கட்டினவனை. (தாமோதரனை) e, தன்னுடைய ப₄வ்யதையாலும் அவனை நாட்டார்

---

பெ.அ. y, z ஆயர்குலத்தினில் வர்த்திக்குமதாய், தே₃வகிவயிற்றில் தோற்றினதாய், அத்தாலே ஶ்லாக்₄யமான விளக்கென்று திருவுள்ளம்பற்றி, "மாயன்" என்றத்தைக்கடாக்ஷித்து "ஆயர்குலத்தினில்" என்றதுக்குப் பரமபத₃ம் வ்யாவர்த்யமென்று தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (பரமபத₃த்தில் இத்யாதி₃) a "வடமதுரைமைந்தனை" என்றத்தைக் கடாக்ஷித்து ஆயர்குலத்தினில் தோன்றும் — அவதரித்ததாக ப்ரகாஶிக்கும், ஶ்லாக்₄யமான விளக்கென்று ஸப்₃தா₃ர்த்த₂மாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸ்ரீமது₄ரை இத்யாதி₃) b ஆயர்குலத்தினில் அணிவிளக்காய்த்தோன்றினவனை என்று விவக்ஷித்து மூன்றாம் தாத்பர்யம் அருளிச்செய் கிறார் (திருவாய்ப்பாடிக்கு இத்யாதி₃)

c, d "தாமோத₃ரனை அத ஏவ, தாயைக் குடல்விளக்கம் செய்தவனை" என்று ஸப்₃தா₃ர்த்த₂ம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வயிற்றில் இத்யாதி₃) e, e, "மாயனை" இத்யாதி₃களைக் கடாக்ஷித்து,பரத்வாதி₃கு₃ண விஶிஷ்டனுகையாலும்,தா₃மோத₃ரத்வத்தால் வந்த ப₄வ்யதையாலும் தாயைக்கொண்டாடும்படி பண்ணினவனென்று தாத்

---

சி.அ. y "ஆயர் குலத்தினில்" என்றதுக்கு மூன்று தாத்பர்யம். z (பரமபத₃த்திற்காட்டில் இத்யாதி₃) முந்தினது. a (ஸ்ரீமது₄ரையிலே இத்யாதி₃) இரண்டாவது. b மூன்றாவது (திருவாய்ப்பாடிக்கு மங்க₃ளதீ₃பமென்றுமாம்) என்றது. மணிவிளக்கென்னுதல், அணி விளக்கென்னுதல். z₂, z₃ தோன்றுதல் அவதாரமாதல் (அச்யுதப₄ாநுநா இத்யாதி₃) z ப்ரகாஶமாதல் (பரமபத₃த்திற்காட்டில் இத்யாதி₃) z₃, z₄ "பூர்வஸந்த்₄யாயாமாவிர்பூ₄தம்" இத்யாதிக்குத் தாத்பர்யம் (கீழைதி₃க்குக்கு இத்யாதி₃) z, a "தோன்றும்" என்று ப்ரகாஶம் சொன்ன பக்ஷத்தில் பரமபத₃வ்யாவ்ருத்தியை அருளிச்செய்தார் கீழ்; அவதாரமான பக்ஷத்தில் மது₄ரையில் வ்யாவ்ருத்தியை அருளிச்செய்கிறார் (ஸ்ரீமது₄ரையிலே இத்யாதி₃) z, b "மணிவிளக்கு" என்றதுக்கு (பரமபத₃த்திற் காட்டில்) என்ற வாக்யத்திலே உஜ்ஜ்வலமான விளக்கு என்று அருளிச்செய்து தாத்பர்யாந்தரம் (திருவாய்ப்பாடியில் மங்க₃ளதீ₃பம்) என்று.

c, d, e, "தாயைக்குடல் விளக்கம் செய்த" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். ஸௌலப்₄யத்தாலே விளங்கப்பண்ணினான் என்னுதல்; ஸர்வஸ்மாத்பரனான தானே அவதரித்து விளங்கப்பண்ணினான் என்னுதல், இரண்டையும் அடைவே அருளிச்செய்கிறார் (வயிற்றில் தழும்பாலே) என்ற வாக்யத்தாலும் (கௌஸல்யா) என்ற வாக்யத்தாலும்,

---

A பெரியாழ் திரு 2-2-6

கொண்டாடும்படி பண்ணினவனை. f நம்முடைய ப,ந்த,ம் நம்மாலறுக்கப்போகாதாப் போலே, அவனுடைய ப,ந்த,மும் அவனாலறுக்கவொண்ணாதே. g இந்த ப,ந்த,த்தை அநுஸந்தி,த்தால் ஆஶ்ரிதருடைய ஸம்ஸாரப,ந்த,ம் போமென்கை.

h (தூயோமாய்வந்து நாம்) i அங்குத்தைக்கு நாம் யோக்$_3$யரோ அயோக்$_3$யரோ என்று பாராதே, இருந்தபடியே வந்து; இருந்தபடியே வருகைக்கு மேற்பட ஶுத்,தி,தேடவேண்டாவிறே. J 1. "ஶுத்,த,ம் வேத்தி விபீ,ஷணம்" என்றதிறே இருந்தபடியே வந்த ஸ்ரீவிபீ,ஷணாழ்வானை. k (வந்து k$_2$ நாம்) l அவன் வர இருக்கக்கடவ நாம் வந்து. m 2. "உபஸ்தே,யைருபஸ்தி,த:" என்றும், 3. "பத்$_3$ப்,யாமபி,க,மாச்சைவ" என்றுமிறே அவன் வார்த்தை, முறைகெட வருவானென்? என்னில்: — உபாயத்தில் துணிவு புறப்படவொட்டாதாப்போலே உபேயத்தில் த்வரை முறைபார்த்திருக்கவொட்டாதிறே.

n (தூமலர்) o A "மக்கசீர்த்தொண்டரிட்ட பூந்துளவம்" என்றும், B "சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி" என்றும், அநந்யப்ரயோஜநமான பூவிறே. p (மலர்) யோக்$_3$யமென்றும் அயோக்$_3$யமென்றும் பாராதே கண்ணுக்குத் தோற்றின மலரென்றுமாம். (தூவி) 4. "யத,ாதத,ா வாபி" என்னும் ந்யாயத்தாலே அடைவுகெடப் பரிமாறி; ப்ரேமம் அடைவு பார்க்கவொட்டாதிறே.

---

**பெ.அ.** பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (கௌஸல்யா இத்யாதி$_3$) f கீழ்ப்பத$_3$ங்களைப்போலே இப்பத$_3$த்தாலும் ஈடுபாடு தோற்றவேண்டி ப$_4$வ்யனானபடியைத் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நம்முடைய இத்யாதி$_3$) f,g ஸம்ஸாரிகள் ப$_3$ந்த$_4$த்துக்கும் அவனுடைய ப$_3$ந்த$_4$த்துக்கும் ஸாத$_4$ர்ம்யத்தைப்பற்றி ஈடுபாடாகத் தாத்பர்யம் அருளிச்செய்து, வைத$_4$ர்ம்யத்தைப்பற்ற ஈடுபாடாக ப$_4$ாவம் அருளிச்செய்கிறார் (இந்த இத்யாதி$_3$) f இத்தால் - இவனுடைய ப$_3$ந்த$_4$மாகில் அநுக்$_3$ரஹகார்யமாகையாலே அநுப$_4$வித்தேயறவேணுமென்றபடி.

h, i வேத$_3$ாந்த ஜ்ஞாநமுடையாளொருத்தி சொல்லுகிறாளாகையாலே வேத$_3$ாந்த முக்$_2$யதாத்பர்யமான ப்ரபத்திக்கு ஸ்நாநாதி$_3$கள் அநபேக்ஷிதங்களாகையாலே யோக்$_3$யரோ அயோக்$_3$யரோவென்று பாராமையே தூய்மை என்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அங்குத்தைக்கு இத்யாதி$_3$) J உக்தத்துக்கு ப்ரமாணங் காட்டுகிறார் (ஶுத்$_3$த$_4$ம் இத்யாதி$_3$) 1. "மம சாப்யந்தராத்மாऽயம் ஶுத்$_3$த$_4$ம் வேத்தி விபீ$_4$ஷணம்" என்று - மஹாராஜர், கடலிலே ஒருமுழுக்கிட்டு வாராதிருக்க, ப$_4$ாவஶுத்$_3$தி$_4$யைக்கண்டு 1. "ஶுத்$_3$த$_4$ம்" என்றாரிறேயென்று கருத்து. k$_2$, l "நாம்" என்றதன் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவன் இத்யாதி$_3$) m நாம் இப்படியிருக்கைக்கு அவன் வரும் ஸ்வப$_4$ாவனேயென்ன அருளிச்செய்கிறார் (உபஸ்தே$_2$யைரித்யாதி$_3$).

---

**சி.அ.** f ஸர்வஶக்தியானவன் கட்டவிழ்த்துக்கொள்ளமாட்டாதே இருக்கிறதென்? என்ன அவனது ஆஶ்ரிதாநுக்$_3$ரஹாயாதம் அருளிச்செய்கிறார் (நம்முடைய ப$_3$ந்த$_4$ம்) என்று; அவ்வயமாய் "தாய்க்குடல்" என்று முழுச் என்றபடி. c, d "தாயை" என்று ஐத்வம் அவ்யயமாய் "தாய்க்குடல்" என்று முழுச் சொல்லாய், யஶோதை$_3$ப்பிராட்டிக்கு என்று முந்தின அர்த்த$_2$ம்; e$_2$ இத்தை விவரிக்கிறது (தன்னுடைய ப$_4$வ்யதை இத்யாதி$_3$)

h,i தூய்மையாவது — யோக்$_3$யதாயோக்$_3$யதைகள் வேண்டாமை. j அன்றிக்கே ப$_4$ாவஶுத்$_3$தி$_4$யாகவுமாம் என்கிறார் (ஶுத்$_3$த$_4$ம் வேத்தி) என்று. k "வந்து நாம்" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். l முந்தினது ப்ரணயித்வத்திலே; m இரண்டாவது ஸ்வாபகே$_3$ஶத்திலே (உபஸ்தே$_2$யைருபஸ்தி$_2$த: இத்யாதி$_3$). n,o,p "தூமலர்" என்றதுக்கு இரண்டர்த்த$_2$ம்; முந்தினது "நன்னீர்" என்னுமாபோலே ஶுத்$_3$த$_4$ புஷ்பம் என்றபடி; இரண்டாவது — வெறும் பூ என்றபடி; அதாவது — ஶ்லாக்$_4$யாஶ்லாக்$_4$யதை பாராதே புஷ்பமாத்ர மெல்லாம் என்றபடி. அத்ர ப்ரமாணம் C "கள்ளார்துழாயும்" இத்யாதி$_3$-

---

A பெரிய திரு 11-1-9. B திருவிருத்தம்-21. C பெரியதிரு 11—7—6.

q (தொழுது) q₁ அவனுக்குப் பொறுக்கவொண்ணுதபடி அஞ்ஜலியைப்பண்ணி. r 1. ''ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவ மே ஹ்ருத₃யாந்நாபஸர்ப்பதி'' என்றிறே அவன்படி. s அவனைத்தொழுவித்துக்கொள்ளுமவர்களிறே தொழுகிறர்கள். t பித்ராதி₃களுக்கு அடைவுகேடென்று தோற்றுதபடி அஞ்ஜலி பண்ணுகிறுர்கள் என்றுமாம்.

u (வாயினல்பாடி) v வாய்படைத்த லாப₄ம் பெற்றேமென்று திருநாமத்தைச்சொல்லி; w மநஸ்ஸஹகாரமின்றிக்கேயென்றுமாம். x 2 ''உவாச ச'' என்னுமாபோலே-வருவதற்குமேலே சொல்லுவதும் செய்தோமென்றுமாம். y (மனத்தினல் சிந்திக்க) z மநஸ்ஸைப் படைத்த லாப₄ம் பெற்றேமென்று; a 3 ''யத் புருஷோ மநஸாऽபி₄க₃ச்ச₂தி, யத்₃தி₄ மநஸா த்₄யாயதி, தத்₃வாசா வத₃தி, தத் கர்மணு கரோதி'' என்று மநஸ்ஸடியாக வரக்கடவ உக்தியும் வ்ருத்தியும் தவிர்ந்து, ''தொழுது'' ''வாயினுற்பாடி'' ''மனத்தினுற்சிந்திக்க'' என்று தனித்தனியே கரணங்கள் மேல்விழுந்தபடி சொல்லுகிறது.

(போயபிழையும் b புகுதருவான்நின்றனவும்) உத்தரபூர்வாக₄ங்கள். (தீயினில் தூசு ஆகும்) நெருப்பிலிட்ட பஞ்சுபோலேயாம். தூசு -பஞ்சு. பாலும் க₂ண்ட₃ சர்க்கரையும் குடிக்கப் பித்தம் தன்னடையே போமாபோலே, ப₄க₃வத₃நுப₄வம் பண்ண நெருப்பிலிட்ட பஞ்சுக்குவைபோலே உருமாய்ந்துபோம். 4. ''இஷீகதூல மக்₃நௌ ப்ரோதம் ப்ரதூ₃யேத'' என்றுமுண்டிறே.

(செப்பு) சொல்ல அமையுமென்கை. பூர்வாக₄மாவது-அநாதி₃காலம் பு₃த்₃தி₄ பூர்வகமாகப் பண்ணிப்போந்தவை; உத்தராக₄மாவது-ப₄க₃வத்₃ஜ்ஞாநம் பிறந்தால் ப்ரக்ருதிவாஸநையா[illegible] ப்ராமாதி₃கமாகப் பிறந்தவை. 5.

---

பெ.அ. q₂, r, s, t அவன் அஞ்ஜலியைப் பொறுக்கமாட்டாமையை இரண்டு வகையாக உபபாதி₃க்கிருர் (ருணமித்யாதி₃ வாக்யத்ரயத்தாலே)

u,v,w,x. ''பாடி'' என்ன அமைந்திருக்க, ''வாயினல்'' என்றதுக்கு மூன்று தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (வாய்படைத்த இத்யாதி₃) v ''தாமோதரனை'' என்னுமளவும் கடாக்ஷித்து மூந்தின தாத்பர்யம்; w ''மனத்தினல்சிந்திக்க'' என்றத்தைப்பற்ற இரண்டாம் தாத்பர்யம்; x'' தூயோமாய்வந்து'' என்றத்தைப்பற்ற மூன்றும்தாத்பர்யம். 2. ''உவாச ச மஹாப்ராஜ்ஞ: ஸ்வரேண மஹதா மஹாந் | ஸுக்₃ரீவம் தாம்ஸ்ச ஸம்ப்ரேக்ஷ்ய ஸர்வாந் வாநரயூத₂பாந்||'' என்று வசநமேஷம், y. z. ''மனத்தினல்'' என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (மநஸ்ஸை இத்யாதி₃) a ஶ்ருதிக்ரமேணவன்றிக்கே, மநஸ்ஸுக்கு முன்னே தொழுகையும் பாடுகையும் சொல்லுகையால் ஆற்ருமையின் மிகுதி தோற்றுகிறதென்கிருர் (யத்புருஷ இத்யாதி₃) 5.

---

சி.அ. q, r, s, t ''தொழுது'' என்றது ஸ்வாபதே₃ஶத்திலேயாதல், ப்ரணயத்தாலேயாதல், ப்ரணயத்தாலே ஆனபோது இரண்டு வித₄ம் — ப்ரணயரோஷத்தாலேயாதல், பித்ராதி₃களுக்கு அடைவுகேடென்று தோற்றுதபடியாதல். அதாவது—ஸம்ஶ்லேஷார்த்த₂மாக அநுவர்த்திக்கிருள் என்று தோற்றுதபடி தே₃வதா₃பு₃த்₃தி₄யாலே அநுவர்த்திக்கிருள் என்று தோற்ற அஞ்ஜலி பண்ணுகிருள் என்றபடி.

u, v, w, x ''வாயினல்'' என்றதுக்கு மூன்று தாத்பர்யம், y. z, a ''மனத்தினல்'' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். a இரண்டாவது பார்த்த₂க்யேந மேல்விழுகை. b ''புகுதருவான் நின்றனவும்'' என்று பத₃ச்சே₂த₃ம். 5.

## ஆறுயிரப்படி — ஐந்தாம்பாட்டு

அவ:— அஞ்சாம்பாட்டு.— முதற்பாட்டில் ''நாராயணனே'' (1) என்று – உப₄ய விபூ₄தியோக₃த்தைச் சொல்லிற்று; அநந்தரம், ''பாற்கடலிற் பையத்துயின்ற பரமன்'' (2) என்று அவதாரார்த்த₂மாகத் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தபடியைச் சொல்லிற்று; அநந்தரம், இந்த்₃ரன் குறைதீர ஸ்ரீவாமனனாய் வந்து அவதரித்து ஒரு நாடாக வாசிவையாதே திருவடிகளைக்கொண்டு திண்டினபடியைச் சொல்லிற்று; அநந்தரம், யோக்₃யராய் ஆசாரப்ரத₄ாநரான வஸிஷ்ட₂ாதி₃கள் நியமிக்கும்படி சக்ரவர்த்தித் திருமகனாய் வந்து அவதரித்து வாசிவைத்து உடம்பு கொடுத்தபடி சொல்லிற்று; இப்பாட்டில் — வரையாதே எல்லார்க்கும் கட்டவும் அடிக்கவுமாம்படி க்ருஷ்ணனாய் வந்து அவதரித்து, ஒரு ஊருக்காகத் தன்னை முற்றூட்டாகக் கொடுத்தபடி சொல்லுகிறது. நோற்கின்ற பெண்களிலே ஒருத்தி 'நாம் அநுப₄விக்க இழையகலப்படா நின்றோம்; 1. ''ஶ்ரேயாம்ஸி ப₃ஹு₂விக்₄நாநி'' என்று — பெரியவர்களுக்கும் ஶ்ரேயஸ்ஸுக்கு விக்₄நமுண்டாமென்று சொல்லிற்று. பெருமாள் திருவபி₄ஷேகத்துக்கு ஶம்ப₃ராந்தகனான த₃ஶரத₂ன் பாரிக்கிறான்; ராஜர்ஷியை ப்₃ரஹ்மர்ஷியாக்கின வஸிஷ்ட₂ன், முஹூர்த்தவித₃ாநம் பண்ணுகிறான்; 2. ''ராமோ விக்₃ரஹவாந் த₄ர்ம:'' என்று — ப₄ாக்₃யாதி₄கரான பெருமாள் முடிசூடுகிறார்; 3. ''ஸஹ பத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாக₃மத்'' என்று — பெருமாள் பிராட்டியோடேகூடப் பெரிய பெருமாளை ஆஶ்ரயிக்கிறது; 4. ''இச்ச₂ாம:'' என்று நாடடங்க அபி₄ஷேக மங்க₃ளத்தை ப்ரார்த்தி₂த்து இதுக்கு மங்க₃ளாஶாஸனம் பண்ணுகிறது: இப்படியிருக்க இதுக்குமன்றோ விக்₄நம் வந்தது; நாம் அநாதி₃காலம் பண்ணின பாபங்கிடக்க இது கூடுமோ?' என்றுகேட்க; நாம் அவனுடைய அநுப₄வத்திலே [ ]ழியவே உத்தர பூர்வாக₄ங்களுக்கு அஶ்லேஷவிநாஶமுண்டென்று பரிஹரிக்கிறார்கள். ஈஶ்வரன் தான் ஸங்கல்பித்தது குலைந்தாலும், ததீ₃யர்ஸங்கல்பித்தது தன்னை அழியமாறியும் தலைக்கட்டிக்கொடுக்கும்; அவர்தாம் முடிதவிர்ந்தது – மஹாராஜர்க்கும் ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானுக்கும் முடிசூட்டுகைக்கிறே. அர்ஜு₂நன் ''ஜயத்₃ரதனை அஸ்தமிக்கைக்கு முன்னே கொல்லக்கடவேன்'' என்று ஸங்கல்பிக்க, ''ஆயுதமெடேன்'' என்றவன் ஆயுத₄மெடுத்தும், பொய்சொல்லியும், பகலை இரவாக்கியும் அர்ஜு₂நன் ஸங்கல்பத்தையிறே தலைக்கட்டிக் கொடுத்தது. ''பற்றப்புகுகிற விஷயத்தினுடைய நன்மை எது, பற்றப்புகுகிற நாம் எவ்வளவிலோம், பற்றுகையாவதுதான் எது'' என்று அயோக்₃யதாநுஸந்த₄ாநம் பண்ண, நோவுமிக்கதனையும் நாலைந்து குடிநீரெழக் குடிக்குமாபோலே, நாம் திருநாம ஸங்கீர்த்தநத்திலே அதி₄கரிக்கவே இதுக்கு விரோதி₄கர்மங்களடைய நஶிக்குமென்கிறார்கள். மாயனைத் தாமோதரனைச் செப்பு; குடிக்கிற குடிநீர்களிவை.

வ்யா:— (மாயனை) ஸமஸ்தகல்யாணகு₃ணாத்மகனாய், நிரதிஶயாநந்த₃பரிபூர்ணனாய். உப₄யவிபூ₄தியுக்தனாய், ஸ்ரிய:பதியாய், ஏகார்ணவம்போலே நித்ய விபூ₄தியிலிருக்குமிருப்பைச் சொல்லுகிறது. 5. ''யதோ வாசோ நிவர்த்தந்தே'' 6. ''யஸ்யாமதம் தஸ்ய மதம்'' 7. ''அவிஜ்ஞாதம் விஜாநதாம்'' என்றும் A ''பண்கடந்த தேசம்'' என்றும் வேத₃ங்கள் மநஸ்ஸோடே வாக்குக்கு நிலமன்றென்று

A திருச்சந்த 27.

மீண்ட பரத்வம், இவளுக்குப் பேசலாம்படி கைவந்தபடி. A ''வைகுந்தனென்ப தோர் தோணிபெறுதுழல்கின்றேன்'' என்று இவ்விடத்திலும் அவ்விடம் தனக்கு நிலமாயிருக்கிறதென்னுமிடத்தைத் தானே அருளிச்செய்தாளிறே. தோணியென்றது தன்னுடைய அபிநிவேசத்துக்கு ஒரு தோணிஸ்தாநீயனாய் ஸ்ரீவைகுண்டநாத னிருந்தபடி. ஜ்ஞாநம் விசதமானால் அவ்விடம் அணித்தாய் இவ்விடம் தூரமாயிருக் குமே. B ''உன்பேரருளாலிக்கரையேறி'' என்றாரிறே தமப்பனாரும். அவனபிமானத் திலே கிடக்குமவர்களிறே அங்குள்ளார்; மனையடைவே 1. ''ஈஶ்வரோஹம்'' என்றி ருக்குமவர்களிறே இங்குள்ளார். (மாயனை) க்ருஷ்ணாவதாரத்திலே அநுபவித்து, C ''எத்திறம்'' என்ற நம்மாழ்வாரைப்போலே, அங்குத்தை குணத்தை அநுஸந் தித்து, ''எத்திறம்'' என்கிறாள். இங்கு ஒருநாராக உடம்பு கொடுத்தமையைச் சொல்ல நினையா. ஒரு நாட்டுக்காக உடம்புகொடுத்தமையைச் சொல்லுகிறாள். இங்குள் ளார்க்குத் தன்னை அமைத்துக்கொடுக்குமாபோலேகாணும், அங்குள்ளார்க்குந் தன்னை அமைத்துக்கொடுக்கும்படி. அவனுடைய ஸ்வரூபவைலக்ஷண்யத்தைப் பார்த் தால் இங்குள்ளாரோடு அங்குள்ளாரோடு வாசியில்லையிறே. இவ்வெளிமைக்கும் அடி யான விடமிறே அவ்விடம். இவ்விடம் ஒருத்தி தாம்பாலே பந்தித்தபடியைச்சொல்ல நினையா, 2. ''ஸதா பஶ்யந்தி'' என்று ஒரு நாடாக த்ருஷ்டிகளாலே பந்திக்கும் படியைச் சொல்லுகிறது. (மாயனை) அப்படி பெரிய ஸர்வேஶ்வரன் க்ருஷ்ணனாய் வந்து அவதரித்து இடையர்க்கும் பசுக்களுக்கும் தன்னையணையலாம்படி நியமித்து, நவநீதசௌர்யஜகரக்ஷாபாதிகளாலுண்டான ஆஶ்சர்யத்தை நினைத்து C ''எத் திறம்'' என்கிறதாகவுமாம். D ''சூட்டுநன்மாலைகள்'' இத்யாதி.

(மன்னுவடமதுரைமைந்தனை) 3. ''ஸதைகரூபரூபாய'' என்கிறபடியே – அங்கு ஏகரூபனாய் நின்று உடம்பு கொடுத்தபடியைச் சொல்லிற்று; இங்கு ப்ரவாஹ ரூபேண உடம்புகொடுக்கும்படி சொல்லுகிறது. (மன்னுவடமதுரை) ஆனைபடு ஆகரம்போலே அவதாரம் மாறாத ஊர். ஸித்தாஶ்ரமத்திலே ஸ்ரீவாமநனாய் தபஸ்ஸு பண்ணி வர்த்தித்தும், ஸ்ரீஶத்ருக்நாழ்வான் வன்னியமறுத்துத் தனக்குப் படைவீடாகப்பெற்று நெடுநாளிருந்து ராஜ்யம்பண்ணியும், க்ருஷ்ணனாய்வந்து அவதரித் தும், பகவத்ஸம்பந்தம் மாறாத தேஶம். (வடமதுரை) E ''மல்லைமூதூர்வட மதுரை'' என்று நம்மாழ்வாரிடுபட்ட தேஶமிறே. அப்படியேயிறே மஹர்ஷிகள் ஈடு பட்டது. 4. (மதுராநாம) பரமபதத்திலுங்காட்டில் இவ்வூர் ப்ரஸித்தம்போலே. F கலங்காப்பெருநகரமாகையாலே கலங்காதிருக்கிறது அங்கு. கலங்கும்தேஶத்திலே, கலங்காதிருக்கிறதிறே இங்கு 4. (நகரீ)விட்டுப்போந்தவிடமோ, பிறந்து படைத்து விரும் பினவிடமோ படைவீடாவது? 4.(புண்யா) அபிமதலாபத்தையுண்டாக்கவற்றாயிருக்கை. அவனைப்பெறுகைக்கு உபாயமும் தானே. 4. (பாபஹரீ) அப்பேற்றுக்கு ப்ரதிபந்தக நிரஸநமும் பண்ணவற்றாயிருக்கை. 4. (ஶுபா) ஒன்றைப்போக்கவும் ஒன்றைத் தரவும் வேண்டாதே. பரமபதம்போலே ப்ராப்யமும் தானேயாயிருக்கும். 4. (யஸ்யாம்

A நாச் திரு 5-4. B பெரியாழ் திரு 5-3-7. C திருவாய் 1-3-1 D திருவிருத்தம் 21 E திருவாய் 9-1-6. F மூன் திருவ 51.

ஜாதோ ஜக₃ந்நாத₂:) யாதொன்றிலே ஜகந்நாத₂னவன் ஜாதனானன். ஸம்ஸாரிகளுடைய குறைதீர்க்கைக்காக, நியந்தாவானவன் நியாம்யகோடியிலே பிறந்தான், 1. (ஸாக்ஷாத்) A ''ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப் பிறந்த'' 2.''ப்ரக்ருதிம் ஸ்வாமதி₄ஷ்ட₂ாய'' என்னும்படியே. 2.''மாயை'' என்று ஜ்ஞாநமாய், தன்னுடைய இச்சை,யாலே அவதரித்தானென்கிறது. 1. (விஷ்ணு:) வ்யாபகவஸ்து, வ்யாப்யைகதே₃ஶத்திலே வந்து பிறந்தானென்கை. எங்குமுளனானவன் ஓரிடத்திலே தோன்றினபடி. 1. (ஸநாதந:) என்றுமுளனானவன் ஒருநாளிலே தோன்றினபடி. (மைந்தனை) B ''தந்தைகாலிற் பெருவிலங்குதாள் அவிழ'' என்று பிறந்தபோதே ஸ்ரீவஸுதே₃வர் காலில் விலங்கு தானே விடும்படியான மிடுக்கைச் சொல்லுகிறது, பருவம் நிரம்புவதற்கு முன்னே கம்ஸனைக்கொன்ற மிடுக்கைச்சொலலிற்றாகவுமாம். (மைந்தன்) என்று பிள்ளையாகவுமாம்; ராஜாவாகவுமாம். C ''வடமதுரையார்மன்னன்'' என்றாளிறே.

(தூயபெருநீர்யமுனை) விட்டஆற்றை மறக்கும்படியான ஆறு. பரமபத₃த்தில் நின்றும் வந்து அவதரிக்கைக்கு இவ்வூருண்டானாற்போலே, பரமபத₃த்துக்கு விரஜைபோலே இவ்வூருக்கிவ்வாறு. அடியறிவார் கூடப்போந்து கருத்தறிந்து கார்யம் நடத்துமாபோலே; திருவடி திருவநந்தாழ்வான்போலே கருத்தறிந்து அவ்விருளிலே க்ருஷ்ணனை எழுந்தருளுவித்துக் கொண்டுபோக, முழங்கால்மட்டாக வற்றிக்கொடுத்த ஶுத்₃தி₄யைச் சொல்லுகிறது. 3. ''யமுநாஞ்சாதிக₃ம்பீ₄ராம் நாநாவர்த்த ஜ₂ஷாகுலாம்! வஸுதே₃வோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோத₃கோ யயௌ !!'' பிராட்டி ஶரணம்புகவும் ராவணப₄யத்தாலே அஞ்சியிருந்த கோ₃தா₃வரி போலன்றிக்கே கம்ஸன் மாளிகைநிழல்கீழே வற்றிக்கொடுத்தபடி. தூய்மையாகிறது ப₄க₃வத்ஸ்பர்ஶமிறே. 4. ''வல்லவீவத₃நோச்சி₂ஷ்டபவித்ராத₄ரவித்₃ரும:'' என்னுமாபோலே க்ருஷ்ணனும் பெண்களுமாக ஜலக்ரீடை₃ பண்ணி ஒருவருக்கொருவர் கொப்பளித்ததாலே வந்த ஶுத்₃தி₄யாகவுமாம். (தூய) 5. ''ப்ரஸாத₃ம் நிம்நகா₃யாதா'' என்று நீர்த்தெளிவைச் சொல்லிற்றாகவுமாம். (பெருநீர்) க்ருஷ்ணனும் பெண்களும் ஜலக்ரீடை₃ பண்ணுகைக்குப் போரும்படி ஸம்ருத்₃த₄மான ஜலம். பெண்களுடைய விரஹதாபங்கெடக் குளிக்கப்போரும் நீர் என்றுமாம். அன்றியே. நீரினுடைய ஶ்லாக₄யதையைச் சொல்லிற்றாகவுமாம், (யமுனைத்துறைவனை) கவிபாடுவார்க்கு ஊரும் பேரும் வேண்டக்கடவதிறே. (யமுனைத்துறைவனை) ''முத்துப்படும் துறை'' என்னுமாபோலே, D ''சங்கணிதுறைவன்'' என்னுமாபோலே, க்ருஷ்ணனுக்குப் பெண்கள்படும் துறை. நற்சரக்குப்படுவது நீரிலேயாகாதே! E ''அமுதில்வரும் பெண்ணமுது'' என்னுமாபோலே. (துறைவன்) ''கம்ஸப₄யத்துக்கு அஞ்சி ஒளிக்கவந்து சேர்ந்தாரைச் சொல்லுமாபோலே சொன்னபடி பாரீர்'' என்று ப₄ட்டர்.

(ஆயர் குலத்தினில் தோன்றும்) பிறவாத பரமபத₃த்தோபாதி ஸ்ரீமது₄ரையில் பிறப்பும். முலைப்பால் குடித்து அழுதவிடமிறே பிறந்தவிடமாவது. (தோன்றும்)

A திருவாய் 3-5-5, B பெரிய திரு 7-5-1, C நாச் திரு 7-3, D திருவாய் 10-3-11
E பெரிய திரு 6-1-2.

1. ''ஆவிர்ப்பூ₄தம் மஹாத்மநா'' கிழக்கே உதி₃க்கிற ஆதி₃த்யனுக்கு ஸ்பர்ஶமுண்டாகில் இவள் வயிற்றில் ஸ்பர்ஶமுண்டாவதென்றான் ரிஷி. பிறந்தது கு₃ணமாகைக்காக A ''பிறந்தவாறு'' என்று ஈடுபட்டார் ஆழ்வார். (அணிவிளக்கை) ஸ்ரீவைகுண்ட₂த்திலும் ஸ்ரீ மது₄ரையிலும் அநுஜ்ஜ்வலனாய்ப்போலேயிருப்பது! B ''ஆயர்பாடிக்கணிவிளக்கு'' என்கிறபடியே இவர்களுக்குக் கண்காட்டியாயிருக்கை. அந்த₄காரத்தில் தீ₃பம்போலே தாழ்ந்தார் பக்கலிலேயிறே கு₃ணம் ப்ரகாஶிப்பது. C பிறப்பாயொளிவரு முழுநலமிறே. (மணிவிளக்கு) என்றபோது, இங்கே புகுந்தபின்பு பரமபத₃த்தில் அழுக்கற்றபடி.

(தாயைக்குடல் விளக்கஞ் செய்த) வயிற்றில் கட்டின தழும்பாலே, 'ஒருத்திக்கு ஒரு பிள்ளை கட்டலாம்படி ப₄வ்யனுவதே!' என்று [illegible] பிராட்டியை விளங்கப் பண்ணினவனே. 2. ''கௌஸல்யா ஶுஶுபே₄'' D ''இவனைப் பெற்ற வயிறுடையாள் என்ன நோன்பு நோற்றாள் கொலோ'' (தாமோதரனை) நம்முடைய ப₃ந்த₄ம் நம்மால் அறுக்கவொண்ணுதாப்போலே, அவனுடைய ப₃ந்த₄மும் அநுக்₃ரஹத்தாலேயாகையாலே அவனாலும் அறுக்கவொண்ணுது, நம்முடைய ப₃ந்த₄ம் அவன் காலிலே விழத் தீரும்; அவனது அநுக்₃ரஹகார்யமாகையாலே அநுப₄வித்தேயறவேணும். ''அவனுடைய ப₃ந்த₄த்தை அநுஸந்தி₄க்க ஸம்ஸார ப₃ந்த₄மறும்'' என்னுநின்றதிறே. இவன் வயிற்றில் தழும்பைக்கொண்டாடுகை—அவள் வயிற்றுக்குப் பட்டங்கட்டுகை. ''பணைகளிலே தாவினவாறே உடை நழுவ, தழும்பைக்கண்டு இடைச்சிகள் சிரித்தார்கள்; அத்தழும்பு தோன்றாமைக்கிறே நம்பெருமாள் கணையம் மேல்சாத்து சாத்துகிறது'' என்று ஜீயர்.

(தூயோமாய்) இடைச்சிகள் தூய்மையிறே. தலையிருக்க உடம்பு கழுவியும், உடம்பிருக்கத் தலைகழுவியும் போருவர்களிறே. ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄மொழிய, தனக்கொரு ஶுத்₃தி₄ஸம்பாதி₃க்கையாவது அஶுத்₃த₄னாய் விடுகையிறே. அவனுடைய ஸம்ப₃ந்த₄த்தை அநுஸந்தி₄க்கையொழிய, தனக்கொரு ஶுத்₃தி₄யில்லை. விபீ₄ஷணன் கடலிலே ஒரு முழுக்கிட்டன்றிறே வந்தது; அர்ஜுநன் யுத்₃த₄த்தின் நடுவே முழுக்கிட்டன்றிறே சரமஶ்லோகம் கேட்டது; த்₃ரௌபதி₃ முழுகியன்றே ப்ரபத்தி பண்ணிற்று, ஆகையால் ப்ரபத்திக்கு ஒரு ஶுத்₃தி₄யும் தேடவேண்டா; அஶுத்₃தி₄ ஸம்பாதி₃க்கவும் வேண்டா; நின்ற நிலையில் அதி₄காரமமையும் 3. (மம சாபி) கடல் கலங்கித் தெளிந்தாற்போலே ராமப₄க்தியாலே கலங்கின என் நெஞ்சும் தெளிந்தது. ஸம்ஸார ஸம்ப₃ந்த₄த்தால் வந்த கலக்கம் தெளிகைக்கு ப₄க₃வத்₃கு₃ணங்களுண்டு; அந்த கு₃ணங்களால் வந்த கலக்கத்தை எத்தாலே தெளியப்பண்ணுவது? 3. (ஶுத்₃த₄ம் வேத்தி விபீ₄ஷணம்) வந்தவனுடைய ஶுத்₃தி₄யடங்கலும் வடிவிலே தெரியாநின்றது. அவனுக்கு ஶுத்₃தி₄யாக நினைக்கிறது ராமஸம்ப₃ந்த₄த்தையிறே. 4. ''பாவநஸ் ஸர்வ லோகாநாம்''. (தூயோமாய்) அநந்யப்ரயோஜநதையைச் சொல்லிற்றாகவுமாம். (வந்து) E ''வந்துனதடியேன் மனம்புகுந்தாய்'' என்று அவன் வரவை நாம்

A திருவாய் 5 - 10 - 1, B பெரியாழ் திரு 2 - 2 - 5, C திருவாய் 1 - 3 - 2, D பெரியாழ் திரு 2 - 2 - 6, E பெரிய திரு 3 - 5 - 1.

செய்யக்கடவோம். 1. ''உபஸ்தே2யைருபஸ்தி2த:'' என்றும் 2. ''பத்3ப்4யாமபி2 க3மாச்சைவ'' என்றும் இட்ட நாலடிக்கும் புண்பட்டிருக்குமவனிறே. உபாயத்தில் துணிவு புறப்படவொட்டாது, உபேயத்தில் துணிவு புறப்படாதிருக்கவொட்டாது, (நாம்) க்ரமப்ராப்தி பற்றுத நாம்.

(தூமலர்) ப்ரயோஜநத்தைக் கணிசியாதிட்ட மலர். A மிக்க சீர்த்தொண்டரிட்டபூ. B ''கள்ளார் துழாயும்'' கணவலர்-அலரி;விஜாதீயங்களையுஞ்சொல்லுகிறது. அநந்யப்ரயோஜநர் தொட்டது ஏதேனுமாம். B [புள்ளாயோரேனமாய்] இவனேதேனுமிடிலும் கொள்ளுகைக்குத் தன்னை அமைத்தபடி. ஸ்ரீவராஹகல்பத்திலே முத்தக்காசை அமுது செய்விக்கச்சொல்லிற்று. 3. ''பத்ரம் புஷ்பம்'' — த்3ரவ்யதாரதம்யம் பார்ப்பதில்லை; இடுகிறவன் நெஞ்சில் ஈரமே பார்ப்பது. எல்லாங்கூட 3. ''அஶ்நாமி'' யிறே. (தூவி) 4. ''யத2ாதத2ா வாபி'' என்கிறபடியே க்ரமவிவக்ஷையின்றிக்கே அடைவுகெட்டிருக்கை. (தொழுது) விரோதி4கள் கண்டால் முறைதப்பாமைக்கு; கைபடைத்த ப்ரயோஜநம் பெறுகை. (வாயினாற்பாடி) வாக்குப்படைத்த ப்ரயோஜநம் பெறுகை. 5. ''உவாச ச'' என்று வருகைக்குமேலே வார்த்தையுஞ் சொல்லுவதே! என்று அவனை நோவுபடுத்துகை. (மனத்தினாற்சிந்திக்க) 6. ''மநஸாதி4க3ச்ச2தி'' 7. ''வாகு3த்தர:'' என்கிற நிலைகுலைந்து, மநஸ்ஸுக்கு முன்னே தொழுகையும் பாடுகையும் முற்படுகையாலே ஆற்றாமையின் மிகுதி சொல்லிற்று; மநோவாக்காயங்கள் மூன்றும் அங்கே ப்ரவணமானபடி. உபாயமாகிலிறே ஒன்றுஅமைவது.

(போயபிழையும் புகுதருவான் நின்றனவும்) உத்தரபூர்வாக4ங்கள். பால் குடித்து வ்யாதி4 போக்குமாபோலே, இனியது அநுப4விக்க இன்னாதது குலையும். பூர்வாக4மாகிறது—ஜ்ஞாநம் பிறப்பதற்கு முன்பு பு3த்3தி4பூர்வகமாகப் பண்ணின பாபம்; உத்தராக4மாவது—ப4க3வத்ஸமாஶ்ரயணத்துக்குப் பின்பு ப்ரக்ருதிவாஸநையாலே ப்ராமாதி3கமாகச் செய்யுமது.

(தீயினில் தூசாகும்) நெருப்பிற்பட்ட பஞ்சுபோலேயாம் 8. ''இஷீக. தூலமக்3நௌ ப்ரோதம் ப்ரதூ3யேத'' என்று வேத3த்தில் சொன்ன அர்த்த2ம் பெரியாழ்வார்மகளாகையாலே இடைச்சியான பின்னும் பின்னாட்டுகிறபடி.

(செப்பு) வாங்மந:காயங்களால் அநுப4விக்கவேணுமென்றது மிகை. விரோதி4போகைக்கு உக்திக்கு மேல் வேண்டாவென்கை. அவன், இவன் அநுகூலித்தவாறே பூர்வாக4த்தை விஸ்மரிக்கும்; உத்தராக4த்துக்கு 9. ''அவிஜ்ஞாதா'' வாம். இனி யார் அநுப4விப்பார்? புண்யபாபங்களாகின்றன — அவனுடைய அநுக்3ரஹ நிக்3ரஹங்களிறே. அவன் ''பொறுத்தேன்'' என்னத் தீருமத்தனையிறே இது.

''தூயோமாய்வந்து நாம் தூமலர் தூவித்தொழுது வாயினால் பாடி மனத்தினாற்சிந்திக்க, போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்; மாயனை மன்னுவடமதுரை மைந்தனைத் தூயபெருநீர் யமுனைத்துறைவனை ஆயர் குலத்தினில்தோன்றுமணிவிளக்கைத் தாயைக் குடல்விளக்கஞ் செய்த தாமோதரனை— செப்பு'' என்று அந்வயம். 5.

---

A பெரியதிரு 11—1—9 B பெரியதிரு 11—7—6.

## ஈராயிரப்படி - ஐந்தாம் பாட்டு

வ்யா :— அஞ்சாம்பாட்டு. (மாயனை) தானே தன்னை அமைத்துத் தருமத்தனையல்லது அணுகவும் பேசவுமொண்ணாதபடி கரைகட்டாக் காவேரி போலேயிருக்கும் பேரளவையுடைய ஸ்ரீவைகுண்ட2நாத2னென்கை. (மன்னு வடமதுரை) ப4க3வத்ஸம்ப3ந்த4ம் மாறாத தே3ஶம். (மன்னு இத்யாதி3) ஸ்ரீவைகுண்ட2த்தில் நின்றும் ஆர்த்தரக்ஷணார்த்த2மாக இங்கே பிறக்கையாலே உளனானான். (வடமதுரை) 1. "மது4ரா நாம நக3ரீ" (மைந்தனை) பிறந்த போதே கம்ஸனை முடிக்கவல்லமிடுக்கென்றுமாம். மாதாபிதாக்களுடைய காலிலே விலங்கு கழலும்படியிருக்கை என்றுமாம். பிள்ளை என்றுமாம்,

(தூய பெருநீர்யமுனை) A கலங்காப் பெரு நகரை விட்டவர்க்குத் திருவாய்ப்பாடிபோலே விரஜையை மறக்க ஆறுமுண்டானபடி. 2. "ப்ரஸாத3ம் நிம்நகா3 யாதா". கோ3தா3வரியைப்போலே பிராட்டியைக் கும்பிடுகொண்டு ஶரணாக3தகா4துகையாயிராதே, கம்ஸனுக்கு அஞ்சிப் போகிறபோதைக்கு உதவ வற்றியும், பெண்களுக்கும் க்ருஷ்ணனுக்கும் நீர் விளையாட்டு விளையாடுகைக்குப் பெருகுகையும்; இப்படி அடிமைக்குப் பாங்காயிருந்தபடி. (தூய) க்ருஷ்ணனும் பெண்களும் மாறிமாறிக் கொப்பளித்த தூய்மையென்றுமாம். (பெருநீர்) ஶ்லாக்4யமென்றுமாம். க்ருஷ்ணனுடையவும், பெண்களுடையவும் களவுக்குப் பெருநிலைநிற்கும். B "பொருநல் சங்கணி துறைவன்" என்னுமா போலே பெண்கள் படும் யமுனைத் துறையை உடையவன். கவிபாடுவார்க்கு ஊரும் பேரும் ஆறும் உடையவனென்கை.

(ஆயர் குலத்தினில் தோன்றும்) மது4ரையில் பிறப்பு — பிர[illegible]ாத ஸ்ரீவைகுண்ட2த்தோடொக்கும் திருவாய்ப்பாடியில் பிறப்பைப்பற்ற. (தோன்றும்) 3. "தே3வகீ பூர்வஸந்த்4யாயாம்" 4. "அஜோபி ஸந்" இத்யாதி3ப்படியே. (மணி விளக்கு) புகையும் எண்ணெயுமில்லை அங்கு; வெறும் மங்க3ள தீ3பம். (தாயைக் குடல் விளக்கம் செய்த) பெற்ற வயிற்றுக்குப் பட்டம் கட்டுகை. 5. "கௌஸல்யா ஶுஶுபே4 தேந புத்ரேணாமிததேஜஸா" C "என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்". (தாமோதரனை) நம்முடைய ப3ந்த4ம் நம்மாலறுக்கவொண்ணாதாப்போலே, அவனுடைய ப3ந்த4மும் அவனால் அறுக்கப்போகாது. "ஶேஷியினுடைய திருவிலச்சினை" என்று ப4ட்டர் அருளிச்செய்வர். (தூயோமாய்) அவன் இடையனாகக் கொண்டு தாங்களிடைச்சியான ஶுத்3தி4; க்ஷத்ரியன் இடையனானப்போலே ப்3ராஹ்மணியும் இடைச்சியானபடி. (தூயோமாய்) வாயிலும் முகத்திலும் நீரிடாதே வருகை. இருந்தபடியே வருகைக்கு ஶுத்3தி4யும், அஶுத்3தி4யும் வேண்டா. (வந்து நாம்) 6. "உபஸ்தே2யைருபஸ்தி2த:" 7. "பத்3ப்4யாம் அபி4க3மாச்சைவ" 6. "ஹ்ரீரேஷா ஹி மமாதுலா" — அவன் செய்யுமத்தை நாம் செய்யக்கடவோம். D "வந்துனதடியேன் மனம் புகுந்தாய்"—உபேயத்தில் த்வரை பார்த்திருக்கவொண்ணாது; அப்படியிருக்கிற நாம். (நாம்) நாமே செய்யவேணும். (தூமலர்) இலை வாணிபம் பண்ணாத மலர். E "மிக்கசீர்த்தொண்டரிட்ட பூந்துளவு" F "சூட்டு

---

A. மூன்-திருவ 51. B திருவாய் 10-3-11. C பெரியாழ்திரு 2-2-6. D பெரிய திரு 3-5-1. E பெரியதிரு 11-1-9. F திருவிருத்தம் 21.

நன்மாலைகள்'' இத்யாதி3. (தூவி) ப்ரணயினிக்குச் சடங்கு வேண்டா. (தொழுது) வீரன் தோற்றுற்போலே, தொழுவித்துக் கொள்ளுமவர்களிறே தொழுகிறார்கள். A "இதுமிகையாதலில்'' அவன் பொறுக்கமாட்டாதே 1. "ருணம் ப்ரவ்ருத்3த4மிவ மே'' என்னப் பண்ணுகை. (வாயினால் பாடி) வாய் படைத்த ப்ரயோஜனம் பெறுகை. (மனத்தினால் சிந்திக்க) ஜ்ஞானம் அனுஷ்டா2ன ஶேஷம். அதுவொண்ணாதபடி வந்த அடைவுகேடு தோன்றுது. (போய பிழையும் புகுதருவான் நின்றனவும்) பூர்வாக4உத்தராக4ங்கள். (தீயினில் தூசாகும்) பூர்வாக4மாவது — பு3த்3தி4 பூர்வகமாகப் பண்ணிப் போந்தவை. உத்தராக4மாவது — ப4க3வத்3 ஜ்ஞானம் பிறந்தால் ப்ரக்ருதிவாஸனையால் ப்ராமாதி3கமாகப் பிறந்தவை. (செப்பு) சொல்லமையையும் என்கை. (மாயனை இத்யாதி3 அடைவே செப்பு) என்று அந்வயம்.

## நாலாயிரப்படி — ஐந்தாம் பாட்டு

அவ:—அஞ்சாம்பாட்டு. (மாயனை) 'நாம் இங்ஙனே இலையகலப்படுத்தாநின்றோம். 2. "ஶ்ரேயாம்ஸி ப3ஹுவிக்4நாநி ப4வந்தி மஹதாமபி'' என்கிறபடியே நாம் அநாதி3காலம் பண்ணின பாபங்கள் விக்4நப்படுத்தாதோ? சக்ரவர்த்தித் திருமகன் திருவபி4ஷேகத்துக்கு வஸிஷ்ட2ன் முஹூர்த்தமிடுகிறான்; ப4ர்க்3யாதி4கரான பெருமாள் முடிசூடவிருக்கிறார்; ஜக3த்தடைய இதுக்கு 3. "ஸர்வாந் தே3வாந் நமஸ்யந்தி'' என்று மங்க3ளாஶாஸநம் பண்ணுகிறது. 4. "நாராயணமுபாக3மத்'' என்று பெரிய பெருமாளை ஆஶ்ரயிக்கிறது. அங்குமன்றோ சில விக்4நங்கள் வந்தது' என்று சில பெண்பிள்ளைகள் சொல்ல, 'எம்பெருமான் ஸங்கல்பித்த உத்ஸவத்துக்கு விக்4நமுண்டாவது; அவனடியார் ஸங்கல்பித்த உத்ஸவத்துக்கு விக்4நமுண்டாகாது' என்றார்கள் சில பெண்பிள்ளைகள்; எங்ஙனேயென்னில், தன ஸங்கல்பத்தை அழியமாறி ஸ்ரீபீ4ஷ்மன் அர்ஜுநன் ஸங்கல்பத்தை முடிய நடத்துகையாலே, நாம் இம்மஹோத்ஸவத்திலே அதி4கரித்துச் செல்லாநிற்கவே அதுக்கு விக்4நம் பண்ணக்கடவ உத்தர பூர்வாக4ங்கள் தன்னடையே நசித்துப்போமென்கிறார்கள்.

வ்யா:—(மாயனை) தானே தன்னை அமைத்துத்தரிலல்லது தன்னை நினைக்கவும் பேசவுமொண்ணாதபடி கரைகட்டாக்காவேரிபோலேயிருக்கும் பேரளவுடைய ஸ்ரீ வைகுண்ட2நாத2னென்றபடி. இங்கு ஒருகாலொருத்திக்கு உடம்பு கொடுக்குமாபோலே எல்லார்க்குமொக்க அங்குத் தன்னைக் கொடுத்துக்கொண்டிருக்குமவன். 5. "ஸதா3 பஶ்யந்தி''. (மாயன்) அவ்விருப்புக்கு B எத்திறம்; C "வைகுந்தனென்பதோர் தோணிபெறாதுழல்கின்றேன்'' என்னுமவளிறே. இடைச்சேரியோபாதி அவ்விடமும் கைவந்தபடி. நவநீத சௌர்ய நக3ரக்ஷோப4ாதி3களை நினைத்து B "எத்திறம்'' என்றதாகவுமாம். இவ்விடத்தில் திருநாட்டுப்படியை விஸ்தரிப்பது. அவ்விடத்திலே எம்பெருமானபி4மானத்திலே ஒதுங்கித் தந்தாமுக்கு என்ற அபி4மானமின்றிக்கேயிருக்கும்; இங்கு தனித்தனியே 6. "ஈஶ்வரோஹம்'' என்றிருப்பர்கள். இங்குள்ளார் அங்கே செல்லிலும் 'அடியேன்' என்று தெளியப்பண்ணும் D தெளிவிசும்பு அவ்விடம். அங்குள்ளாரே வரிலும் 'என்னது' என்று அறிவு கலங்கப்பண்ணும் E "இருள்தருமா ஞாலம்'' இவ்விடம்.

---

A திருவாய் 9-3-9, B திருவாய் 1-3-1, C நாச் - திரு 5-4, D திருவாய் 9-7-5, E திருவாய் 10-6-1.

(மன்னு வடமதுரை) பகவத்ஸம்பந்தம் மாருத தேசம். (மன்னு) ஸ்ரீவை குண்டத்தில் நின்றும் ஆர்த்தரக்ஷணார்த்தமாக இங்கே பிறக்கையாலே உளனானன். *(ஸம்ஸாரிகளுக்த ப்ராணன் வரும்) ஆர்த்தர்க்கும் ஆச்ரிதர்க்கும் பிறந்தவாறே வயிறெரிந்து மறக்கப்பண்ணுதிருக்கும். (வடமதுரை) 1. [மதுரா நாம] ஸ்ரீவைகுண்டம் போலே குன்றுங்குறிச்சியல்ல. 1. [நகரீ] விட்டுப்போந்தவிடமோ, பிறந்து விரும்பின விடமோ நகரியாவது? 1. [புண்யா] அவனைத் தருகைக்கு உபாயமாகை. 1. [பாபஹரா] விரோதி நிரஸநத்துக்தும் தானே. 1. [சுபா] அவையிரண்டுமில்லையாகிலும் விட வொண்ணாது. பரமபதமும் ஸம்ஸாரமும் வேண்டோமென்னும்படி, ப்ராப்யமும் தானே. 1. [யஸ்யாம் ஜாத:] இத்தனைக்குமடி. 1. [ஜகந்நாதஸ் ஸாக்ஷாத்விஷ் ணுஸ் ஸநாதந:] தன் ப்ரஜைகள் பட்ட ஆபத்தை நீக்குகைக்கு அவர்களிட்ட வழக் காய், A "வைகுந்தா" என்றும் 'அகர்மவச்யன்' என்றும் சொல்லுகிறபடியே பிறக்கை. 1. [ஸாக்ஷாத்] B "அங்கு வைத்திங்குப்பிறந்த" 2. "பூர்வஸந்த்யாயாம் ஆவிர்ப் பூதம்"— அத்திக்கில் ஆதித்யனுக்குள்ள ஸம்பந்தம். ஸ்நேஹத்தில் புரையில்லையித் தனை. (மைந்தனை) பிறந்தபோதே கம்ஸனை முடிக்க வல்ல மிடுக்கென்றுமாம். தாய் தமப்பன் காலில் விலங்கு கழலும்படியிருக்கை என்றுமாம். பிள்ளையென்றுமாம். ராஜாவென்றுமாம்.

(தூயபெருநீர் யமுனை) C கலங்காப்பெருநகரம் விட்டுப்போந்தவனுக்குத் திரு வாய்ப்பாடி என்றொரு அஞ்சிறான் புகலிடமுண்டானாற்போலே, விரஜையை மறப்பிக்க ஒரு ஆறுண்டானபடி. 3. "ப்ரஸாதம் நிம்நகா யாதா"—க்ஷோதவரியைப்போலே பிராட்டியைக் கும்பிடுகொண்டு சரணாகத காதுகையாயிராதே கம்ஸனுக்கு அஞ்சி எழுந்தருளின போதைக்கு வற்றியும், நீர்விளையாட்டு ஆடுகைக்குப் பெருகியும், 4 "வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ"—அடியறிந்தார் கூடப் போந்து கருத்தறிந்து பரிமாறினாற்போலே அடிக்குப் பாங்காயிருந்தபடி. (தூய) 5. "வல்லவீவதநோச்சிஷ்டபவித்ராதரவித்ருமா:"—க்ருஷ்ணனும் பெண்க ளும் மாறி மாறிக் கொப்பளித்த தூய்மை என்றுமாம். (பெருநீர்) ச்லாக்யதை என்று மாம். 6. "யமுநாம் சாதிகம்பீராம்". (யமுனைத்துறைவனை) யமுனையாற்றையுடைய வனை. க்ருஷ்ணனுக்கும் பெண்களுக்கும் களவுக்குப் பெருநிலை நிற்கும் ஆறு. D "சங்கணி துறைவன்" என்னுமாபோலே பெண்கள்படும் துறையையுடையவன்.

(ஆயர்குலத்தினில் தோன்றும்) ஸ்ரீவைகுண்டத்தில் குணங்கள் மடிந்து கிடக்கும். இங்கே, E ஒளிவருமுழு நலமாய்த்து. அந்தகாரத்தில் விளக்குப்போலே ஸ்ரீமதுரையில் பிறப்பு—பிறவாத ஸ்ரீ வைகுண்டத்தோடொக்கும் திருவாய்ப்பாடியில் பிறப்பைப்பார்க்க என்கை. ஏக்கத்திலே முலைப்பாலின்றிக்கேயொழிந்தது; நாக்கு ஒட்டி அழமாட்டிற்றிலன்; சிலுகுபடாமைக்கு அதுவும் கார்யகரமாய்த்து. முலைப்பால் பெற்று அழுதது இவ்விடத்திலேயிறே.

(தோன்றும்) 2 "**தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம் மஹாத்மநா**" அஜத்வ அவ்யயத்வ ஈச்வரத்வங்களுக்கு அழிவு வாராமே பிறக்கையாலே, கீழ்திக் குக்கு ஆதித்யனோடுள்ள ஸம்பந்தம் இவனோடுமிவளுக்குள்ளது. (அணிவிளக்கு) புகையும் எண்ணெயுமில்லை. (மணிவிளக்கு) அதுக்குமேலே மங்களதீபம். (தாயைக்

A திருவாய் 2-6-1. B திருவாய் 3-5-5. C மூன்-திருவ 51, D திருவாய் 10-3-11
* ( ) அடைப்பிலுள்ளது ஐயத்திற்குரியது. E திருவாய் 1-3-2.

குடல் விளக்கம்செய்த) பெற்றவயிற்றுக்குப் பட்டம் கட்டுகை. 1. "கௌஸல்யா லோகபே, தேந புத்ரேணாமிததேஜஸா" A "என்ன நோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்றவயிறுடையாள்". (தாமோதரனை) தன்வயிற்றில் தழும்புகண்டார் 'இப்படி பவ்ய னுவதே' என்று கொண்டாடப்படுகை. * (பட்டம் கட்டுகையாவது) நம்முடைய பந்தம் நம்மாலறுக்கவொண்ணாதாப்போலே அவனுடைய பந்தமும் அவனாலறுக்கவொண் ணாது. 2 "பக்திக்ரீதோ ஜநார்த்தந:" க்ஷாமத்திலே ஒருபடி தவிட்டுக்கு எழுதிக்கொடுத் தார், நல்லகாலப்பட்டால் ஸார்வபௌமனுங்காட்டில் மீட்கப்போமோ? 'தானெழுத்து வாங்கின தழும்புகாட்டி நம்மை எழுத்து வாங்குவித்துக்கொள்ளும் ஶேஷியுடைய திரு விலச்சினை' என்று பட்டர்.

(தூயோமாய்) அவன் இடையனாகக்கொண்டு தாங்கள் இடைச்சிகளான ஶுத்தி. க்ஷத்ரியன் இடையனானப்போலே தாங்களும் இடைச்சிகளானபடி. வாயிலும் முகத்திலும் நீரிடாதே வருகை. பாபத்திலே வந்தவாறே 3. "ஸாதுரேவ" என்றான். புண்யத் திலே வந்தவாறே 4. "பரித்யஜ்ய" என்றான். ஸம்ஸாரிக்குக் குற்றமாவது தனக்கு நன்மையுண்டென்றிருக்கை. 5. "மத்வ்ருத்தமசிந்தயித்வா" ஸ்ரீ விபீஷணாழ்வான் கடலிலே முழுகியோ வந்தது? த்ரௌபதி தூய்மையாய்க் குளித்தோ ப்ரபத்தி பண் ணிற்று? அர்ஜுநன் பறையர் நடுவேயன்றோ சரமஶ்லோகம் கேட்டது. இருந்த படியே வருகைக்குமேற்பட ஶுத்தியும் தேடவேண்டா, அஶுத்தியும் தேடவேண்டா. (தூயோமாய் வந்தோம்) கையில் மயில்கற்றையில்லை என்றுமாம். அதாவது — 6. "மம ப்ராணா ந்தராத்மாயம் ஶுத்தம் வேத்தி விபீஷணம்" — இவனோடு ஸம்பந்தமுடை யார்க்குமகப்பட ப்ரயோஜநாந்தர பரதையில்லை என்னும்படி அநந்யப்ரயோஜநதை தோற்ற வந்தானென்றாற்போலே, அநந்யப்ரயோஜநைகளென்னவுமாம். சக்ரவர்த்தி பற்றச்சொன்ன தர்மத்தை த்யஜித்து, விடச்சொன்ன தர்மத்தை அநுஷ்டித்து பற்றச்சொன்ன பலத்தையிழந்து விடச்சொன்ன பலத்தையே பற்றிப்போனான். ருஷிகள் அவனையே உபாயமாகக்கொண்டு பலத்திலே வ்யபிசரித்துப்போனார்கள். புல்லுக்கும் எறும்புக்கும் விலக்காமைக்குப் பரிகரமில்லாமையாலே உபாயோபேயங்க ளிரண்டும் எம்பெருமானேயாய்விட்டது. ஆநுகூல்யம் பேரிட்டு விலக்குவாரும் ப்ராதி கூல்யத்தாலே விலக்குவாருமாய் எல்லாருமிழந்துபோனார்கள்; இவள் இளையபெருமா ளைப்போலே இரண்டுமவனேயாகப் பற்றிச் செல்லுவோம் என்கிறாள். B ஆசும் மாசு மற்றபடி.

(வந்து) அவன் திருவுள்ளத்தைப் புண்படுத்தக்கடவோம். 7. 'உபஸ்தேயை ருபஸ்தித:' 8. "பத்ப்யாமபிகமாச்சைவ" 7. "ஹ்ரீரேஷா ஹி மமாதுலா" அவன் செய்யுமத்தை நாம் செய்தோமென்கை. C "வந்துனதடியேன் மனம் புகுந் தாய்". (நாம்) உபாயத்தில் துணிவு முற்படவொண்ணாது; உபேயத்தில் த்வரை முறைபார்த்திருக்கவொண்ணாது; அப்படியேயிருக்கிற நாம். (தூமலர்) அயத்நஸித்த மாகக் கைக்கெட்டின பூவெல்லாம்; ஒரு ப்ரயோஜநத்தைக் கணிசியாத மலரென்று மாம். D "மிக்க சீர்த்தொண்டரிட்ட பூந்துளவம்" என்னுமாபோலே அநந்யப்ரயோஜந மான மலர்கள். (தூவி) 9. "யதாததாவாபி" என்கிறபடியே க்ரமவிவக்ஷையில்லாமை. 'முறைகெட்டார் ப்ரணயிகளுக்குச் சடங்குண்டோ? (தொழுது) தொழுவார் கண்டால்

---

A பெரியாழ்திரு 2-2-6. B திருமாலை 22. C பெரிய திரு 3-5-1, *() ப்ரக்ஷிப்தம்.
D பெரியதிரு 11-1-9.

கள்' என்று தோற்றுமைக்காக தேவதைகளைத் தொழுமாபோலே, ஓரஞ்ஜலி பண்ணுதே தொழுவித்துக் கொள்ளுமவர்களிறே இப்போது தொழுகிறுர்கள், A "இதுமிகையாதலில்" அவனை 1. "ருணம் ப்ரவ்ருத்தமிவ" என்னப்பண்ணுகை.

(வாயினுல்பாடி) வாய்படைத்த ப்ரயோஜநம் பெற்றோமென்று ப்ரீதிபூர்வகமான குணகீர்த்தநம் பண்ணி. (வாயினுல்பாடி) மநஸ்ஸஹகாரமில்லாமை. 2. "உவாச ச" B "போற்றுதும்" என்னும்படியே அத்தலையை அழிக்கக்கடவோமென்றுமாம். (மனத்திஞல் சிந்திக்க) மனஸ்ஸிலே பகவத் குணங்களை விளைநீரடைத்துக்கொள்ள. (மனத்திஞல் சிந்திக்கப் போய பிழையும் புகுதருவானின்றனவும் தீயினில் தூசாகும்)-பாலும் கண்டசர்க்கரையும் பருகப் பிச்சு தெளியுமாபோலே, நமக்கினிதாக பகவதநுபவம் பண்ணுகிறகப் பெருநெருப்புப்பட்ட பஞ்சுபோலே பிணமுகம் காணவொண்ணுதபடி நசித்துப்போம். 3. "இஷிகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே" என்கிறபடியே. பூர்வாகமாவது-அநாதிகாலம் புத்திபூர்வமாகப் பண்ணிப்போந்த பாபம். உத்தராகமாவது-ஜ்ஞாநம் பிறந்தால் ப்ரக்ருதிவாஸனையாலே ப்ராமாதிகமாகப் பண்ணும் பாபம். பாபங்களானவை—ஸர்ப்பங்களபோலே செய்தபோதே மிடற்றைப் பிடிககுமதல்ல. க்ரியை இங்கே நசிக்கும்; கர்த்தா அஜ்ஞனுகையாலே மறக்கும்; ஸர்வஜ்ஞன் உணர்ந்து புஜிப்பிக்கும். பூர்வாகத்தை நசிப்பிக்கும்; உத்தராகத்துக்கு 4. "அவிஜ்ஞாதா" வாம். இனி ஆரை அண்டை கொண்டு அவை ஜீவிப்பது? ஸர்வேஶ்வரன் "பொறுத்தோம்" என்னத்திருமத்தனையிறே. (செப்பு) [மாயனை மன்னு வடமதுரை மைந்தனை, தூய பெருநீர் யமுனைத் துறைவனை. ஆயர்குலத்தினில் தோன்றுமணிவிளக்கை, தாயைக்குடல் விளக்கம் செய்த தாமோதரனை—செப்பு] என்று அந்வயம்.

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம் - ஐந்தாப்பாட்டு

வ்யா:—அஞ்சாம்பாட்டு. (மாயனை இத்யாதி) (மாயனை) 5. "ஸதா பஶ்யந்தி" என்கிறபடியே விஶ்ருங்கலஜ்ஞாநிகளான நித்யஸூரிகளாலும் கரைகாணவொண்ணுத பரத்வத்தை யுடையவனை. (மன்னு வடமதுரை மைந்தனை) பகவத் ஸம்பந்தம் மாருத வடமதுரையிலேயிருக்கிற ராஜாவாய், மிடுக்கனுய், யுவாவானவனை. (தூய) ஸ்ரீ வஸுதேவர் கண்ணனை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளுகிறபோது 6. "ஜாநுமாத்ரோதக" ராயெழுந்தருளலாம்படி பாங்காக வற்றிக்கொடுத்த தூய்மையாகவுமாம்; ஜலக்ரீடையிலே பெண்களும் அவனுமாகக் கொப்பளிக்கையால் வந்த தூய்மையாகவுமாம். (பெருநீர்) மஹாஜலத்தையுடையதாகையாலே அத்யகாதமான. (யமுனைத் துறைவனை) யமுனையினுடைய துறையைத் தனக்கு நிரூபகமாகவுடையவனை. (ஆயர்குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை) திருவாய்ப்பாடியிலேயே வளராநின்றுகொண்டு அக்குலத்துக்கு மங்களதீபமாயுள்ளவனை. (தாயைக் குடல்விளக்கம்செய்த தாமோதரனை) C கண்ணிக்குறுங்கயிற்றுலே உரலோடே கட்டுண்டு பெற்றதாயான யஶோதைப் பிராட்டியினுடைய ஹ்ருதயத்துக்கு ப்ரகாஶகனுனவனை. (நாம்) "அவனே உபாயம்" என்றிருக்கிற நாம். (தூயோமாய்) அநந்யப்ரயோஜநராய். (வந்து) ப்ராப்யருசி இருந்தவிடத்தில் இருக்கவொட்டாமையால் வந்து-

A திருவாய் 9-3-9, B

C பெரிய திரு 11-5-5.

(தூமலர்) யோக்3யமோ அயோக்3யமோ என்று தேடப்படாத மலர்களை. (தூவி) அக்ரமமாக அவன் திருவடிகளிலே பரிமாறி. (தொழுது) ஸேவித்து. (வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க) ''அவன் கொடுத்த கரணத்தால் அவனை ஆஶ்ரயிக்கப்பெற்றோம்'' என்று பாடி நினைக்க. (போயபிழையும்) கழிந்த அநாதி3யான பூர்வாக4ங்களும். (புகுதருவான் நின்றனவும்) ப்ரவேஶத்தைத் தருகிறவையாய் நின்ற உத்தராக4ங்களும், (தீயினில் தூசு ஆகும்) நெருப்பிலிட்ட பஞ்சுபோலேயாம். (செப்பு) ஆகையால் உக்தகு3ணவிஶிஷ்டனான எம்பெருமானை அநுஸந்தி4யுங்கோள். 'ஆயர்குலம்' என்றது—அநந்யஸாத4னரான ப4ாக3வதகுலமென்றபடி. 5

## மூவாயிரப்படி — ஆறும்பாட்டு

அவ: —aஆறும்பாட்டில் – bமுதல்பாட்டில்-'ப4க3வத்ஸம்ஶ்லேஷமே ப்ராப்யம்; அநந்யஸாத்4யமான இதுக்கு ஸாத4நமும் அவனே; அந்த ஸாத4நத்திலே அந்வயிக்கைக்கு அதி4காரிகளும் அந்த ப்ராப்யத்தில் இச்சை2யுடையவர்களே' என்று ஸாத்4யஸ்வரூபத்தையும் ஸாத4நஸ்வரூபத்தையும் அதி4காரிஸ்வரூபத்தையும் ஸாதி4த்து, இரண்டாம்பாட்டில் — 'ப்ராப்யப்ராபகங்கள் இரண்டும் ஈஶ்வரனே' என்றிருக்கும் இச்ச2ாதி4காரிகளுக்கு ஸம்ப4ாவிதமாய், $b_2$ குர்வத்3ரூபமான கரணங்களுக்கு வகுத்த வ்யாபாரவிஷயங்களைக் காட்டிக்கொடுக்கவேண்டுகையாலும், காலக்ஷேபத்துக்காகவும் ராக3ப்ரேரிதமாக அநுஷ்டே2யமான கர்த்தவ்யாம்ஶத்தைச் சொல்லிற்று: மூன்றும்பாட்டில் ப4க3வத3நுப4வஸஹகாரிகள்பக்கல் உபகாரஸ்ம்ருத்யதிஶயத்தாலே அவர்களுக்கு யாவை யாவை சில அபேக்ஷிதங்கள், அந்த ஸம்ருத்3தி4களடைய அபேக்ஷிக்கக்கடவதென்றது; நாலாம்பாட்டில் தே3வதாந்தரஸ்பர்ஶரஹிதராய், இப்படி அநந்யப்ரயோஜநராய், ப4க3வதே3கப்ரவணராய், ப4க3வத3நுப4வோபகரணமானவற்றிலே இழிந்தவர்களுக்கு அந்த தே3வதாந்தரங்களும் ஏவல்செய்யுமென்னுமிடம் சொல்லிற்று, அஞ்சாம்பாட்டில்-- இப்படியே ப4க3வத3நுப4வத்திலிழிந்தவர்களுக்கு வரும் அநுப4வவிரோதி4களை அவ்வநுப4வம்தானே நிரோதி4க்குமென்னுமிடம் சொல்லிற்று. ஆக, இப்படி கீழ் அஞ்சுபாட்டாலே ப்ராப்யமான க்ருஷ்ணாநுப4வத்துக்கு ஏகாந்தமான உபகாணங்களைச்சொல்லி, அநந்தரம் மேல்பத்துப்பாட்டாலே அந்த உபகரணங்களைக்கொண்டு அநுப4விக்குமவர்களை c எழுப்புகிறது.

---

**பெ. அ.** ஆறும்பாட்டு. a ''ஆறும்பாட்டில்'' என்றதுக்குஅநந்தரம், 'வ்யாக்2யாநம் பண்ண இழிகிறோம்' என்று கூட்டுவது; இப்பாட்டின் வ்யாக்2யாநாந்தத்திலே ''எழுந்திராயென்கிறார்கள்'' என்கிற வாக்யத்தோடு அந்வயமாதல் கண்டு கொள்வது. b, c கீழ் அஞ்சு பாட்டும் ஒரு பேடிகையாகவும், மேல் பத்துப் பாட்டும் ஒரு பேடிகையாகவும் திருவுள்ளம் பற்றி ஸங்க3த்யர்த்த2ம் வ்ருத்தகீர்த்தநம் பண்ணுகிறார் (முதற்பாட்டில் என்று தொடங்கி 'எழுப்புகிறது' என்னுமளவும்.)

---

**சி. அ.** ஆறும்பாட்டு. (புள்ளும் சிலம்பின காண்) $b_2$ (குர்வத்3ரூபம்) ப்ரவ்ருத்திஶீலம்.

---

**கு. அ.** ஆறும்பாட்டு. (புள்ளும் சிலம்பின காண்) $b_2$ (குர்வத்3ரூபமான) ப்ரவ்ருத்திஶீலங்களான கரணங்கள் என்றபடி.

குடியிலுள்ள பெண்களுக்கெல்லாம் அவதியில்லை; இங்கெல்லாமாக ஆயிரம்பேர் போராது காண் வந்தது; அல்லாதாருணர்ந்துவர வேண்டாவோ? அவர்களுணர்ந்து வாராதொழிந்தது விடியாததுக்கடையாளம்'' என்ன — (மிக்குள்ள பிள்ளைகளும்) 'உன்னையொழிந்தாரடையப் போனார்காண்' என்ன; — அவர்களோத, வந்தவர் மறுத்தோதுகிறார்கள்; ''அவர்கள் என்னை அழையாதேபோனார்களே !'' என்ன; ''பெருந்திரளாகையாலே, நீ போய்த்தில்லை என்றறியாமையாலும், போகிறவர்களோடே கூடப்போகைதானும் ப்ரயோஜனமாகையாலும் போனார்களத்தனை; உன்னை ஆராயாதே போனார்களல்ல'' என்ன; ''என்ன கார்யத்துக்குத்தான் அவர்கள் போய்த்து?'' என்ன — (போவான்போகின்றார்) வழிபோகையே உத்தேஶ்யமாகப் போனார்கள்; தேஶப்ராப்தியிலும் அர்ச்சிராதிமார்க்கமே ப்ராகருபமாயிருக்கக்கடவதிறே. ''கைகழியப் போனார்களாகில் இனி நான் என்? என்னையொழியவும் போகவல்லார்களானார்களே'' என்ன; ''அது செய்தபடி கேட்டிலையோ? நீ வாராமை அறிந்தவாறே 'இன்னாள் வந்திலள்' என்றோம். பின்னை போகமாட்டிற்றிலர்கள்''—(போகாமல்காத்து) அவர்களைத் தலைக்காவலிட்டோ செய்தது? A ''திருவாணைநின்னாணை'' என்று ஆணையிடவேணுமோ? ''நீபோந்திலை'' என்று ஒருவார்த்தை சொல்லுங்காட்டில் விலங்கிட்டாற்போலே கால்நடை தாராமல் நின்றார்கள்; போவார்க்குக் காலையொழியப் போகப்போமோ? ''அவர்களை அங்கே நிறுத்தினிகோளாகில், நீங்கள் இங்கேவந்ததென்?'' என்ன - (உன்னைக்கூவுவான்) போகைதானே உத்தேஶ்யமாகப் போனாற்போலே, உன்னைக்கூவுகைதானே ப்ரயோஜநமாக வந்தோம். வந்துநின்றோம்) 1. ''உத்தரம் தீரமாஸாத்ய கஸ்த ஏவ வ்யதிஷ்டத'' என்னும்படியே உன் பக்கலிலே வந்து கால்கள் தரையிலே பாவிநிற்கப்பெற்றோம். ராவணபவநத்தை விட்டுப் பெருமாளெல்லையிலே புகுந்தபின்பிறே அவன் தரித்துநின்றது. ''நீ போந்திலை'' என்றபோதைத் துணுக்குத்தீர, உன்வாசலிலே வந்து நல்தரிக்கப் பெற்றோம்.

''அப்பெண்கள் திரளெல்லாங்கிடக்க, என்வாசலிலே வந்து கால்பாவுகைக்கு ஏற்றமென்? நீங்களென்னையொழிய தரியாதிருக்க, நான் உங்களுக்குப் புறப்பட்டு முகங்காட்டாதிருந்தேனென்று போரவெறுத்திகோளிறே'' என்ன— கோதுகலமுடைய பாவாய்) ''உன் வாசலிலே புகுந்து போகவே க்ருஷ்ணன்பக்கல் முகம்பெறலாம்படியன்றோ உன்மதிப்பு, எங்களுக்கு வெறுப்பென்? உன்வாசலிலே வந்து உன் பேரைச் சொல்லி அழைக்கைக்குமேற்பட ஏற்றமுண்டோ எங்களுக்கு? அவனாலும் ஶிரஸாவஹிக்கப்படுவாளாய், எங்களுக்கு உன்னையொழியச் செல்லாதபடியிருப்பாயாய், எங்களுக்கு க்ருஷ்ணன் பக்கல் புருஷகாரபூதையாயிருப்பாளொருத்தியன்றோ நீ'' (பாவாய்) நிருபாதிகமான ஸ்த்ரீத்வத்தையுடைய உனக்கு எங்கள் ஆற்றாமை தெரியாமையில்லையிறே. B பெண்ணின் வருத்தமறியாதவன்படியாகவோ நீயும்? ஒரு ''முலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே'' என்று பட்டர். பிறவி பிறந்து அறியவேணுமிறே அதுக்கு. (எழுந்திராய்) புறப்பட்டு எங்கள் திரளிலே வந்து கலக்கவேண்டா. அங்கப்ரத்யங்கங்களினுடைய பரிஸ்பூரணங்களே அமையும். (எழுந்திராய்) நாங்கள் உன் வாசலிலே வந்தெழுப்ப, நீ எழுந்திருந்தாய் என்னும் ஏற்றம் எங்களுக்குத் தாராய்.

---

A திருவாய் 10-10-2, B நாச்-திரு 13-1.

''எழுந்திருந்து நாமெல்லாங்கூடிப் பெறப்புகுகிற ப்ரயோஜநமென்?'' என்ன—(பாடி) ''க்ருஷ்ணன், பெண்கள்'' என்று வாய்க்காவலிட்டுக் கிடக்கிற ஊரிலே இவ்விரண்டுநாளுங் கழிந்தால் அவனை நமக்குப் பாடக்கிடைக்குமோ? ஆஸுரப்ரக்ருதிகளான ஹிரண்யாதி3கள் படைவீடுகள்போலே திருநாமஞ்சொல்லப் பொறார்களாய்த்து—பெண்கள் ப்ரஸங்க3த்திலே மோஹிப்பர்கள் என்று. அவ்விழவுதிர 1. ''க்ருஷ்ணநாம புந:புந:'' என்கிறபடியே வாயாரத் திருநாமத்தைப்பாடி. (பறைகொண்டு) நாட்டுக்குப்பறை, தங்களுக்குக் கைங்கர்யம். கிட்டினவாறே ''உன்றன்னோடுற்றோமேயாவோம்'' (29) என்னக்கடவர்களிறே. 'இவை பின்னை அவன் நமக்குத் தரப்புகாநின்றானோ?' என்ன—(மாவாய்பிளந்தானை) நம் விரோதி4களைப் போக்கி நம் அச்சந்தவிர்த்த உபகாரகனன்றோ. தாரானோ? (மாவாய்) ஸ்ரீநாரத ப4க3வான் ''நாம் முடிந்தோம்'' என்று கதறிக்கொண்டுவந்து விழும்படியிறே வந்து தோன்றினபடி. நமக்காகக் கேஸியைக்கொன்று திருவாய்ப்பாடியிலும் ஸ்ரீப்3ருந்த3ாவநத்திலுமுண்டான வன்னியமறுத்து, பெண்ணும் பேதையும் சகடச்சாத்தாகப்போம்படி பண்ணினவன், நங்காரியம் செய்யானோ? 'அது பண்டிறே; இப்போது அவனல்லனே; 2. ''மது4ராம் ப்ராப்ய கோ3விந்த3: கத2ம் கோ3குலமேஷ்யதி। நக3ரஸ்த்ரீகலாலாபமது4 ஶ்ரோத்ரேண பாஸ்யதி॥'' என்கிறபடியே பெரிய நாக3ரிகனாய், படைவீட்டிலேயேறி நக3ரஸ்த்ரீகளுந் தானுமாய்ப் போனவன், நம்மைப்பார்க்குமோ? நங்காரியஞ் செய்யுமோ?' என்ன—(மல்லரைமாட்டிய) 'அங்கும் 3. ''ந ஸமம் யுத்3த4மித்யாஹு:'' —அங்குபோயும் நம்மோட்டைப் பெண்கள் கார்யமன்றோ செய்தது? அதுவும் நம் பேறன்றோ?' என்ன—(தேவாதிதேவனை) 'இப்போது அவனை ப்3ராஹ்மணர், ஸர்வேஶ்வரனென்றுகாணும் சொல்லுவது. (தேவாதிதேவனை) 4. ''விது3: க்ருஷ்ணம்—ஸர்வே தே3வா தே3வகீபுத்ர ஏவ'' 5. ''க்ருஷ்ண ஏவ ஹி'' 6. ''யதோ வா இமாநி'' இத்யாதி3களிற்படியே காரணபூ4தனென்று உபாஸ்யனாகக் காணுஞ் சொல்லுகிறது; அப்படி பெருமையுடையவன், அப3லைகளான நம்மைப் பார்க்குமோ?' என்ன; 'அது நம்பேறன்றோ; அவனிருந்தபடியே உத்3தே3ஶ்யனன்றோ நமக்கு? நாம் போய் ஸேவிக்கிறோம்'—(சென்று நாம் சேவித்தால்) அத்தலை இத்தலையாய், அவன் வருகையும் ஸேவிக்கையும் தவிர்ந்தால், நாம் சென்று ஸேவிக்குமத்தனையன்றோ? அப்படி ஸேவித்தால் நம் கார்யஞ் செய்யாதொழியுமோ? செய்திலனாகில் ஸ்ரீப4ரதாழ்வான் பட்டதுபடுகிறோம். 7. ''ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா'' என்னும்படியே அவன் நெஞ்சிலே புண்படுத்துகிறோம். 8. ''ஏபி4ஶ்ச ஸசிவைஸ்ஸார்த்த4ம்''. 'கீழ்ச்சொன்னவையெல்லாம் நமக்கில்லையேயாகிலும், ஆர்த்தி கண்டால் காகத்துக்கிரங்கினமாத்ரம் நமக்கிரங்கானோ?'— (ஆவாவென்றாராய்ந்தருள்) ' 9. ''க்ருபயா பர்யபாலயத்'' என்று உகவாதார் பெறுவது உகந்தார்க்குக் கிடையாதோ? முறைகெட நாம் சென்று ஸேவித்தால், வந்தேறியான ப்ரணயித்வமன்றோ போகலாவது; ஆர்த்தர்பக்கல் பண்ணும் க்ருபையும் போமோ? தானுளனானால் உண்டானது போமோ? பாடிப் பறை கொள்ளுகிறோம்; போய் ஸேவிக்கிறோம்; அத்தலைக்கு ப்ரியமாகக் கைங்கர்யம் பண்ணுகிறோம். இப்படிகளாலே அத்தலையை உகப்பிக்கையிறே ஸ்வரூபம். 10. 'ப்ரஹர்ஷயிஷ்யாமி'யிலேயிறே அந்வயம். 11. ''ப்ரீயதே ஸததம் ராம:'' — ப2லம் கொடுக்க அவஸரம் பெறான் என்கிறது. ஆனபின்பு எழுந்திராய்' என்கிறார்கள். 8.

## ஈராயிரப்படி — எட்டாம் பாட்டு

அவ :— எட்டாம்பாட்டு. பின்னையும் ஒருபெண்பிள்ளை வாசலிலே சென்று எழுப்புகிறார்கள்.

வ்யா :— (கீழ்வானமித்யாதி3) 'கிழக்கு வெளுத்தது, எழுந்திராய்' என்கிறார்கள். 'ஆண்களும் வ்ருத்3தை4களும் உணருவதுக்கு முன்னே எழுந்திராய்' என்கிறார்கள். '1. "ப4ாஸ்கரேண ப்ரப4ா யத2ா", "திங்கள் திரு முகத்துச் சேயிழையார்" (30) என்கிறபடியே, நீங்களெல்லாம் கிழக்கு நோக்கி 'விடிந்ததோ இல்லையோ?' என்று பார்க்க, உங்கள் முகத்தினொளி கீழ்தி3க்கிலே சென்று தாக்கி உங்கள் முகத்திலே வந்து ப்ரதிப2லிக்கையாலே கிழக்கு வெளுத்ததாயிருக்கிறதத்தனை: இது அந்யதா2ஜ்ஞானம்; மற்றடையாளமுண்டாகில் சொல்லுங்கோள்' என்ன— (எருமை சிறுவீடு இத்யாதி3) "சிறுவீடு—பனிப்புல்லு மேய்ச்சலுக்குக் காலமே விட்டு அவை மேய்கைக்காக எங்கும் பரந்தனகாண்; ஸ்ரீநந்த3 கோ3பர்க்கு முத்திறமுண்டு; அவற்றின் பின்னே க்ருஷ்ணனும் போம்; பின்னை யாரைக் காண்பது? எழுந்திராய்" என்ன; "உங்கள் முகத்தில் ஒளியைக்கண்டு இருள் திரண்டு போகிறினவித்தனை" என்ன, 'விடிந்ததில்லையென்று உன்னால் சொல்லலாவதுண்டோ' என்ன. "பஞ்சலக்ஷம் குடியில் பெண்களுக்காக நீங்கள் இத்தனை பேரோவுள்ளது? அல்லாதார் உணராமையாலே விடிந்ததில்லை" என்ன — (மிக்குள்ள பிள்ளைகளும்) அவர்கள் ஆராயாதே போனார்கள்; நீ எழுப்பக் கிடந்தாய். (போவான் போகின்றாரை) போகைதானே ப்ரயோஜனமாகப்போனார்களென்ன; "நாம் இனி அங்கென் அவர்கள் போனார்களாகில்?" என்ன — (போகாமல்காத்து) அவர்களைக் காற்கட்டச் செய்தோம். A "திருவாணை நின்னாணை" என்ன வேண்டாவே இவர்களுக்கு. (உன்னைக் கூவுவான்) நீங்கள் தான் எழுப்புகிறதென்னென்ன, "இன்னார்வாசலிலே வந்து எழுப்பினார்கள்" என்னும் தரம் பெறுகைக்காக; எங்களுக்கு இதுவே ப்ரயோஜனம். (வந்து) 2. "உத்தரம் தீரமாஸாத்3ய". (நின்றோம்) 2. "க2ஸ்த2 ஏவ வ்யதிஷ்டத". (கோதுகலமித்யாதி3) எங்கள் திறத்தாரோ மிகுத்தள்ளுண்டார்? (கோதுகலமுடைய) இங்கே புகுந்து போகவே எம்பெருமான் கைக்கொள்ளவேண்டும்படி அவனாலே கொண்டாடப்படுமவள். (பாவாய்) 3. "நாரீணாமுத்தமா வதூ4:" என்று நிருபாதி4க மான ஸ்த்ரீத்வமுடையளாகை. (எழுந்திராய்) நாங்கள் உன்னை உணர்த்த உணர்ந்தாயாகிற பெரிய தரத்தை எங்களுக்குத் தாராய். 4. "ஆத்மாநம் பூஜயந் ராம" இத்யாதி3. ப4ட்டர் விடியுந்தனையும் கண்வளர்ந்தருள, சிஷ்யர்களெல்லாரும் திருவாசலிலே வந்திருக்குமாபோலே, (பாடிப் பறை கொண்டு) நாட்டுக்கு நோன்புக்குப் பறை; தங்களுக்கு ஸேவிக்கை ப2லம்.

(மாவாய் பிளந்தானை) 'நாம் சென்றால் நம் அபேக்ஷிதம் செய்யுமோ?' என்னில்: நமக்காகக் கேசியைப் போக்கி நம்மையும் தம்மையும் உண்டாக்கித் தந்தவனன்றோ; ஸ்ரீப்3ருந்தா3வனம் கேசியோடே வன்னியமற்றது; பின்பு திரியலாய்த்து. (மல்லரை பெண்ணுக்கும் பேதைக்கும் ப4யங்கெட்டு உலாவித் திரியலாய்த்து. (மல்லரை

A திருவாய் 10-10-2.

மாட்டிய இத்யாதி₃) இப்போது பெரிய நாக₃ரிகனுய் நமக்கு விநியோக₃ப்பட ஸுலப₄னுயிருக்கை. (மல்லரைமாட்டிய) 1. "ஸக்₂ய: பஶ்யத" என்கிறபடியே அவ்வூரில் பெண்களுக்கு உதவின இது தங்களுக்கும் உதவிற்றென்கிருர்கள். (தேவாதி தேவனை) 2. 'ஜாதோऽஸி தே₃வதே₃வேஶ" 3. "ஸோஹம் தே தே₃வதே₃வேஶ" A"அவரை நாம் தேவரென்றஞ்சினோமே". (சென்று நாம் சேவித்தால்) 4. "பத்₃ப்₄யாமபி₄க₃மாச்சைவ"என்றும், 5. "விபீ₄ஷணமுபஸ்தி₂தம்" என்றும், 6. "உபஸ்தே₂யைருபஸ்தி₂த:" என்றும் அவன் நெஞ்சு புண்படுகைக்குடலாக அவனிருந்தவிடத்தே சென்று அவன் செய்வதை நாம் செய்துவிடுகிறோம். நாம் 7. "ஏஹி பஶ்ய ஶரீராணி" என்று விரஹம் தின்ற உடம்பைக்காட்டுகிறோம். 8. "ப்₄ராது; ஶிஷ்யஸ்ய தா₃ஸஸ்ய"—ப்ரணயித்வம் போனாலும் பொதுவான ஆர்த்த ரக்ஷணம் விடுமோ? (ஆவா வென்றாராய்ந்தருள்) 9. "ஆந்ருஶம்ஸ்யம் பரோ த₄ர்ம:" என்று சொல்லிவைத்தும் அதுஅனுஷ்டி₂யாதே இருக்குமோ? அவன் பக்கல் ஒரு தட்டில்லை; நம் குறையத்தனை; கடுகப் புறப்படவமையும் என்கிருர்கள். 8.

## நாலாயிரப்படி—எட்டாம்பாட்டு

அவ:—எட்டாம்பாட்டு (கீழ்வானம்) "இதுக்குமுன்பு சென்ற காலங்களுமெல்லாம் தப்பிக் கிழக்கு வெளுத்தது கிடாய்" என்று உணர்ந்த பெண்பிள்ளைகளெல்லாரிலும் கொண்டாட்டமுடையாளொரு பெண்பிள்ளை வாசலிலே சென்று எழுப்புகிருர்கள்.

வ்யா:—(கீழ்வானம்) "இடிவிழுந்தாலும் கிடந்துறங்குமத்தனையோ! கிழக்கு வெளுத்ததுகாண், எழுந்திருந்துகொள்ளாய்" என்கிருர்கள். "ஆண்களும் வ்ருத்₃த₄ர்களும் உணர்வதுக்கு முன்னே எழுந்திராய்" என்கிருர்களாகவுமாம். B "வெண்ணிறத் தோய் தயிர்" என்று தயிர் வெளுக்கத் தோய்ந்தவாறே விடிந்ததென்றறிகையாலே உறங்காதே பலகால் தயிரைப் பாராநிற்பர்கள்; அத்தாலே 'கிழக்கு வெளுத்தது' என்ன, "இரவெல்லாம் கிழக்குநோக்கி விடிந்ததோ இல்லையோ என்று பார்க்கிற உங்கள் முகத்தினொளி கீழ்தி₃க்கிலே சென்று தாக்கி உங்கள்முகத்திலே வந்து ப்ரவேஶிக்கையாலே கிழக்கு வெளுத்ததாயிருக்கிறது. அது அந்யதா₂ஜ்ஞானம்; மற்றடையாளங்களுண்டாகில் சொல்லுங்கோள்" என்ன—(எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண்) 'சிறுவீடு—பனிப்புல்மேய, காலத்திலே விட்டு வயல்களெங்கும் பரந்தனகாண்' என்ன, 'ஸ்ரீநந்த₃கோ₃பர்க்கு முத்திறமுண்டு; அவற்றின்பின்னே க்ருஷ்ணன்போம்; பின்னை யாரைக் காண்பது? எழுந்திராய்' என்ன, "நீங்கள் 'திங்கள் திருமுகத்துச் சேயிழையார்' (30) ஆகையாலே உங்கள் திருமுகத்திலொளியைக்கண்டு இருள் திரண்டு போகிறதித்தனை; அந்யதா₂ஜ்ஞானம்." அருணோத₃யத்துக்கு அஞ்சி இருள் சிதறிப்போகிறதென்னவுமாம். C "மேட்டிள மேதிகள் தளைவிடுமாயர்கள்" என்று இவள் தமப்பனார் எம்பெருமானை எழுப்பினார்; இவர்கள் இவளை எழுப்புகிருர்கள். (சிறுவீடு) 'சிறுவீடு பெருவீடு' என்று பெரியாழ்வார் வயிற்றில் பிறந்து அக்₃நிஹோத்ரத்தில் வாசியறிகை தவிர்ந்து இடைமுடியும் இடைநடையும் இடைப்பேச்சுமாய் இவற்றின் வாசியறிவதே! "எருமை பரந்ததல்ல; ஆதி₃த்ய கிரணங்

A திருநெடு 21. B பெரியாழ் திரு 3-8-9. C திருப்பள்ளி-4.

களுக்கு உளைந்து இருள் சிதறிப்போகிறபடிகாண்'' என்று இவர்களுக்குச் சொல்ல, 'நாங்கள் ப்4ரமித்தோமாயிடுக, விடிந்ததில்லை என்று உன்னால் சொல்லலாவதுண்டோ?' என்ன, 'அஞ்சுலக்ஷம் குடியில் பெண்களுக்கு நீங்களாயிரம் பெண்களிவ்வளவோ வுள்ளது? அல்லாதாரெல்லாம் உணராமையாலே விடிந்ததில்லை' என்ன; 'அவர்களோ தவதவ நாறுகிறார்கள்; உன்னிலும் பிள்ளைகள்; அவர்கள் ஆராயாதே போனார்கள்; நீ எழுப்பக்கிடந்தாய்' (போவான் போகின்றாரை) 'போகையே ப்ரயோஜனமாகப் போனார்கள்,' என்ன, 'நான் இனி அங்கு என் அவர்கள் போனார்களாகில்?' என்ன— (போகாமல் காத்து) ''அவர்களைக் காவலிட்டோ செய்தது;' செய்யாதன செய்யோம்'(2); என்ற வார்த்தையை அறிந்திகொளோ? என்று நம்முடைய வ்யவஸ்தை2யை உணர்த்தி நீ வந்ததில்லையென்ன, விலங்கிட்டாற்போலே நின்றார்கள்; காலையொழிய நடக்கப்போமோ?'' 'நீங்கள் அவர்களை ஆணையிட்டுத் தடுத்திகொளோ?' என்ன, A ''வாசம்செய் பூங்குழலாள் திருவாணை'' என்ன வேண்டாவே இவர்களுக்கு; நீ வந்திலை யென்னவமையும்; கால் போகமாட்டார்கள்.' 'நீங்கள்தான் நின்றதென்?' என்ன— (உன்னைக்கூவுவான்) இன்னார் வாசலிலே வந்து எழுப்பினார்களென்று தரம்பெற. எங்களுக்கு இதுவே ப்ரயோஜனம் போரும். (வந்து) 1. ''உத்தரம் தீரமாஸாத்3ய''; (நின்றோம்) 1. ''க2ஸ்த2 ஏவ வ்யதிஷ்ட2த''.

(கோதுகலமுடைய) எங்கள் திறத்தாரோ இங்குத் தள்ளுண்டு நிற்பார்? B ''புள்ளுவம் பேசாதே போகுநம்பி'' C ''கழகமேறேல் நம்பி'' என்னுமிங்குத்தைக்கு எங்களோடு அவனோடு வாசி என்? (கோதுகலமுடைய) இங்கே புகுந்துபோகவே எம்பெருமான் கைக்கொள்ளவேண்டும்படி அவனாலே கொண்டாடப்படுமவள். அவனிலும் ததீ3யரை உகக்கும் வேண்டப்பாடாகவுமாம். (பாவாய்) 2. ''நாரீணாமுத்தமா வதூ4:'' நிருபாதி4கஸ்த்ரீத்வமுடையளாகை. (எழுந்திராய்) நாங்கள் உன்னை உணர்த்த உணர்ந்தாய் என்கிற பெரிய தரத்தை எங்களுக்குத் தாராய். 3. ''ஆத்மாநம் பூஜயந் ராம ப்ருச்ச2ஸ்யஸ்மாந் ஸுஹ்ருத்தயா'' இத்யாதி3வத். ப4ட்டர் போதுவிடியுந்தனையும் கண்வளர்ந்தருள, ஶிஷ்டர்களெல்லாரும் கொண்டகோலங்களும் தாங்களுமாய் வந்து கிடக்குமாபோலே. 'எதுகார்யமாக நீங்கள் எழுப்புகிறது?' என்ன— (பாடிப்பறைகொண்டு) நாட்டார் நோன்புக்குப் பறை. தங்களுக்கு ஸேவிக்கை ப2லம். (பாடி) ''ஹிரண்யாய நம:'' இறே. பண்டு வாய் காவலிடுவர்கள்; இப்போது அது வேண்டாவே.

(மாவாய் பிளந்தானை) 'நாம் சென்றால் நம் அபேக்ஷிதம் செய்யுமோ?' என்னில்; நமக்காகக் கேஶியைப்போக்கி, நம்மையும் தன்னையும் உண்டாக்கித் தந்தவனன்றோ; பின்னை பெண்ணுக்கும் ப்3ருந்தா3வனத்தில் கேஶியோடே வன்னியமறுத்துப் உலாவித்திரியலாய்த்து. (மல்லரைமாட்டிய தேவாதிதேவனை) பேதைக்கும் ப4யம்கெட்டு காணச்சிறையாய்க்கிடந்தது. அவன் இப்போது பெரியனாய், 'அவன் பண்டன்றோ நமக்கு விளைக்கொம்பாய்' 4. ''மது4ராம் ப்ராப்ய'' இத்யாதி3ப்படியே நாக3ரிகனாய், ப்3ராஹ்மணரடைய ஸர்வேஶ்வரன், தே3வதே3வ போனான்; நம் க்ருஷ்ணனை இப்போது அங்குப்போயும் நம்மனென்றுகாணும் சொல்லுகிறது' என்ன; (மல்லரை மாட்டிய)

A திருவாய் 10-10-2. B பெரு-திரு 6-7. C திருவாய் 6-2-6.

கார்யமன்றோ செய்தது. 1. “ஸக்2ய: பஶ்யத” என்கிறபடியே அவ்வூரில் பெண்களுக்கு உதவினதும் தங்களுக்கு உதவினதென்றிருக்கிறார்கள். 2. “ஜாதோஸி தே3வதே3வேஶ” 3. “ஸோஹம் தே தே3வதே3வேஶ” A “அவரை நாம் தேவரென்றஞ்சினோமே” என்றும். ‘அவன் வேண்டப்பாட்டோடேயிருக்கிலோ?’ என்னில் — (சென்றுநாம் சேவித்தால்) அது ஆர்க்கழகு? நம் முறையை நாம் பெற்றோமாகிறோம். அவன் முறைகெடில் அலைந்திறே அவர்களிருப்பது. (சென்று) 4. “உபஸ்தே2யைருபஸ்தி2த:” 5. “ஶரண்யஶ்ஶரணாக3தம்” 6. “பத்3ப்4யாமபி4க3மாச்சைவ” 7. “விபீ4ஷணமுபஸ்தி2தம்” 8. “ஸம்ப்ராப்தம்” என்று அவன் நெஞ்சு புண்படுகைக்கு உடலாக அவனிருந்தவிடத்தே சென்று அவன் செயவுத்தை நாம் செய்கிறோம். 9. ‘ஏஹி பஶ்ய ஶரீராணி’ — விரஹம் தின்ற உடம்பைக்காட்டுகிறோம். B “மாசுடையுடம்பொடு தலையுலறி” 10. “உபவாஸக்ருஶாம் தீ3நாம்”. (சேவித்தால்) ஸ்ரீ ப4ரதாழ்வான் படுத்துமத்தை நாம் படுத்துகிறோம். 11. “ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா” என்னப்பண்ணுகிறோம். 12. [ஏபி4ஶ்ச ஸசிவைஸ் ஸார்த்த4ம்] பெருமாள் இரங்குகைக்காக ஆர்த்தர் பலரையும் திரட்டிக்கொண்டுபோனபடி. அவர்களுக்குக் கைகேயீஸம்ப3ந்த4மில்லையே. இரங்கவுமாமே. 12. [ஶிரஸா யாசிதோ மயா] பசியர் வயிற்றைக்காட்டுமாபோலே திருவடிகளிலடிமைசெய்யப் பெருமையால்உருவின தலையைக் காட்டுகிறார். 13. “யாவந்ந சரணௌ” 12. [ப்4ராது:] உம்முடைய தம்பியல்லேனோ. 12. [ஶிஷ்யஸ்ய] உம்மோடேயன்றோ நாம் மந்த்ரங்கள் கேட்டது. 12. [தா3ஸஸ்ய] உமக்கு விற்கவும் ஒத்திவைக்கவும் அடியனல்லேனோ? 12. [ப்ரஸாத3ம் கர்த்துமர்ஹஸி] கீழ்ச்சொன்னவை ஒன்றுமில்லாவிட்டாலும் ஆபத்துக்கண்டால் காகத்துக்கு இரங்கினாற்போலேயாகிலும் இரங்கவேண்டாவோ? (நாம் சேவித்தால்) அத்தலை இத்தலையானால். ஆர்க்கழகு? அவன் ப்ரணயித்வம் போனாலும் பொதுவான ஆர்த்தரக்ஷணம் போமோ?

(ஆவாவென்றாராய்ந்தருளும்) ‘ப்ரணயித்வம் குடிபோனாலும் ஸத்தாப்ரயுக்தமான ஆர்த்தரக்ஷணம் போமோ? 14. “ஆந்ருஶம்ஸ்யம் பரோ த4ர்ம:” என்று சொல்லிவைத்து அநுஷ்டி2யாதே பேசாதிருக்குமோ? அவன் பக்கல் ஒருதட்டில்லை. நம் குறையே; புறப்பட்டுக்கொள்’ என்கிறார்கள். 8.

## ஸ்வாபதே3ஶவ்யாக்2யாநம் — எட்டாம் பாட்டு

அவ :— எட்டாம்பாட்டு. (கீழ்வானம் இத்யாதி3) இப்பாட்டில் பா4க3வத ஶேஷத்வபர்யந்தமான ப4க3வச்சே2ஷத்வமுடையளாகையாலே ப4க3வத3பி4மதரானவரை எழுப்புகிறார்கள்.

வ்யா :— (கீழ்வானம் வெள்ளென்று) “வெள்ளென்று” என்றது — வெள்ளென்றது என்றபடி. ‘அசேதநத்துக்கும் சைதந்யமுண்டாம்படி ஸத்த்வோத்தரமான காலமாயிற்று: எழுந்திராய்’ என்ன; ‘அசேதநத்துக்குச் சைதந்யம் உண்டாய்த்தது, ஸத்த்வோத்தரமான காலக்ருதமல்ல; C “மரங்களுமிரங்கும் வகை” என்கிறபடியே உங்கள் ஸ்வாநுமாநக்ருதம்; வேறு அடையாளம் உண்டோ?’ என்ன;

---

A திருநெடு 21, B நாச்-திரு 1-8, C திருவாய் 6-5-9.

## ஒன்பதாம் பாட்டு

**தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரியத்**
**தூப(ம)ம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்**
**மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்**
**மாமீர்! அவளை எழுப்பீரோ உன்மகள்தான்**
**ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?**
**ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ**
**மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று**
**நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய்.**

பதவுரை:— தூ மணி மாடத்து — தூய்மையை இயற்கையாக உடைய ரத்னங்களினால் இழைக்கப்பெற்ற மாளிகையில், சுற்றும் — எல்லாவிடத்திலும், விளக்கு எரிய — மங்கள தீபங்கள் ஒளிவிடவும், தூப(ம)ம் கமழ — (அகில் முதலியவற்றின்) புகைமணம் வீசவும், துயில் அணைமேல் — (படுத்தாரைத்) தூங்கச்செய்யும் படுக்கையின் மேல், கண் வளரும் — கண்ணுறங்குகிறவளான, மாமான் மகளே — மாமன் மகளே! மணி கதவம்

---

ஸ்வா:- (எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண்) அஜ்ஞாநமானது ஸத்த்வோதயகாலத்திலே விடப்பட்டு, தனக்கு அபாஶ்ரயம் தேடிப் போகாநின்றது காணென்ன;— 'அதுவும் உங்கள் ஸந்நிதியாலே ஸந்நிஹித சேதந அஜ்ஞாநம் போம்; உங்களைப் பிரிந்தவாறே பழையபடியே உண்டாம்; அது ஸத்வகுணக்ருதமன்று' என்ன;—'ஆனால், விடியாமைக்கு அடையாளம் என் சொல்லுகிறாய்?' என்ன; 'உங்களையொழிந்த பகவத்ப்ரவணர் உணராமை' என்ன;—

(மிக்குள்ள பிள்ளைகளும்) 'நம்மையொழிந்த பாகவதரெல்லாரும் போனார்கள்' என்ன, —(போவான் போகின்றாரைப் போகாமல் காத்து) பகவத்ஸந்நிதிக்குப் போகையே ப்ரயோஜநமாகப் போமவர்களை, பாகவதரை முன்னிட்டல்லது திருவடி தொழக்கடவோமல்லோமென்கிற நியமத்தையுணர்த்தி, போகாமல் தடுத்து. (உன்னைக் கூவுவான் வந்து நின்றோம்) உன்னையெழுப்பினோமென்கிற அதிஶயம் பெறுகைக்காக உன்வாசலிலே வந்து நின்றோம். (கோதுகலமுடைய பாவாய்) பகவதபிமாந விஷயபூதராய் அநந்யார்ஹரான ஸ்வாமிநீ! (எழுந்திராய்) நீரெழுந்திருந்தால் நமக்கு ஏதேனும் குறையுண்டோ?

எழுந்தால் செய்யவேண்டுவதென்னென்ன, சொல்லுகிறார்கள் — (பாடிப் பறைகொண்டு) பாடுகையாகிற புருஷார்த்தத்தை லபித்து. (மாவாய் பிளந்தானை) அஹங்காரநிராஸகனை. (மல்லரை மாட்டிய) காம க்ரோத நிவர்த்தகனை. (தேவாதிதேவனை) நித்யஸூரி நிர்வாஹகனை. (சென்று) ப்ராப்யத்வரையாலே சென்று, (நாம்) அவன் வர இருக்கக்கடவ நாம். (சேவித்தால்) அத்தலை இத்தலையானால். (ஆவாவென்று) க்ருபை பண்ணி. (ஆராய்ந்தருள்) விசாரிக்கும். 8.

தாள் — மாணிக்கக் கதவுகளின் தாள்களை, திறவாய் — திறந்துவிடவேண்டும்; மாமீர் — மாமியே!, அவளை எழுப்பீரோ — உம்முடைய மகளைத் துயிலெழுப்ப வேணும்; உன் மகள் தான் — உன்னுடைய மகள், ஊமையோ — வாய் பேசமாட்டாத ஊமைப்பெண்ணோ? அன்றி — அல்லாவிடில், செவிடோ — காதுகேளாத செவிடியோ? அனந்தலோ — (களைப்பினால்) உறங்குகிறாளோ? ஏமப்பட்டாளோ — காவலிடப்பட்டாளோ? பெருந் துயில் மந்திரப்பட்டாளோ — நெடுநேரம் தூங்கும்படி மந்திரத்தாற் கட்டுண்டாளோ? மாமாயன் — நினைக்கவொண்ணாத ஆச்சரியச் செயல்களை உடையவன், மாதவன் — லக்ஷ்மீநாதன், வைகுந்தன் என்று என்று — ஸ்ரீ வைகுண்டநாதன் என்று இம்மாதிரியாக, நாமம் பலவும் நவின்று — பல பல திருநாமங்களை நாங்கள் சொல்லிவிட்டோம் (அப்படியும் உன்மகள் எழுந்திருக்கவில்லையே!)

## மூவாயிரப்படி — ஒன்பதாம் பாட்டு

அவ :— ஒன்பதாம்பாட்டு. a "க்ருஷ்ணன் வந்தபோது வருகிறான்" என்று b தான் போகையை அநாத3ரித்துக் கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள். c அதாவது — ஸ்வரூபத்தை உணர்ந்து வந்து அநுப4விக்கையும் அவன் கார்யமிறே. 1. "தத் தஸ்ய ஸத்3ருஶம் ப4வேத்" என்று இருப்பாளொருத்தி என்கை.

வ்யா :— (தூமணிமாடத்து) A "துவளில் மாமணிமாடம்" என்று—குற்றம் எடுத்துக்கழிக்கவேண்டாத நன்மையையுடைய மணியாலே செய்த மாடம். ஸம்ஸார ப3ந்த4முண்டாய்க் கழிந்த முக்தர்க்கும், அஸ்ப்ருஷ்டஸம்ஸாரப3ந்த4ரான நித்யர்க்கும் ~ண்டான வாசி போந்திருக்கை. (சுற்றும் விளக்கு எரிய) மாணிக்கத்திணொளியாலே பகல்விளக்குப்பட்டிருக்கச்செய்தே மங்க3ளார்த்த2மாக விளக்கு எரிகிறது. d (சுற்றும் விளக்கு எரிய) e க்ருஷ்ணன் வந்தால் தன் கையைப் பிடித்து உலாவுமிடமடையப் e2 படுக்கையும் விளக்குமாக்கி வைத்தபடி. புறம்பு நிற்கிறவர்களுக்கு உள்ளே விளக்கெரிந்தது தெரிகிறபடி எங்ஙனே? என்னில்; மாணிக்கக்குப்பிபோலே, புறம்பே நிற்க உள்ளுள்ளதெல்லாம் தோற்றாநிற்கும்.

---

பெ. அ. ஒன்பதாம் பாட்டு. (தூமணி இத்யாதி3) a "தூமணிமாடம்" என்று தொடங்கி "துயிலணை மேல் கண் வளரும்" என்னுமளவும் கடாக்ஷித்து (க்ருஷ்ணன் வந்த போது வருகிறான்) என்றது, b "மாமீர்" இத்யாதி3யைக் கடாக்ஷித்து, க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்துக்கு உபயுக்தமாக, (தான்போகையை அநாத3ரித்துக் கிடக்கிறாள்) என்றது. c மடலெடுத்தாகிலும் பெற வேண்டும் க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்துக்காகப் போகையை அநாத3ரிக்கக்கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (அதாவது இத்யாதி3)

d, e 'சுற்றும் ஏற்றின விளக்குகளெரிய' என்று அர்த்த2ம் விவக்ஷித்து "சுற்றும்" என்றதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணன் வந்தால் இத்யாதி3) e2 (படுக்கையும்) என்றது — அர்த்த2ஸித்34ம். அதாவது — தூமணி மாடமாகையாலே சுற்றும் விளக்கு வேண்டாமையாலும், மங்க3ளார்த்த2மாகில் ஒன்றே அமைந்திருக்கையாலும், "சுற்றும்" என்றது வ்யர்த்த2மாகாமைக்காக ப்ரதிபர்யங்கம் மங்க3ளதீ3பம் வேணுமென்கை.

---

A திருவாய் 6-5-1.

f (தூபம் f2 கமழ) g புகைகாணவொண்ணுதே பரிமளம் வெள்ளமிட. hA ''சீருற்ற வகிற்புகை'' இத்யாதி3யிற் சொல்லுகிறபடியே எங்களுக்கு அஸஹ்யமான பரிமளம் உனக்கு ஸஹ்யமானபடி எங்ஙனே? என்கை. i (துயிலணைமேல் கண்வளரும்) j க்ருஷ்ண விரஹத்தையும் ஆற்றவற்றுன படுக்கையிலே உறங்குகிற. k எங்களுக்கு B மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாயிருக்க, உனக்குப் படுக்கை பொருந்திக் கண்ணுறங்குவதே!

l (மாமான்மகளே) m ஸ்வாமிநியாயும் m2 தோழியாயும் அநுப4வித்ததொழிய ப்ரக்ருதிஸம்ப3ந்த4த்தாலும் ஆண்டாள் அநுப4விக்கிருள்; n ''மாமான்மகளே'' என்று n2 இட்டீடுகொள்ளுகைக்கு விடவொண்ணுத உறவு சொல்லுகிருள்; o திருவாய்ப்பாடியிலே ஒரு ப்ராக்ருத ஸம்ப3ந்த4ம் தனக்கு உஜ்ஜீவநமென்றிருக் கிருள். p ப4க3வத்ஸம்ப3ந்தி4களுக்கு எல்லாம் p2 அடிக்கழஞ்சு பெற்றிருக்கிறபடி. q (மணிக்கதவம் தாள்திறவாய்) r நீங்களே திறந்துகொண்டு r2 புகுருங்கோள்

---

பெ. அ். f, g ''தூபம்'' என்றபோதே பரிமளிக்கை அர்த்த2ஸித்3த4மாயிருக்கவும் ''கமழ'' என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (புகை இத்யாதி3) h இப்பரிமள ப்ராசுர்யத்தை இவர்கள் சொல்லுகைக்கு உட்கருத்தை அருளிச்செய்கிருர் (சீருற்ற இத்யாதி3) i, j துயிலைத் தாராநிற்கும் அணையென்று ஶப்3தா3ர்த்த2ம் திருவுள்ளம்பற்றி, இப்படி விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (க்ருஷ்ண விரஹத்தையும் இத்யாதி3) k இப்படி சொன் னதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிருர் (எங்களுக்கு இத்யாதி3)

l, m ''பாவாய்'' என்னுதே, இப்படி ஸம்போ3தி4த்ததுக்கு அர்த்த2ம் அருளிச்செய்கிருர் (ஸ்வாமி நியாயும் என்றது) m ''நாயகப் பெண்பிள்ளாய்'' இத்யாதி3யைக் கடாக்ஷித்து (ஸ்வாமிநி இத்யாதி3) m2 ''சுற்றத்துத்தோழிமார்'' என்றதைப்பற்ற (தோழியாயும் என்றது) n ப்ரக்ருதி ஸம்ப3ந்த4த்தைச் சொல்லவேண்டினுல் மற்றும் முறைகளுண்டாயிருக்க, இப்படி ஸம்ப3ந்த4த்தைச் சொன்னதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (மாமான் இத்யாதி3) n2 இட்டீடு கொள்ளுகை—வார்த்தையிட்டு வார்த்தை கொள்ளுகை. o, p ப்ரக்ருதி ஸம்ப3ந்த4ம் த்யாஜ்யமன்ருேவென்ன அருளிச்செய்கிருர் (திருவாய்ப்பாடியிலே இத்யாதி3 வாக்யத்3வ யத்தாலே) p2 அடிக்கழஞ்சு — ஶ்லாக்4யம். q, r 'மணி' என்று விஶேஷித்ததுக்கு உக்தி- ப்ரத்யுக்திமுகே2ந தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (நீங்களே இத்யாதி3) r2 ''புகுருங்கோ

---

சி, அ. ஒன்பதாம்பாட்டு. (தூமணி) i துயிலணை — நித்3ரையை உண்டாக்குகிற அணை; d, f, i ''சுற்றும்'' என்றது—''விளக்கெரிய'' ''தூபம் கமழ'' ''துயிலணை'' என்கிற பத3 த்ரயத்துக்கும் விஶேஷணம். f2 கமழ—நாற. n ப்ரக்ருதிஸம்ப3ந்த4ம் அபேக்ஷிதமானு லும் வேருெரு ஸம்ப3ந்த4த்தையிட்டு அழையாதே ''மாமான் மகள்'' என்கிறது என்? என்ன அருளிச்செய்கிருர் (மாமான் மகள் என்று இட்டீடுகொள்ளுகைக்கு இத்யாதி3) n2 'இட்டீடு' என்றது — ''ஊமையோ அன்றிச் செவிடோ'' என்றத்தை, o ''ஆத்ம ஸம்ப3ந்த4மன்ருே உத்3 தே3ஶ்யம்; ப்ரக்ருதி ஸம்ப3ந்த4ம் கூடுமோ?'' என்ன அருளிச்செய்கிருர் (திருவாய்ப்பாடி யில் இத்யாதி3) p அத்தை உபபாதி3க்கிருர் (ப4க3வத் ஸம்ப3ந்தீ4த்யாதி3) அதாவது—ப4க3 வத்ஸம்ப3ந்த4முடையவர்களுக்கு ஸம்ப3ந்த4ங்களெல்லாம் அதிஶ்லாக்4யமாயிருக்குமென்ற

---

துயிலப்பண்ணும் அணை 9.

கு. அ. ஒன்பதாம்பாட்டு. (தூமணி இத்யாதி3) i (துயிலணை) துயிலப்பண்ணும் அணை 9.

---

A திருவாய் 9-9-7, B திருவாய் 9-9-4.

என்ன; மாணிக்கங்களின் ஒளியாலே தாள் தெரிகிறதில்லை, நீயே திறவாயென்கிறார்கள்.

"அவர்கள் அழையாநிற்க, நீ பேசாதே கிடக்கிறது என்?" என்று தாயார் கேட்க, புறம்பு நின்றவர்கள் அதுகேட்டவாறே "மாமீர் அவளை எழுப்பீரோ" என்கிறார்கள். (மாமீர்) அவளுடைய திருத்தாயாரென்று அவளுறவாலே சொல்லுகிறார்கள். பின்னையும் உணரக் காணாமையாலே s சிவிட்கென்று "உன்மகள்தான் ஊமையோ" என்கிறார்கள்; t வ்யவஹார யோக்$_{3}$யையன்றோ? என்கிறார்கள். u (அன்றிச் செவிடோ) v ஊமைக்கும் கேட்டுவந்து திறக்கலாம்;- அதுக்குமேலே, செவியில் துளையில்லையோ? w எங்கள்வார்த்தை கேளாதபடி $w_2$ அந்யபரையோ? x (அனந்தலோ) y நெடும்போது க்ருஷ்ணாநுப$_{4}$வம் பண்ணி, படுக்கையிற் சாய்ந்தது இப்போதோ? z (ஏமப் பெருந்துயில் மந்திரப்பட்டாளோ) a "ஏமம்" என்பது — காவல். b எழுந்திராமைக்குக் காவலிட்டாருண்டோ? c நெடும்போது உறங்கும்படி மந்த்ரவாத$_{3}$ம் பண்ணினாருண்டோ? A "மையலேற்றி மயக்க உன் முகம் மாயமந்திரந்தான் கொலோ" என்று d அம்மான் பொடி தூவினாருண்டோ? என்கை.

"அவளுணரும்படி திருநாமங்களைச் சொல்லுங்கோள்" என்று திருத்தாயார் சொல்ல, 'நாங்கள் சொன்ன திருநாமங்கள் அநேகமன்றோ?' என்கிறார்கள்; அவைதான் எவையென்னச் சொல்லுகிறார்கள்:— e (மாமாயன்) ஆஶ்சர்ய கு$_{3}$ணசேஷ்டிதங்களாலே அப$_{3}$லைகளான பெண்களை எழுதிக்கொண்டவன்.

பெ.அ. ளென்ன" என்றதுக்கு — புகுருங்கோளென்று அபி$_{4}$ப்ராயமாக என்றபடி; இங்ஙனன்றாகில் மேல் "ஊமையோ" என்னக்கூடாதிறே.

s சிவிட்கென்று — ஶீக்$_{4}$ரமாகச் சீற்றமுண்டாய். t வ்யவஹாரம் — வார்த்தை சொல்லுகை. u, v, w "அன்றிச் செவிடோ" என்றதுக்கு இரண்டு அர்த்த$_{2}$ம் — 'ஊமையானவளவன்றிக்கே செவிடாயுமிருக்கிறாளோ' என்றும், அங்ஙனன்றிக்கே, 'செவிடுபோலேயிருக்கிறாளோ' என்றும். v அதில் முந்தினது (ஊமைக்கும் இத்யாதி$_{3}$) w இரண்டாவது (எங்கள் இத்யாதி$_{3}$) $w_2$ 'அந்யபரையோ' என்றது — 'செவியுண்டாயிருக்க க்ருஷ்ணாநுப$_{4}$வம் நடக்கிறதோ?' என்றபடி. x,y அனந்தல்—ஶ்ராந்தியோடே கூடின உறக்கமென்று ஶப்$_{3}$தா$_{3}$ர்த்த$_{2}$ம் திருவுள்ளம்பற்றி ப்ரஸக்திபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நெடும்போது இத்யாதி$_{3}$) z, a, b, c "ஏமப்பட்டாளோ, பெருந்துயில் மந்திரப்பட்டாளோ" என்று விவக்ஷித்து ஶப்$_{3}$தா$_{3}$ர்த்த$_{2}$ கத$_{2}$நபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஏமம் இத்யாதி$_{3}$ வாக்யத்ரயத்தாலே) d (அம்மான்பொடி) என்றது — 'அம்மான், அம்மான்' என்றுகொண்டு பின்தொடரும்படியான சொக்குப்பொடி என்றபடி. g (ஶ்ரிய:பதி) என்றது — ஶ்ரிய:பதித்வமென்றபடி.

சி.அ. படி. t (வ்யவஹாரயோக்$_{3}$யையன்றோ) என்றது—வாக்$_{3}$வ்யவஹாரயோக்$_{3}$யையன்றோ என்றபடி. $w_2$ (அந்யபரையோ)செவி உண்டாயிருக்க க்ருஷ்ணாநுப$_{4}$வம் நடக்கிறதோ என்று தாத்பர்யாந்தரம். x "அனந்தல்" என்றது தெளிவுபாதியும் நித்$_{3}$ரைபாதியுமாயிருக்கிற அவஸ்தை$_{2}$. z, ஏமப்பட்டாளோ பெருந்துயிலுண்டாம்படி மந்திரப்பட்டாளோ' என்று "பட்டாளோ" என்றத்தை இரண்டிடத்திலும் கூட்டிக்கொள்வது. a ஏமம்—இரவும், காவலும்,

A நாச்—திரு 2-4.

f (மாதவன்) அதுக்கடியான g ஶ்ரிய:பதி; அந்த ஸௌலப்₄யத்துக்கு கு₃ரு குலவாஸம் பண்ணின இடம். h (வைகுந்தன்) i ஶ்ரிய:பதித்வத்தாலே வந்த மேன்மைக்குத் தகுதியான தே₃ஶவிஶேஷத்தை உடையவன், j அப்பெரிய மேன்மையுடைய ஶ்ரிய:பதியானவன்கிடீர் பெண்களுக்கு எளியனுனென்கை.

k மேன்மைக்கு அடியான திருநாமங்களும், நீர்மைக்கு அடியான திருநாமங்களும், இரண்டுக்கும் நிதா₃நமான ஶ்ரிய:பதித்வத்துக்கு வாசகமான திருநாமங்களுமாக ஒரு ஸ்ரீஸஹஸ்ர நாமத்துக்குப் போரும் திருநாமங்கள் சொல்லிற்றென்கிருர்கள்.

l ''நாமம்பலவும் $l_2$ நவின்று—மாமீர் அவளை எழுப்பீரோ'' என்று அந்வயமாகவுமாம். 9.

---

பெ.அ. k, l ''என்றென்று நாமம் பலவும் நவின்ருேம்'' என்று க்ரியையாக்கி, அதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (மேன்மைக்கு இத்யாதி₃) 9.

---

சி.அ. f. h, i ''வைகுந்தன்'' என்றதுக்கு ''மாதவன்'' என்றத்தோடே சேர்த்துத் தாத்பர்யம் (ஶ்ரிய:பதித்வத்தாலித்யாதி₃) e, f, h, j அன்றிக்கே ''வைகுந்தன் மாதவன் மாமாயன்'' என்றுகூட்டித் தாத்பர்யாந்தரம் (அப்பெரிய மேன்மையை இத்யாதி₃) e, f, h. k அன்றிக்கே ''வைகுந்தன் மாமாயன் மாதவன்'' என்று கூட்டித் தாத்பர்யாந்தரம் (மேன்மைக்கடியான திருநாமங்களுமித்யாதி₃) $l_2$ ''நவின்று''—சொல்லி. k, $l_2$ ''தூமணிமாடத்துச் சுற்றும் விளக்கெரியத் தூபம்கமழத் துயிலணைமேல் கண்வளரும் மாமான் மகளே மணிக்கதவம் தாள்திறவாய் மாமீர்—உன் மகள்தான் ஊமையோ அன்றிச்செவிடோ அனந்தலோ ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று நாமம் பலவும் நவின்ருேம், சொன்னுலுமெழுந்திராள், அவளை எழுப்பீரோ'' என்று அந்வயமாதல்; இந்த அந்வயத்துக்கு ''நவின்று'' என்றது நவின்ருேம் என்றபடி. l இங்ஙனன்றிக்கே ''நாமம் பலவும் நவின்று மாமீர் அவளை எழுப்பீரோ'' என்று அந்வயம்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதே₃ஶம். 1. ''தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்'' என்று பூர்வார்த்த₂ நிஷ்ட₂ராயிருப்பாரை, ப₄க₃வத் ப்ரேமாதிஶயத்தாலே தத₃ேகபோ₄க₃ராயிருக்குமவர்கள் போ₄க₃ார்த்த₂மாக ப்ரேரிக்கை அவர்களுக்கு ஸ்வரூபம் என்கை. 9.

---

## ஆருயிரப்படி—ஒன்பதாம்பாட்டு

அவ:—ஒன்பதாம் பாட்டு. பஞ்சலக்ஷம் குடியில் பெண்களெல்லாரும் திரண்டு, ''உன்னை யொழிந்தாரடங்கலும் இங்ஙனே வந்துகிடக்கக் கிடந்துறங்குவதே!'' என்று பழியிட்டெழுப்புகிருர்கள். புறம்பு நிற்கிறவர்கள், இளையபெருமாளைப்போலே யும், முமுக்ஷுக்களைப்போலேயும், உள்ளுக்கிடக்கிறவள் நித்யஸித்₃த₄ரைப்போலேயுமாய், மைத்துனமைமுறையையுடையாளொருத்தியை எழுப்புகிருர்கள்.

வ்யா:—(தூமணிமாடம்) நிர்த்தே₃ாஷங்களான ரத்நங்களாலே செய்த மாடம். இவர்கள் விரஹதாபந்திர ஶுபா₄ஶ்ரயமாக அநுஸந்தி₄க்கிருர்கள். ஆழ்வான் ''ஹிதாம்ஶத்துக்கு ஒரு வைஷ்ணவனுடைய க்₃ருஹயாத்ரையை அநுஸந்தி₄க்க

அமையும்'' என்றாற்போலே, இவர்களும் இவர்களுடைய மாளிகையின் அழகை அநுப4விக்கிறார்கள். A ''துவளில் மாமணிமாடம்'' என்று—எடுத்துக் கழிக்க வேண்டா. அது, ஜீவாத்மாவினுடைய அபஹதபாப்மத்வாதி3களைப்போலே; இது பரமாத்மாவினுடைய அபஹதபாப்மத்வாதி3களைப்போலே; அங்கு—ப்ரத்4வம்ஸாப4ாவம்; இங்கு—ப்ராக3ப4ாவம். அபஹதபாப்மத்வாதி3கள் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உண்டாயிருக்கச்செய்தே ஹேயஸம்ப3ந்த4ார்ஹமாயிறே இவன்வடிவிருப்பது. ஹேயப்ரதிப4டமாகையாலே அநர்ஹமாயேயிருக்கும் அவன். இவ்வூரில கழித்த ரத்நங்கள்கொண்டுபோலேகாணும் திருத்தொலைவில்லிமங்கலத்தில் மாளிகைகள் செய்தது. ராஜாக்கள், அந்த:புரத்தில் கழித்தவை கொண்டிறே தங்களுக்கு மாளிகைகள் செய்வது. 1. ''ஸ தத3ந்த:புரத்3வாரம்'' B ''மாடமாளிகைசூழ் மதுரைப்பதி நாடி''. —உகந்தருளின நிலமெல்லாம் ஒருகுடியிருப்புண்டு இவளுக்கு. மாலாகாரகம் தன்னதிறே. 2. ''ப்ரஸாத3பரமௌ நாதௌ2'' — உப4யவிபூ4தியுக்தனுகையாலே ஐஶ்வர்யம் விஞ்சியிருக்கும்; அத்தையும் மேலிடும்படியாயிருக்கும் தண்ணளி. ஆஶ்ரயம் அதுவாகையாலே கழிக்கவொண்ணுமல் கிடக்கிறது நாத2த்வம். (சுற்றும் விளக்கெரிய) இதொரு ஸம்பத்தே! ஒருகோடி விளக்கிறே புறம்பேநின்று புகைகிறது. புறம்பு நிற்கிற நம்முடைய ஹ்ருத3யங்கள் இருண்டு கிடக்க, உள்ளு விளக்கெரிகிறது வெறுமனன்றிறே; க்ருஷ்ணன் ஸந்நிஹிதனுகவேணுமிறே. திருச்சித்ரகூட பரிஸரத்திலே, பிராட்டியைக் கையைப்பிடித்துக்கொண்டு பெருமாள் உலாவினாற்போலே, இவள் கையைப் பிடித்துக்கொண்டு க்ருஷ்ணன் உலாவுமிடமிறே, அவ்வோபாதி, இடமெங்கும் படுக்கைகளும் விளக்குமாய்க்கிடக்கிறபடி. (எரிய) ப்ரகாஶாவஹமன்று, மங்க3ளாவஹம். 'இவர்கள் புறம்பேநின்று, ''மணிக்கதவந் தாள் திறவாய்'' என்கிறவர்கள், உள்ளெரிகிற விளக்கறிந்தபடியென்?' என்னில்; மாணிக்கக்குப்பியிலே அகவாயிலுள்ளது நிழலிட்டுத் தோற்றுமாபோலே, தூமணிமாடமாகையாலே உள்ளெரிகிற விளக்குத் தோற்றுகிறது. (தூபம் கமழ) பரிமளம் ஸஹித்திருந்தது வெறுமனன்றிறே. விரஹதாபமில்லாதார்க்குப் பரிமளம் பொறுக்குமாகாதே! C ''சிருற்றவகிற்புகை'' என்னும்படியிறே இவர்கள்த3ஶை. (கமழ) கண்ணுக்குப் புகையின்றிக்கே பரிமளமேயாயிருக்கிறபடி. (கமழ-கண்வளரும்) பரிமளஞ்சிறிது குறையில் கண்ணுறங்காதாகாதே! (துயிலணைமேல் கண்வளரும்) நம்முடைய நெருப்புச் சிலர்க்குப் படுக்கையாவதே! D ''மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளி''. இருவர்க்குப் படுத்த படுக்கையிலே ஒருத்திக்குப் பொருந்தும்போது அவனுமங்கேயுண்டாகவேணுமிறே. (துயிலணை) படுக்கைதான் விரஹார்த்தரையும் உறக்கவற்றாயிருக்கை. E ''நஞ்சரவிற்றுயிலமர்ந்த'' என்னுமாபோலே. (கண்வளரும்) இளையபெருமாளைப்போலே உறங்காமைக்கு நாங்களும், உறங்குகைக்கு நீயுமாய் விட்டதிறே. 'அபி4மதலாப4ம் அவனுல் செய்யலாகில் இவர்கள் பதறுகிறதென்?' என்றிருந்தாள் அவள்; 'உபேயம் அவனேயாகில் இவள் கிடந்துறங்குகிறதென்?' என்றிருந்

A திருவாய் 6-5-1. B நாச்-திரு 4-5. C திருவாய் 9-9-7. D திருவாய் 9-9-4. E திருநெடு 12.

தார்கள் இவர்கள். (கண்வளரும்) உறங்குவார்க்குப் பாத3ஸம்வாஹிநிகள் வேண்டாவோ? உள்ளுப்புக்காலும் இதாகாதேசெய்யப்பார்க்கிறது. ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்த3ங்களன்று நிருபகம், ஶேஷத்வம். (கண்வளரும்) ப4க3வத்3விஷயத்தில் அவகா3ஹித்தால் கௌ3ரவ்யதை தோற்றச் சொல்லவேணுமிறே. ப4ட்டர்க்குச்சிலர், ''தொண்டனூர் நம்பி திருவடிச்சார்ந்தார்'' என்று விண்ணப்பஞ்செய்ய; ''அவர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமைசெய்து போந்தபடிக்கு 'திருநாட்டுக்கு நடந்தார்' என்று சொல்லவேண்டாவோ?'' என்றருளிச்செய்தார். நம்பியேறுதிருவுடையார் தா3ஸரிடையாட்டமாகவும் நஞ்ஜீயர் இப்படி அருளிச்செய்தார். (மாமான்மகளே) ஸ்வாமிநியாயும் தோழியாயும் அநுப4வித்ததொழிய ப்ரக்ருதிஸம்ப3ந்த4த்தாலும் அநுப4விக்கிறார்கள். ''மாமான் மகளே'' என்று—இட்டீடுகொள்கைக்கு விடவொண்ணாத முறைகட்டி(தேடி)க்கொண்டு சொல்லுகிறார்கள். திருவாய்ப்பாடியிலே ஒரு ப்ரக்ருதிஸம்ப3ந்த4ம் தனக்கு உஜ்ஜீவநஹேதுவாக ஆண்டாள் ஆசைப்பட்டபடி. ப4க3வத்ஸம்ப3ந்தி4களுக்கு எல்லாம் அடிக்கழஞ்சு பெற்றிருக்கிறபடி. அதுதானும், 1. ''ஹே க்ருஷ்ண ஹே யாத3வ ஹே ஸகே2தி'' என்று பொறுப்பித்துக் கொள்வதொரு ஸம்ப3ந்த4மாகவேணும். 'நீங்கள் ஆர்த்தைகளாய்ப் பதறிவருவுதிகோளென்னும் மிடமறிந்து யந்த்ரத்தாலே திறக்கலாம்படிபண்ணிக்கொண்டு கிடந்தேன், திறந்து கொண்டு புகுருங்கோள்' என்ன,—(மணிக்கதவம் தாள்திறவாய்) 'மணிமாடமாளிகையாகையாலும், மணிக்கதவாகையாலும் சுவருக்கும் கதவுக்கும் வாசிதெரிகிறதில்லை, தே3ஶிகரே திறக்கவேணும், நீயே திறவாய்' என்கிறார்கள். இவர்கள்தான், திறந்து நின்றாலும் சிலர் புகுரவிடவல்லது புகுரார்கள் காணும். (மணிக்கதவம் தாள்திறவாய்) து3ர்யோத4நன் நீருக்கும் ஸ்ப2டிகமண்டபத்துக்கும் வாசியறியாதே தடுமாற த்3ரௌபதி3 சிரித்தாற்போலே மைத்துனமை கொண்டாடிச் சிரிக்கவொண்ணாது; புறம்புள்ளார்க்கு உள்ளுள்ளவை ப்ரகாஶிக்கிறுப்போலே உள்ளுள்ளார்க்குப் புறம்புள்ளாரார்த்தி தெரியாமையில்லையிறே.

'இவர்கள் ஆர்தைகளாய் வாசலிலே நின்று துவள, இவள் வாய் பேசாதே கிடந்துறங்குவதே!' என்று; ஹ்ருத3யத்திலிரக்கம் முகத்திலே தோற்றும்படியாய் 'நீ ஸ்வப்ரயோஜநபரையாய்க் கிடப்பதே!' என்று மகளைச்சொல்ல உபக்ரமித்தமை தோற்றவிருந்தாள் தாயார்; — (மாமீர்) என்கிறார்கள். அவள் திருத்தாயாரென்று ஸம்ப3ந்தி4ஸம்ப3ந்தி4களும் இவர்களுக்கு உத்3தே3ஶ்யராயிருக்கிறபடி. உள்ளுக்கிடக்கிறவளுகப்பு தாயாரளவுஞ் சென்றபடி. A ''அடிகளடியே நினையுமடியவர்கள் தம்மடியான்'' என்றும் B ''தொண்டர்தொண்டர் தொண்டர்தொண்டன்'' என்றும் C ''அன்னையுமத்தனும்'' என்றிறே இவளிருப்பது. (அவளை சொன்னபடியே; உம்முடைய இரப்புக்கோ உணரம் யெழுப்பீரோ) எங்களார்த்திக்கு உணராதவள் உம்முடைய இரப்புக்கோ உணரப் புகுகிறது? இவ்வளவிலும் உணரக்காணாமையாலே, சிவிட்கிட்டு (உன்மகள்) என்கி

A பெரிய திரு 2-6-10. B திருவாய் 7-1-11 C பெரிய திரு 3-7-7

ளூர்கள். பிராட்டி ப்ரணயகோபம் சக்ரவர்த்தியளவும் மேலிட்டு 1. ''பிது:'' என்றாற்போலே, அவள்பக்கல் சீற்றம்இவ்வளவும்வர, அசலிட்டு ''உன்மகள்'' என்கிறார்கள். (ஊமையோ) வாக்3வ்யவஹார யோக்3யதையில்லையோ? ஆர்த்தரை, ஐயோ! என்னவொண்ணாதபடியோ செல்லுகிறது? (அன்றிச்செவிடோ) ஊமைக்கும் கேட்டுவந்து திறக்கலாம். அதுக்குமேலே செவியில் துளையில்லையோ? ஆர்த்தைகளான எங்களுடைய சொல் கேளாதபடி அந்யபரையோ? அதுக்கும் அங்கேயோ விஷயம்? (அனந்தலோ) க்ருஷ்ணனுக்கு நெடும்போது ஆடல்கொடுத்துப் படுக்கையில் சாய்ந்தது இப்போதோ? நெஞ்சுக்கும் விஷயம் அங்கேயோ? (ஏமப்பெருந்துயில்) எங்களை உறங்காதபடி பண்ணினாற்போலே, இவளையும் உணராதபடி காவலிட்டாருண்டோ? நாங்கள்புக்கு உணர்த்தவொட்டாத வேளையிலே நெடும்போது உறங்கும்படி மந்த்ர ப3த்3தை4யானாளோ? A 'உன்முகம் மாயமந்திரந்தான் கொலோ' என்று—அவனுடைய அம்மான்பொடி ப்ரஸித்3த4மிறே.

''நீங்கள் இவள் ப்ரக்ருதியறிந்தால் இங்ஙனல்லகாணுங்கோள் உணர்த்துவது, தென்றலும், சிறுதுளியும்போலே இவளுக்குத் திருநாமங்கள் சொல்லிகோள்'' என்று திருத்தாயார் சொல்ல, ''பல் பன்னிரண்டும் காட்டினேன்காண்'' என்கிறார்கள்; நீங்கள் சொன்ன திருநாமங்கள் எவையென்ன —(மாமாயன்) ஆஸ்சர்ய கு3ண சேஷ்டிதங்களாலே அப3லைகளான பெண்களை எழுதிக்கொண்டு, அவர்களுக்கு இஷ்ட விநியோகா3ர்ஹமாம்படி ப4வ்யனாயிருக்குமவன். (மாதவன்) அந்த ஸௌலப்4யத்துக்கு கு3ருகுலவாஸம் பண்ணினவிடம். (வைகுந்தன்) பெண்களையேயன்றிக்கே ஆண்களையும் அடிமைகொண்டு ஒருநாட்டுக்காகக் கையாளாயிருக்குமவன். ஸ்ரிய:பதித்வத்தால் வந்த மேன்மைக்குத் தகுதியான தே3ஸவிஸேஷத்தை உடையவன். ஸ்ரீவைகுண்ட2த்தைக் கலவிருக்கையாகவுடையனாய், பெரியபிராட்டியார்க்கு வல்லப4னாயிருந்துவைத்து, நமக்குக்கையாளான ஆஸ்சர்யதமனென்னவுமாம். (என்றென்று) மேன்மைக்கும், நீர்மைக்கும், இரண்டுக்கும் நித3ானமான ஸ்ரிய:பதித்வத்துக்கும் வாசகங்களான திருநாமங்களை ஒருகாலிருகாலோ சொல்லிற்று? (நாமம்பலவும் நவின்று) ஸ்ரீஸஹஸ்ரநாமமுட்படச் சொன்னோம். (நாமம் பலவும் நவின்று—மாமீரவளை யெழுப்பீரோ) என்றுமாம். 9.

## ஈராயிரப்படி—ஒன்பதாம் பாட்டு

அவ:— ஒன்பதாம் பாட்டு. கீழிற்பாட்டில் முக்தர் படி போலே இருப்பாளொருத்தியை எழுப்பிற்று; இப்பாட்டில் நித்யமுக்தர்படியேயிருப்பாள் ஒருத்தியை எழுப்புகிறது. தொடர்ந்தடிமை செய்யும் இளையபெருமாளையும், இட்டவிடத்தேயிருக்கும் ஸ்ரீ ப4ரதாழ்வானையும் போலே.

வ்யா — (தூமணிமாடம்) B ''துவளில் மாமணிமாடம்'' என்று குற்றமுண்டாய் எடுத்துக் கழிக்கவேண்டாதே எல்லா நன்மையையுமுடைய மணியாலே செய்த மாடம்; அது முக்தனுடைய அபஹதபாப்மத்வாதி3கள் போலே;

A நாச்-திரு 2-4, B திருவாய் 6-5-1.

இது அவனுடைய அபஹதபாப்மத்வாதி3கள் போலே. திருத்தொலைவில்லிமங்கலத்துக்கு, கழித்தவை கொண்டு செய்தது. அந்த:புரத்துக்கு நல்லதிட்டுச் செய்து, அங்கு கழித்ததிறே தந்தாமுக்கு மாளிகை செய்வது. (சுற்றும் விளக்கெரிய) "தானுறு[illegible]கில் நோற்று வருகிறுன்" என்று இருக்கிறுளிவள். மாணிக்கக் குப்பி போலே, புறம்பே நிற்க உள்ளுள்ளதெல்லாம் தோற்றுநின்றதென்கை. ப்ரகாஶத்துக்கு ப்ரகாஶம் வேண்டாமையாலே விளக்கு மங்க3ளார்த்த2ம். புறம்புள்ள விளக்குகள் புகையாநிற்க என்றுமாம்.

(தூபங்கமழ) பரிமளம் ஸஹ்யமானபடி எங்ஙனே தானிவளுக்கு? A "சீருற்ற வகிற்புகை" இத்யாதி3ப்படியேயிறே அவர்களுக்குச் செல்லுகிறது. புகையுள்ளிட்டனவன்றிக்கே க3ந்த4மே கமழ. (துயிலணைமேல்) B "[illegible] மலர்ப்பள்ளி வெம்பள்ளி"யாயிறே இவர்களுக்கிருக்கிறது. இருவர்க்குப் படுத்த படுக்கையிலே ஒருவர்க்குப் படுக்க(உறங்க)ப் போமோ? (கண்வளரும்) இளையபெருமாளைப் போலே உறங்காமைக்கு நாங்களும், உறங்குகைக்கு நீயுமாயிற்றே! என்கிறுர்கள். (கண்வளரும்) இங்ஙனேயாகாதே ஸ்ரீ வைஷ்ணவர்கள் சொல்லுவது. C "படுத்த பைந்நாகணை" இத்யாதி3ப்படியே தமப்பனுர் ப4க3வத்3விஷயத்திலே சொல்லுவ தெல்லாம் இவளும் ததீ3ய விஷயத்திலே சொல்லுகிறுள். (மாமான்மகளே) இட்டீடு கொள்ளுகைக்கு விடவொண்ணுத உறவை ஸம்பாதி3க்கிறுர்கள். (மணிக்கதவம்) 'எங்களுக்குக் கதவும் சுவரும் தெரிகிறதில்லை, நீயே திற' என்கிறுர்கள். தே3ஶிகர்க்கல்லது தாள் திறக்கத் தெரியாதென்கை. (மாமீர்) D "அடியாரடியார்தம்" E "தொண்டர்தொண்டர்" என்று ஆழ்வாருடைய ப4ாக3வதஶேஷத்வத்தில் எல்லைபோலே. இவர்களும் இவளுடைய திருத்தாயா ரா[illegible] இவளை உறவாகச் சொல்லி த4ரிக்கிறுர்கள். (அவளை எழுப்பீரோ) நீராகிலுமஅவளையெழுப்பீரோ என்கிறுர்கள். 'அவளை இவர்களுக்குத் தோற்றுமோ?' என்னில், மாளிகையில் தெளிவாலே தோற்றும், தாயார் ப4ாவஜ்ஞையாகை யாலே எழுப்பாள்; ஆகையாலே (உன் மகள் தான் ஊமையோ) என்கிறுர்கள். அன்றிக்கே, (அன்றிச் செவிடோ) நாங்கள் சொன்ன வார்த்தை கேளாதபடி அந்யபரையாளுளோ? (அநந்தலோ) இரவெல்லாம் க்ருஷ்ணனுக்கு ஆடல் கொடுத்து இப்போதோ உறங்குகிறது? (ஏமப்பெருந்துயிலித்யாதி3) ஆர்த்த நாத3ம் கேளாதபடி காவலிட்டுக் கொண்டு, உணராதபடி உறங்குகைக்கு ஆரேனும் மந்த்ரித்தாருளரோ? மந்த்ரம் இவளுக்கு ப்ரஸித்3த4மிறே. F "உன் முகம் மாயமந்திரந்தான் கொலோ" என்று மாயப்பொடி தூவினுருண்டோ? என்கை. (மாமாயன்) [பெண்களுக்குக் காணுச்சிறையாய்க் கிடக்குமவன். (மாதவன்) அதுக்கு கு3ருகுலவாஸம் பண்ணினவிடம். (வைகுந்தன்) பெண் களோடொக்க ஆண்களை அடிமை கொள்ளுமவன். அப்பெருமையையுடைய வனுய் ஶ்ரிய:பதியாயிருக்கிறவன்கிடீர் பெண்களுக்கு எளியனுயிருக்கிறுன். (என்றென்று நாமம் பலவும் நவின்று) மேன்மைக்கும் நீர்மைக்கும் ஏகாந்த மான திருநாமங்களை அனேகம் சொன்னேம் என்கிறுர்கள். "நாமம் பலவும் நவின்று மாமீர் அவளை எழுப்பீரோ" என்று க்ரியையாகவுமாம். 9.

---

A திருவாய் 9-9-7, B திருவாய் 9-9-4, C திருப்பல் 9, D திருவாய் 3-7-10, E திருவாய் 7-1-11, F நாச்-திரு 2-4.

## நாலாயிரப்படி — ஒன்பதாம் பாட்டு

அவ :— ஒன்பதாம்பாட்டு. கீழில் பாட்டில் முக்தர்போலேயிருப்பாளொருத்தியை எழுப்பிற்று. இப்பாட்டில் நித்யர்படியையும் மைத்துன முறைமையையும் உடையா ளொருத்தியை எழுப்புகிறது. தொடர்ந்தடிமை செய்யும் இளைய பெருமாளையும், இட்டிடத்தே கிடக்கும் ஸ்ரீபரதாழ்வானையும் போலே இருவரும்.

வ்யா:— (தூமணி மாடத்து) A ''துவளில்மாமணிமாடம்'' என்னுமாபோலே குற்றமுண்டாய் எடுத்துக் கழிக்க வேண்டாத நன்மையையுடைய மணியாலே செய்த மாடம். அது ஜீவாத்மாவினுடைய அபஹதபாப்மத்வாதிகள் போலே. இதுஅவனுடைய அபஹதபாப்மத்வாதிகள் போலே. திருத்துலைவில்லிமங்கலத்துக்கு, இங்கு கழித்த வற்றோடு செய்தது. ரஸிகராயிருப்பார் அந்த:புரத்துக்கு நல்லதிட்டுச்செய்து, அங்கு கழித்ததிட்டிறே தந்தாமுக்குச்செய்வது. நிர்தோஷமாய் உள்ளுள்ளதெல்லாம் தெரியும் படியிருக்கிற ரத்நமயமான மாடத்திலே. (சுற்றும் விளக்கெரிய) மாணிக்கங்களினொளி யாலே பகல் விளக்குப்பட்டிருக்கச் செய்தேயும், மங்களார்த்தமாக விளக்கெரிகிறது. 'புறம்பே நிற்கிறவர்களுக்கு உள்ளுள்ளதெல்லாம் தெரியும்படி எங்ஙனே?' என்ன; மாணிக்கக்குப்பி போலே புறம்பே நிற்க உள்ளுள்ளதெல்லாம் தோற்றுகின்றது என்கை. (சுற்றும்) என்கிறது இதஸ்தத: க்ருஷ்ணன் இவளைக் கையைப் பிடித்துக் கொண்டு உலாவுமிடமெல்லாமெரிகை. (எரிய) என்கிறது 'எங்களகங்கள் இருட்டிக் கிடக்க, இங்கு விளக்கெரிகிறது வெறுமனன்று' என்கை. புறம்புள்ள விளக்குகள் புகையாநிற்க, உள்ளுள்ள விளக்கு எரியாநின்றது என்கை.

(தூபங்கமழ) உணர்ந்தபோதைக்குக் கண்ணுக்கிலக்கன்றியே, க்ராணேந்த்ரியத்தாலே அநுபவிக்கும்படியிருக்கிற புகை. (கமழ) பரிமளம் ஸஹ்யமானபடி எங்ஙனே இவளுக்கு? B ''சீருற்றவகிற் புகை'' இத்யாதியேயிறே அவர்களுக்குச் செல்லுகிறது. (கமழ) புகையுள்ளிட்டனவன்றிக்கே கந்தமே கமழ. (துயிலணைமேல்) க்ருஷ்ண விரஹத்தையும் மாற்றவற்றான படுக்கையிலே. க்ருஷ்ணன்வரிலும் இடம் போரும்படியான படுக்கை. C ''மென்மலர்ப் பள்ளிவெம் பள்ளி''யிறே இவர்களது. இருவர்க்குப் படுத்த படுக்கையிலே ஒருவர்க்குக் கண்ணுறங்குமோ? ப்ரஹ்மசாரி படுக்கையில் உறங்க மாட்டார்களோ. (கண் வளரும்) ''இளையபெருமாளைப் போலே உறங்காமைக்கு நாங்களுண்டு. உறங்குகைக்கு நீயுமாயிற்று'' என்கிறார்கள்; ஆர் தொடைகுத்த உறங்குகிறது? அங்குத்தைக்குத் தாங்கள் ஒலியல் கொண்டு பரிசர்யை பண்ண ஆசைப்படுகிறார்கள். (கண்வளரும்) இங்ஙனேயாகாதே வைஷ்ண வர்கள் சொல்லுவது. D 'படுத்தபைந் நாகணைப் பள்ளி கொண்டானுக்கு' என்று தமப்பனார் அவ்விஷயத்தில் சொல்லுமதெல்லாம் இவளுக்குத் ததீயவிஷயத்திலேயிறே. 'தொண்டனூர் நம்பி திருவடிச்சார்ந்தார்' என்று பட்டருக்கு விண்ணப்பம் செய்ய, ''ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவர் அடிமை செய்து போந்தபடியாலே 'திருநாட்டுக்கு நடந்தார்' என்னுங்கோள்'' என்றாப்போலே; நஞ்சீயர், பிள்ளையேறுதிருவுடையார் தாஸரையும்அப்படியே அருளிச்செய்தருளினார்.

---

A திருவாய் 6-5-1. B திருவாய் 9-9-7. C திருவாய் 9-9-4. D திருப்பல் 9.

(மாமான் மகளே) ஸ்வாமினியாயும் தோழியாயும் அநுபவித்ததொழிய இட்டு கொள்ளுகைக்கு விடவொண்ணாத உறவு ஸம்பாதிக்கிறார்கள். பெரியாழ்வார் பெண் பிள்ளை திருவாய்ப்பாடியில் தனக்கு உஜ்ஜீவநமாக ஒரு ப்ராக்ருத ஸம்பந்தமும் உண்டாக்கிக் கொள்ளுகிறாள். (மாமான்) வைஷ்ணவர்களோடு எல்லாவுறவும் ச்லாக்யமாயிருக்கிறபடி. A "மாடமாளிகை சூழ்மதுரைப்பதி நாடி நம்தெருவின் நடுவே வந்திட்டு" என்று ஸ்ரீமதுரையிலேயும் ஓருறவும் ஒரு மாளிகையும் ஸம்பாதித்தாளிறே. அங்குத்தைக்கு உறவு ஸ்ரீமாலாகாரர். தானுமொரு மாலாகாரர் மகளிறே. 1. "க்ருஷ்ணராமௌ முதா யுக்தௌ மாலாகாரக்ருஹம் கதௌ". (மாமான் மகளே) தங்கள் ஸம்பந்தம் சொல்லாதே தங்கள் ப்ராதாந்யத்தைச் சொல்லி இவளை ஸேவிக்கிறார்கள்; 2. "ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி" என்னுமாபோலே: அர்ஜுனனுக்கு க்ருஷ்ணனோட்டை மைத்துனமைபோலே இவர்களுக்கு மைத்துனமையகப்படச் சொன்னவாறே உணர்ந்து, 'நீங்களே திறந்து புகுருங்கோள்' என்ன, 'அது மாணிக்கக்கதவுகாண், அப்யாஸமில்லாதார்க்குத் தெரியாதுகாண்' என்று இவர்கள் சொல்ல—(மணிக்கதவம் தாள் திறவாய்) 'துர்யோதனன் நீருக்கும் பளிங்குமண்டபத்துக்கும் வாசியறியாதே அகப்பட்டாற்போலே அகப்படவொண்ணாது; எங்களைச் சிரிக்கவோ பார்க்கிறது? எங்களுக்குக் கதவும் சுவரும் தெரிகிறதில்லை நீ திறவாய்' என்கிறார்கள். தேசிகர்க்கல்லது தாள் திறக்கத் தெரியாதென்கை.

இப்படி சொல்லவும் இவள் பேசாதே கிடந்தவாறே, இவள் திருத்தாயார் 'இக்காலத்திலே வந்த பெண்பிள்ளைகளுக்கு இவள் வாய்திறவாதே கிடப்பதே' என்று நொந்தமை தோற்ற, அவளுணர்ந்தமையை அறிந்த பெண்பிள்ளைகள் (மாமீர் அவளை எழுப்பீரோ) என்கிறார்கள். B "அடியாரடியார்" என்றும், C "தொண்டர் தொண்டர்" என்றும் ஆழ்வாருடைய பாகவத சேஷத்வம் போலே. 'ஒரு மாதுலனும் ஒரு மாமியாருமே' என்று இவள் ஸம்பந்த ஸம்பந்தம் சொல்லுகிறார்கள். அவள் தம் படி D "அன்னையும் அத்தனுமென் றடியோமுக்கிரங்கிற்றிலள்" என்று பொகட்டுப் போவள். "தாய் என்று பழியிட்டுப் போகவேணுமோ, அடியேனுடையிருக்கிற என்னை?" என்னும் திருமங்கையாழ்வாரை 'வெட்டிமையர்' என்றும், எம்பெருமானாரை 'கோயிலண்ணன்' என்றும் ஆண்டாளருளிச்செய்யும். அத்தை எம்பெருமானார் கேட்டருளி, 'நானடியேனல்லேனோ? என்னை இப்படி அருளிச் செய்வதே' என்றாற்போலே இத்திருவாய்ப்பாடியும்.

(அவளை எழுப்பீரோ) 'இவர்கள் தன் வாசலிலே நின்று அழைத்து நோவுபட இவள் பேசாதே கிடப்பதே' என்று இவள் நெஞ்சில் கிடக்கிறது முகத்திலே தோற்றினபடியைக் கண்டு, 'நீராகிலும் அவளை எழுப்பீரோ' என்கிறார்கள். 'அவளை இவர்களுக்குத் தோற்றுமோ?' என்னில், மாளிகையில் தெளிவாலே தோற்றும். 'தாயார்தான் எழுப்பினாலோ?' என்னில், பாவஜ்ஞையாகையாலே எழுப்பாள். 'இவர்களாற்றாமைக்கு உணராத இவள் இவளுடைய ஆந்ருசம்ஸ்யத்துக்கு உணருமோ?' ஆர்த்தத்வனி கேளாதவள் மத்யஸ்தர் வார்த்தையோ கேட்கப்புகுகிறாள்?' என்னவுமாம்.

---

A நாச்-திரு 4-5. B திருவாய் 3-7-10 C திருவாய் 7-1-11- D பெரியதிரு .3-7-7

பின்னையும் உணரக்காணாமையாலே சிவிட்கென்று (உன்மகள்தானூமையோ) என்கிறார்கள். வ்யவஹாரயோக்₃யையன்றோ என்றபடி. (அன்றிச் செவிடோ) நாங்கள் சொன்ன வார்த்தை கேளாதபடி அந்யபரதையோ? என்கை. (அநந்தலோ) இராவெல்லாம் க்ருஷ்ணனுக்கு ஆடல்கொடுத்து இப்போதோ உறங்குவது? (ஏமப் பெருந்துயில் மந்திரப்பட்டாளோ) ஆர்த்தநாத₃ம் கேளாதபடி காவலிட்டுக்கொண்டு உணராதே உறங்குகைக்கு ஆரேனும் சவித்தாருண்டோ? மந்திரம் இவளுக்கு ப்ரஸித்₃த₄ம். A "உன்முகம் மாயமந்திரந்தான்கொலோ" என்று அம்மான்பொடி தூவினாருண்டோ? என்கை.

திருத்தாயார், 'நீங்கள் இவளை எழுப்பும்படி அறிந்திலிகோள்; திருநாமத்தைச் சொல்லுங்கோள் உணருமபடி' என்ன, 'நாங்கள் சொல்லாத ஸ்ரீ ஸ ஹ ஸ் ர நா ம முண்டோ?' என்கிறார்கள் —(மாமாயன்) பெண்களுக்குக் காணாச்சிறையாய்க் கிடக்கு மவன். (மாதவன்) அதுக்கு கு₃ருகுலவாஸம் பண்ணினவிடம். 1. "லக்ஷ்மீபதி:". (வைகுந்தன்) பெண்களோடொக்க ஆண்களை அடிமைகொள்ளுமவன். அப்பெரிய மேன்மையுடையவனாய், ஶ்ரிய:பதியாயிருக்குமவன்கிடீர் பெண்களுக்கு எளியனாயிருக்கிறான்.

(என்றென்று நாமம் பலவும் நவின்று) "மேன்மைக்கு ஏகாந்தமான திருநாமங்களையும், நீர்மைக்கு ஏகாந்தமான திருநாமங்களையும்; ஶ்ரிய:பதித்வத்துக்கு ஏகாந்தமான திருநாமங்களையும் சொன்னோம். எழுந்திராதாரை எங்களால் செய்யலாவதுண்டோ?" என்கிறார்கள். 'உணராதாரை நீரைச் சொரிந்து உணர்த்துங்கோள்' என்னுமாபோலே. [நாமம் பலவும் நவின்று மாமீரவளை எழுப்பீரோ] என்று க்ரியையாகவுமாம். 9.

## ஸ்வாபதே₃ஶவ்யாக்₂யாநம் — ஒன்பதாம் பாட்டு

அவ;—ஒன்பதாம்பாட்டு. (தூமணி இத்யாதி₃) உபாயாத்₄யவஸாய நிஷ்ட₂ரான அதி₄காரியை எழுப்புகிறார்கள்.

வ்யா:—(தூமணிமாடத்து) அப்ராக்ருதமாய்ப் பஞ்சோபநிஷந்மயமான தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்திலே. (சுற்றும் விளக்கு எரிய) ஸர்வதோமுக₂மாக ஜ்ஞாநதீ₃பம் ப்ரகாஶிக்க. (தூபம்கமழ) ஜ்ஞாநம் பரிமளிக்க; ஜ்ஞாநம் பரிமளிக்கையாவது -- அநுஷ்டா₂நபர்யந்தமாயிருக்கை. (துயிலணைமேல் கண்வளரும்) நித்₃ராப்ரத₃மான ஶயநத்திலே கண்வளருகிற, அதாவது—ஸ்வப்ரயத்ந ஸாமாந்ய நிவ்ருத்திபூர்வகமான ப₄க₃வதே₃கோபாயாத்₄யவஸாயத்திலே நிஷ்ட₂னாயிருக்கை. (மாமான்மகளே) "மாமான்" என்றும், "அம்மான்" என்றும் இரண்டும் பர்யாயமாகையாலே, ஸ்வாமியான எம்பெருமானாலே புத்ரத்வேந அபி₄மதராய் அநந்யார்ஹரான பா₄க₃வதரே! (மணிக்கதவம் தாள்திறவாய்) மணிமாடத்தினுடைய மணிக்கதவையும் மணித்தாள்திறவாய். அதாவது— த்வத₃நுப₄வ விரோதி₄யான தே₃ஹாத்மாக்களிரண்டிலுமுண்டான மமகாரத்தைத் தவிர்ப்பியாயென்றபடி. அன்றிக்கே, த்வத₃நுப₄வவிரோதி₄யான ப₄க₃வத்ஸௌந்

A நாச்-திரு 2-4.

த₃ர்ய லும் ப₄க₃வத்₃ப₄க்தியிலும் மமகாரத்தைத் தவிர்ப்பியாய்' என்கிருர்கள்.
இவர் இப்படி சொன்னவிடத்திலும் இவ்வதி₄காரி பேசாதே கிடக்கையாலே
இவ் காரிக்கு ஜநகையாயிருக்கிற அநந்யோபாயத்வஸ்வரூபஜ்ஞாநமாகிற
திருத் யார், 'அவர்கள் இப்படியழைக்க, நீ பேசாதே கிடப்பதே?' என்ன,
(மாமீ அவளை எழுப்பீரோ) என்கிருர்கள். அதாவது—ஸ்வாமிநியானவளே!
உனக் ஸ்வம்மான அவளை எழுப்பீரோ! என்றபடி. தன்னிடத்தில் அநந்யோ
பாயத் ஜ்ஞாநம் பிறந்தபின்பிறே தத₃கோபாய ்த்₄யவஸாயம் ஜனிப்பது.
இப்ப சொன்னவிடத்திலும் எழுந்திராத இவ் ப்பா லேப உன்மகள்தான்
ஊமை ா'' என்கிருர்கள். அதாவது—மறுமாற்றஞ் சொல்லவல்லளல்லளோ?
என்ற . இவளைப் பேசவொட்டாதே வாயை மூடினுருண்டோ? என்று
ப₄ாவ த₂ம். (அன்றிச் செவிடோ) ஊமையான மாத்ரமன்றிக்கே, நம்
வார்த் கேளாதபடி செவிடோ? நம் பேச்சுக் கேளாதபடி அங்கே ஆரவார
முண் ? என்று ப₄ாவார்த்த₂ம். (அனந்தலோ) சோம்பலோ? என்றபடி, நெடும்
போது யகனோடு கூடியிருந்து படுக்கையிலே சாய்ந்தது இப்போதோ? என்று
ப₄ாவ த₂ம். தனித்தனியே வாக₃ாதி₃ இந்த்₃ரியங்கள் ப₄க₃வத்₃விஷயத்திலே
ப்ரவ களாகையாலே ஒரு கார்யத்திலும் ஶக்தையல்லளென்றுமாம். (ஏமப்
பெருந் ில் மந்திரப்பட்டாளோ) காவலிடப்பட்டாளோ: மஹாநித்₃ரை உண்
டாம்ப மந்த்ரவாத₃ம் பண்ணப்பட்டாளோ? ஸ்வப்ரவ்ருத்தி ஸாமாந்யமும்
உபாய ரோதி₄யாகையாலே இதில் அந்வயியாதபடி தடுத்துவைத்தவர்க
ளுண் ? அதாவது—நமஸ்ஸ தடுத்ததோ? என்றபடி. உபாய
வைல ்யம் ப்ரவ்ருத்த்யந்தரத்தில் அந்வயியாதபடி மோஹிப்பித்ததோ?
என்ற

படி இவர்கள் இன்னுதாக, திருத்தாயார், 'திருநாமத்தைச் சொல்
லுங்கோ இவளெழுந்திருக்கைக்கு' என்ன, '(மாமாயன் மாதவன் வைகுந்த
னென் ன்று நாமம்பலவும் நவின்று) (மாமாயன்) அத்யந்தம் ஸுலப₄ன்.
(மாதவ ) இதுக்கு கு₃ருகுல்வாஸம்பண்ணின இடம். (வைகுந்தன்) இந்த
ஸௌல யம் கு₃ணமாகைக்கு ஈடான பரத்வமுடையவன். (என்றென்று
நாமம் வும் நவின்று, மாமீர் அவளை எழுப்பீரோ) ''ஸ்வார்த்த₂ப்ரவ்ருத்தி
ஸாமா மும் உபாயவிரோதி₄; பரார்த்த₂ப்ரவ்ருத்தி ஸாமாந்யமும் உபாயப₂ல
மாயும் பாயாநுகூலமாயுமிருக்குமென்று அறிவித்து, அவளை — உபாயாத்₄ய
வஸா ஷ்ட₂ரை எழுப்பீரோ'' என்று அந்வயம். 9.

## பத்தாம் பாட்டு

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய் !
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்
நாற்றத் துழாய்முடி நாரா யணன்நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கரணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ
ஆற்ற அனந்த லுடையாய்! அருங்கலமே
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய்.

பதவுரை:—நோற்று—நோன்பு நோற்று, சுவர்க்கம் புகுகின்ற—ஸுக$_2$த்தை இடைவிடாமல் அனுப$_4$விக்கின்ற, அம்மனாய்—அம்மா!, வாசல் திறவாதார்—வாசற்கதவைத் திறக்கமாட்டாதவர்கள், மாற்றமும் தாராரோ—ஒரு பதில் வார்த்தையாவது பேசாரோ? நாற்றத் துழாய் முடி—வாசனை வீசுகின்ற திருத்துழாய்மாலையை முடியிலே சூடியுள்ளவனும், நாராயணன்—நாராயணன் என்னும் ஒப்பற்ற திருநாமத்தை உடையவனும். நம்மால் போற்ற பறைதரும்—நம்மால் பல்லாண்டு பாடப்பெற்று. நமக்கு ப்ராப்யமான கைங்கர்யத்தைக்கொடுப்பவனும், புண்ணியனால்—த$_4$ர்மமே வடிவெடுத்தவனுமான எம்பெருமானால், பண்டு ஒரு நாள்—முன்னொரு காலத்தில், கூற்றத்தின் வாய் வீழ்ந்த—யமன் வாயில் விழுந்தொழிந்த, கும்பகரணனும்—கும்பகர்ணனும், உனக்கே தோற்று—உனக்குத் தோல்வியடைந்து, பெரும் துயில் தான்—(தன்) பெருந்தூக்கத்தை, தந்தானோ—உனக்குக் கொடுத்துப் போயினனோ? ஆற்ற அனந்தல் உடையாய்—அழகிய உறக்கத்தை உடையவளே! அரும் கலமே—அடையவரிய ஆப$_4$ரணம் போன்றவளே! தேற்றமாய் வந்து திற—தெளிந்து வந்து (கதவைத்) திறப்பாயாக.

## மூவாயிரப்படி—பத்தாம்பாட்டு

அவதாரிகை:— பத்தாம்பாட்டு. a பெண்களெல்லாரும், ''க்ருஷ்ணன்'' என்றால் படும்பாட்டை அவன்தான் பட்டு ''தண்ணீர், தண்ணீர்'' என்னும்படி a$_2$ வீறுடையாளொருத்தியை எழுப்புகிறார்கள். b 1. ''ஆநந்த$_3$ம் ப்$_3$ரஹ்மணோ வித்$_3$வாந்'' என்னாதே, b$_2$ 2. ''ஏஷ ஹ்யேவாநந்த$_3$யாதி'' என்றிருப்பாளொருத்தி என்றுமாம். c க்ருஷ்ணன் அசல்திருமாளிகையாய் நடுவிட்ட வாசலாகையாலே ஒரு போகியாக அநுப$_4$விக்கிறாளென்றுமாம்.

---

பெ. அ. பத்தாம்பாட்டு. (நோற்று இத்யாதி$_3$) a ''அருங்கலமே'' என்றதுக்கு—ஹாரத்துக்கு நாயகக்கல்போலேயிருக்குமவள் என்றுதல், நல்ல பெண்ணென்றுதல் வக்ஷ்யமாணமான ஶப்$_3$த$_3$ார்த்த$_2$த்தைத் திருவுள்ளம்பற்றி அவதாரிகையிடுகிறார் (பெண்கள் இத்யாதி$_3$) a$_2$ வீறு—அதிஶயம். b ''சுவர்க்கம்'' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆநந்த$_3$ம் இத்யாதி$_3$) (1. ''ஆநந்த$_3$ம் ப்$_3$ரஹ்மணோ வித்$_3$வாந்'' என்னாதே) என்றதுக்கு—வேத$_3$நம் ஸாத$_4$நமென்றிராதே என்று கருத்து. b$_2$, 2. ''ஏஷ ஹ்யேவ'' என்றதுக்கு இந்த ஈஶ்வரனே ஆநந்த$_3$ஸாத$_4$நனென்று கருத்து.. c ''புகுகின்ற'' என்ற வர்த்தமாநார்த்த$_2$த்தைக் கடாக்ஷித்து, க்ருஷ்ணாநுப$_4$வமாகிற ப$_2$லம் கைபுகுந்தவளாக த்ருதீயாவதாரிகை அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணன் அசல் இத்யாதி$_3$)

வ்யா;—d (நோற்றுச் d3 சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்) e வைகினபின்பும் எழுந்திராமையாலே 'அம்மே! அழகிதாக நோற்று ஸுகம்2 பெறக் கோலினாய்' என்று e2 ஸ்தோபி4க்கிறார்களென்றுமாம், f நோற்க வேண்டாதபடி நோன்பின் ப2லம் கைபுகுந்தவளிறே இவள் என்றுமாம். g (நோற்று) h ஸித்3த4ஸாத4நை யாகையாலே உபாயாம்ஶத்தில் நிர்ப்ப4ரையாயிருந்தாள். i அவனுடைய ரக்ஷகத்வத்தை உணர்ந்தால் தனக்கு யத்நம் பண்ண ப்ராப்தியில்லை; j தன் ஶேஷத்வத்தையுணர்ந்தாலும் ப்ராப்தியில்லையிறே. k 1. "விது3: க்ருஷ்ணம் ப்3ராஹ்மணாஸ்

---

பெ. அ. a, d, e ப்ரத2மாவதாரிகையைத் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வைகின இத்யாதி3) e (வைகினபின்பும்) என்றது — போதோடின பின்பும் என்றபடி. e2 (ஸ்தோபி4க்கிறார்கள்) என்றது — தங்களோடே நோற்கக்கடவோமென்று அவள் சொன்ன வார்த்தையை நிரர்த்த2கமாக்குகிறார்கள் என்றபடி. c, d, f மூன்றும் அவதாரிகாநுகு3ணமாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நோற்க இத்யாதி3) b, g, h த்3விதீயாவதாரிகைக்குச் சேர ப்ரதீகக்3ரஹணபூர்வகம் ப4ாவம் அருளிச்செய்கிறார் (ஸித்3த4ஸாத4நேத்யாதி3) a, d ப்ரத2மாவதாரிகைக்குச் சேர்ந்திருந்தபோது, 'நோன்பு நோற்று அதுக்குப் ப2லமான ஸ்வர்க்க3ஶப்3த3வாச்யமான க்ருஷ்ணாநுப4வத்தைக் கைபுகுரப் பண்ணிக்கொண்டாய்' என்று ஶப்3தா3ர்த்த2மாய், 'இப்படியாகாதேபோனாய்' என்று விபரீதலக்ஷணையாக்கிக்கொள்வது. c, d த்ருதீயாவதாரிகைக்குச் சேர்ந்தபோது, நோற்றுப்பெறவேண்டும் ப2லமான க்ருஷ்ணாநுப4வத்தை நிரந்தரமாக அநுப4விக்கிறாயென்று ஶப்3தா3ர்த்த2ம். b, d த்3விதீயாவதாரிகைக்குச் சேர்ந்த பக்ஷத்தில், 'நோற்றவள் போலே க்ருதக்ருத்யையாய்ப் ப2லம் கைபுகுந்ததென்றிருக்கிற அம்மனே' என்று ஶப்3தா3ர்த்த2ம். அவதாரிகாக்ரமேண ப4ாவம் அருளிச்செய்யாமல் த்3விதீயாவதாரிகைக்கு அநுகு3ணமான அர்த்த2த்தைக் கடைக்கோடியிலே அருளிச்செய்தது — இவ்வர்த்த2த்திலே உபபாதி3க்கவேண்டுவது உண்டாகையாலே என்று திருவுள்ளம். i, j, k நிர்ப்ப4ரையாயிருக்கைக்கு உபபத்தியையும் ப்ரமாணத்தையும் காட்டுகிறார் (அவனுடைய இத்யாதி3 வாக்யத்ரயத்தாலே.) k2 "தத்த்வத:"—உபாயோபேய

---

சி. அ. பத்தாம்பாட்டு. (நோற்று) b2 (ஆநந்த3யாதி என்றிருப்பாள்) என்றது தங்களை ஆனந்தி3ப்பிக்குமவள் இவன் என்றிருப்பாள் என்றபடி, d "நோற்று... அம்மனாய்" என்றதுக்கு இரண்டு பொருள். அதாவது — f 'ஸித்3தோ4பாயஸ்வீகாரம் பண்ணுகையாலே க்ருதக்ருத்யையாய்க் கொண்டு ஸுக2த்வத அநுப4விக்கிற அம்மே!' என்னுதல்; e அன்றிக்கே 'அழகிதாக நோற்று ஸ்வர்க்க3த்தைப் பெறவிருக்கிறாய்' என்று க்ஷேபத்திலேயாதல். d2 சுவர்க்கம் — ஸ்வர்க்க3ம். c, f (க்ருஷ்ணன் அசல் திருமாளிகையாய்) என்று அருளிச்செய்த அர்த்த2த்தை விவரிக்கிறார் (நோற்கவேண்டாதபடி இத்யாதி3) g, h "நோற்று" என்கிற பூ4தார்த்த2த்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸித்3த4ஸாத4நையாகையாலே) என்று. i ஸித்3த4ஸாத4நையானால் க்ருத்யாம்ஶமில்லாமைக்கு ஹேது ஏது? என்ன அருளிச்செய்கிறார் (அவனுடைய இத்யாதி3) k ஸித்3தோ4பாயஸ்வீகாரம் பண்ணினவனுக்கு க்ருத்யாம்ஶம் இல்லை என்கைக்கு ப்ரமாணம் அருளிச்செய்கிறார் (விது3: க்ருஷ்ணமித்யாதி3)

---

ஆ. அ. பத்தாம்பாட்டு. (நோற்றுச் சுவர்க்கம் இத்யாதி3) d, e, f "நோற்றுச்சுவர்க்கம் புகுகின்ற" என்றதுக்கு இரண்டர்த்த2ம் — (வைகினபின்பும் எழுந்திராமையாலே இத்யாதி3). f, h முந்தின அர்த்த2த்தை விவரிக்கிறார் (நோற்க வேண்டாதபடி நோன்பின்

k₂தத்த்வதோ யே தேஷாம் ராஜந் ஸர்வ k₃ யஜ்ஞா: ஸமாப்தா;'' என்றிறேயிருப்பது. ஏழுப்புகிறவர்களுக்கும் l இதுவன்றோ ஸ்வரூபமென்னில்; ஸித்₃தோ₄பாய நிஷ்டர்க்கு விளம்பஹேதுவில்லாமையாலே ப்ராப்யத்தில் த்வரையாலே m பதறுகிறார்கள். n ஸித்₃தோ₄பாய நிஷ்டர்க்கும் கர்ம ஜ்ஞாந ப₄க்திகளுண்டு; o இவர்களுடைய க்ரியாகலாபம் கைங்கர்யத்திலே அந்விதமாயிருக்கும். p ஜ்ஞானம் ஸ்வரூபத்திலே அந்விதம்; q ப₄க்தி ப்ராப்யருசியிலே அந்விதம். r (சுவர்க்கம் r₂ புகுகின்ற) s ஸுக₂த்தை இடைவிடாதே அநுப₄விக்கிற. இவர்களுக்கு க்ருஷ்ணாநுப₄வமிறே ஸுக₂ம். t, 1. ''யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ₃ நிரயோ யஸ் த்வயா விநா'' என்று, ஸ்வர்க்க₃ஶப்₃த₃ம் ஸுக₂வாசி. u (அம்மனாய்) ரக்ஷகையானவளே! நீ ரக்ஷகையாக நாங்கள் உனக்குக் v குழைச்சரக்கான படி அழகிதாயிருந்தது. w அவள் பேசாதே கிடப்பானென்னென்னில்: x திருவடி வரத்தில் பிராட்டி 2. ''ப்ரஹர்ஷேணாவருத்₃தா₄ ஸா வ்யாஜஹார ந கிஞ்சந'' என்றிருந்தாற்போலே 3. ''ஸம்ஶ்ரவே மது₄ரம் வாக்யம்'' என்னும்படியே இவர்கள் பேச்சே அமையுமென்று கிடக்கிறாள்; y ''தங்களடியேனாயிருக்கிற என்னை அம்மனாய் என்பதே!'' என்று கிடக்கிறாளாகவுமாம்.

---

பெ. அ. ப₄ாவேந; k₃ ''யஜ்ஞா: ஸமாப்தா:'' என்றது—ஸமாப்தா ஏவ என்றபடி; இத்தால்— கர்த்தவ்யாம்ஶமில்லை என்றபடி. l 'இது' என்றது — யத்நம்பண்ண ப்ராப்தியில்லாமலிருக்கை என்றபடி. m (பதறுகிறார்கள்) என்றதுக்கு — உறங்குகிறவளுக்கு அத்₄யவஸாயம் தலையெடுத்து ப்ராப்யருசி தலைமடங்கிக் கிடக்கும்; அங்ஙனன்றியே, எழுப்புகிறவர்களுக்கு ப்ராப்யருசி தலையெடுத்து அத்₄யவஸாயம் மடங்கி த்வரைப்படுகிறார்களென்று கருத்து. n, o, p, q 'ஆனால், ஸித்₃தோ₄பாயநிஷ்டர்க்கு ஒன்றும் செய்யவேண்டாவோ?' என்னில், அருளிச்செய்கிறார் (ஸித்₃தோ₄பாயேத்யாதி₃) r, s அவதாரிகாத்ரயத்துக்கும் சேர பத₃ஶ்ருதத்திலே ஶப்₃தா₃ர்த்த₂ம் (ஸுக₂த்தை இத்யாதி₃) c,r,s த்ருதீயாவதாரிகைக்குச் சேர அருளிச்செய்கிறரென்னவுமாம். v குழைச்சரக்கு — ஶப்ரையான வஸ்து; அதாவது — ரக்ஷ்யமென்றபடி. w, x, y 'எழுப்புகிறவர்கள், ''மாற்றமும் தாராரோ'' என்று சொல்லும்படி இவள் பேசாதிருக்கைக்கு ஹேது என்?' என்னும் ஜிஜ்ஞாஸு ப்ரஶ்நத்தை அநுவதி₃த்து, இரண்டுவித₄மாக அருளிச்செய்கிறார் (அவள் இத்யாதி₃ வாக்ய த்₃வயத்தாலே) இத்தால்— ப₄ாக₃வத விஷயத்தில் அநாத₃ரத்தால் இருந்தவளுமன்று, உறக்கமுண்டாயுமன்று என்றதாய்த்து.

---

சி. அ. n,c,p,q 'ஸித்₃தோ₄பாயநிஷ்ட₂னுக்கு க்ருத்யாம்ஶமில்லை என்கிறதென்? கர்மஜ்ஞாநாதி₃களுண்டே' என்ன உபாயத்தில் அந்வயியாது என்கிறார் (ஸித்₃தோ₄பாயநிஷ்டர்க்கும் இத்யாதி₃) r₂, s ''புகுகின்ற'' என்ற வர்த்தமானத்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸுக₂த்தை இடைவிடாதே இத்யாதி₃) t ஸ்வர்க்க₃ஶப்₃த₃ம் ஸுக₂த்தைச் சொல்லுமோ? என்ன அருளிச்செய்கிறார் (யஸ்த்வயா இத்யாதி₃) u ''அம்மனாய்!''—ஸ்வாமிநீ! z ''மாற்

---

கு. அ. ப₂லம் என்று தொடங்கி) z.a,b,c 'மாற்றமும்' என்ற 'ச' ஶப்₃த₃த்துக்கு மூன்று தாத்பர்யம். u,z,c ''அம்மனாய் மாற்றமும்தாராரோ'' என்று கூட்டி அருளிச்செய்கிறார் (ஐஶ்வர்யம் மிக்கால்

z (மாற்றமும் நாராரோ வாசல் திறவாதார்) a இவள் வாய்பேசாதே கிடக்கிற இது பொறுக்கமாட்டாமையாலே, ''மாற்றமும் தாராரோ வாசல்திறவாதார்'' என்கிருர்கள். b வாசல் $b_3$ செம்மினுல் வாயும் செம்மவேணுமோ? c ஐஶ்வர்யம் மிக்கால் ப3ந்து4க்கஃள ஏன் என்னலாகாதோ? d 1. ''பே3ாத4யந்த: பரஸ்பரம்'' என்கிற ந்யாயமும் தவிர்ந்ததோ? e உடம்பை க்ருஷ்ணனுக்குக் கொடுத்தால், எங்களுக்குப் பேச்சாகிலும் தரலாகாதோ? f கண்ணும் செவியும் ஒக்கப் பட்டினிகொள்ள வேணுமோ? 2. ''மது4ரா மது4ராலாபா'' என்றிறே இவள் பேச்சு இருப்பது,

''நீங்கள் பழியிடுகிறதென்? அவன் இங்கு உண்டோ?'' என்ன,—(நாற்றத் துழாய்முடி) கோயிற்சாந்தை உன்னுல் ஒளிக்கப்போமோ? —'இப்போது உண்டாகவேண்டா, அவன் ஒருகால் அணைத்துவிட்டால் அவை அஞ்சாறுகுளிக்குப் பரிமளம் நிற்குமே. கட்டுங் காவலுமாயிருக்கிற வாசலிலே புகுரப்போமோ அவனுக்கு?' என்ன g (நாராயணன்) h அவனுக்கு எங்களைப்போலே கதவு திறக்கப் பார்த்திருக்கவேணுமோ? i வ்யாப்திக்கு ப்ரயோஜநம்—வேண்டினவிடத்தே ஸ்பு4ரிக்க வல்லனுகையன்றே? j உகவாதாரையும் விடாதவன் உகந்த உன்னைவிடுமோ?

k (நம்மால் போற்றப் பறைதரும் புண்ணியன்) l வெறுமையே பச்சையாக இடைச்சிகளுக்கும் சென்று ஆஶ்ரயிக்கலாம்படியான $l_2$ தா4ர்மிகன். m இவர்களுடைய ஆஶ்ரயணம் உபாயம் அன்று, $m_2$ ருசியாலே. n (புண்ணியன்)

---

பெ. அ. z, a ''வாய்திறவாய்'' என்னுதே, ''மாற்றமும்தாராரோ'' என்று —க்ஷேபம் தோற்றச் சொ[illegible]லக்கூடுமோவென்ன அருளிச்செய்கிருர் (இவள் இத்யாதி3) z, b ''மாற்றமும்'' என்ற சக[illegible]த்துக்கு—வாசல் திறவாததோடு ஸமுச்சயமென்று திருவுள்ளம்பற்றி பா4வம் அருளிச்செய்கிருர் (வாசல் இத்யாதி3) $b_2$ 'செம்மினுல்' என்றது—ப3ந்தி4த்தாலென்றபடி.

k, l நம்மால் போற்றப்படும்படி கைங்கர்யத்தைத் தரும் புண்ணியனென்று ஶப்3த3ார்த்த2ம் திருவுள்ளம்பற்றி, தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (வெறுமையே இத்யாதி3) $l_2$ (தா4ர்மிகன்) 3. 'த4ர்மம் சரதி'' என்கிற ஸூத்ரத்தாலே—த4ர்மாசரணம் பண்ணுமவனென்ருய், பறைதருகையாகிற த4ர்மம்பண்ணுமவனென்கை. k, m ''போற்றப்பறைதரும்'' என்று—போற்றுதல் ஹேதுவாகத் தோன்றியிருக்க வெறுமையைச் சொல்லக்கூடுமோ? என்ன, அருளிச்செய்கிருர் (இவர்களுடைய இத்யாதி3) $m_2$ (ருசியாலே) என்ற அநந்தரம்

---

என்று வெறுத்துச் சொன்ன வார்த்தை. d ஸ்வா

சி.அ. றம்'' —வார்த்தை; ''மாற்றமும்'' என்று வெறுத்துச் சொன்ன வார்த்தை. d ஸ்வா
பதே3ஶம்(பே3ாத4யந்த இத்யாதி3) z, b மாற்றமும் என்ற அபிஶப்3த3ார்த்த2ம் (வாசலைச்செம் மினுல் இத்யாதி3) $b_2$ (செம்மினுல்) மூடினுல். u,z,c ''அம்மனுய் மாற்றமும் தாராரோ'' என்று கூட்டித் தாத்பர்யம் (ஐஶ்வர்யமித்யாதி3) e அபிஶப்3த3த்துக்குத் தாத்பர்யாந்தரம் (உடம்பை க்ருஷ்ணனுக்கு இத்யாதி3) f வாசல் திறவாமையாலும் வார்த்தை சொல்லாமையாலும் (எங்கள் கண்ணும் செவியும் ஒக்கப் பட்டினிவிடவேணுமோ) என்கிருர்கள். g, h, i ''நாராயணன்'' என்பதற்கு ஸர்வவ்யாபகத்வ வத்ஸலத்வங்களிரண்டையும் விவக்ஷித்து அருளிச்செய்கிருர் (அவனுக்கு எங்களைப்போலே இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) k, l, m வெறுமையே பச்சையாக ஆஶ்ரயிக்கையாயிருந்தால் ''போற்றப்பறைதரும்'' என்கிறதென்? என்ன அருளிச்செய்கிருர் (இவர்களுடைய ஆஶ்ரயணம் உபாயமன்று,ருசியாலே) என்று.

---

கு,அ.இத்யாதி3)g, j'நாராயணன்'என்றதுக்குத் தாத்பர்யாந்தரம்(உகவாதாரையும்விடாதவன்

o 1. ''க்ருஷ்ணம் த$_{4}$ர்மம் ஸநாதநம்'' என்று இவர்களுக்கு உபாயம் அவன் தானிறே; ஸ்நேஹோக்தியாகவுமாம்.

இவனால் p (பண்டு ஒருநாள்) q முன்பு, உன்னைப்போலே உணராதே படுத்திருண்டுகாண் என்கை. (பண்டு ஒருநாள் கூற்றத்தின் $q_2$ வாய்வீழ்ந்த) r தண்ணீர் குடிக்கக் கல்லின ஏரியிலே அமிழ்ந்து சாவாரைப்போலே, 2. 'ரிபூணும் அபி வத்ஸல'ரான பெருமாள் பக்கலிலே தப்புச்செய்த. s (கும்பகரணனும் தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானே) t உறக்கத்தில் தலையானவனும் உனக்குத் தோற்றுத் $t_2$ தன் உறக்கத்தையும் தானே தந்து போனானே? u அவனது—துயில்; உன்னது—பெருந்துயில்; v அவன், $v_2$ ஒருத்தியையிறே பிரித்தது; நீ ஊராகப்பிரித்து உறங்காநின்றாயே.

---

பெ.அ. ''வந்ததித்தனை'' என்று ஶேஷம். n, o ஆஶ்ரயணம் உபாயமாகாவிட்டால் உபாயம் ஏது? என்ன, அதுக்குப் பரிஹாரமாக, ''புண்ணியன்'' என்றார்களென்று விவக்ஷித்து, ப்ரதீகக்$_{3}$ரஹணபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (புண்ணியன் இத்யாதி$_{3}$)

p, q ''கும்பகரணன்'' என்றபோதே பூர்வகாலிகத்வம் தோற்றியிருக்க, ''பண்டொருநாள்'' என்றதுக்கு உபாலம்ப$_{4}$ம் தோற்ற ப$_{4}$ாவம் அருளிச்செய்கிறார் (முன்பு இத்யாதி$_{3}$) $q_2$, r ''வீழ்ந்த'' என்றது— நஶிக்கவென்றாய், அதுதானும் து$_{3}$க்ருதமாய்த் தோன்றுகையாலே. 'புண்ணியனால்' என்றது— கரணார்த்த$_{2}$மாகத் திருவுள்ளம்பற்றி, த்$_{3}$ருஷ்டாந்தபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தண்ணீர் இத்யாதி$_{3}$) s, t, u, v ''கும்பகரணனும்'' என்ற சகாரம் ப்ராத$_{4}$ாந்யத்திலேயாக்கி ''உனக்கு'' என்றதை ''தோற்று'' என்றதற்கு முந்துறக்கூட்டி, ஏகாரத்தை ''தான்'' என்ற பத$_{3}$த்தோடே சேர்த்து, ''தோற்றும்'' என்ற சகாரத்தை ''துயில்'' என்றதோடு அந்வயித்து, ''பெரும்'' என்றதை— பெரிதாம்படியென்றாக்கி, ''கும்பகரணனும்— உனக்கு— தோற்று— பெரிதாம்படி— துயில்— உம்— தானே— தந்தானே'' என்று அந்வயம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உறக்கத்தில் இத்யாதி$_{3}$ வாக்யத்ரயத்தாலே.) v ''துயிலையும்'' என்ற சகாரம்— அநுக்தஸமுச்சயமாய்த் தன்னபராத$_{4}$த்தையும் பெரிதாகத்தந்தானே என்று விவக்ஷித்து, பெருமையை உபபாதி$_{3}$க்கிறார் (அவன் ஒருத்தியை இத்யாதி$_{3}$) இத்தால் 'புண்ணியனால்— கூற்றத்தின் வாய்வீழ்ந்த'' என்று— அபராத$_{4}$த்தைப்பண்ணி நஶித்தவனென்கையாலே இவ்வர்த்த$_{2}$ம் லபி$_{4}$த்ததென்று திருவுள்ளம். ராவணன் பிராட்டியைப் பிரித்தவனாயிருக்க, கும்ப$_{4}$கர்ணன் பிரித்ததாகச் சொன்னது— அவன் ஸம்வதி$_{3}$த்துப் பெருமாளோடே எதிர்த்து யுத்$_{3}$த$_{4}$த்துக்கு வருகையாலே என்று கொள்வது. 3. 'இத$_{3}$ாநீம் க$_{2}$ல்வஹம் நாஸ்மி யஸ்ய மே த$_{3}$க்ஷிணோ பு$_{4}$ஜ:। பதிதோ யம் ஸமாஸாத்$_{2}$ய ந பி$_{3}$பே$_{4}$மி ஸுராஸுராத் ||'' என்கிறபடியே— தானே அவனாகவும் தனக்கு அவன் வலக்கையாகவும் அவலம்ப$_{3}$மாகவும் ராவணன் சொல்லுகையாலே, கும்பகரணனே பிரித்ததாகச் சொன்னதாகவுமாம்.

---

சி.அ. s, t ''கும்பகரணனும்'' என்கிற சஶப்$_{3}$த$_{3}$த்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உறக்கத்தில் இத்யாதி$_{3}$). $t_2$ ''தான் தந்தானே'' என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தன் உறக்கத்தையும் தானே தந்து போனானே) என்று. அதாவது — வலியாலன்றிக்கே தோற்றுத்தந்தான் என்கை. u 'தோற்று' என்கைக்கு நியாமகம் (அவனது துயில், உன்னது பெருந்துயில்) என்று. v விரோதி$_{4}$யை த்$_{3}$ருஷ்டாந்தமாகச் சொல்லுகிறதென்? என்ன அருளிச்செய்கிறார் (அவன் ஒருத்தியை இத்யாதி$_{3}$) $v_2$ (ஒருத்தி) என்றது பிராட்டியை.

---

ரு.அ. இத்யாதி$_{3}$) s, t ''கும்பகரணனும்'' என்ற ப்ராத$_{4}$ாந்யத்துக்குத் தாத்பர்யம் (உறக்கத்தில்

w (ஆற்ற அனந்தலுடையாய்) x இப்படி சொல்லக்கேட்டுப் பெரிய அனந்தலோடே ''க்ருஷ்ண க்ருஷ்ண'' என்ன; எங்களுக்கு அங்கேபோய்த் துயிலெழப் பாடவேணுமோ? நீ உணரும்படி காண அமையாதோ? y (அருங்கலமே) z எங்களுக்கெல்லாம் ஶிரோபூ4ஷணமல்லேயோ? $z_2$ ஹாரத்தைப்பண்ணி அதுக்குக் கல்லழுத்தினாற்போலே, நீ புகுந்து இக்கோ3ஷ்டி2யை ஸநாத2மாக்காய் என்கிறார்கள்; a எங்களுக்குப் பெறுவதற்கு அரியளல்லேயோ நீ என்னவுமாம்.

இவர்களார்த்தியைக் கண்டு துணுக்கென்று வரப்புகாள்; b (தேற்றமாய் வந்து திற) c இரண்டாம் நிலத்திலே கிடக்கிறவளாகையாலே 'தடுமாறாதே தெரிந்துவந்து திற' என்கிறார்கள். d (தேற்றமாய் வந்துதிற) e ஊராகத் திரண்டு கிடக்கிறது, படுக்கையிற் $e_2$ கிடந்தபடியே வாராதே ஸத3ஸ்ஸையாய் வந்துதிற. 1. ''ஸா ப்ரஸ்க2லந்தீ'' என்னும்படி வாராதேகொள் என்கிறார்கள். 10.

---

பெ. அ. w, x கீழே ''பெருந்துயில்'' என்று சொல்லிவைத்து, இங்கே அனந்தலையிட்டு ஸம்போ3தி4க்கையாலே — அவள் இவர்களிட்ட பழிக்கு அஞ்சி, தன்னுணர்த்தி இவர்களுக்குத் தோற்றத் திருநாமஞ்சொன்னளென்று ஸங்க3தியைக் காட்டுகிறார் (இப்படி இத்யாதி3) w, z, $z_2$ a 'ஆற்ற — மிகுந்திருக்கிற, அனந்தல் — நித்3ரையை உடையவளே' என்று இதன் உத்3தே3ஶ்யதைதோற்ற இத்தையிட்டு ஸம்போ3தி4த்ததுக்குத் தாத்பர்யத்தை வ்யாவ்ருத்திபூர்வகம் அருளிச்செய்கிறார் (எங்களுக்கு இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே.) y, a ''கலம்'' என்றவிடத்தில் A ''மனக்கள் மாறுடிவரும்'' என்கிற ந்யாயத்தாலே. ''கலன்'' என்றாய், ஆப4ரண விவக்ஷையாகக் கீழருளிச்செய்து, ''கலம்'' என்று விவக்ஷித்து, அது பாத்ரமென்றாய், அத்தால் — நல்லபெண்ணே என்று அர்த்தா2ந்தரம் அருளிச்செய்கிறார் (எங்களுக்குப் பெறுவதற்கு இத்யாதி3)

b, c தேற்றமாய் வரவேணுமென்கைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (இரண்டாம் நிலத்திலே இத்யாதி3) c இரண்டாம்நிலம் — மேல்மெத்தை. e ''ஒருபோகியாக க்ருஷ்ணாநுப4வம் பண்ணுமவள்'' என்ற த்ருதீயாவதாரிகைக்குச் சேரத் தாத்பர்யாந்தரம் அருளிச் 10
செய்கிறார் (ஊராக இத்யாதி3)

---

சீ.அ. q2 ''வாய்''– இடம். ''பறை தரும் புண்ணியன் – இப்படிக்கொத்த புண்ணியனால் கூற்றத்தின் வாய் வீழ்ந்த கும்பகரணன்'' என்னுதல்; ''புண்ணியனால் நோற்றுச்சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்'' என்னுதல். w ''ஆற்றஅனந்தல்'' — பெரிய அநந்தல். y ''அருங்கலன்'' — பெறுதற்கரிய ஆப4ரணம். d ''தேற்றம்'' — தெளிவு. c, e 'தடுமாறாதே தெளிந்து வந்து திற' என்கிறார்களாதல்; அன்றிக்கே 'ஸம்போ4க3 சிஹ்நங்களையும் மறைத்துக்கொடு வந்து திற' என்கிறார்களாதல்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதே3ஶம் 2. ''ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்'' என்றும், 3. ''அஹம் ஸ ச மம ப்ரிய:'' என்றும் அவன் பக்ஷபதித்திருப்பார்திறத்தில் ஸ்ரீவைஷ்ணவர்கள் நித்யஸாபேக்ஷராயிருக்கை ஸ்வரூபமென்கிறது. 10.

---

கு.அ. தலையானவனித்யாதி3) y கலன் — ஆப4ரணமென்றபடி. y, z, $z_2$ இதுக்கு இரண்டு தாத்பர்யம் — z (எங்களுக்கு ஶிரோபூ4ஷணமென்னுதல்) $z_2$ அன்றிக்கே (ஹாரத்தைப்பண்ணி) என்று தொடங்கி. $e_2$ (கிடந்தபடியே வாராதே) என்றது நக்3நையாய் வாராதே என்றபடி. 10.

---

A, தமிழிலக்கண வழக்கு.

## ஆறுயிரப்படி—பத்தாம்பாட்டு

ஆறுயிரப்படி:—பத்தாம்பாட்டு. ஒரு கிடையிலே பல பிள்ளைகள் ஓதாநின்றால் ஒருவனுக்கு ஒத்துப்போய் ஸமர்த்த2னுமானால் அவனே அவர்களுக்கெல்லாம் நிர்வாஹகனுமாபோலே, இவ்வூரில் பெண்பிள்ளைகளெல்லாரிலும் க்ருஷ்ணஸம்ச்லேஷத்தில் விதக்3தை4யாய், எல்லாப் பெண்களையும் க்ருஷ்ணன் படுத்துமத்தை க்ருஷ்ணன்தன்னைப் படுத்துவாளொருத்தியாய், அவன்தான் ''தண்ணீர் தண்ணீர்'' என்னும்படி வீறுடையாளொருத்தியாய், இவர்கள் தாழ்த்ததுக்கு அவனையிட்டுப் பொறுப்பிக்கும்படி அவன்பக்கல் போரமுகமுடையாளுமாய், க்ருஷ்ணன் திருமாளிகைக்கு அசல் திருமாளிகையுமாய், நடுவு இடைச் சுவர் தள்ளிப்பொகட்டு ஒரு போகியாகத் தண்ணீர்த்துரும்பற்று ஒரு படுக்கையிலே அவனுந்தானுமாக எப்போதும் அநுப4விப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். 1. ''ஆநந்த3ம் ப்3ரஹ்மணோ வித்3வாந்'' என்னாதே, 2. ''ஏஷ ஹ்யேவாநந்த3யாதி'' என்று அவன் ஆநந்தி3ப்பிக்கவிருப்பாளொருத்தி.

வ்யா:—(நோற்று) க்ருஷ்ணனைப் பிரிந்தபோதேபிடித்துக் குளிப்பது நோற்பதாகாநிற்க, இவள்படி பத்தொன்பதாம் ப4ாஷையாயிருப்பாளொருத்தி, 'ஒக்கநோற்கக்கடவோம், ஒக்கக்குளிக்கக்கடவோம், க்ருஷ்ணனோடொக்க அநுப4விக்கக் கடவோம்' என்று சொல்லி, நோன்பின் ப2லம் கைபுகுந்து, க்ருஷ்ணாநுப4வம்பண்ணிக் கரைச்சலற்றுக்கிடந்து உறங்கவமையுமோ? ஸித்3த4ஸாத4நையாயிருப்பாளொருத்தி. 3. ''ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தா:'' 4. ''யோ மாமேவமஸம்மூடே4ா ஜாநாதி புருஷோத்தமம் | ஸ ஸர்வவித்3ப4ஜதி மாம் ஸர்வப4ாவேந ப4ாரத ||'' 5. ''க்ருதக்ருத்யஶ்ச ப4ாரத'' 6. ''க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே'' A ''செய்தவேள்வியர்'' என்றும் ப்ரமாணங்கள் சொல்லுகிறபடியே ஸித்3த4ஸாத4நையாகையாலே உபாயாம்ஶத்தில் நிர்ப்ப4ரையாயிருந்தாள். 'ஸித்3த4ஸாத4நராயிருப்பார்க்குக் கர்த்தவ்யமொன்றுமின்றிக்கேயொழிகிறபடி எங்ஙனே?' என்னில்: அவனுடைய ரக்ஷகத்வத்தை உணர்ந்தால் தனக்கு யத்நம்பண்ண ப்ராப்தியில்லை, தன் ஶேஷத்வத்தை உணர்ந்தாலும் ப்ராப்தியில்லை; விரோதி4ப்ராப3ல்யத்தை உணர்ந்தாலும் ஒன்றுஞ் செய்ய ப்ராப்தியில்லை; இதரோபாயங்களுக்கும் அவன் ப்ரஸாத3ம் வேண்டியிருக்கையாலே ஒன்றுஞ் செய்ய ப்ராப்தியில்லை. ஆனபின்பு ''நாராயணனே'' என்று—அவனுடைய உபாயப4ாவத்தை அநுஸந்தி4த்துவைத்து, விடிவோறே எழுந்திருந்து குளிக்கக்கடவதோ? என்றிருக்கிறாள். புறம்புநின்று எழுப்புகிறவர்களுக்கும் இப்படியிருக்கையன்றோ ஸ்வரூபமென்னில்: அவர்களுக்கு நினைவு 'உபாயமென்கிற ஶப்3த3த்தை விஶ்வஸித்திருக்கவோ? உபேயத்துக்காகவன்றோ உபாயஸ்வீகாரம்; ஸித்3தோ4பாயநிஷ்டர்க்கும் ப்ராப்யத்தில் த்வரையில்லையாகில் சேதநனன்றிக்கேயொழிய

A திருவாய் 5-7-5.

மத்தனை' என்று விளம்ப3ஹேது இல்லாமையாலே, ப்ராப்யத்தில் த்வரையாலே
பதறுகிறார்கள். ஸித்3தோ4பாயநிஷ்ட2ர்க்கும் கர்ம ஜ்ஞாந ப4க்திகளுண்டு—
இவர்களுடைய க்ரியாகலாபம் கைங்கர்யத்திலே அந்விதமாயிருக்கும்; ஜ்ஞாநம்
ஸ்வரூபத்திலே அந்விதம்; ப4க்தி ப்ராப்ய ருசியிலே புகும். ஆனபின்பு ப்ராப்யத்தில்
த்வரையில்லையாகில் அசித்தோடொக்குமத்தனை என்கிறார்கள். (சுவர்க்கம் புகு
கின்ற) ஸுக2த்தை விடாதே அநுப4விக்கிற. ''ஸ்வர்க்க3ம்'' என்று— ஸுக2த்தைச்
சொல்லுகிறது. ஸாக்ஷாத்ஸுக2ஶப்3த3வாச்யனாகையாலே, க்ருஷ்ணனை ''சுவர்க்கம்''
என்கிறது. 1. ''யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ3 நிரயோ யஸ்த்வயா விநா''
என்னக்கடவதிறே. ஆநந்த3ரூபனாய் ஆநந்த3கு3ணகனாய் ஆநந்தா3வஹனாயிருக்கிற
க்ருஷ்ணனுடைய அநுப4வமிறே ஸாக்ஷாத்ஸுக2மாகிறது. (புகுகின்ற) அநுப4வத்
தில் விச்சே2த3மில்லாமை சொல்லுகிறது. உபாஸந வேளையில் ஸ்மர்த்தவ்ய விஷ
யத்தினுடைய அநுஸந்தா4நத்தாலே வருவதொரு ஸாரஸ்யமுண்டு; அதுதான்
காதா3சித்கமாகையாலே ஹேயஸம்ப3ந்த4மற்று அவ்வருகேபோனால் அவிச்சி2ந்ந
மாக அநுப4விப்பதொரு அநுப4வமுண்டு; அது இங்கே கைபுகுந்திருக்கை. (அம்
மனாய்) அழகிதாக இத்திரளுக்கு ரக்ஷகையானாய்! நீ ரக்ஷகையாக நாங்கள் குழைச்
சரக்கானபடியென்! எங்களை க்ருஷ்ணனோடே அநுப4விப்பித்து, அவ்வநுப4வம் உன்
முலையோடும் தோளோடுமணைந்தாற்போலேயிருக்கவேண்டாவோ? 2, ''ஸம்ஶ்ரவே
மது4ரம் வாக்யம்'' என்கிறபடியே இவர்கள் பேச்சிலினிமையாலும், 3. ''ப்ரஹர்
ஷேணாவருத்3தா4 ஸா'' என்று — இவர்களைக் கண்ட ஹர்ஷத்தாலே, விக்கி வார்த்தை
சொல்லமாட்டாமையாலும், 'தங்களடியேனான என்னை, ''தாய்'' என்று பழியிடு
வதே' என்று ஸ்வரூபத்தை அநுஸந்தி4க்கையாலும், ''இவர்கள் க்ருஷ்ணாநு
ப4வம் பண்ணுகிறோமென்று பழியிடாநின்றார்கள். இவ்வளவிலே ஒன்று சொல்லு
வோமாகில் இவர்கள் சொன்னதுக்கு இசைந்து, மதியாமல் உத்தரஞ்சொன்னோ
மாவுதோம்'' என்று பேசாதேகிடந்தாள்; இவள் நினைவறியாதே தாங்கள் புறம்பே
நின்று துவளுகிற துவட்சி பொறுக்கமாட்டாமையாலே, — (மாற்றமும் தாராரோ
வாசல் திறவாதார்) என்கிறார்கள். வாசலைச் செம்மினால் வாயையுஞ் செம்ம
வேணுமோ? கண்ணைப் பட்டினிகொண்டவோபாதி செவியையும் பட்டினிகொள்ள
வேணுமோ? ஐஶ்வர்யம் விஞ்சினால் ப3ந்து4க்கள் ஆர்த்தரானால் ஏனென்ன
லாகாதோ? படுகுலையடித்தால், தண்ணீர்வார்த்தால் ஆகாதோ? போ4க3த்தைத்
தடுத்தால் எங்கள் ஸத்தையையும் அழிக்கவேணுமோ? (மாற்றமும் தாராரோ)
உன்னுடம்பை க்ருஷ்ணனுக்குக் கொடுத்தால், எங்களுக்குப் பேச்சாகிலும் தந்தா
லாகாதோ? க்ருஷ்ணனை அருக்கினால் உன்னையுமருக்கவேணுமோ? உன் சரக்குத்
தரப்பார்த்திலையாகில் எங்கள் சரக்குத்தந்தால் ஆகாதோ? உன்னுடைய க்ருஷ்ண
னைத் தாராவிட்டால் எங்களுடைய உன்னைத் தந்தாலாகாதோ? (மாற்றமும்)
4. ''மது4ரா மது4ராலாபா'' என்று இவள் பேச்சுக்கு அவனும் தோற்றிறேயிருப்பது.

இப்படி இவர்கள் பழியிடாநின்றால் ஒரு உத்தரஞ் சொல்லியாகிலும் பிழைப்போமென்று 'நீங்கள் சொல்லுகிற பழிக்கு அவனிங்குண்டோ?' என்ன — (நாற்றத்துழாய்முடி) நீயும் மறைத்து உன் களவுக்கு அவனும் பெருநிலைநின்றால் கோயிற்சாந்தை உன்னாலொளிக்கப்போமோ? A "அன்றிமற்றோருபாயமென்" என்னும்படி மாளிகைச்சாந்தை மறைக்கப்போமோ? 'இப்போது அவனுண்டாக வேணுமோ? அவன் ஒருகால் அணைத்துவிட்டால் நூறுகுளிக்குநிற்கும். நாமெல்லாருமொக்க இப்போதேயெழுந்திருந்து போந்த பின்பு படுக்கையிலே சாய்ந்தேன்; அந்தியம்போதே பிடித்து வாசலைப்பற்றிக்கொண்டு நின்றிகோள்; கட்டும் காவலுமாயிருக்கிற வாசலிலே புகுரப்போமோ அவனுக்கு?' என்ன — (நாராயணன்) எங்களைப்போலே கதவு திறக்குந்தனையும் பார்த்திருக்க வேணுமோ அவனுக்கு? அவனுக்கு உன்பக்கல் புகுந்தால் புறப்படவன்றோ வழியரிது. (நாராயணன்) ஜீவத்3வாராவன்றோ அநுப்ரவேஶம், விட்டுப்போகாதார் பேரன்றோ இது. உகவாதார்க்கும் ஸத்தையை நோக்கி, உகந்தார்க்கும் வத்ஸலனாயிருக்குமவனன்றோ. ஆசைப்பட்ட உன்னை விடுமோ? வ்யாப்திக்கு ப்ரயோஜநம் வேண்டினவிடத்தே ஸ்பு2ரிக்கவல்லனாகை அன்றோ? (நாற்றத்துழாய்முடி நாராயணன்) ஆசைப்பட்டாரை ரக்ஷிக்கைக்குத் தோள்மாலையிட்டிருக்கிறவனன்றோ. "பேசாதே கிடக்கில் வாய் திறந்திலளென்னாநின்றார்கள்: வாய் திறக்கில் உத்தரஞ்சொல்லிற்று என்பார்கள்" என்று உறங்குவாரைப்போலே கிடந்தாள் — (நம்மால்போற்றவித்யாதி3) (நம்மால்) வெறுமையே பச்சையான இடைச்சிகளுக்கும் சென்று ஆஶ்ரயிக்கலாம்படியிருக்கிற தா4ர்மிகன். (நம்மால்) அவனுக்கு ஆகாதாருண்டாய் முடிந்தானல்லகிடீர்! ஜந்மவ்ருத்தாதி3கள் ஏதேனுமமையுங்கிடீர்! (போற்ற) இவர்கள் குடிப்பிறப்பிருக்கும்படி. B "பல்லாண்டு" என்றிருக்குமவர்களிறே. இவர்களாஶ்ரயணம் உபாயமன்று. (போற்ற) செய்யவேண்டுவது பெரிதாய் முடிந்தானல்லன் கிடீர்! (பறைதரும்) "உக்கமுந் தட்டொளியும்" (20). (புண்ணியனால்) தண்ணீர் குடிக்கக் கல்லின ஏரியிலே தலைகீழாக விழுந்து சாவாரைப்போலே. (புண்ணியனால்) அத்3வேஷமாத்ரமுடையார்க்குத் தன்னைப் பெறுகைக்கு ஸுக்ருதமும், ருசிஜநகனும், உபாயமும், ப்ராப்யனுமாயிருக்கிறவனாலே. 1, "ஸுஹ்ருத3ம் ஸர்வபூ4தாநாம்" என்றது புறம்பாம்படி, 2. "யதி3 வா ராவண: ஸ்வயம்" என்னும்படி, 3. "ரிபூணாமபிவத்ஸல" ரானவராலே கிடீர் முடிந்தது. (புண்ணியனால்) 4. "க்ருஷ்ணம் த4ர்மம் ஸநாதநம்"

(பண்டொருநாள்) முன்பு உன்னைப்போலே உணராதே நோவுபடுத்தினானொருவனுண்டுகாண். (ஒருநாள்) உணர்ந்திலனென்று ஒருகாலத்திலே கேட்டிருந்

---

A திருவாய் 8-9-10. B திருப்பல்-1.

தோம், இன்று அநுபவியாநின்ரேம். (கூற்றத்தின் வாய்வீழ்ந்த) தான் சிறை யிட்டுவைத்த ம்ருத்யுவினுடைய ஆஸ்யத்திலே விழுந்த. (புண்ணியனுல் கூற்றத்தின் வாய் வீழ்ந்த) பதார்த்த தர்ஸநத்துக்காக ஏற்றின விளக்கிலே விட்டில்புக்கு முடிந்துபோமாபோலே, இவர் திருவுள்ளத்தால் அவன் அநர்த்தத்துக்கு நினைவில்லை யென்கை. (கும்பகரணனும்) உறக்கத்தில் தலையானவனும் உனக்குத்தோற்றுத் தன்னுறக்கத்தையுந் தானேதந்து போனுனே! நீயும் அவனுமாக ஸமயம்பண்ணி உறங்கப்புக்கு நீ ஜயித்தபின்பு 'நான் இது கைக்கொள்ளுமவனல்லேன்' என்று விட் டானே? ஸ்ரீபரசுராமாழ்வானை வென்று, பெருமாள் அவன் கையில் வில்லை வாங் கினுற்போலே, நீயும் அவனைவென்று, நித்ரையைக் கைக்கொண்டாயோ? (பெருந் துயில்) அவனளவோ உன்னுடைய நித்ரை? அவனதோ துயில்; உன்னதோ பெருந்துயில். அவனுக்கு ஆறுமாஸம் உறங்குகையும், ஆறுமாஸத்துக்கு ஒருநாள் உணர்ந்திருக்கையுமென்று ஒரு வ்யவஸ்தையுண்டிறே; அங்ஙனமொன்றில்லையோ உனக்கு? நீ காலதத்வமுள்ளதனையுமுறங்குகிருயன்றே? இவள் அரைக்ஷணம் புறப்படாதொழிய நெடுங்காலமாய்த் தோற்றுகிறது இவர்களுக்கு. அவன்ஒருத்தி யுடைய பிரிவுக்கு ஹேதுபூதனுனைத்தனையிறே; நீ ஒருராகப் பிரிக்கைக்குஹேது பூதையாய் உறங்குகிருயிறே.

1. ''ந க்ஷமாமி'' என்கிற அஸஹ்யாபசாரம் பண்ணினவனை அரைக்ஷணம் உணராதேயிருக்கிற நமக்கு ஒப்பாகச் சொல்லாநின்ருர்களென்று, இவர்களுக்குச் சென்றுமுகங்காட்ட வேணுமென்று, துணுக்கென்று தானுணர்ந்தமை தோற்ற ''க்ருஷ்ண க்ருஷ்ண'' என்ருள்; -- (ஆற்ற அனந்தலுடையாய்) இதொரு உணர்த்தியிருந்தபடியென்! எங்களுக்கு அங்கேபோய்த் துயிலெழப்பாடவேணுமோ? நீயுணரும்படி காணாவமையாதோ? (ஆற்றவனந்தல்) ஆர்த்தத்வநி கேளாதபடி அனந்தலினுடைய மிகுதி; ஜாலகரந்த்ரத்தாலே, இவளுணர்ந்தபடியைப் பார்த் தார்கள்; தங்கள்கோஷ்டிக்கு நாயகரத்நம்போலேயிருந்தாள்; — (அருங்கலமே) என்கிருர்கள். எங்களுக்கெல்லாம் ஸிரோபூஷணமல்லையோ நீ? ஒரு ஹாரத்தைப் பண்ணி அதிலேயொரு ரத்நத்தை அழுத்திஞல் அந்த ரத்நம் அந்த ஹாரத்தை விளக்குமாபோலே, இத்திரளை ஸநாதமாக்கப்பாராய். (அருங்கலமே) எங்களுக்குப் பெறுதற்கரியவளல்லையோ நீ? அவள்புறப்பட அவனுமொக்கப்புறப்பட்டுத் தங்களைத் தலைமேலே கொள்ளுமென்றிருக்கிருர்கள். இவர்கள் ஆர்த்தியைக்கேட்டு, துணுக் கென்று வரப்புக்காள்; — (தேற்றமாய்வந்து திற) பயப்பட்டு மேல்நிலங்களில் நின்று தடுமாருதே வந்திழிந்து திற. அங்ஙனன்றிக்கே, ஊராகத் திரண்டு கிடக்கிறது. அவர்களிலே உன்னையும் நியமிக்கவல்லாருண்டு; அவர்கள்முன்னே படுக்கையில் சாய்ந்தபடியே வாராதே, உன்னைப்பேணிக்கொண்டு — ஸதஸ்ஸியையாய், வந்து திற- 10.

2. ''ஸா ப்ரஸ்கலந்தீ'' என்னும்படி வாராதேகொள்.

## ஈராயிரப்படி — பத்தாம்பாட்டு

அவ:— பத்தாம்பாட்டு. க்ருஷ்ணனுக்கு அசலகமாய் இடைச் சுவர் தள்ளிப் போகட்டு ஒருபோகியாக அனுபவிக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

வ்யா:— (நோற்று) ஸித்தஸாதனை. இவனுடையவும் தன்னுடையவும் ஸ்வரூபங்களையுணர்ந்தால் யத்னம் பண்ண ப்ராப்தியில்லை. "நாராயணனே நமக்கே பறை தருவான்" (1) என்கிறபடியே அவன் தலையிலே பாரத்தைப் பொகட்டோமாகில் நமக்கு நீரிலே புக்கு முழுக வேணுமோ? என்றிருக்கிறாளிவள். உபேயத்துக்கன்றோ உபாயம்; ஸித்தோபாய நிஷ்டர்க்கு விளம்பஹேது வில்லாமையாலே ப்ராப்யத்தில் த்வரையில்லாதார் சேதனரன்றென்றிருக்கிறார் கள். (அம்மனாய்) ரக்ஷ்யரக்ஷகபாவம் மாறி நிற்கவோ பார்க்கிறது? அழகிதாக நிர்வாஹகையானாய்! (சுவர்க்கம் புகுகின்ற) ஸுகமனுபவிக்கை. 1. "யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்க:". நிர்வாஹகையாயிருப்பார்க்குக் கண்ணுறங்க விரகுண்டோ? இவர்கள் பேச்சைக் கேட்டு ஈடுபட்டுப் பேசாதே கிடந்தாள். 2. "ஸம்ஸ்ரவே மதுரம் வாக்யம்".பழியிடுவதேயென்று பேசாதே கிடந்தாளாகவுமாம்."அம்மனாய்— என்பதே தங்கள் அடியேனாயிருக்கிறவென்னை" என்று பேசாதேயிருந்தாளாக வுமாம். 3. "ப்ரஹர்ஷேணாவருத்தா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந" என்று ப்ரீதி யாலே விக்கிப் பேசாதே இருக்கிறாளாகவுமாம்.

இவர்கள் பொறுக்க மாட்டாமை (மாற்றமும் தாராரோ) என்கிறார்கள். ஏதேனுமொருபடியால் இவள் பேச்சேயமையும்இவர்களுக்கு. A "துளம்படு முறுவல் தோழியர்க்கருளாள்" என்கிறபடியே இவளுடைய பேச்சு உஜ்ஜீவனமாய் தாரகமாயிறே இவர்களுக்கிருப்பது. தர்மபுத்ரன் 'க்ருஷ்ணனுக்கும் அர்ஜுநனுக் கும் என்புகுகிறதோ?' என்றஞ்சினவளவிலே, யுத்தத்தில் ஸ்ரீபாஞ்சஜந்யத்வனி கேட்டு தரித்தாப்போலே இவர்களுக்கு இவள் பேச்சு. உடம்பை க்ருஷ்ணனுக்குக் கொடுத்தால் பேச்சாகிலும் தரலாகாதோ? 4. "மதுரா மதுராலாபா கிமாஹ மம பாமிநீ"யிறே அங்கு செல்லுகிறது. கண்ணின் பட்டினி தீராதாகில் செவியின் பட்டினியாகிலும் தீர்க்கலாகாதோ?

'நீங்கள் பழியிடுகிறதென்? இங்கு அவனுண்டோ?' என்ன — (நாற்றத் துழாய்முடி) மாளிகைச் சாந்து உன்னுலொளிக்கப்போமோ? "அந்தியம் போதே வாசலைக் கைக்கொண்டீர்கள்; அவனுக்குப் புகுர வழியுண்டோ?" என்ன— (நாராயணன்) அவனுக்கு எங்களைப் போலே கதவு திறக்கப் பார்க்கவேணுமோ? புறப்படுகைக்கு வழிதேடுமத்தனையன்றோ?

(நம்மால்) வெறுமையே பச்சையாகவுடைய நம்மால், (போற்ற) குடிப் பிறப்பால் வந்தது: உபாயமல்ல. (பறைதரும்) 'இப்படி பெரியவன் நமக்குப் பறை தருமோ?' என்னில் "நாராயணனன்றோ; பறை தரும்" என்றுமாம். (புண்ணியனால்) 5. "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்".

---

(1) பெரிய திரு 2-7-2

(புண்ணியனால் பண்டொருநாள்) 'முன்பும் உன்னைப் போலே ஒருத்தனுண்டு தான் உணராதே படுத்தினான்' என்கை. (புண்ணியனால் கூற்றத்தின்வாய் வீழ்ந்த) A "கொடுவினைப்படைகள் வல்லையாய்" 1. "த3தோ ராமோ மஹாதேஜா:" என்று நீரிலே நெருப்பு எழுந்தாற்போலே சிறுகைக்குள்ள அருமை. (கும்பகரணனும்) பிராட்டியைப் பிரித்த ராஜத்3ரோஹியோடே கூட்டுகிறார்கள். அவன் ஒருத்தியைப் பிரித்துவைத்து உறங்கினான்; நீ ஊராகப் பிரித்து வைத்து உறங்குகிறாய். (தோற்றுமுனக்கேயித்யாதி3) ஸ்ரீ பரசுராமன் கையில் வில்லை, சக்ரவர்த்தித்திருமகன் வென்று வாங்கினாற்போலே கும்ப4கர்ணன் நித்3ரையை வென்று வாங்கிக் கொண்டாயோ?

(ஆற்ற அநந்தலுடையாய்) 'இனி கிடக்கில் த்3ரோஹிகளாவுதோம்' என்றஞ்சிப் புறப்பட்டு முகங்காட்டுவோமென்று உணர்ந்தபடி தெரிய "க்ருஷ்ண க்ருஷ்ண" என்றாள்; நீ உணரும்படி கண்டு வாழ அமையாதோ? (அருங்கலமே) இனித் தெளிவு கண்டனுப4விக்கவேணும். "ஹாரத்தைப் பண்ணினால் அதுக்குக் கல்லழுத்த வேண்டாவோ? இக்கோ3ஷ்டி2யை ஸநாத2மாக்காய்" என்றவாறே பதறிப் புறப்படப்புக — (தேற்றமாய் வந்து திற) மேலில் நிலங்களில் நின்றும் தடுமாறி விழாதே தெளிந்து திற. 2. "ஸா ப்ரஸ்க2லந்தீ" இத்யாதி3வத். 10.

## நாலாயிரப்படி—பத்தாம் பாட்டு

அவ:— பத்தாம் பாட்டு. (நோற்று) க்ருஷ்ணன் அசலகமாய் இடைச்சுவர் தள்ளிப் பொகட்டு ஒருபோகியாக அநுப4விக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

வ்யா:- (நோற்று) நோற்கக்கடவ நோன்பும் இவ்விரவிலே நோற்று, நோன்பின் ப2லமான க்ருஷ்ணனாகிற ஸ்வர்க்க3ம் உன் கை புகுந்ததாகாதே செல்லுகிறது? 3. "க்ருஷ்ணம் த4ர்மம் ஸநாதநம்" என்னுமாபோலே. ஆப4ாஸத4ர்மங்கள் இவளுக்கு அஞ்சிக் கைவிட்டதித்தனையிறே. இவளுக்கு ஸாத4நமான த4ர்மம் எம்பெருமானேயிறே. ஸாத4நாநுஷ்டா2நம் பண்ணாதே இவனே உபாயமென்று அறுதியிட்டால், ப2லத்தில் அந்வயிக்குமத்தனையிறே. 'அவனுடைய ஸ்வரூபத்தை உணர்ந்தார்க்கு யத்நம் பண்ண ப்ராப்தியில்லை. தன் ஸ்வரூபமுணர்ந்தார்க்கு யத்நம் பண்ண ப்ராப்தியில்லை. விரோதி4யினுடைய ப்ராப3ல்யத்தை உணர்ந்தார்க்கும் யத்நம்பண்ண ஸித்3தி4யில்லை. ப்ராப்யத்தினுடைய சீர்மையை உணர்ந்தார்க்கும் யத்நம்பண்ண ப்ராப்தியில்லை. இதரோபாயங்களுக்கும் அவனே வேண்டுகையாலே யத்நம்பண்ண ப்ராப்தியில்லை' என்றிருந்தாள். 4. விது3: க்ருஷ்ணம் ப்3ராஹ்மணாஸ் தத்த்வதோ யே தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தா:" B "செய்த வேள்வியர்" 3. "யே ச வேத3விதோ3 விப்ரா:" 5. "ஸ ஸர்வவித்3ப4ஜதி மாம் ஸர்வபா4வேந பா4ரத" 6. "க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே". ரக்ஷ்யரக்ஷகபா4வம் வ்யவஸிதமானால் ஜ்ஞானமேயிறே அவன் வேண்டுவது. "நாராயணனே நமக்கே பறைதருவான்" (1) என்கிறபடியே அவன் தலைக்கே ப4ரம் பொகட்டோமாகில் நமக்கு நீரிலேபுக்கு முழுக வேணுமோ? என்றிருக்

A திருவாய் 9-2-10. B திருவாய் 5-7-5.

கிறாளிவள். "இவர்களுக்கு உபாயமென்கிற ஶப்₃த₃த்தைக் கொண்டு உஜ்ஜீவிக்க லாமோ? உபேயத்துக்கன்றோ உபாயம்; ஸித்₃தோ₄பாய நிஷ்டர்க்கு விளம்ப₃ஹேது இல்லாமையால் ப்ராப்யத்திலே த்வரையில்லாதார் சேதநரன்று" என்று இருக்கிறார் களிவர்கள். "ஸித்₃தோ₄பாய நிஷ்டர்க்குக் கர்மம் கைங்கர்யத்திலே புக்குப்போம்; ஜ்ஞானம் ஸ்வரூபத்திலே புக்குப்போம்; ப₄க்தி ப்ராப்யருசியிலே புக்குப் போம். பேசாதேயிருக்க உபாயமுண்டோ? சிலர் மூழ்கி ஜோறகவும், சிலர் ப₂லம் அனுப₄ விப்பதாயோயிருப்பது; அழகிதாயிருந்தது உன்படி" என்கிறார்கள். அவர்கள் க்ருஷ்ணனோடே ப₂லம் புக்கிருக்கிலும், இக்கோ₃ஷ்டி₂யிலுள்ளார்க்குத்தனியே அநுப₄ விக்கை கைவல்யத்தோபாதி குடிப்பழி. (அம்மனாய்) ரக்ஷ்ய ரக்ஷகபா₄வம் மாறி நிற்கவோ பார்க்கிறது? அழகிதாக நிர்வாஹகையானாய்! (சுவர்க்கம் புகுகின்ற) ஸுக₂மநுப₄விக்கை. 1. "யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்க:" நிர்வாஹகையாயிருப்பாக குக் கண்ணுறங்க விரகுண்டோ? அநுப₄விப்பார் அநுப₄விப்பது இடையும் முலையு மொழியவோ? இவர்கள் பேச்சுக் கேட்டு ஈடுபட்டுப்பேசாதே கிடந்தாள். 2."ஸம்ஸ்ரவே மது₄ரம் வாக்யம்". 'பழியிடுவதே' என்று பேசாதேயிருக்கிறாளாகவுமாம்.

இவர்கள் பாடாற்றமாட்டாமை—(மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்) என்கிறார்கள். ஏதேனுமொருபடியான பேச்சேயாகிலும் அமையுமிவர்களுக்கு; படுகலை படித்தால் நாக்கு நனைக்கத் துளி தண்ணீரிடவுமாகாதோ? வாசலைச் செம்மினால் வாயையும் செம்மவேணுமோ? A "துளம்படுமுறுவல்" இவர்கள் ஜீவநம். 3. "ஆஶயா யதி₃ வா ராம: புநஶ்ஶப்₃த₃ாபயேதி₃தி". இவர்களுக்குப் புகுருங்கோளென்னவுமாம், போங்கோளென்னவுமாம். த₄ர்மபுத்ரன் "எம்பெருமானுக்கும் அர்ஜுனனுக்கும் என்புகுகிறதோ?" என்று அஞ்சுகிற யுத்₃த₄மத்₄யத்திலே, ஸ்ரீபாஞ்சஜன்யத்₄வநி கேட்டு த₄ரித்தாற்போலே இவர்களுக்கும் இவள்பேச்சு. உடம்பை க்ருஷ்ணனுக்குக் கொடுத்தால் எங்களுக்குப் பேச்சாகிலும் தரலாகாதோ? 4. "மது₄ரா மது₄ராலாபா கிமாஹ மம பா₄மிநீ" யிறே இங்கு செல்லுகிறது. நீயும் அவனும் வாழ்ந்து எங்களுக் குப் பரியட்டம் தருகிறபடியோ இது? நாங்கள் செய்தபடி செய்ய; உன் ப்ரீதிக்குப் போக்குவிட்டு த₄ரிக்க வேண்டாவோ? 5. "ஸுக₂மாஸ்ஸ்வ" 6."ரமஸ்வ ச". கண்ணின் பட்டினி தீரர்தாகில் செவியின் பட்டினி தீர்த்தாலாகாதோ?

"நீங்கள் பழியிடுகிறதென்? இங்கு அவனுண்டோ?" என்ன — (நாற்றத்துழாய் முடி) உன்னைப்போலே புறப்படாத தத்வமோ அவன் சூடின தத்வம்? B"விரை குழுவு நறுந்துளவம்". 'மாளிகைச் சாந்து உன்னாலே ஒளிக்கப்போமோ?' என்ன; "அந்தியம் போதே வாசலைக் கைக்கொண்டிகோள்; அவனுக்குப் புகுரவழியுண்டோ" என்ன— (நாராயணன்) அவனுக்கு எங்களைப் போலே கதவு திறக்கப் பார்த்திருக்க வேணுமோ? புகுகிறவழி தேடவேணுமோ? புறப்படுகைக்கு வழிதேடுமத்தனையன்றோ? விடாதார்க்குப் பேரன்றோ இது. உகவாதாரையும் விடாதவன், உகந்த உன்னை விடுமோ? நீ விலக்கிடாய், 7. "பதிம் விஶ்வஸ்ய" என்று அவன் அழகிதாகப் பொதுவாயிருந்தான். நாராயணதத்வத்துக்கு இன்று தொடங்கி நமஸ்காரம். 8. "கௌஸல்யா லோகப₄ர்த்தாரம்". "நாராயணனே நமக்கே பறைதருவான்" (1).

A பெரியதிரு 2-7-2. B திருவாய் 10-6-7.

என்று துணிந்தார்க்கு இப்படியோ? ரக்ஷகனுகவேண்டாவோ? 'பறைதரும்' என்று க்ஷேபம்.

(நம்மால்) வெறுமையே பச்சையாகவுடைய நம்மாலே. (போற்ற) குடிப்பிறப்பாலே வந்தது; உபாயமல்ல. (பறைதரும்) 'இப்படி பெரியவன் பறைதருமோ?' என்னில்; "நாராயணனன்றோ; போற்றுதார்பாடும் புக்கிருக்கிறவனன்றோ; தரும்" என்னவுமாம். (புண்ணியன்) 1. "க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம்". புண்ணியனுகையாவது — ஸர்வ விஷயத்திலும் தண்ணீர்போலே பொதுவாயிருக்கையாய்த்து. 'உன்படிகள் அழகிதாயிருந்தது' என்ன; பின்னேயும் அவன் பாசுரமாக ஒன்று பிறக்கக் காணுமையாலே அவனை விட்டு, 'இவள் நம்மிலே ஒருத்தியாய் ஒக்க நோன்பு நோற்று ஒக்க அநுப₄விக்க விருந்து, நம் திறத்தில் செய்தபடி சொல்லாதே, மாற்றுராய்ச் செல்லுவதே?' என்று அவளைத்திரியவெழுப்ப; 'திரியவும் நம்மைப் பிரித்தார்களாகில், நாம் பேசாதே கிடப்போம்' என்று அவள் வாய்திறவாதே கிடக்க, 'உறக்கத்துக்குக் கும்ப₄கர்ணனையும் ஜயித்தாயாயிருந்ததீ' என்கிறுர்கள் — (நம்மால் போற்றப் பறைதரும் புண்ணியன்) இடைப்பெண்களுக்கும் சென்று ஆஶ்ரயிக்கலாம்படியான த₄ார்மிகன். இவர்கள் அர்த்தி₂களாகையாவது — போற்றுகைபோலே. (புண்ணியனுல் பண்டொரு நாள் கூற்றத்தின் வாய்வீழ்ந்த) எல்லாரும் தண்ணீர் குடித்து உஜ்ஜீவிக்கிற ஏரியிலே கல்லைக்கட்டிக்கொண்டு விழுந்து சாவாரைப்போலேயும், விளக்கு விட்டில் போலேயும் சாவுகை. (பண்டொருநாள்) 'முன்பு உன்னைப்போலே ஒருத்தனுண்டுகாண் உணராதே படுத்தினுன்' என்கை. (புண்ணியனுல் கூற்றத்தின் வாய்வீழ்ந்த) A "கொடுவினைப்படைகள் வல்லையாய்", 2. "ததோ ராமோ மஹாதேஜா:" என்று நீரிலே நெருப்பு எழுந்தாற்போலே சீறுகைக்குள்ள அருமை. (கும்பகரணனும்) பிராட்டியைப் பிரித்த ராஜத்₃ரோஹியோடு கூட்டுகிறுர்கள். அவன் ஒருத்தியைப் பிரித்து உறங்கினுன். நீ ஊராரைப் பிரித்தன்றோ உறங்குகிருய். (தோற்றுமுனக்கே பெருந்துயில்தான் தந்தானே) ஸ்ரீ பரசுராமாழ்வான் கையில் வில்லை சக்ரவர்த்தித் திருமகன் வென்று வாங்கினுற்போலே, அவன் நித்₃ரையையும் வென்று வாங்கிக்கொண்டாயோ?

(ஆற்றவநந்தலுடையாய்) 'இனி கிடக்கில் த்₃ரோஹிகளாவுதோம்' என்றுஅஞ்சிப் புறப்பட்டு முகம் காட்டுவோம் என்று தான் உணர்ந்தபடி தெரிய, 'க்ருஷ்ண க்ருஷ்ண' என்றுள்; "எங்களுக்கு அங்கேபோய்த் துயிலெழுப்பாடவேணுமோ? நீ உணரும்படி கண்டு வாழ அமையாதோ?' — (அருங்கலமே) இனி தெளிவு கண்டு அநுப₄விக்கவேணும். "ஹாரத்தைப் பண்ணினுல் அதுக்குக் கல்லழுத்தவேண்டாவோ? இக்கோ₃ஷ்டி₂யை ஸநாத₂மாக்காய்" என்றவாறே, பதறிப்புறப்படப்புக — (தேற்றமாய் வந்துதிற) மேலில் நிலங்களிலே நின்றும் தள்ளம்பாறி விழாதே தெளிந்து வந்து திற. "ஊராகத்திரண்டு வந்து கிடக்கிறது. படுக்கையிலே கிடந்தபடியே வாராதே, ஸத₂ஸ்யையாய்த் திற" என்றுமாம். (அருங்கலமே) எம்பெருமானுரைப்போலே. 3. "மஹதா தபஸா" பெறலாமவளல்லள். தானே தன்னைப்பெறுமத்தனை, ஸ்ரீஜனகராஜன் திருமகளைப்போலே. (தேற்றம்) 4. ஸா ப்ரஸ்க₂லந்தீ" இத்யாதி₃. 10.

---

A திருவாய் 9-2-10.

## ஸ்வாபதே3ஶ வ்யாக்2யாநம்

அவ :— பத்தாம்பாட்டு. (நோற்றுஇத்யாதி3) இப்பாட்டில் உபாயநிஷ்டை2யை எழுப்புகிறார்கள்.

வ்யா :— (நோற்று) ஸித்3த4ஸாத4ந பரிக்3ரஹம்பண்ணி. (சுவர்க்கம்) ஸுக2ரூபமான ப்ராப்யத்தை. (புகுகின்ற) அநுப4விக்கிற, (அம்மனாய்) ஸ்வாமிநியானவளே! (வாசல்திறவாதார்—மாற்றமும் தாராரோ) த்வத3நுப4வவிரோதி4யான வாசலை — அஹங்காரத்தை நீக்கி எங்களை உன்னை அநுப4விப்பியாவிடிலும், நாங்கள் கேட்டு வாழும்படியான ஒரு வார்த்தையும் அரிதோ? அவன் எழுந்திருக்கவொட்டாவிடிலும் இருந்தவிடத்தேயிருந்து வார்த்தை சொன்னாலாகாதோ? என்று பா4வார்த்த2ம்.

'இப்போது அவன் இங்குஉண்டோ? ஏன் பழியிடுகிறிகோள்?' என்ன,— (நாற்றத்துழாய்முடி) 'இப்போது அவன் இங்கு இல்லாவிடில் இப்பரிமளம் ஏது?' என்ன; 'அவன் ஒருகாலணைக்க ஒன்பது குளிக்குப் பரிமளம் நிற்குமே' என்ன; 'கட்டுங் காவலுமான இடத்தே அவனுக்குப் புகுரப்போமோ?' என்ன, — (நாராயணன்) 'வேண்டுமிடத்தே ஆவிர்ப்பா4விக்கைக்கன்றோ அவனுடைய வ்யாப்தி' என்ன; (நம்மால் போற்றப் பறைதரும் புண்ணியனால்) நம்மாலே போற்றப்பட்டவனாய்க்கொண்டு புருஷார்த்த2ப்ரத3னான நாராயணனாலே.

(பண்டொருநாள் கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகரணனும் தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ) முன்பு ஒரு தமோபி4பூ4தமான காலத்திலே ம்ருத்யுவினுடைய வாயிலே விழுந்த தாமஸனான கும்ப4கர்ணனும், உன் துயிலுக்குத் தான் தோற்று, உனக்கே தன்னுடைய பெருந்துயிலையும் தானே தந்தானோ? இவ்விடத்திலே "கும்பகரணன்" என்கிறது — தமோகு3ணத்தை. தமோகு3ணந்தன்னையன்றியிலே இவளுக்கு உண்டான நித்3ரையைக் கண்டு இவளுடைய நித்3ராஜநகத்வஶக்திக்குத் தான் தோற்றுத் தன்னுடைய நித்3ராஜநகத்வஶக்தியையும் தந்தானோ? என்று ரஹஸ்யம். ஸாத்விகனான இவ்வதி4காரிக்கு நித்3ரையாவது — 1. "ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்த: பா3ஹ்யம் கிஞ்ச ந வேத3" என்கிறபடியே ஸ்வாநுப4வத3ஶையிலே இதரவிஷயங்கள் தோற்றாதிருக்கை.

இப்படி இவர்கள் சொன்னவாறே அவள் எழுந்திருந்து சோம்பல் முறிக்க— (ஆற்ற அனந்தலுடையாய்) மிகவும் சோம்பலையுடையவளே! சோம்பலாவது— வ்யாபாராந்தராக்ஷமதை. அத ஏவ, (அருங்கலமே) து3ர்லப4மான ஆப4ரணமே! "ஆற்றவனந்தலுடையாய், அருங்கலமே" என்கையாலே— 2. "கிமிவ ஹி மது4ராணாம்" என்கிறபடியே சோம்பல்முறிக்கையும் து3ர்லப4மான ஆப4ரணம் போலே அத்யாகர்ஷகமாயிருக்கிறது என்றுமாம். இவர்களாற்றாமையைக் கண்டு சடக்கென வந்து திறக்கப்புக, 'தேற்றமாய்வந்துதிற' என்கிறார்கள். 'நாங்கள் புறக்கட்டிலேயிருக்கிறோமாகையாலே, இருந்தபடியே வாராமே ஸத2ஸ்யையாய் வந்து திற' என்கிறார்கள். 'தேற்றமாய் வந்துதிற' என்கையாலே— இவ்வதி4காரிக்கும் லோககூர்ஹை வாராமல் லௌகிகாநுவர்த்தநம் கார்யமென்றதாய்த்து. 10.

## பதினோராம் பாட்டு

**கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து**
**செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்**
**குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே**
**புற்றர வல்குற் புனமயிலே போதராய்**
**சுற்றத்துத் தோழிமா ரெல்லாரும் வந்துநின்**
**முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்**
**சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டிநீ**
**எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய்.**

பதவுரை:— கற்றுக் கறவை—கன்றுபோலேயிருக்கும பசுக்களுடைய, பல கணங்கள்—பல கூட்டங்களையும், கறந்து—கறப்பவர்களாய், செற்றார்—எதிரிகளினுடைய, திறல் அழிய—பலம் அழிந்து போகும்படி, சென்று—(படையெடுத்துப்) போய், செருச் செய்யும்—போர் புரியுமவர்களாய், குற்றம் ஒன்று இல்லாத—ஒருவிதமான குற்றமு மற்றவர் களான, கோவலர்தம்—ஆயர்களுடைய (குலத்தில் பிறந்த), பொன் கொடியே — பொன் கொடிபோன்றவளே! புற்று அரவு அல்குல்—புற்றிலிருக்கும் பாம்பின் படம் போலேயுள்ள

---

## மூவாயிரப்படி பதினோராம் பாட்டு

அவ:—பதினோராம்பாட்டு, a எல்லாவற்றாலும் அபி$_4$ஜாதையாயிருப்பா ளொருத்தியை எழுப்புகிறார்கள். b ஆபி$_4$ஜாத்யத்தால் க்ருஷ்ணனோடு ஒப்பான் ஒருத்தி இவள்.

வ்யா;—c (கற்றுக்கறவை) d எல்லாம் d$_2$ தலைநாகுகளாயிருக்கை. e இதுக்கு ஹேது -- நித்யஸூரிகள் ப$_4$க$_3$வத்ஸ்பர்ஶத்தாலே பஞ்சவிம்ஶதிவார்ஷிகரா யிருக்குமாபோலே இப்பசுக்களும் க்ருஷ்ணஸ்பர்ஶத்தாலே கீழ்நோக்கிப் பிராயம்

---

பெ. அ. பதினோராம்பாட்டு (கற்று இத்யாதி$_3$). a "கோவலர் தம்பொற்கொடியே, புற்றரவல்குல் புனமயில்; செல்வப்பெண்டாட்டி" என்கிற பத$_3$ங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை (எல்லாவற்றாலும் இத்யாதி$_3$) 'எல்லாவற்றாலும்' என்றது-குலத்தாலும், ரூபத் தாலும், கு$_3$ணத்தாலும் என்றபடி. b குலாதி$_3$களால் இவள் ஶ்லாக்$_4$யையாயிருந்தாளேயாகி லும் இவர்கள் அவற்றையிட்டுச் சொல்லுவானென்? என்னில், அதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (ஆபி$_4$ஜாத்யத்தால் இத்யாதி$_3$) க்ருஷ்ணனோடொத்தவளாகையாலே கொண்டாடுகிறார்களென்று கருத்து.

c,d கன்றுகளான பசுக்களென்று ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் திருவுள்ளம்பற்றி, கன்றுகளா யிருக்கை இளமையைப்பற்றவென்று அருளிச்செய்கிறார் (எல்லாம் இத்யாதி$_3$) f க்ருஷ்ண ஸ்பர்ஶத்தால் இளமை வருகைக்கு ப்ரமாணபூர்வகம் த்$_3$ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார்

---

சி. அ. பதினோராம் பாட்டு (கற்றுக்கறவை) c கற்று — கன்று; கறவை—பசு; கன்றையுடைத்தான பசு என்றபடி.

---

ரு. அ. பதினோராம்பாட்டு (கற்றுக்கறவை) d$_2$ தலைநாகுகளாவன — தலையீற்றுக் கிடாரிகள் என்றபடி.

தம்ப$_3$ ப்ரதே$_3$ஶத்தையுடையவளாய், புனமயிலே—தன் நிலத்திலேயுள்ள மயில் போன்று இருப்பவளே! போதராய்—புறப்பட்டு வருவாயாக: சுற்றத்துத் தோழிமார் எல்லாரும்—(உனக்கு) உறவினரான தோழிகள் அனைவரும், வந்து—(சேர்ந்து) வந்து, நின் முற்றம் புகுந்து—உன்னுடைய மாளிகை முற்றத்திலே புகுந்து, முகில் வண்ணன் பேர்பாட — மேக வண்ணனான கண்ணபிரானுடைய திருநாமங்களைப் பாடியும், செல்வப் பெண்டாட்டி நீ—(எங்களுக்கு) எல்லாச் செல்வமுமாயிருக்கும் நீ. சிற்றாதே பேசாதே—அசையாமலும், பேசாமலும், உறங்கும் பொருள் எற்றுக்கு—உறங்கும் காரியம் எதற்காகவோ?

---

புகுகை, f 1. "ப$_4$வாமி த்$_3$ருஷ்ட்வா ச புநர்யுவேவ" என்று—ப$_4$க$_3$வத் ஸ்பர்ஶம் இளகிப் பதிக்கப் பண்ணுமிறே. (கணங்கள்பல) தனித்தனியே எண்ணிமுடியாமையன்றிக்கே, ஸமூஹங்களும் எண்ணிமுடியாது; g 2. "ரத$_2$குஞ்ஜர ஹய$_2$வாஜிமாந்" என்னுமாபோலே, "பல" என்னுமித்தனை. ஆத்மாக்களுக்குத் தொகையுண்டானாலிறே பசுக்களுக்குத் தொகையுள்ளது. h (கறந்து) i ஈஶ்வரன் ஒருவனுமே ஸர்வாத்மாக்களுக்கும் நியமநாதி$_3$களைப் பண்ணுமாபோலே, இடைச்சாதியில் i$_2$ மெய்ப்பாட்டாலே அடங்கக் கறக்கவல்ல ஸாமர்த்$_2$யம். j பாலும் நெய்யும்கொண்டு விநியோக$_3$மில்லாதபடி ஸம்ருத்$_3$த$_4$மாகையாலே j$_2$ முலைக்கடுப்புக் கெடக் கறந்து என்றுமாம்.

k (செற்றார்) l இவர்களுக்கு ஶத்ருக்களாகிறார்கள் — க்ருஷ்ணனுடைய பெருமை பொறாதவர்கள். m (திறலழிய) n "தேவர்களும் எனக்கெதிரன்று"

---

**பெ. அ.** (ப$_4$வாமி இத்யாதி$_3$) 1. "த்$_3$ருஷ்ட்வா ச" என்ற சகாரம் ஸ்பர்ஶத்தை ஸமுச்சயிக்கிறதென்று திருவுள்ளம். g எண்ணமுடியாமைக்கு த்$_3$ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (ரதே$_2$த்யா$_3$) 2 "ராஜா த$_3$ஶரதே$_2$ா நாம" என்றத்தால்-ரத$_2$ாதி$_3$கள் அர்த்த$_2$ஸித்$_3$த$_4$மாயிருக்கவும் 2. "ரத$_2$குஞ்ஜரவாஜிமாந்" என்கையாலும், மதுப்பு பூ$_4$ம்நியாகையாலும், அவை தனித்தனியும் க$_3$ணஶ:வும் அஸங்க்$_2$யேயங்களென்று கருத்து. h, i, j. "கறந்து" என்றதுக்கு இரண்டு வகையாலே தாத்பர்யம் காட்டுகிறார் (ஈஶ்வரன் இத்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே) i$_2$ 'மெய்ப்பாட்டாலே' என்றது - ஸ்வாப$_4$ாவிகதையாலே என்றபடி.

k,l ராஜாக்களுக்குப்போலே இடையர்களுக்கு ஶத்ருக்களுண்டாகைக்கு ப்ரஸக்தியேதென்ன அருளிச்செய்கிறார் (இவர்களுக்கு இத்யாதி$_3$) m,n திறலழியும்படியிருக்குமவர்களென்று ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் திருவுள்ளம்பற்றி, இவர்களுக்கு அப்படிப்பட்ட மிடுக்குண்டோவென்ன அருளிச்செய்கிறார் (தேவர்களும் இத்யாதி$_3$)

---

**சி. அ.** f$_2$ (இளகிப்பதிக்கை) பதிக்கப்பதிக்க இளகி வரும் பதா$_3$ர்த்த$_2$ம்போலே என்றபடி. e எல்லாம் தலைநாதகளாயிருக்குமோ? என்ன அருளிச்செய்கிறார் (இதுக்கு ஹேது என்று தொடங்கி) f ப$_4$க$_3$வத் ஸ்பர்ஶத்தாலே அப்படியாகக்கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (ப$_4$வாமி த்$_3$ருஷ்ட்வா ச) என்று. g$_2$ (வாஜிமாந்) என்றது பூ$_4$மாவிலே மதுப்பாய் அர்த்த$_2$ம். h,i இடையனுக்குக் கறக்கிறது ஓர் அதிஶயமோ? என்ன அருளிச்செய்கிறார் (ஈஶ்வரன் ஒருவனுமே) என்று. j$_2$ (முலைக் கடுப்புக் கெடக் கறந்து) என்றது — கறக்கிறவர்களுடைய ஸாமர்த்$_2$யத்திலே தாத்பர்யமுக்தம். அப்பசுக்களினுடைய பாலில் ஸம்ருத்$_3$தி$_4$யிலே தாத்பர்யமாகவுமாம். k செற்றார்—ஶத்ருக்கள். m திறல் — ப$_3$லம். o$_2$ செரு — யுத்$_3$த$_4$ம். n ஶத்ருக்களுடைய மிடுக்கைப்போக்குகைக்கு இவர்களுக்குத்தான் மிடுக்குண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (தே$_3$வர்களுமித்யாதி$_3$)

---

**ஆ. அ.** g$_2$ (வாஜிமாந்) இங்கு மதுப்பு பூ$_4$மாவிலே.

என்று இருக்கும் கம்ஸாதிகளுக்குப் புகுரவொண்ணாத n₂ மிடுக்கையுடையவர்கள். o (சென்று o₂ செருச்செய்யும்) எதிரிகள் வந்தால் பொருகையன்றிக்கே, இருந்த விடங்களிலே சென்று பொருகை. 1. ''அபி₄யாதா ப்ரஹர்த்தா ச'' என்று சக்ர வர்த்தித் திருமகனைப்போலே இவர்கள் வீரம்.

p (குற்றமொன்றில்லாத) q எடுத்துவரப் பார்த்திருக்கும் குற்றமில்லை; r கையில் ஆயுத₄ம் பொகட்டவர்களை எதிர்க்கும் குற்றமில்லை என்றுமாம். s அழியச்செய்யாநின்றார்களென்று க்ருஷ்ணனுக்கு முறைப்பட்டால் A ''செய் தாரேல் நன்றுசெய்தார்'' என்னும்படி பிறந்தவர்கள் என்றுமாம்; 2. ''ஸாது₄ ரேவ ஸ மந்தவ்ய:'' என்றிறே அவன்படி. t (கோவலர்தம் பொற்கொடியே) u 3. ''ஜநகாநாம் குலே கீர்த்திமாஹரிஷ்யதி மே ஸுதா'' என்னும்படியே ஊருக்காக ஒரு பெண்பிள்ளை. (பொற்கொடி) து₃ர்லபநீயமாயிருக்கையும், 4. ''பதிஸம்யோக₃ ஸுலப₄ம் வய:'' என்கிறபடியே ப₄ர்த்தாவாகிற கொழுகொம்பை யொழிய ஜீவியாமையும். B ''ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன் யான்'' என்றிறே இருப்பது.

v (புற்றரவல்குல்) தன்னிலத்தில் ஸர்ப்பம்போலே w ஒசிவையும் அகலத் தையுமுடைய அல்குலையுடையாய்! இவர்கள் x இத்தனை சொல்லுவானென்? என்னில்: 5. ''யா: ஸ்த்ரியோ த்₃ருஷ்டவத்யஸ்தா: பும்ப₄ாவம் மநஸா யயு:'' என்னும்படியே பெண்களை ஆண்களாக்கும் அழகிறே; 6. ''பும்ஸாம் த்₃ருஷ்டி சித்தாபஹாரிணம்'' என்று — அவன் ஆண்களைப் பெண்ணுடையுடுக்கப் பண்ணுமாபோலே. y (புனமயிலே) தன்னிலத்தில் மயில். க்ருஷ்ணனையும் தங்க ளையும் பிச்சேற்றவல்ல அளகப₄ாரத்தையுடையளாகை. z ''பொற்கொடியே''

---

பெ. அ. o,p,q '' ''குற்றமொன்றில்லாதே சென்று'' என்று கூட்டி அருளிச்செய்கிறார் (எடுத்து இத்யாதி₃) o₂,p,r, ''குற்றமில்லாதே-செருச்செய்யும்'' என்று அந்வயித்து அர்த்த₂ம் அருளிச் செய்கிறார் (கையில் இத்யாதி₃) s,t, ''கோவலர்'' என்றதோடே சேர்த்து மூன்றும் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அழிய இத்யாதி₃) s அழியச்செய்கையாவது-க்ருஷ்ணஸக்தியாலே ஸ்வேச் ச₂ாவிஹாரம் செய்து, மர்யாதைகளை அழிக்கை என்றபடி. 2. ''அபி சேத் ஸுது₃ராசாரோ ப₄ஜதே மாமநந்யப₄ாக் | ஸாது₄ரேவ ஸ மந்தவ்யோ ஸம்யக்₃ வ்யவஸிதோ ஹி ஸ: ||'' என்ற ஶ்லோகம் கண்டுகொள்வது. t,u ''கோவலர் பொற்கொடி'' என்னுமல், ''தம்'' என்று விசேஷிக்கைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஜநகாநாம் இத்யாதி₃)

w ஒசிவு - மார்த்த₃வம். v அல்குல்-ஜக₄நப்ரதே₃ஶம். x 'இத்தனை' என்றது - ''புற்றரவு'' என்றதை. y,z 'புனமயில்' என்றதுக்கு அவயவிஸாத்₃ருஶ்யம் சொல்லலாயிருக்க அளக ப₄ாரத்திலே ஒதுக்கினதுக்கு நியாமகம் காட்டுகிறார் (பொற்கொடி இத்யாதி₃)

---

சி. அ. n₂, t ''கோவலர்'' என்று மேலே ப₃ஹுவசநமாயிருந்தாலும், ''எல்லார்க்கும் வேத₃ம் போரும்'' என்றால் ஒரொருத்தருக்கும் குறைவற வரும் என்று காட்டுமாபோலே ஒரொருத்தரும் மிடுக்கர் என்றபடி. t, u 'கோவலர்' என்கிற ப₃ஹுவசனத்துக்குத் தாத்பர்யம் (ஜநகாநாம் குலே இத்யாதி₃)

---

ரு. அ. v ''அரவு'' என்று அல்குலுக்கு த்₃ருஷ்டாந்த பத₃ம்.

---

A பெரியாழ் திரு 4-9-2, B திருவாய் 10-10-3.

என்கையாலே ஸமுதா₃யஶோபை₄யைச் சொல்லிற்று; மேல் விஶேஷணத்₃வயத்தாலும் — அவயவஶோபை₄யைச் சொல்லுகிறது; a (போதராய்) b 1. "ஶோப₄ந் து₃ண்ட₃காரண்யம்" என்னும்படியே $b_2$ நாங்கள் $b_3$ நிறக்கும்படி புறப்படாய்.

'நான் புறப்பட எல்லாரும் வந்தாரோ?' என்ன, c (சுற்றம் இத்யாதி₃) d "சுற்றத்துத்தோழிமார்" என்கிறது—இவ்வூரடங்க இவளுக்கு உறவுமுறையாகையாலே. e (நின்முற்றம் புகுந்து) f 2. "உத்தரம் தீரமாஸாத்₃ய" என்கிறபடியே எங்களுக்கு ப்ராப்யமான முற்றத்திலே புகுந்து, இவர்களுக்கு ப்ராப்யமானபடி என்னென்னில்: A "முற்றம்புகுந்து முறுவல்செய்து நின்றீர்" என்றும், B "முற்றத்தூடு புகுந்து நின்முகம் காட்டி" என்றும் ஶேஷியானவனுக்கும் ப்ராப்யமான முற்றமாகையாலே, ஶேஷபூ₄தைகளான எங்களுக்குச் $f_2$ சொல்லவேணுமோ? புகுந்து கொள்ளப்புகுகிற கார்யமென்? என்ன; — g (முகில்வண்ணன் பேர்பாட) h நீ உகக்கும் அவனழகிலும் ஔதா₃ர்யத்திலும் ஈடுபட்டு அவன் திருநாமத்தைப் பாடச்செய்தேயும்.

i (சிற்றாதே $i_2$ பேசாதே) "முகில்வண்ணன்" என்றவாறே, அவ்வடிவை நினைத்துப் பேசாதேகிடந்தாள். (சிற்றாதே) சிற்றுதல்—சிதறுதல். உணர்ந்தமைக்கு அடையாளமான சேஷ்டையைப் பண்ணாதே. J இவள் சேஷ்டிதமும் வார்த்தையும் தங்கள் கண்ணுக்கும் செவிக்கும் போ₄க்₃யமாகையாலே இன்னாதாகிறார்கள். k (செல்வப் பெண்டாட்டி நீ) l உன்னோடு கூடுமது எங்களுக்கு எல்லா ஐஶ்வர்யமுமான நீ; m க்ருஷ்ணகு₃ணாநுஸந்தா₄நத்தாலே புஷ்கலையான நீ என்னவுமாம்.

---

பெ.அ. a,b "எற்றுக்குறங்கும் பொருள்" என்று சொல்லும் க்ரியையே அமைந்திருக்க, "போதராய்" என்றதுக்கு "பொற்கொடியே" இத்யாதி₃யைக் கடாக்ஷித்து பூ₄ர்வம் அருளிச்செய்கிறார் (ஶோப₄யந் இத்யாதி₃) $b_3$ 'நிறக்கும்படி' என்றது — 'உன்னோட்டைச் சேர்த்தியால் நாங்களெல்லாரும் விளங்கும்படி' என்கை.

c, d "சுற்றத்து" என்று விஶேஷிக்கையாலே — உறவில்லாத தோழிகள் வந்ததில்லை என்று தோன்றுகையால், பண்ணின ப்ரஶ்நத்துக்கு உத்தரமாகாமையாலே கருத்து அருளிச்செய்கிறார் (சுற்றத்து இத்யாதி₃) e, f "நின்" என்றதுக்குத் தாத்பர்யம் (உத்தரம் இத்யாதி₃) $f_2$ 'சொல்லவேணுமோ' என்ற அநந்தரம் "என்று இவர்களுக்குக் கருத்தாகையாலே" என்று ஶேஷம்.

i, j பேசாதே" என்றதையும் கூட்டித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இவள் இத்யாதி₃) k, l, m "செல்வமான" என்று கீழ் அருளிச்செய்து, "செல்வமுடையவள்" என்று விவக்ஷித்து யோஜநாந்தரம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணேத்யாதி₃)

---

சி.அ. $b_2$ (நாங்கள் நிறக்கும்படி) நாங்கள் ஸம்ருத்₃த₄ராம்படி. d "சுற்றத்துத்தோழிமார்" என்றது ப₃ந்து₄க்களான தோழியார் என்றபடி. g,h "முகில் வண்ணன்" என்றதுக்கு இரண்டு பொருள் — நிறமாய் அழகாதல், ஸ்வபா₄வமாய் ஔதா₃ர்யமாதல்; இரண்டையும் தந்த்ரேண அருளிச் செய்கிறார் (நீ உகக்கும் இத்யாதி₃) n (இங்கே கூடுபூரித்துக் கிடக்கிறதோ) க்ருஷ்ண ஸம்ஶ்லேஷம் உண்டாயிருக்கிறதோ என்றபடி.

---

A பெரிய திரு 10-8-5, B நாச்-திரு 2-9,

n "இங்கே $n_2$ கூடுபூரித்துக்கிடந்ததோ?" என்ன:—இல்லையாகில், o (எற்றுக்கு உறங்கும்பொருள்) p எங்கள்பாடே புறப்படாதே உறங்குகைக்கு ஒரு ப்ரயோஜநமுண்டோ? q A "அடியார்கள் குழாங்களை—உடன்கூடுவது என்றுகொலோ" என்று திரளோடே அநுப$_4$விக்கும் அநுப$_4$வத்தைவிட்டு, கைவல்யம் போலே கிடக்கிற கார்யமென்? என்னவுமாம். r (எற்றுக்கு உறங்கும் பொருள்) s உன்னுடைய உத்$_3$தே$_3$ஶ்யத்தைப் பாராதே, எங்களுடைய ஆற்றாமையைப் பாராதே, க்ருஷ்ணனுடைய நிரதிஶயபோ$_4$க்$_3$யதையைப் பாராதே $s_2$ எதுக்காகக் கிடக்கிறாய்? (11)

---

பெ. அ. n நான் புஷ்கலையாயிருக்க, இங்கே க்ருஷ்ணாநுப$_4$வம் நிறைந்து கிடக்கிறதோ? என்னும் ஶங்கையை அநுவதி$_3$க்கிறார் (இங்கே இத்யாதி$_3$) $n_2$ கூடு—த$_4$ாந்யமிருக்கிற க்$_3$ருஹ விஶேஷம். o,p 'உறங்கும் பொருள்—உறங்குகையாகிற அர்த்த$_2$ம், எற்றுக்கு?—எந்தப்ரயோஜநத்துக்கு?' என்று ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் விவக்ஷித்து, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எங்கள் இத்யாதி$_3$) q ப்ரஶ்ந ப்ரதிவசநரூபேண கீழ் ஒரு பா$_4$வம் அருளிச்செய்து, அப்படி ப்ரஶ்நமின்றியிலே பா$_4$வாந்தரம் அருளிச்செய்கிறார் (அடியார்கள் இத்யாதி$_3$) r, s "எற்றுக்கு" என்றதுக்கு அநேககோடி ஸ்மாரகத்வம் திருவுள்ளம்பற்றி மூன்றும் பா$_4$வம் அருளிச்செய்கிறார் (உன்னுடைய இத்யாதி$_3$) s 'உன்னுடைய உத்$_3$தே$_3$ஶ்யத்தை' என்றது—ததீ$_3$யரோடு கலக்கையையென்கை. 11.

---

சி. அ. இப்பாட்டுக்கு ஸ்வாபதே$_3$ஶம்—"ப$_4$க$_3$வத் ஸம்ப$_3$ந்த$_4$ம் விச்சே$_2$தி$_3$யாதே போந்த ஆசார்ய ஸந்தானப்ரஸூதர் நமக்குப் பூஜ்யர். அவர்களடியாக ப$_4$க$_3$வத்ஸமாஶ்ரயணம் பண்ணுகை ஸ்வரூபம்" என்று. (11)

---

கு. அ. r,$s_2$ எற்றுக்கு-ஏதுக்காக. s இந்தப்பத$_3$த்தை விவரிக்கிறார் (உன்னுடைய உத்$_3$தே$_3$ஶ்யத்தை) என்று தொடங்கி. (11)

---

## ஆறாயிரப்படி — பதினோராம்பாட்டு

அவ;— பதினோராம்பாட்டு (கற்றுக்கறவை). க்ருஷ்ணன் ஊருக்காக ஒருபிள்ளையாய் எல்லாராலும் கொண்டாட வளர்ந்தாற்போலே, ஊருக்காக ஒரு பெண்பிள்ளையாய், 1. "பதிஸம்யோக$_3$ஸுலப$_4$ம்" என்னும்படி பருவத்தையுடையளாய், 'அவனைப் பெறுகைக்கு நோற்பேன் நானோ? அவன்தானே வேணுமாகில் நோற்று வருகிறான்' என்று கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

வ்யா:— (கற்றுக்கறவை) கறக்கும் பருவமாயிருக்கச்செய்தே கன்றுநாகா யிருக்கை. முக்தர் பஞ்சவிம்ஶதிவார்ஷிகராய்க் கீழ்நோக்கி வயஸ்ஸுபுகுமா போலே, இவையும் இளகிப்பதித்திருக்கும். அவர்கள், பரத்வாநுஸந்தா$_4$நத்தாலே; இவை மநுஷ்யத்வே பரனான க்ருஷ்ணனுடைய ஸ்பர்ஶத்தாலே. முலைசரிந்தாரைப் பாராத ராஜகுமாரனைப்போலே, கன்றுமேய்க்கப்பெற்றால் பசுக்களைப்பாரான், B "கன்று மேய்த்தினிதுகந்த" C "திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" என்று- பசு மேய்த்து உகக்கும்; கன்றுமேய்த்து இனிதுகக்கும். ரக்ஷ்யவர்க்க$_3$த்திலே தன் கைகால் நீட்டமாட்டாதவர்களையிறே உகப்பது. கன்று மேய்க்கை ஒருதலையானால்

---

A திருவாய் 2-3-10, B திருநெடு 16, C திருவாய் 10-3-10.

பசுக்களும் நித்யஸூரிகள் ஸ்த2ாநேயாமித்தனை. A [காளாய்] அவற்றையும் இளகிப் பதிப்பித்து அவற்றேட்டை ஸம்ப3ந்த4த்தாலே தானும் இளகிப்பதித்திருக்கும், 1. ''வத்ஸமத்4யக3தம் ப3ாலம்'' என்னும்படியே. (கற்றுக்கறவை) 2. ''ப4வாமி த்3ருஷ்ட்வா ச புநர்யுவேவ''; சக்ரவர்த்தி இளகினுற்போலே. இவனுக்கு கண்ணழிக்கலாம்படி புக்கவிடத்தே புக்குப் புறப்பட்டவிடத்தே புறப்பட்டு இவனுக்கு முன்னேட்டுக் கொடுக்கவற்றய், இவனுக்கு ஒதுங்குகைக்கு நிழலாயிறேயிருப்பது. B, ''இட்டமான பசுக்கள்.'' (கணங்கள்பல) தனியே எண்ணமுடியாமையேயன்றிக்கே, ஸமூஹங்களும் எண்ணமுடியாது. 3. ''ராஜா த3ஶரதே2ா நாம ரத2குஞ்ஜரவாஜிமாந்'' என்னுமாபோலே பலவென்னுமத்தனை. (கணங்கள்பல) 4. ''நாரா:'' என்று-ஆத்ம ஸமூஹங்கள் பல, 5. ''ப3ஹூநாம்'' என்றும், C ''பற்பல்லாயிரமுயிர்'' என்றும் -ஆத்மாக்களுக்கு ஸங்க்2யையுண்டாகிலும். 6, ''ப3ஹவோ ந்ருப கல்யாணகு3ணா: 7. ''ப3ஹவோ து3ர்லப4ாஶ்சைவ''! D ''எண்ணில் பல்குணங்கள்'' என்று சொல்லுகிற ப4க3வத்3 கு3ணங்களுக்கு எல்லையுண்டாகிலும் இப்பசுக்களுக்கு எல்லையில்லை. (பலகறந்து) அநேகரித்விக்குகள் செய்யக்கடவ சடங்கை அதில் கூர்மையுடையவனெருவனே செய்யுமாபோலேயும், ப்3ராஹ்மணர் வேத3த்தையடைய அதி4கரிக்குமாபோலேயும், க்ஷத்ரியன் பருவம் நிரம்புவதற்கு முன்னே யுத்3த4த்திலே நிலவனுமாபோலேயும், ஈஶ்வரனெருவனுமே ஸர்வாத்மாக்களினுடையவும் கர்மாநுகு3ணமாக நாமரூபங்களைப் பண்ணி நியமநாதி3களைப் பண்ணுமாபோலேயும், பசுக்கள் அநேகமாகிலும் ஜாதியில் மெய்ப்பாட்டாலும் ஜாத்யுசிதவ்ருத்தியாகையாலும், ஒருத்தனே அடங்கக் கறக்கவல்ல ஸாமர்த்2யம். அரியது செய்யவல்ல குடியிலே பிறந்தோம் என்று, உன்னையல்லது அறியாத எங்களுக்கு அரியையாக ஒண்ணுதுகாண்!

(செற்றார்) இவர்களுக்கு ஶத்ருக்களாகிறர்-க்ருஷ்ணனுடைய மினுக்கம் பொறுதவர்கள். 8. ''ஶத்ரோஸ் ஸகாஶாத் ஸம்ப்ராப்த:'' என்று-ராவணஸகாஶத்தினின்றும் வந்தானென்னுதே, நம் எதிரியான பையல் ஓலக்கத்தினின்றும் வந்தானென்று அங்க3த3ப்பெருமாள் பேசினுற்போலே ஆண்டாளும் இவ்வூரில் ஸம்ருத்3தி4 பொறுதவர்களை ஶத்ருக்களென்கிருள்; ப4க3வத்ஸம்ருத்3தி4 பொறுதார் ப4ாக3வதர்களுக்கு ஶத்ருக்கள்; ப4ாக3வத ஸம்ருத்3தி4 பொறுதவர்கள் எம்பெருமானுக்கு ஶத்ருக்கள். இரண்டுமுண்டிறே கம்ஸனுக்கு. E ''தீயபுந்திக்கஞ்சன்'' இத்யாதி. F ''சாதுசனத்தை நலியும்.'' பாண்ட3வர்களுக்கு ஶத்ருக்கள் நமக்கு ஶத்ருக்களென்று, 9. ''த்3விஷத3ந்நம்'' என்றுனிறே க்ருஷ்ணன். இவள்தானும் G ''மாயனிராவணன்'' என்று-செவ்வைப்போரறியாத பையல் என்றருளிச்செய்தாள். (செற்றார்திறலழிய) ''ப4ஸ்மத4ாரியான ருத்3ரன், ப்3ராஹ்மணரைப்போலே ஒத்துச்சொல்லித்திரியும் ப்3ரஹ்மா, அப்ஸரஸ்ஸுக்களை மெய்க்காட்டுக்கொள்ளும் இந்த்3ரன், அந்யபரனுய்க் கிடந்து உறங்கும் ஈஶ்வரன், இவர்களடங்கலும் நமக்கெதிரோ?'' என்றிருக்கும் கம்ஸனுடைய மிடுக்கு அழிய. (சென்று செருச்செய்யும்) எதிரிகள் வந்தால் பொரவிருக்கையன்றிக்கே இருந்தவிடங்களிலே சென்று பொருகை.

A திருநெடு-16. B நாச்-திரு 14-1. C திருவாய் 3-2-6. D பெரிய திரு 5-7-2. E பெரியாழ் திரு 2-2-5, F திருவாய் 3-5-5. G நாச்-திரு 5-3.

1. ''அபி₃யாதா ப்ரஹர்த்தா ச'' என்ற சக்ரவர்த்தித் திருமகனைப்போலே இவர்கள் விரம். எதிரிகள் வந்து ஊரை அடைமதிள்படுத்த வெல்லுகை குற்ற மாறுற்போலே, நாங்கள்வரப் புறப்படாதேயிருக்கை உனக்குக் குற்றமன்றோ. ராஜாக்கள் எதிரிகளைத் தோற்பிக்கும்படி வ்யாபரித்தார்களேயாகிலும், அந்த:புரத் தில் வந்தால் எளியராயன்றோ இருப்பது. (குற்றமொன்றில்லாத) எடுத்துவரப் பார்த்திருக்கும் குறையில்லை; எதிரிகள் கையிலாயுத₄த்தைப் பொகடக் கொன்றார்க ளென்னும் குறையில்லை; அழியச்செய்யாநின்றார்களென்று க்ருஷ்ணனுக்கு முறைப் பட்டால் A ''செய்தாரேல் நன்று செய்தார்'' என்னும்படி பிறந்தவர்கள். (குற்ற மொன்றில்லாத கோவலர்) 2.''அபி சேத் ஸுது₃ராசாரோ ப₄ஜதே மாமநந்யபா₄க் । ஸாது₄ரேவ ஸ மந்தவ்யஸ் ஸம்யக்₃வ்யவஸிதோ ஹி ஸ:॥'' என்றிறே அவன் படி. 3. ''நிர்த்தோ₃ஷம் வித்₃தி₄ தம் ஜந்தும் ப்ரபா₄வாத் பரமாத்மந:'' என்னக்கடவதிறே. (கோவலர்தம் பொற்கொடியே) 4. ''ஜநகாநாம் குலே கீர்த்தி மாஹரிஷ்யதி மே ஸுதா'' என்கிறபடியே ஊருக்காக ஒரு பெண்பிள்ளை. த₃ர்ஶநீய மாய், உபக்₄நத்தோடே சேர்க்கவேண்டும்படியான அவஸ்தை₂யுமாயிருக்கை. 5. ''பதிஸம்யோகஸு₂லப₄ம்'' என்கிறபடியே. B [ஆவிக்கோர் பற்றுக்கொம்பு] உபக்₄நத்தையொழிய நிற்கவற்றோ கொடி? அவனையொழிந்தாலும் உங்களை யொழிய நிற்கமாட்டேனென்று சொல்லி வைப்புதியே; எங்களையுங் கூட்டிக்கொண்டு உனக்குக் கொள்கொம்பான க்ருஷ்ணனை அநுப₄விக்கப்பாராய். (புற்றரவல்குல்) புறம்பேபுறப்பட்டுப் புழுதியடைந்த உடம்பன்றிக்கே தன்னிலத்திலே வர்த்திக்கிற ஸர்ப்பத்தினுடைய பணமும் கழுத்தும்போலே ஒளியையும் அகலத்தையுமுடை நிதம்ப₃ ப்ரதே₃ஶத்தை உடையவளே! 6. ''பும்ப₄ாவம் மநஸா யயு:'' என்கிறபடியே ஸஜாதீயையான பெண்களும் நாயகஸமாதி₄யிலே சொல்லுகிறபடி பாரீர். 7. ''பும்ஸாம் த்₃ருஷ்டி சித்தாபஹாரிணம்'' என்று அவன் ஆண்களையும் பெண் ணுடையுடுக்கப் பண்ணுமாபோலே, பெண்களை ஆண்களாக்குகிறது இவளுடைய அல்குல். (புனமயிலே) தன்னிலத்திலே நின்ற மயிலினுடைய தோகைபோலே யிருக்கிற அளகபா₄ரத்தை உடையவளே! க்ருஷ்ணனையும் தங்களையும் பிச்சேற்ற வல்ல அளகபா₄ரத்தையுடையவள்; C ''தோகைமாமயிலார்கள்''. ''பொற்கொடி'' என்கையாலே—ஸமுதா₃யஶோபை₄; ''புற்றரவல்குல்'' என்று அவயவஶோபை₄, (போதராய்) எங்களை அவனோடே கூட்டவேண்டா; எங்களுக்கு தா₄ரகமாக நாலடி நடந்துகாட்டாய். (போதராய்) இவளை முன்னேபோகவிட்டு, இவள் நடையழகு கண்டு பின்னேபோகையிலேகாணும் ஆசை. (போதராய்) 8. ''ஶோப₄யந் த₃ண்ட₃ காரண்யம்'' என்கிறபடியே நாங்கள் நிறக்கும்படி புறப்பட்டு, புனத்தை மயில் சிறப் பிக்குமாபோலே, இந்த ஸ்த்ரீத்வத்தையும் சிறப்பியாய்.

'நான் புறப்பட, எல்லாரும் வந்திகோளோ?' என்ன—(சுற்றத்துத் தோழி மார்) இவ்வூரடங்க இவளுக்குத் தோழிமார்; இவ்வூரடங்க இவளுக்கு உறவு. இவளு

A பெரியாழ் திரு 4-9-2, B திருவாய் 10-10-3, C திருவாய் 6-2-2.

டைய ஸம்ப3ந்த4முடையார், இவள்தன்னைப்போலே அநந்யப்ரயோஜநைகளாய் A "இன்று வந்தித்தனையுமமுதுசெய்திடப்பெறில்" என்றிருக்குமவர்கள். (எல்லாரும் வந்து) உன்னையொழிய ஒரு ப்ரயோஜநமுண்டென்றிருக்கிலன்றே இவர்களுக்குக் கண் உறங்குவது. (நின்முற்றம்) ஒரு த்ரிபாத்3விபூ4தியிலுமிடமுடைத்தாயிருக்கை. (புகுந்து) 1. "உத்தரம் தீரமாஸாத்3ய" என்கிறபடியே ப்ராப்யஸ்த2லத்தே புகுந்து. இவர்களுக்கு ப்ராப்யமானபடியென்னென்னில்; B "முற்றத்தூடு புகுந்து" C "முற்றம் புகுந்து முறுவல்செய்து நின்றீர்". ஶேஷிக்கு ப்ராப்யமானது ஶேஷபூ4தனுக்கு ப்ராப்யமாகக் கேட்கவேணுமோ? C [முறுவல்செய்து] ஏகரூபமானவனையும் விக்ருதனுக்கும் முற்றம். 'புகுந்து கொள்ளப்புகுகிற கார்யமென்?' என்ன — (முகில் வண்ணன் பேர்பாட) 2. "மேக4ஶ்யாமம்" என்கிற வடிவழகையும், 3. "ஸ ஸர்வாநர்த்தி2நோ த்3ருஷ்ட்வா" D "எனக்கே தன்னைத்தந்த" என்ற ஔதா3ர்யத்தையும் சொல்லி நீ பாட, நாங்களும் உன்பக்கமே நின்று அத்தைப் பெறுகைக்காக, நீ உகக்கும் அவன் வடிவழகிலும் ஔதா3ர்யத்திலும் ஈடுபட்டுத் திருநாமத்தைப் பாடச்செய்தேயும்.

(சிற்றாதே பேசாதே) அவ்வடிவை நினைத்து அங்கங்களைப் பரிஸ்பந்தி3ப்புதல் வார்த்தைபேசுதல் செய்யாதே கிடக்க, இவள் சேஷ்டிதமும் வார்த்தையும் கண்ணுக்கும் செவிக்கும் போ4க்3யமாகையாலே 'கண்ணையுஞ் செவியையும் சேரப் பட்டினிகொள்ளவேணுமோ?' என்று இன்னாதாகிறார்கள். (செல்வப்பெண்டாட்டி நீ) உன்னை நீ பிரிந்து அறியாயே. உன்னோடே கூடுவதே எங்களுக்கு எல்லா ஐஶ்வர்யமான ந். உன்னுடைய உத்3தே3ஶ்யம் நீ கூடுபூரித்து வைத்தால் எங்களுக்கு உத்3தே3ஶ்யம் பெறவேண்டாவோ? 'இங்கே கூடுபூரித்துக் கிடக்கிறதோ?' — என்ன, (எற்றுக்குறங்கும் பொருள்) உள்ளு கூடுபூரித்ததில்லையாகில் எங்கள் ஆர்த்தத்4வநி கேட்டால் கண் உறங்குமோ? எங்கள்பாடே புறப்படாதே உறங்குகிறதுக்கு ஒரு ப்ரயோஜநமுண்டோ? E "அடியார்கள் குழாங்களை-உடன்கூடுவதென்றுகொலோ" என்றிருக்கும்படி அழகிதாயிருந்தது; அவனைத் தனியநுப4விக்கை கைவல்யமோக்ஷத்தோடு ஒக்குமத்தனை. F "தொண்டீரெல்லீரும் வாரீர்" என்றிருக்க வேண்டாவோ? (எற்றுக்குறங்கும் பொருள்) உன்னுடைய உத்3தே3ஶ்யத்தைப் பாராதே, எங்களுடைய ஆற்றாமையைப் பாராதே, க்ருஷ்ணனுடைய நிரதிஶய போ4க்3யதையைப் பாராதே, ஏதுக்காகக் கிடக்கிறாய்? (எற்றுக்குறங்கும் பொருள்) அவனை உகப்பிக்கப் பார்த்தாயாகில், அவனுடையாரையும் உகப்பிக்க வேணுங்காண். ஸ்வப்ரயோஜநமான கைங்கர்யத்தைக் காட்டில் ஒருவாசி கண்டிலோமே உனக்கு. உன்னையும் அவனையும் பொருந்தவிட நாங்கள்வேணும்; அவனைப் பிரிந்தவன்று, வ்ருத்தகீர்த்தநம் பண்ணி தரிப்பிக்கைக்கு நாங்கள் வேணும்; நீயும் அவனுமாக அநுப4வியாநின்றால் எடுத்துக்கைநீட்ட நாங்கள் வேணும், ஆனபின்பு எங்களையொழிய உனக்கு உறங்க விரகுண்டோ? 11.

A நாச்-திரு 9-7, B நாச்-திரு 2-9, C பெரிய திரு 10-8-5, D திருவாய் 2-7-11, E திருவாய் 2-3-10, F திருவாய் 5-2-2.

## ஈராயிரப்படி—பதினோராம்பாட்டு

அவ:—பதினோராம்பாட்டு—க்ருஷ்ணன் ஊருக்கொரு பிள்ளையானாற்போலே ஆபிஜாத்யமுடையளாய் ஊருக்கொரு பெண்பிள்ளையாயிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

வ்யா:—(கற்றுக்கறவை) கன்று நாகுகள் நித்யஸூரிகளைப்போலே பஞ்ச விம்ஶதிவார்ஷிகமாயிருக்கை. க்ருஷ்ணனுடைய ஸ்பர்ஶத்தாலே கீழ்நோக்கின வயஸ்ஸு புகுமித்தனை. ப்ரணயத்துக்கு மூலைபட்டாராகாதாப்போலே ஆகா தென்கை. 'கன்றுகளை ரக்ஷிக்கவென்று வ்யவஸ்தையுண்டோ?' என்னில்; A "கன்றுமேய்த்தினிதுகந்த காளாய்" என்றும், B "திவத்திலும் பசுநிரைமேய்ப்பு புவத்தி" என்றும் நித்யஸூரிகளிலும் பசு மேய்க்க உகக்கும். அவன் ஶரணாகதவத்ஸலனானால் ஶரணாகதவத்ஸலமாமித்தனையிறே. 1. "யதா தருணவத்ஸா" C "கறவாமடநாகு" 2. "ஶரணாகதவத்ஸல:" 3. "த்வயி கிஞ்சித்".

(கணங்கள் பல) நம்முடைய அனுத்தமகுணங்களும் அவனுடைய ஜ்ஞான ஶக்த்யாதிகுணங்களும்—நார ஶப்தத்திலே சொன்ன நாரங்களினுடைய ஸமூஹ மானாலும் எண்ணலாம், இவை எண்ணப்போகாது. 4. "ரதகுஞ்ஜரவாஜிமாந்" என்னுமாபோலே. (பல கறந்து) ஈஶ்வரன் ஒருவனுமே ஸர்வாத்மாக்களுக்கும் நியமனாதிகள் பண்ணுமாபோலே ஜாதியினுடைய மெய்ப்பாட்டாலே செய்ய வல்ல ஸாமர்த்யம்.

(செற்றார்) 5. "ஶத்ரோஸ் ஸகாஶாத் ஸம்ப்ராப்த:" என்ற அங்கதப்பெரு மாளைப்போலே இவ்வைஶ்வர்யம் காணப்பொறுதார் நமக்கு ஶத்ருக்களாயிருக்கிற படி. (திறலழிய) கம்ஸாதிகளை மறுமுட்டுப் பெறுதபடி கிழங்கெடுக்கைக்கு மிடுக் குடையார்கள் இவ்வூரார் என்கை. (சென்று செருச்செய்யும்) எதிரிகள் வந்தால் பொருகையன்றிக்கே இருந்தவிடங்களிலே சென்று பொருகை. (குற்றமொன்றில் லாத) எடுத்துவரப் பார்த்திருக்கும் குற்றமில்லை. கையிலாயுதம் பொகட்டால் எதிரியை நிரஸிக்கிற குற்றமுமில்லை. புகுவத் புகுவத விஷயங்களிலே குற்றம் செய்தாரை, அக்நீஷோமீயஹிம்ஸைபோலே பாராதே கொல்லவல்லார்களென்று மாம். (கோவலர்தம் பொற்கொடியே) ஜநகராஜன் திருமகள்போலே ஊருக்கொரு பெண்பிள்ளை. (பொற்கொடியே) தர்ஶனீயமாயிருக்கையும் கொள்கொம்பை யொழிய ஜீவியாமையும். கொடி தரையிலே கிடக்கலாமோ? ஒரு தாரகம் வேண்டாவோ? எங்களோடே கூடிநில்லாயென்கை. D "ஆவிக்கோர் பற்றுக் கொம்பு நின்னலாலறிகின்றிலேன் யான்."

(புற்றரவல்குல்) வெய்யிலடியுண்டு புழுதிபடைத்த அரவுபோலன்றிக்கே தன் நிலத்திலேவாழும் பாம்பின் படமும் கழுத்தும் போலேயிருக்கை. இத்தனை சொல்லலாமோவென்னில், பெண்ணைப் பெண் சொல்லுகிறதன்றோ? 6. "யாஸ் ஸ்த்ரியோ த்ருஷ்டவத்யஸ்தா: பும்பாவம் மநஸா யயு:" என்று; அவன் 7. "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரி"யானாற்போலே. (புனமயிலே) இது தன் நிலத்தில் நின்ற மயில்; க்ருஷ்ணனையும் தங்களையும் பிச்சேற்றவல்ல அளகபாரத்தை உடையளா

A திருநெடு-16. B திருவாய் 10-3-10. C பெரியதிரு 7-1-1, D திருவாய்10-10-3.

யிருக்கை. (போதராய்) 1. "ஶோப4யந் த3ண்ட3காரண்யம்" போலே எங்களை வந்து களிக்கப்பண்ணுய் என்கை. (சுற்றத்துத் தோழிமாரித்யாதி3) "நான் புறப்படுகைக்கு நீங்களெல்லோரும் வந்திகோளோ?" என்ன—2. "உத்தரம் தீரமாஸாத்3ய" என்னும்படியே எல்லாரும் வந்து ப்ராப்யதே3ஶமான உன் திருமுற்றத்தேவந்து புகுந்தது. A "முற்றம் புகுந்து முறுவல் செய்து நின்றீர்" என்றும், B "முற்றத்தூடு புகுந்து நின்முகங்காட்டிப் புன்முறுவல் செய்து" என்றும் ஶேஷியானவனுக்கும் ப்ராப்யமான உன் திருமுற்றம் ஶேஷபூ4தைகளான எங்களுக்கு ப்ராப்யமென்னச் சொல்லவேணுமோ? புகுந்து கொள்ளப்புகுகிற கார்யமென்னென்ன—(முகில் வண்ணன் பேர்பாட) உகக்கும் திருநாமங்களை நீ பாட, நாங்கள் உன் பக்ஷத்தே நின்று கூட்டம்பற்ற; நீ அவன் அழகிலே ஈடுபட்டுப்பாட உன்னீடுபாடுகண்டு நாங்கள் ஈடுபட்டுப்பாட.

(சிற்றுதே) சேஷ்டியாதே. கண்ணையும் செவியையும் பட்டினிவிடுவியா நின்றுய். (செல்வப்பெண்டாட்டி நீ) உன்னை நீ பிரிந்தறியாயே; உனக்குக் கூடுபூரித்திருந்ததென்றுமாம். (எற்றுக்குறங்கும் பொருள்) C "குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ" என்றிருப்பார் செய்வதோ இது? கைவல்ய மோக்ஷம் போலே தனி கிடக்கிற கார்யமன்றே என்று. 11.

## நாலாயிரப்படி — பதினோராம் பாட்டு

அவ:— பதினோராம் பாட்டு — க்ருஷ்ணன் ஊருக்கு ஒரு பிள்ளையானுற்போலே, ஆபி4ஜாத்யமுடையாளாய் ஊருக்கொரு பெண்பிள்ளையாயிருப்பாளொருத்தியை எழுப்புகிறுர்கள். 'அரியதைச் செய்யவல்ல குடியிலே பிறந்துவைத்து அரியதைச் செய்யாதேகொள்' என்கிறுர்கள்; எளியராக வேண்டுமிடத்திலே அரியராகவொண்ணுதே.

வ்யா:— (கற்றுக் கறவை) கன்றுநாகுகள். நித்யஸூரிகள் பஞ்சவிம்ஶதி வார்ஷிகராயிருக்குமாபோலே; அவர்கள் இப்படியிருக்கிறது எம்பெருமானை அநுஸந்தி4த்தன்றே; க்ருஷ்ணஸ்பர்ஶத்தால் வந்த தன்னேற்றம் பார்த்துக்கொள்ளுவது. கீழ்நோக்கி வயஸ்ஸுப்புகுமத்தனை. திருவாய்ப்பாடியில் கன்றுகளுக்கும் வாசி தெரியாது. பசுக்களுக்கும் வாசி தெரியாது. (கற்றுக்கறவை) 3. "ப4வாமி த்3ருஷ்ட்வா ச புநர்யுவேவ". ப்ரணயித்வத்துக்கு முலைபட்டாராகா தாப்போலே. 'கன்றுகளையே ரக்ஷிக்கவேணுமென்ருெரு வ்யவஸ்தை2யுண்டோ?' என்னில், D "கன்று மேய்த்தினிதுகந்த காளாய்" எனனுமாபோலே. E 'திவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி" நித்யஸூரிகளிலும் பசு மேய்க்க உகக்கும்; கன்றுமேய்க்கப்போனுல் பசுக்களும் நித்யஸூரிகளோடொக்கத் தள்ளுண்ணுமத்தனை. பசுமேய்க்க உகக்கும்; கன்றுமேய்க்க இனிதுகக்கும். அதாவது—ஸ்வரக்ஷணத்தில் அந்வயமில்லாதாரை உகக்குமென்றபடி. D [காளாய்] அவை இளகிப் பதிக்கத் தானுமிளகிப்பதிக்கும். 4. "ய: பூர்வ்யாய வேத4ஸே நவீயஸே ஸுமஜ்ஜாநயே விஷ்ணவே த3த3ாஶதி | யோ ஜாதமஸ்ய மஹதோ மஹிப்3ரவத் ஸேது3ஶ்ரவோபி4ர்யுஜ்யம் சித3ப்4யஸத் ||". F "மைந்தனை மலராள் மணவாளனை"

A பெரியதிரு 10-8-5. B நாச்-திரு 2-9, C திருவாய் 2-3-10. D திருநெடு 16.
E திருவாய் 10-3-10. F திருவாய் 1-10-4.

அவன் ஶரணாக3தவத்ஸலனானால் ஶரணாக3தவத்ஸலமாமித்தனையிறே. 1. "யதா2 தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம் ச2ாயா வா ஸத்த்வமநுக3ச்சே2த்" A "கறவாமடநாகு தன் கன்றுள்ளினாற்போல் மறவாதடியேனுன்னையே அழைக்கின் றேன்" 2. "அபி4த்வா ஶூர நோநுமோ து3க்3த4ா இவ தே4நவ:" 3. "ஶரணாக3தவத்ஸல:" கன்றிடுகிற முன்னாள் கோ3மூத்ரமாதல் சாணமாதல் புல்லிலேபடில் மோந்து பார்த்துக் காற்கடைக்கொள்ளும். பிற்றைநாள் கன்றிடில், அக்கன்று சாணத்திலும் கோ3மூத்ரத்திலும் புரண்டாலும் அதுதன்னையே போ4க்3யமாகக் கொண்டு நக்காநிற்கும். முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலே சூடும். 4. "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம" 5. "அப4யம் ஸர்வபூ4தேப்4யோ த3தா3மி".

(கணங்கள் பல) 6. "நாரா:" என்னுமாபோலே ஸமூஹங்கள் பலவென்னு மத்தனை. (பல) நாரஶப்3த3த்தில் நாரங்களினுடைய ஸமூஹங்களையும், அஸங்க்2யாதமான ப4க3வத்3 கு3ணங்களையும், அவற்றையுங்கூட வெல்லும்படி மலிவான நம்முடைய அநாத்மகு3ணங்களையும் எண்ணிலும் எண்ணப்போகாது; சொல்லும்போது 7. "ரத2குஞ்ஜரவாஜிமாந்" என்றாற்போலே பலவென்னுமத்தனை. B "கழியாரும் கன சங்கம்" இத்யாதி3. (பல கறந்து) ஈஶ்வரன் ஒருவனே ஸர்வாத்மாக்களுக்கும் நியமநாதி3களைப் பண்ணுமாபோலே ஜாதியினுடைய மெய்ப்பாட்டாலே செய்யவல்ல ஸாமர்த்2யம்.

(செற்றார்) 8. "ஶத்ரோஸ் ஸகாஶாத் ஸம்ப்ராப்த:" என்ற அங்க3த3ப் பெருமாள் போலே இவ்வைஶ்வர்யம் காண வேண்டாதார் தனக்கு ஶத்ருக்களாயிருக்கிறபடி. (திறலழிய) 'சுடுகாட்டுச் சாம்பலைப்பூசி எலும்பைப் பூண்டு திரியும் ருத்3ரனும், ஒத்துப் போம் ப்3ரஹ்மாவும், அந்யபரனாயிருக்கிற எம்பெருமானும், ஸாது4 இந்த்3ரனும் எனக்கு எதிரோ' என்றிருக்கும் கம்ஸாதி3கள் மறுமுட்டுப் பெருதபடி கிழங்கெடுக்கைக்கு மிடுக்குடையார் இவ்வூராரென்கை. (சென்று செருச்செய்யும்) எதிரிகள் வந்தால் பொருகையன்றிக்கே இருந்தவிடங்களிலே சென்று பொருகை. 9. "அபி4யாதா ப்ரஹர்த்தா ச". (சென்று) சக்ரவர்த்தித் திருமகனைப்போலே; ஊராகச் சக்ரவர்த்தித் திருமகனேடொப்பர்கள், வீரத்துக்கு. 'சென்று செருச்செய்கை எங்கே கண்டோம்?' என்னில், 'பசுமேய்க்கிறார் இரண்டிடையர் குவலயாபீட3த்தின் கொம்பைப் பிடுங்கி விளையாடாநின்றார்கள்' என்று கண்டோமிறே.

(குற்றமொன்றில்லாத) எடுத்துவரப் பார்த்திருக்கும் குற்றமில்லை. எதிரி கையில் ஆயுத4ம் பொகட்டால் எதிரியையும் ரக்ஷியாத குற்றமில்லை என்னவுமாம். 'இப்படி அழியச் செய்தார்கள்' என்று எம்பெருமானுக்கு முறைப்பட்டால் C "செய்தாரேல் நன்று செய்தார்" என்னும்படி பிறந்தவர்களென்னவுமாம். 10. "ஸாது4ரேவ ஸ மந்தவ்ய:" 11. "தோ3ஷோ யத்3யபி தஸ்ய ஸ்யாத்" D "குன்றனைய குற்றம் செயினும் குணங்கொள்ளும்" ப4க3வத3நுப4வமே தே3ஹயாத்ரையாயிருப்பார்க்கு அநீதிக்குப் பெரு த4ாரக நிலை நிற்கும்; வஸ்த்ராந்நபாநாதி3களோடொக்க ப4க3வத்3கு3ணங்களும் கலசி மாயிருப்பார்க்கு அநீதி பொறுக்கும்; அல்லாதார் அநீதி எம்பெருமானுக்கு அஸஹ்ய

A பெரியதிரு 7-1-1, B பெரியதிரு 6-9-2, C பெரியாழ்திரு 4-9-2 D முதல்திரு 41

ஸமாயிருக்கும்; 1. "நிர்தே3ாஷம் வித்3தி4 தம் ஜந்தும் ப்ரப4ாவாத் பரமாத்மந:" ப4க3வத்3 விஷயத்தில் ஓடி புகுராநிற்கையிறே ஒருவனுக்கு ஶுத்3தி4 யாவதென்கை. ஆஶ்ரிதருடைய தே3ாஷத்தை, கடலுக்குத் தொடுத்த அம்பை மருகாந்தாரத்திலே விட்டாற்போலே அசல் பிளந்தேற்றல், ப4க3தத்3த்தனுடைய அம்பை மார்விலே ஏற்றாற்போலே தான் அநுப4வித்தல், அதுதன்னையே புண்யமாகக் கொள்ளுதல் செய்யுமவன். (குற்றமொன்றில்லாத) 2. "அத்3யைவ த்வாம் ஹநிஷ்யாமி" 3. "ஹந்யா ஸமஹிமாம் பாபாம்" என்று சொல்லுகிறபடியே ப4க3வத்3ப4ாக3வத விஷயங்களில் குற்றம் செய்தாரை அக்3நீஷோமீய ஹிம்ஸைபோலே கண்பாராதே கொல்ல வல்லவர்களென்றுமாம். (கோவலர்தம் பொற்கொடியே) 4. "ஜநகாநாம் குலே கீர்த்தி ஸமாஹரிஷ்யதி மே ஸுதா" என்னுமாபோலே ஊருக்கொரு பெண்பிள்ளை. (பொற்கொடியே) த3ர்ஶநீயமாயிருக்கையும் கொள்கொம்பையொழிய ஜீவியாமையும். கொடி தரையிலே கிடக்கலாமோ? ஒரு த4ாரகம் வேண்டாவோ? பெண்களோடு கூடிக்கொண்டு நில்லாயென்கை. A "ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்யான்"

(புற்றரவல்குல்) பிடியுண்டு புழுதிபடைத்த அரவுபோலன்றியே தன் நிலத்திலே வாழும் பாம்பின் படமும் கழுத்தும் போலேயிருக்கை. இவர்கள் இத்தனை சொல்லலாமோ? என்னில்: பெண்களைப் பெண்கள் சொல்லுகிறதன்றோ; 5. யாஸ்ஸ்த்ரியோ த்3ருஷ்டவத்யஸ்தா: பும்ப4ாவம் மநஸா யயு:" அவன் 6. "பும்ஸாம் த்3ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்கிறபடியே ஆண்களைப் பெண்களாக்கும்; இவள் பெண்களை ஆண்களாக்கும். (புனமயில்) தன்னிலத்தில் மயில். கண்ணனையும் தங்களையும் பிச்சேற்றவல்ல அளகப4ாரத்தையுடையளாயிருக்கை. (போதராய்) 7. "ஶோப4யந் த3ண்ட3காரண்யம்" என்கிறபடியே எங்களை வந்து உள்தளிர்க்கப்பண்ணாய் என்கை. (போதராய்) உன்னுடைய அழகைக்காட்டி எங்களை உண்டாக்காய். இத்தால் சொல்லிற்றாய்த்து — ப4க3வத்ஸ்பர்ஶமுடையாருடைய தே3ஹகு3ணத்தோடு ஆத்மகு3ணத்தோடு வாசியற எல்லாம் ஆகர்ஷகமாயிருக்கிறதென்கிறது.

'நான் புறப்படுகைக்கு நீங்கள் எல்லாரும் வந்திகோளோ?' என்ன—(சுற்றத்துத் தோழிமாரெல்லாரும் வந்து நின் முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட) 8. "உத்தரம் தீரமாஸாத்3ய" என்னும்படி எல்லாருமே ப்ராப்யதே3ஶமான உன் முற்றத்திலே புகுந்தது. B "முற்றம்புகுந்து முறுவல் செய்து நின்றீர்" என்றும், C "முற்றத்தூடுபுகுந்து நின் முகங்காட்டிப் புன்முறுவல் செய்து" என்றும் ஶேஷியானவனுக்கு ப்ராப்யமான முற்றம்—ஶேஷபூ4தைகளான எங்களுக்கு ப்ராப்யமென்று சொல்ல வேண்டுமோ? "புகுந்து கொள்ளப்புகுகிற கார்யமென்" என்ன—(முகில் வண்ணன் பேர்பாட) நீ உகக்கும் திருநாமங்களைப்பாட, நாங்கள் உன் ஸந்நிதியிலே நின்று கூட ஏத்த; நீ அவனழகிலே ஈடுபட்டுப் பாடவும், நீ பாடும் பாட்டு கண்டு நாங்கள் ஈடுபட்டுப்பாட.

(சிற்றாதே) 'முகில்வண்ணன்' என்றவாறே வடிவை நினைத்து விடாய்கெடப் பேசாதே கிடந்தாள். (சிற்றாதே) சேஷ்டியாதே. அவர்கள் ஜீவனம். எங்கள் கண்ணையும்

A திருவாய் 10-10-3. B பெரியதிரு 10-8-5 C நாச்-திரு 2-9.

செவியையும் பட்டினிவிடுவியாநின்றாய். (செல்வப்பெண்டாட்டி நீ) உன்னை நீ பிரிந்தறியாயே? உன் கைங்கர்யம் கூடு பூரித்ததென்னவுமாம். (எற்றுக்குறங்கும் பொருள்) A "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ" என்றிருப்பார் செய்வதோ இது? இவ்வளவும் வந்தார்க்குத் தனித்து புகுவதநுபவம் பண்ணுவது குடிப்பழி. 'எனக்கு இங்கே கூடு பூரித்திருந்ததோ?' என்ன, 'இல்லையாகில் எங்கள் பாடு புறப்படாதே கைவல்யமோக்ஷம்போலே தனிக்கிடக்கிற கார்யமென்?' என்கிறார்களென்றுமாம்.

11.

## ஸ்வாபதேஶ வ்யாக்யாநம்—பதினோராம் பாட்டு

அவ:—பதினோராம்பாட்டு. (கற்று இத்யாதி) இப்பாட்டில் ஈஶ்வரனே உபாயோபேயமென்று அத்யவஸித்திருப்பார்க்கு மிகவும் ஆதரணீய விஷயமான அதிகாரிகளை எழுப்புகிறார்கள்.

வ்யா:—(கற்றுக்கறவை) ஸஸந்தாநரான ஶிஷ்யர். (கணங்கள் பல) அவர்களுடைய பலவான ஸமூஹங்களை. (கறந்து) அவர்களுடைய அபிநிவேஶாநுகுணமாக ஜ்ஞாநப்ரதாநம்பண்ணி.

(செற்றார் திறலழிய) செற்றாருண்டு—உபாயாந்தரபரரும், உபேயாந்தரபரரும்; அவர்களுடைய திறலுண்டு ஸ்வார்த்தபரதை, அழிய—நஶிக்கும்படி. (சென்றுசெருச் செய்யும்) தாங்களே விஜய யாத்ரையைப்பண்ணி அவர்களோடே வாதிக்கிற. (குற்றமொன்றில்லாத) பூர்வோத்தரபக்ஷங்களில் ஒன்றுமில்லாத. (கோவலர்தம்) "அவனே உபாயோபேயம்" என்று அத்யவஸித்திருக்குமவர்களுக்கு. (பொற்கொடியே) ஸ்ப்ருஹணீயமான பொற்கொடிபோன்ற திருமேனியை உடையவளே! ஜ்ஞாநவைஶத்யத்தை உடையவளே! என்றுமாம். (புற்றரவல்குல்) கீழ், பொற்கொடியென்று—பக்தியைச் சொல்லுகையாலே; அல்குலென்று—ஸ்வவிஷயத்திலே படிந்த பரபக்தியைச் சொல்லுகிறது. (புனமயிலே) அளகமென்று—ஸ்வாபதேஶத்தில் வ்யாமோஹத்தைச் சொல்லுகையாலே, வ்யாமோஹந்தான் இதரவிஷய வைராக்ய பூர்வகமாய், ஸ்வவிஷய விரஹாஸஹிஷ்ணுவான ப்ரேமரூபஜ்ஞாநமாகையாலே, "புனமயிலே" என்று—பரமபக்தியையுடையவளே என்கிறது. (போதராய்) நீ புறப்பட்டுவரவேணும்.

'நான் புறப்பட்டு வருகைக்கு நம்முடையவர்களெல்லாரும் வந்தார்களோ?' என்ன—(சுற்றத்துத் தோழிமாரெல்லாரும் வந்து) உனக்கு பந்துக்களாய், புகுவதந்யார்ஹ ஶேஷபூதரான பாகவதரெல்லாரும் வந்து, (நின்முற்றம்புகுந்து) பரமப்ராப்யமான உன்னுடைய திருமுற்றத்திலே புகுந்து. (முகில்வண்ணன்பேர்பாட) பரமோதாரனும் ஶ்ரமஹரமான வடிவையுடையவனுமான அவனுடைய திருநாமத்தை. நீ புறப்பட்டு வருவுதி என்றுபாட.

(சிற்றாதே பேசாதே) பரக்க ஒரு வ்யாபாரத்தையும் பண்ணாதே, வார்த்தையுஞ் சொல்லாதே. (செல்வப்பெண்டாட்டி) புகுவத்குணங்களை ஒருமடை செய்து புஜிக்கையாகிற ஸம்பத்தை உடைய நிருபாதிகபாரதந்த்ரியமுடையவளே! (நீ) இந்த ஸம்பத்து என்றும் மாறாமல் செல்லுகிற நீ. (உறங்கும்பொருள் எற்றுக்கு) உறங்குகிறதுக்கு ப்ரயோஜநம் ஏது? எங்களை அகற்றுகையே ப்ரயோஜநமோ? இன்னம் ஸம்ஸாரிகளைச் சேதநராக்குகையே ப்ரயோஜநமோ? சொல்லாய் என்கிறார்கள்.

இப்பாட்டில் ஜாத்யுசிதமான தர்மத்தை ஸாதநபுத்த்யாவன்றிக்கே கைங்கர்யபுத்த்யா அநுஷ்டித்தால் குற்றமில்லை என்கிறது, 'கற்றுக்கறவைக் கணங்கள் பலகறந்து குற்றமொன்றில்லாத' என்கையாலே.

11.

A திருவாய் 2-3-10.

## பன்னிரண்டாம் பாட்டு

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்தில்லஞ் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்
பனித்தலை வீழநின் வாசற் கடைபற்றிச்
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்
இனித்தா னெழுந்திரா யீதென்ன பேருறக்கம்
அனைத்தில்லத் தாரு மறிந்தேலோ ரெம்பாவாய்.

பதவுரை:— இளம் கற்று எருமை — இளங் கன்றுகளையுடைய எருமைகளானவை கனைத்து—(கறப்பாரில்லாமையாலே) கதறிக்கொண்டு, கன்றுக்கு இரங்கி—(தம்) கன்றுகளிடம் இரக்கங்கொண்டு, நினைத்து—அக்கன்றுகளை நினைத்து, முலைவழியே நின்று பால் சோர—(அந்நினைவின் முதிர்ச்சியாலே) முலைகளின் வழியாகப் பால் இடைவிடாமல் பெருக. இல்லம் நனைத்து—(அதனால்) வீடு முழுவதும் ஈரமாக்கி, சேறு ஆக்கும்—(துகைத்துச்) சேறாக்கும்படியிருப்பவனாய், நல் செல்வன்—க்ருஷ்ண கைங்கர்யமாகிற மேலான செல்வத்தை உடையவனானவனுடைய, தங்காய்—தங்கையே! தலை பனி வீழ—(எங்கள்) தலையிலே பனி பெய்யும்படியாக, நின் வாசல் கடை பற்றி— உன் வாசற்கடையைப் பிடித்துக்கொண்டு, தென் இலங்கை கோமானை — செல்வத்தையுடைத்தான இலங்கைக்கு அரசனான ராவணனை, சினத்தினால் செற்ற — (பிராட்டியைப் பிரித்தான்) என்னும் கோபத்தாலே கொன்றவனாய், மனத்துக்கு இனியானை—மநஸ்ஸுக்கு இனிமையைத் தருமவனான இராமபிரானை, பாடவும்—(நாங்கள்) பாடியபோதிலும், நீ வாய்திறவாய் — நீ வாய் திறந்து பேசுகிறாயல்லை; இனித்தான்—இனியாவது, எழுந்திராய்—எழுந்திருப்பாயாக; ஈது என்ன பேருறக்கம்—இது என்ன பெருந்தூக்கம்? அனைத்து இல்லத்தாரும்—(ஆய்ப்பாடியிலுள்ள) எல்லா வீட்டினராலும், அறிந்து—(உன்னுடைய பெருந்தூக்கம்) அறியப்பட்டுவிட்டது.

---

## மூவாயிரப்படி—பன்னிரண்டாம்பாட்டு

அவதாரிகை:— பன்னிரண்டாம்பாட்டு. a க்ருஷ்ணனைப் பிரியாதே இளைய பெருமாளைப்போலேயிருப்பானொருவன் தங்கையாகையாலே ச்லாக்யையாயிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

வ்யா:— b (கனைத்து) c கறப்பாரில்லாமையாலே முலைகடுத்துக் கதறுகை. d (இளங்கற்றெருமை) e இளங்கன்றாகையாலே e$_2$ பாடாற்றமாட்டாமை.

---

பெ. அ. பன்னிரண்டாம்பாட்டு. (கனைத்து இத்யாதி$_3$) a "நற்செல்வன் தங்காய்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகையிடுகிறார் (க்ருஷ்ணனை இத்யாதி$_3$) b, c, s "நற்செல்வன்" என்றதைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கறப்பார் இத்யாதி$_3$) d, e இளசான கன்றையுடைத்தான எருமையென்று சப்$_3$த$_3$ார்த்த$_2$ம் விவக்ஷித்து, இளங்கன்றையிட்டு விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இளங்கன்று இத்யாதி$_3$) e$_2$ பாடாற்றமாட்டாமை — க்லேசம் பொறுக்கமாட்டாமை. f வ்யாக்$_2$யாதா ஈடுபடுகிறார்

---

சி. அ. பன்னிரண்டாம்பாட்டு. (கனைத்து) d, e இளங்கற்று—இளங்கன்று.

---

கு. அ. பன்னிரண்டாம்பாட்டு. (கனைத்திளங்கற்று இத்யாதி$_3$) b கனைத்து — கன்றின் விஷயமான ஆத$_3$ரத்தாலே கூப்பிட்டு.

(கன்றுக்கு இரங்கி) தன்முலைக்கடுப்புக் கிடக்க, ''கன்று என்படுகிறதோ!'' என்று இரங்கி. f எம்பெருமான் ஆஶ்ரிதவிஷயத்திலிருக்கும்படிக்கு நித3ர்ஶநமிறே. g இத்தால் சொல்லிற்றாய்த்து — g2 அவன் எருமைகள் கறவாவிட்டால் அவை படும் பாட்டை நாங்கள் உன்னாலே படாநின்றோமென்கை. h (நினைத்து முலை வழியே இத்யாதி3) கன்றை நினைத்து i பா4வநாப்ரகர்ஷத்தாலே முலையிலே வாய்வைத்ததாகக்கொண்டு பால்சொரியாநிற்கும். j (முலைவழியே) k கைவழி தவிர. (நின்று பால்சோர) l நினைவு மாறாமையாலே, திருமலையில் திருவருவி கள்போலே, பால் மாறாதே சொரிகை. m இவன் எருமை கறவாதொழிவானென்? என்னில் — இளையபெருமாள் க்ஷத்ரியத4ர்மமான அக்3நிகார்யத்துக்கு உறுப்பா மன்றிறே, இவன் எருமைகள் விட்டுக் கறப்பது; n அதுவென்னென்னில்: o 1. ''ந தே3வலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே'' என்னுமாபோலே, க்ருஷ்ணனைப் பிரிய க்ஷமனல்லாமையாலே; p 2. ''பரித்யக்தா மயா லங்கா'' என்னும்படியாலே ப்ராப்யவிரோதி4களில் நசையற்றபடியாகவுமாம். q (நனைத்து q2 இல்லம் சேறாக்கும்) r பாலின் மிகுதியாலே அகம்வெள்ளமிடும்; அத்தாலே துகையுண்டு சேறாகும்; இத்தால்—சேறாகையாலே புகுரவொண்கிறதில்லை யென்கை. s (நற்செல்வன்) தோற்றி t மாயும் ஸம்பத்தன்றிக்கே நிலைநின்ற ஸம்பத்து.

---

பெ.அ. (எம்பெருமான் இத்யாதி3) g முலைகடுத்துக் கறக்கையைச்சொல்லுகைக்கு ப்ரக்ருதோப யோக3ம் காட்டுகிறார் (இத்தால் இத்யாதி3) g2 (அவன்) என்றது—நற்செல்வனை. h, i நினைவை விவரியாநின்றுகொண்டு மேலுக்கு ஹேதுவானமையைக் காட்டுகிறார் (பா4வநேத்யாதி3) n (அதுவென்னென்னில்) என்றது — ஸ்வத4ர்மமான கறக்கையை விட்டு க்ருஷ்ணனைப் பின் செல்லுகைக்கு ஹேதுவென்னென்னில் என்றபடி. q, r ''இல்லம் — நனைத்து — சேறாக்கும்'' என்று அந்வயித்து ஹேதுபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பாலின் இத்யாதி3) t மாயும் — நசிக்கும், u, v க2நித்ரபிடகாத4ரராய்க்கொண்டு எழுந்தருளுகிற இளையபெரு மாளை 3. ''லக்ஷ்மிஸம்பந்ந:'' என்கையாலே கைங்கர்யமே லக்ஷ்மியென்று விவக்ஷித்து,

---

(கைவழிதவிர) என்றது.
சி.அ. j, k 'முலை வழியே' என்ற ஏவகாரத்துக்குத் தாத்பர்யம் அதாவது—கையாலே பீச்சுகையன்றிக்கே தன் கடைவழியே வழிய என்றபடி. h (நினைத்து) என்றது—கன்று முலையிலே வாய் வைத்ததாக நினைத்து என்றபடி. l (நினைவுமாறாமையாலே) என்றதுக்கு ''கன்றினிடத்திலுண்டான'' இதி ஆதி3:, m (இவன் எருமை கறவாதொழிவா னென்? என்னில்) என்றதுக்குத் தாத்பர்யம் ஜாத்யுசிதமுமாய், ஹிதமுமாய், புருஷார்த்த2மு மானத்தை அனுஷ்டி2யாதொழிகிறது என்? என்றபடி. o, p இதுக்குப் பரிஹாரம் (நதே3வ) என்றதும், (பரித்யக்தா) என்றதும். அதாவது ஒன்றுக்கு ப்ராபகாபா4ஸங்களை விட்டபடி. இவ்வர்த்த2த்3வயத்தாலும் இரண்டாம் தாத்பர்யத்துக்கு ப்ராப்யாபா4ஸங்களை விட்டபடி. அநந்யோபேயத்வத்துக்கும் விரோத4மாகையாலே ப2லித்தது அநந்யோபாயத்வத்துக்கும் தவிர்ந்தான் என்றபடி. q2 இல்லம் — அகம்.

அதாகிறது—க்ருஷ்ணன் திருவடிகளில் நிரந்தரஸேவை. u 1. "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" என்கிறபடியே கைங்கர்ய லக்ஷ்மியிறே இவ்வாத்மாவுக்கு நிலை நின்ற ஸம்பத்து. v 1. "லக்ஷ்மிஸம்பந்ந:" என்றது, A "ஊரும் நாடுமுலகமுந் தன்னைப்போல்" என்கிறபடியே—தன் வைஷ்ணவஶ்ரீயாலே ஜக3த்துக்கடைய வைஷ்ணவத்வமுண்டாம்படியிருக்கை. w (தங்காய்) x கு3ணஹாநிக்கு 2. "ராவணஸ்யாநுஜோ ப்4ராதா" என்னுமாபோலே $x_2$ கு3ணத்துக்குத் தமையனில் தன்னேற்றமுடையளென்கை.

y (பனித்தலைவீழ நின் $y_2$ வாசல் கடைபற்றி) z மேல் வர்ஷம் வெள்ளமிட, கீழ் பால் வெள்ளமிட, நடுவு மால் வெள்ளமிட நின்றநிலையாகையாலே, தெப்பம் பற்றுவாரைப்போலே நின்வாசற்கடையில் தண்டியத்தைப்பற்றிக் கிடக்கிற இந்த து4ர்மஹாநி அறிகிறிலை.

இப்படிச் சொன்னவிடத்திலும் இவர்கள் படும் அலமாப்புக் காண்போமென்று பேசாதே கிடக்க;—(சினத்தினால்) a 'பெண்களைத் $a_2$ தீராமாற்றாக நெஞ்சாரல் பண்ணும் க்ருஷ்ணனையொழிய, பெண்பிறந்தார்க்குத் தஞ்சமான சக்ரவர்த்தித்திருமகனைச் சொல்லுவோம் இவள் எழுந்திருக்கைக்காக' என்று ராமவ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறார்கள்:—(சினத்தினால்) b தண்ணீர்போலேயிருக்கிற சக்ரவர்த்தித்திருமகனுக்கும் சினமுண்டோ? என்னில்:—c ஆஶ்ரித

---

பெ. அ க்ருஷ்ணஸேவை நற்செல்வமானமையை உபபாதிக்கிறார்; "லக்ஷ்ம்யா ஸம்பந்ந:—ஸம்யக் ஸஹித:" என்றாய், ஸம்யக்த்வத்தை உபபாதி3க்கிறார் (லக்ஷ்மிஸம்பந்ந இத்யாதி3) w, x "நற்செல்வன்" என்றதுக்கு க்ருஷ்ணனிடத்தில் ப4க்தியாலே கைங்கர்யம்பண்ணுமவனென்று அர்த்த2மாகையாலே அவனுக்குத் தங்கையென்று இவளைச் சொல்லுகையாலே புருஷனிற்காட்டில் ஸ்த்ரீக்கு ப்ராவண்யம் பள்ளமடையாகையாலே அவனில் ஏற்றமுடையவளே என்று விவக்ஷித்து த்3ருஷ்டாந்தபூர்வகம் அருளிச்செய்கிறார் (கு3ணஹாநிக்கு இத்யாதி3) $x_2$ கு3ணத்துக்கு—ப்ராவண்யரூபகு3ணத்துக்கு.

y, z "தலையிலே பனி விழுகையாலே நின்வாசல் கடையைப் பற்றி" என்று ஶப்3த3ஸ்வாரஸ்யம் விவக்ஷித்து "பால்சோர" என்றதைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (மேல் இத்யாதி3)

a 'தங்களுக்கு உத்3தே3ஶ்யமான க்ருஷ்ணனைப் பாடவும்' என்னுதே, சக்ரவர்த்தித் திருமகனைச் சொல்லுவானென்னென்ன, அருளிச்செய்கிறார் (பெண்களை இத்யாதி3) $a_2$ (தீரா மாற்றாக) என்றது—மாற்றாலே—ப்ரதிக்ரியையாலே தீராதபடியாக என்றபடி. b 3. "ந க்ருத்4யத்யபி4ஶப்தோऽபி க்ரோத4நீயாநி வர்ஜயந்" என்னும் ப்ரமாண ப்ரஸித்3தி4யைப்பற்ற ஶங்காநுவாத3ம் (தண்ணீர் இத்யாதி3) c, d ஆஶ்ரித ஶத்ருக்களிடத்தில்

---

சி. அ $y_2$ வாசற்கடை—வாசல் தலை; வாசல்கடைபற்றி—சுவரின் மேலே நாட்டின கொம்பைப் பிடித்துக்கொண்டு என்றபடி.

---

A திருவாய் 6-7-2.

ஶத்ருக்கள் இவர்க்கும் ஶத்ருக்களிறே; d 1. "ததோ ராமோ மஹாதேஜா: ராவணேந க்ருதவ்ரணம் I த்₃ருஷ்ட்வா ப்லவகு₃ஶார்த்₃தூ₃லம் கோபஸ்ய வஶமேயிவாந் II" e மஹாராஜர்க்குச் சீற்றம் பிறந்தபோது வாலியை எய்தார்; அவரழுதபோது கூட அழுதாரிறே. f 2. "த்₃விஷத₃ந்நம் ந போ₄க்தவ்யம்" என்றிறே இருப்பது. g (தென்னிலங்கைக் கோமானை) h 3. "யத்₃யத₄ர்மோ ந ப₃லவாந் ஸ்யாத₃யம் ராக்ஷஸேஶ்வர: I ஸ்யாத₃யம் ஸுரலோகஸ்ய ஸஶக்ரஸ்யாபி ரக்ஷிதா II" என்று திருவடி மதித்த ஐஶ்வர்யத்தையுடையவனை. i (செற்ற) j ஓரம்பாலே தலையைத் தள்ளிவிடாதே படையைக் கொன்று, தேரை அழித்து, ஆயுத₄ங்களை முறித்து, j₂ A "தான்போலும்" இத்யாதி₃ A கோன்போலுமென்றெழுந்து கிளர்ந்துவந்த மானத்தையழித்து நெஞ்சாரல் பண்ணிக் கொன்றபடி.

(மனத்துக்கினியானை) B "வேம்பேயாக வளர்த்தாள்" என்னும்படியே—பெண்களைப் k படுகுலையடிக்கும் க்ருஷ்ணனைப்போலன்றிக்கே, ஏகதா₃ரவ்ரதனுமிருக்கை; பெண்களை l ஒடியெறிந்து துடிக்க விட்டுவைத்துப் பின் இரக்கமுமின்றிக்கேயிருக்கும் க்ருஷ்ணனையொழிய 4. "ஸஞ்ஜாதபா₃ஷ்ப: பரவிரஹந்தா" என்று - ஶத்ருக்களுக்கும் கண்ணநீர்பாயுமவனை என்றுமாம். m (பாடவும் நீ வாய்திறவாய்) n C "கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்" என்று நம்மை நலியும் க்ருஷ்ணனுடைய பேரைக் காற்கடைக் கொண்டு, 5. "இத உபரி ம்ருத ஸஞ்ஜீவநம் ராமவ்ருத்தாந்தம்" என்னும்படியே க்ருஷ்ண விரஹத்தாலே கமர் பிளந்த நெஞ்சு பதஞ்செய்யும்படியான சக்ரவர்த்தித்திருமகனைப் பாடச்செய்

---

பெ. அ. c, d ஆஶ்ரிதஶத்ருக்களிடத்தில் இவர்க்குச் சினமுண்டென்னுமதுக்கு, திருவடியை நலிந்த ராவணனிடத்தில் கோபம்பண்ணினுரென்னும் ப்ரமாணத்தைக் காட்டுகிருர் (தத இத்யாதி₂) e ஆஶ்ரிதவிரோதி₄களிடத்தில் கோபமுண்டென்னுமதுக்கு உதா₃ஹரணம் காட்டுகிருர் (மஹாராஜர் இத்யாதி₃) g, h "தென்" என்று — அழகாய், ஸ்ப்ருஹணீயமாகையாலே. ஐஶ்வர்யத்தைக் காட்டுகையால், அத்தை ப்ரமாணபூர்வகம் அருளிச்செய்கிருர் (யத்₃யத₄ர்ம இத்யாதி₃) i, j "சினத்தினால்" என்று ஸம்ப₃ந்தி₄ ஸம்ப₃ந்தி₄களளவும் கோபம் விவக்ஷிதமாகையாலே "செற்ற" என்றதுக்கு அத்தைப்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (ஓரம்பாலே இத்யாதி₃)

k 'படுகுலையடிக்கும்' என்றதுக்கு D "கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக் கடைக்கணித்து" இத்யாதி₃ப்படியே பெண்களனைவர்க்கும் ஆசையுண்டாக்கி ஸம்ஶ்லேஷியாமல் பா₃தி₄க்கும் என்றபடி. l ஒடியெறிகை — காட்டுவழியே வேடர் மரத்தைத் தள்ளுகையாதல், பாதிமரத்தை அர்த்த₄ஜீவனுக்கி விடுகையாதல். இத்தால் — க்ருஷ்ணன் தங்களை வஶீகரித்து ஸம்ஶ்லேஷியாமல் துடிக்கவிடுவனென்று கருத்து. m, n "பாடவும்" என்ற சகாரம் — ப்ராத₄ந்யத்திலேயாய் அந்த ப்ராத₄ந்யத்தை வ்யாவ்ருத்திபூர்வகம் அருளிச்செய்கிருர்

---

சி. அ. c, d, e, f 'ஆஶ்ரிதஶத்ருக்களைத் தனக்கு ஶத்ருக்களாக நினைத்திருக்குமோ?' என்ன உதா₃ஹரணத்ரயம் அருளிச்செய்கிருர் (ததோ ராமோ மஹாதேஜா இத்யாதி₃) j₂ (தான் g, h "தென்" என்றதுக்குப் பொருள் (யத்₃யத₄ர்மோ ந ப₃லவாந் இத்யாதி₃)

---

A. பெரிய-திரு 4-4-6 B நாச்-திரு 13-7 C திருவாய் 9-5-8 D பெரு-திரு 6-3.

தேயும். (நீ வாய்திறவாய்) o நீ வாய்திறக்கிறிலை; p ப்ரீதிக்குப் போக்குவிட வேண்டாவோ ?

(இனித்தானெழுந்திராய்) எங்களாற்றுமை அறிவித்த பின்பும் உறங்கக்கட வையோ? எழுந்திராய். q (ஈதென்ன பேருறக்கம்) r 1. ''ப$_4$க$_3$வதஸ் த்வராயை நம:'' என்றுகொண்டு பிறர் ஆர்த்திக்கு த்வரித்து உணருமவனோடே பழகிவைத்து இங்ஙனே உறங்குவதே! என்கிறார்கள். s ஆபந்நர்க்காக உணருமவன்படியுமன்றிக்கே, காலம் உணர்த்த உணரும் ஸம்ஸாரிகள் படியுமன்றிக்கேயிருப்பதே உன்னுறக்கம்!

t (அனைத்தில்லத்தாரும் அறிந்து) u பெண்களெல்லாரும் வந்து உன் வாச லிலே அழைக்கிறமை ஊராக அறியவேணுமென்றிருந்தாயாகில், எல்லாரு மறிந்தது, இனி எழுந்திராய்; v 'ப$_4$க$_3$வத்$_3$விஷயம் ரஹஸ்யமாக அநுப$_4$விக்கு மித்தனை; புறம்பு இதுக்கு ஆளுண்டோ?' என்று கிடக்கிறாயாகில், அது எங்கும் ப்ரஸித்$_3$த$_4$மாய்த்தென்றுமாம். w எம்பெருமானார் திருவவதரித்தாற்போலே காணும் w$_2$ இப்பெண்பிள்ளையும். 12.

---

பெ.அ. (கண்ணன் இத்யாதி$_3$) m, c ''திறவாய்'' என்றது — திறக்கவேணுமென்று அர்த்த$_2$ மாகில் ''பாடவும்'' என்றது அந்வயியாமையாலே, வ்யதிரேகமுக$_2$மாக ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் அருளிச்செய்கிறார் (நீ வாய்இத்யாதி$_3$) p 'நீங்கள் பாட, நான் அநுப$_4$வித்துக் கொண்டிருக்கை ப்ராப்தமாயிருக்க, வாய் திறக்கவேண்டுவானென்?' என்று அவளுக்குக் கருத்தாக அருளிச் செய்கிறார் (ப்ரீதிக்கு இத்யாதி$_3$)

q, r, s ''ஈது'' என்றதாலும், ''பேருறக்கம்'' என்றதாலும் தோன்றுகிற உபாலம்ப$_4$ த்$_3$வயத்தையும் க்ரமேண அருளிச்செய்கிறார் (ப$_4$க$_3$வத இத்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே)

t, u ''அறிந்து'' என்றது — கடைக்குறைத்தலாயிருந்ததென்று ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் திரு வுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பெண்கள் இத்யாதி$_3$) v ''பெண்கள் அழைக்கிறமையை அறிந்து'' என்று அத்$_4$யாஹாரம் திருவுள்ளம்பற்றிக் கீழ் ஒருதாத்பர்யம் அருளிச்செய்து, ''ரஹஸ்யத்தையறிந்து'' என்று அத்$_4$யாஹரித்துத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ப$_4$க$_3$வத்$_3$விஷயம் இத்யாதி$_3$) w$_2$ 'இப்பெண்பிள்ளை' என்றது — எழுப்பு கிற பெண்பிள்ளையென்றாய், ஆண்டாளென்றபடி. இவள் வாசலிலேயிருந்து அவன் ரஹஸ்யமாக அநுப$_4$விக்க, அத்தை வெளியிட்டாளென்று கருத்து. 12.

---

சி.அ. போலும் என்று இத்யாதி$_3$) ராவணன் வார்த்தை. q, r, s ''ஈதென்ன பேருறக்கம்'' என்றதுக்குத் தாத்பர்யம் (ப$_4$க$_3$வத இத்யாதி$_3$) w எங்கும் ப்ரஸித்$_3$த$_4$மானபடியை த்$_3$ருஷ்டாந்த முகே$_2$ந வ்யாக்$_2$யாதா அருளிச்செய்கிறார் (எம்பெருமானார் அவதரித்தாற்போலே) என்று.

இப்பாட்டுக்கு ஸ்வாபதே$_3$ஶம் :— ப$_4$க$_3$வத்$_3$ விஶ்லேஷம் அஸஹ்யமாம்படி அவகா$_3$ஹித்தவர்கள் தங்களுக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் உத்$_3$தே$_3$ஶ்யராமளவன்றிக்கே தத் ஸம்ப$_3$ந்தி$_4$ ஸம்ப$_3$ந்தி$_4$களும் உத்$_3$தே$_3$ஶ்யரென்றிருக்கை ஸ்வரூபம் என்றது. 12.

---

ரு. அ. w எங்கும் ப்ரஸித்$_3$த$_4$மானபடியை த்$_3$ருஷ்டாந்தமுகே$_2$ந வ்யாக்$_2$யாதா அருளிச் செய்கிறார் (எம்பெருமானார் அவதரித்தாற்போலே இத்யாதி$_3$) இது வ்யாக்$_2$யாதா வாக்யமாகவுமாம்; புறத்தில் பெண்களுடைய வார்த்தையாகவுமாம். w$_2$ அன்றிக்கே 'பெண் பிள்ளை' என்றது — பெண்பிள்ளைகள் என்று ப$_3$ஹுவசனமாக்கி, புறத்தியிற் பெண்களைச் சொல்லுகிறது என்னவுமாம். இப்படி ஸந்தே$_3$ஹமாக அருளிச்செய்வர். 12.

## ஆறாயிரப்படி — பன்னிரண்டாம்பாட்டு

அவ:— பன்னிரண்டாம்பாட்டு. பெருமாளைப் பின்தொடர்ந்து நோக்கிக் கொண்டு திரியும் இளையபெருமாளைப்போலே, க்ருஷ்ணனையல்லதறியாதே பின் தொடர்ந்து க்ருஷ்ணவிஷயத்திலே போரப் பரிவனாயிருப்பானொருவனுடைய தங்கை யாகையாலே ஶ்லாக$_4$யையாயிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். ஸ்வத$_4$ர்மத்தை அநுஷ்டி$_2$ப்பவர்களுடைய பெண்பிள்ளையை எழுப்பிற்று-கீழ்; இதில், ஸ்வத$_4$ர்மத் தைக் காற்கடைக்கொண்டவனுடைய தங்கையை எழுப்புகிறது. அவர்களுடைய அநுஷ்ட$_2$ாநமும் இவனுடைய அநநுஷ்ட$_2$ாநமும் உபாயமன்று; யாதொன்று உபே யத்தைத் தரவற்று, அதிறே உபாயம். விடச்சொன்னவையும் பற்றச் சொன்னவை யும் அன்றிறே உபாயம்; விடுவித்துப் பற்றுவித்தவனிறே உபாயம்.

வ்யா:— (கனைத்து) உத$_3$ாரர் கொடுக்கப்பெறுவிட்டால் படுமாபோலே, ஆஶ்ரிதர்கார்யம் செய்யப்பெறுவிட்டால் 1. ''ருணம் ப்ரவ்ருத்$_3$த$_4$மிவ'' என்னுமாபோலே ஈஶ்வரன், ப்ராப்த காலத்தில் கறப்பாரில்லாமையாலே முலை கடுத்து, 'இவ்வாசலிலே கன்றுகாலியாய், நாம்பட்டதோ!' என்று குமுறி. ''கறக்க வேண்டும் போதிலே, இவற்றைக்கறவாதே காற்கடைக்கொள்ளுவானென்?'' என்னில்; இளையபெருமாளுக்கு அக்$_3$நிகார்யத்தில் அந்வயமுண்டாமன்று இவ னுக்கு இவற்றினுடைய ரக்ஷணத்தில் அந்வயமுள்ளது. இளையபெருமாளுக்குப் பெருமாளைப் பிரியமாட்டாமையாலே; இவன் க்ருஷ்ணனைப் பிரிய மாட்டாமையாலே. இப்படி ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் ப்ரேமத்தாலே பிரிய அவஸரமில்லாமையாலே ஸ்வ த$_4$ர்மத்தை அநுஷ்டி$_2$யாதொழிகை-விடுகையாவது; அல்லது, ஆலஸ்யத்தாலே விடுமது-விடுகையன்று; A ''தொழிலெனகுத் தொல்லைமால் தன்னாமமேத்தப்பொழு தெனக்கு மற்றதுவேபோதும்'' என்னும்படியே. (இளங்கற்றெருமை) இளங்கன்றான எருமையென்னுதல்; இளங்கன்றையுடைய எருமையென்னுதல். இரண்டாலும் பாடாற்றமாட்டாமை சொன்னபடி. B ''கறவாமடநாகு தன் கன்றுள்ளினாற்போல்'', என்னக்கடவதிறே. (கன்றுக்கிரங்கி) தன் முலைக்கடுப்புக்கிடக்க ''கன்று என்படு கிறதோ!'' என்றிரங்கி. எம்பெருமான் ஆஶ்ரிதவிஷயத்தில் C ''ஏழை ஏதலன் கீழ் மகனென்னாதிரங்கி'' என்று படும் பாட்டுக்கு நித$_3$ர்ஶநமாயிருக்கிறது. அவன் எருமைகள் கறவாவிட்டால் அவை படும்பாட்டை, நாங்கள் உன்வாசலிலே வந்து நின்று புகுரப்பெறுமையாலே படாநின்றோம். (நினைத்து) 2. ''மநஸாசிந்தயத்$_3$த$_4$ரிம்'' என்று நினைத்த அநந்தரம், 3. ''த்வராயை நம;'' என்னும்படி திருவுள்ளம் அங்கே ப்ரவணமானாற்போலே. (நினைத்து முலைவழியே) கன்றை அகலக் கட்டி வைப்பார்கள்; அத்தை நினைத்து, ப$_4$ாவநாப்ரகர்ஷத்தாலே கன்று முலையிலே வாய் வைத்ததாகக்கொண்டு, கைவழியுமன்றிக்கே கன்றின் வாய்வழியுமன்றிக்கேயிருக்க, முலைவழியே பால் சொரியாநிற்கும். (நின்று பால்சோர) மேக$_4$ங்களுக்குக் கடலிலே புக்கு முகந்துகொடு வந்து வர்ஷிக்கவேணும், அவ்வருத்தமிவற்றுக்கில்லை;

---

A நான் திருவ 85 B பெரிய திரு 7-1-1 C பெரியதிரு 5-8-1.

நினைவு ஊற்றுகச் சுரக்கிற பாலாகையாலே, நினைவு மாறுமையாலே, திருமலையில் திருவருவிகள் போலே பால் மாறாதே செல்லும். (பால்சோர) ப4க3வத்3விஷயம் கேளாதேயிருக்க, தன் செல்லாமையாலே சொல்லுவாரைப் போலே; அர்ஜுநன் கேளாதேயிருக்க, 1. ''பூ4ய ஏவ மஹாபா3ஹோ ஶ்ருணு மே பரமம் வச:'' என்றவன் தன்னைப்போலே. (நனைத்து இல்லம் சேறுக்கும்) பால்வெள்ளமிடுகையாலும், எருமைகள் துகைக்கையாலும் சேறுய்க்கிடக்கும். (இல்லம் சேறுக்கும்) எத்தனையேனும் ஏறிப்பாயாத மேடும் பால்வெள்ளத்தாலே சேறுனபடி. கடலை அகழ் செய்துகொண்டு கிடந்தால், ஓடமேறிப்புகுதல், சேற்றுக்கு அளற்றுப்பொடியிட்டுப் புகுதல் செய்ய வேண்டும்படியிருக்கை. (நற்செல்வன்) கர்மத்தாலேயாதல், தே3வதாந்தரப4ஜநத்தாலேயாதல் வரும் ஐஶ்வர்யம் அந்தவத்தாயிருக்கும்; பெருமாளைப் பிரியாத இளையபெருமாளுடைய ஐஶ்வர்யம்போலே, க்ருஷ்ணனைப் பிரிய க்ஷமனன்றிக்கே அவனை நோக்குகிற ஐஶ்வர்யமிறே; நிரந்தரஸேவைபோலே நிலைநின்ற ஐஶ்வர்யம். 2. ''லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:''; கைங்கர்ய ஸம்பத்திறே இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற ஸம்பத்து. 3. ''ந தே3வலோகாக்ரமணம்'' என்னும்படியே ப்ராப்யவிரோதி4களில் நசையற்றபடியாலே, தோற்றி மாயும் ஸம்பத்தன்றியிலேயிருக்கை. 2. ''லக்ஷ்மி ஸம்பந்ந:'' A ''ஊரும் நாடுமுலகமுந் தன்னைப்போல்'' என்று ஆழ்வாருடைய கைங்கர்யஶ்ரீ விஶேஷஜ்ஞரோடு அவிஶேஷஜ்ஞரோடு வாசியற ஏறிப்பாய்ந்தாற்போலே, இவனுடைய கைங்கர்யஶ்ரீயும் நாட்டுக்கெல்லாம் குறையற்றிருக்கை. (தங்காய்) உங்களுக்கு ரக்ஷ்யவர்க்க3த்தை நோக்காமை ஜந்மஸித்3த4மிறே. (நற்செல்வன் தங்காய்) 4. ''ராவணஸ்யாநுஜோ ப்4ராதா'' என்று - தமையனுடைய தண்மை சொல்லவேண்டாத ஏற்றமுண்டிறே உனக்கு. ஶ்ரீவிபீ4ஷணாழ்வானிலும் அவன் மகளான த்ரிஜடை பிராட்டிக்கு அடிமை செய்தாற்போலே, க்ருஷ்ணனை நோக்கின தமையனிற் காட்டிலும் எங்களை நோக்கவேண்டாவோ? க்ருஷ்ணன் ரக்ஷ்யமான போதே நாங்களும் அந்தர்ப்பூ4தைகளன்றோ.

(பனித்தலைவீழ) ஆழிமழைக்கண்ணனிலே வர்ஷிக்க நியமிக்கையாலே, மேல் வர்ஷமாக, கீழ் பால் வெள்ளமிட நின்று அலைகையாலே, தெப்பம்பற்றுவாரைப் போலே தண்டியத்தைப் பற்றிக்கொண்டு நின்றோம். ப்ராப்ய பூ4மியில் ஐஶ்வர்யம் இங்கே கைபுகுரச்செய்தே அவ்வருகே போகத் தேடுகிறது எங்களுடைய அபி4நிவேஶாதிஶயமிறே. ஈஶ்வரன் அபி4நிவேஶமறிந்து B ''விள்கை விள்ளாமை விரும்பி உள் கலந்தார்க்குத்'' தன்னைக் கொடுக்குமாபோலே, இவர்களபி4நிவேஶம் அறியுமளவும் பேசாதே கிடக்க, அவள் நினைவறியாதே தங்கள் செல்லாமையாலே சொல்லுகிறார்கள். (சினத்தினால்) 'பெண்களுக்காகில் சேர்க்கைப்பல்லிபோலே க்ருஷ்ண வ்ருத்தாந்தஞ் சொல்லுகை பணியிறே; 5. ''அத2வா கிம் தத3ாலாபை:'' என்று-பெண்களைத் தீராமாற்றமாக நெஞ்சாரல்படும்படி பண்ணுமத்தை நினைத்துக்கிடக்கிறாள்; C ''உண்ணாதுறங்காது'' 6. ''அநித்3ராஸ் ஸததம் ராம:'' என்று-பெண்

---

A திருவாய் 6-7-2 B திருவாய் 1-6-5 C நாச்திரு 11-7.

களைப் பிரிந்தால் ஊணுமுறக்கமுமின்றிக்கே, பெண்பிறந்தார்க்குத் தஞ்சமான சக்ரவர்த்தித் திருமகனைச் சொல்லுவோம் இவளெழுந்திருக்கைக்காக' என்று ராமவ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறார்கள்.

விரோதி₄களைப்போக்கி நமக்கு உபகரித்தானாயிருக்கும் க்ருஷ்ணனைப்போலன்றிக்கே, ஆஶ்ரிதவிரோதி₄களைப் போக்குமது தன் சினம் தீர்ந்தானாக நினைத்திருக்கை. 'தண்ணீர்போலேயிருக்கிற சக்ரவர்த்தித் திருமகனுக்கும் சினமுண்டோ' என்னில்; தன் திருமேனியிலே அம்புபட்டபோது ஆறியிருந்தான்; திருவடிமேலே அம்புபட்ட போது சீறினானிறே. 1. [ததோராமோ மஹாதேஜா:] — திருவடிமேலே அம்புபட்டவநந்தரம், நீரிலே நெருப்பு எழுந்தாற்போலே, பெருமாள் அநபி₄ப₄வநீயரானார். 1. [ராவணேந க்ருதவ்ரணம் த்₃ருஷ்ட்வா] — தான்பருவம் நிரம்பாத காலத்திலே பண்ணிக்கொண்டதன்றிக்கே தரமல்லாத ராவணனாலே நோவுபடக் கண்டவாறே. 1. [ப்லவகஶார்த்₃தூ₃லம்] திருவடி, தன்மேலே அம்பு படப்பட, வர்ஷங்காணப் பணைக்கும் பதா₃ர்த்த₂ங்கள்போலே, மேனாணித்துக் கொடுத்தான் 1. [கோபஸ்ய வஶமேயிவாந்] திருவடி தரமல்லாத ராவணன்கையிலே புண்பட்டவாறே 2. "க்ரோத₄மாஹாரயத்'' என்றிருக்கக்கடவ தாமும் கோபம் இட்ட வழக்கானார். ஆஶ்ரிதகார்யமென்றும் தங்கார்யமென்றும் இரண்டன்று!. மஹாராஜர் சிற்றம் பிறந்து "வாலியைக் கொல்லவேணும்'' என்றபோது எய்தார். அவருக்கு ஸௌப்₄ராத்ரம் பின்னாட்டிக் கண்ணநீர் பாய்ந்தவாறே தாமுங்கூட அழுதார், (தென்னிலங்கை) பையல் செய்த அநீதியை நினைத்து "பறைச்சேரி, பறைச்சேரி'' என்பாரைப்போலே அத்திக்கும் அஸஹ்யமானபடி. (தென்னிலங்கைக் கோமானை) 3. "யத்₃யத₄ர்மோ ந ப₃லவாந்'' என்றும், 4. "அஹோ வீர்யம்'' என்றும் திருவடி மதித்த ஐஶ்வர்யமிறே. ஓரம்பாலே தலையைத் தள்ளிவிடாதே, படையைக்கொன்று, புத்ரபௌத்ராதி₃களைத் தலைசாய்த்து, ஆயுத₄ங்களை முறித்து A "அரக்கர்தங்கள் கோன்போலும்'' என்கிற அபி₄மாநத்தையழித்து, பட்ட எளிவரவெல்லாம் அறிவிப் பாரில்லாதபடி தரம் கெடுத்து, நெஞ்சாரல் படுத்திக் கொன்றபடி. 5. "யோ வஜ்ர பாதாஶநிஸ்ந்நிபாதாந்ந சுக்ஷுபே₄ நாபி சசால ராஜா | ஸ ராமபா₃ணாபி₄ஹதோ ப்₄ருஶார்த்தஶ்சசால சாபஞ்ச முமோச வீர:||'' 6."மாதங்க₃ இவ ஸிம்ஹேந க₃ருடே₃ந ப₃ந்நக₃:| அபி₄பூ₄தோப₄வத்₃ராஜா ராக₄வேண மஹாத்மநா'' 7. "க₃ச்ச₂ாநுஜாநாமி ரணார்த்தி₃தஸ்த்வம் ப்ரவிஶ்ய ராத்ரிஞ்சரராஜ லங்காம்' ஆஶ்வாஸ்ய நிர்யாஹி ரதீ₂ ஸத₄ந்வீ தத₃ா ப₃லம் த்₃ரக்ஷ்யஸி மே ரத₂ஸ்த₂:||'' (மனத்துக்கினியானை) அர்த்தி₂கள் ஒருத்தன் பக்கல் பெறுவிட்டால் "சொல்லாய் சீமானே'' என்னுமா போலே, பெண்களை ஒடியெறிந்து துடிக்க விட்டுவைத்து, பின் இரக்கமன்றிக்கே துடிப்புக்கண்டு, இத்தனை கண்ணநீரும் விழவிடாதே படுகுலையடிக்கும் தீம்பனை க்ருஷ்ணனைப்போலன்றிக்கே 8. 'ரிபூணாமபிவத்ஸல'னாய் ஶத்ருக்களுக்குங்கூடக் கண்ணநீரை விழவிடுமவனையன்றோ பாடுகிறது. B "கண்ணன் நாமமே குழறிக்

A பெரியதிரு 4-4-6 B திருவாய் 9-5-8.

கொன்றீர்'' என்று-நம்மை நலியும் க்ருஷ்ணனுடைய பேரைக் காற்கடைக்கொண்டு, 1. ''இத உபரி ம்ருதஸஞ்ஜீவநம் ராமவ்ருத்தாந்தம்'' என்னும்படியே க்ருஷ்ணவிர ஹத்தாலே கமர்பிளந்த நெஞ்சு பத₃ஞ்செய்யும்படிக்காக, சக்ரவர்த்தித் திருமகனைப் பாடச் செய்தேயும்; போன உயிர் மீளும்படியானவனைப் பாட, வாய் திறக்கின்றிலே. A ''வேம்பேயாக வளர்த்தாள்'' என்று - பெற்ற தாயையும் குற்றஞ் சொல்லும்படி யிறே இவன்படி. 2. ''கௌஸல்யா லோகப₄ர்த்தாரம்'' என்று - பெற்றவளையும் கொண்டாடும்படியிறே அவன்படி. (பாடவும் நீ வாய் திறவாய்) பிறர் அநர்த்த₂த்துக் காக நீ விஶேஷஜ்ஞையாவதே! எங்களுக்காகவன்றிக்கே உன் ஹர்ஷத்துக்குப் போக்கு விடவேண்டாவோ?

(இனித்தானெழுந்திராய்) எங்கள் ஆர்த்திக்கு உணராவிட்டால் உன்பேற்றுக்கு உணரவேண்டாவோ? எங்களாற்றாமையை அறிந்தபின்பும் எழுந்திராதொழிவதே! (ஈதென்ன பேருறக்கம்) வைதி₃கமுமன்றிக்கே லௌகிகமுமன்றிக்கேயிருப்பதொரு உறக்கமுண்டாவதே! பரார்த்த₂மாக B உலகெல்லாம் நன்கொடுங்க உறங்கும் ஈஶ்வரனுறக்கமுமன்றிக்கே, தாபார்த்தராய், தமோகு₃ணபி₄பூ₄தராய், க்லேஶம்போக வுறங்கும் ஸம்ஸாரிகள்படியுமன்றிக்கே இரண்டிலும் வ்யாவ்ருத்தமாய் இதொரு பத்தொன்பதாம் ப₄ாஷையாயிருந்ததீ! பிறர் ஆர்த்திக்கு த்வரித்து உணருமவனோடே பழகிவைத்தும் இங்ஙனே உறங்குவதே! (அனைத்தில்லத்தாரும்) பரஸம்ருத்₃தி₄ யேகப்ரயோஜநையாகையாலே, 'பூ₄லோகளாயிருப்பாரும் உணர்ந்து வரவேணும்' என்றி ருக்கிறாயாகில், அதெல்லாஞ்செய்தற்றது: நாங்கள் உன்வாசலிலே வந்தெழுப்பவும் நீ சிறிதுபோது உணராதொழியவும், இத்தால் வந்த மதிப்பு எல்லாருமறியவேணு மென்றிருந்தாயாகில் அதெல்லாருமறிந்தது. (இனித்தானெழுந்திராய்) ''ப₄க₃வத்₃ விஷயம் ரஹஸ்யமாக அநுப₄விக்குமித்தனை; புறம்பு இதுக்காளுண்டோ?'' என்று கிடக்கிறாயாகில் பெண்களையும் க்ருஷ்ணனையும் சேரவொட்டாத ஊரடைய ப்ரஸித்₃த₄ மாய்த்து என்றுமாம். எம்பெருமானர் அவதரித்தாற்போலேகாணும் இப்பெண்பிள்ளையும். 12.

## ஈராயிரப்படி — பன்னிரண்டாம் பாட்டு

அவ:— பன்னிரண்டாம் பாட்டு — க்ருஷ்ணன் வளர வளரத் தீம்பிலே கைபுக்கவாறே இவனைக் காக்கைக்கு இவனைப் பிரியாதே போருகிறானொருத்தன் தங்கையை எழுப்புகிறார்கள்.

வ்யா:— (கனைத்து) கறப்பாரில்லாமையாலே ''இவ்வகத்துக்குக் கன்று காலியாய் நாம் பட்டதோ!'' என்று கூப்பிடாநிற்கும். (இளங்கற்றெருமை) இளங் கன்று பாடாற்றமாட்டாமை. (கன்றுக்கிரங்கி) எம்பெருமான் ஆஶ்ரிதவிஷயத்தி லிருக்குமாபோலே, அவன் எருமை கறவாவிட்டால் அவைபடும் பாடு நாங்கள் உன்னாலே படாநின்றோம். (நினைத்து) கன்றை நினைத்து ப₄ாவனாப்ரகர்ஷத் தாலே முலையிலே வாய்வைத்ததென்று பால் சொரியாநிற்கும். (முலைவழியே)

A நாச்-திரு 13-7. B திருவாய் 4-8-9

கைவழியே தவிர. (நின்று பால்சோர) கேட்பாரன்றியேயிருக்க ஆற்றாமையாலே பக3வத்3 கு3ணங்களைச் சொல்லுவாரைப் போலே. மேக4த்துக்குக் கடலிலே முகந்துகொண்டு வரவேணும். இவற்றுக்கு வேண்டா. (நனைத்தில்லம் சேறாக்கும்) பாலின் மிகுதியாலே அகம் வெள்ளமிடும்; அவற்றின் காலிலே துகையுண்டு சேறும். சேறாய்ப் புகுரவொண்கிறதில்லை. (நற்செல்வன்) 1. லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:'' — தோற்றி மறையும் செல்வமன்று. A "ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல்'' B "வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே'' என்கிறபடியே இவனுடைய வைஷ்ணவஸ்ரீ இருந்தபடி. 2. "ஸௌமித்ரே பு4ங்க்ஷ்வ போ4கா3ம் ஸ்த்வம்''. (தங்காய்) கு3ணஹானிக்கு ராவணனைப்போலே. 3. "ராவணஸ்யானுஜோ ப்4ராதா'' என்னும்படி இக்கு3ணத்திலே தஸ்யானுஜனைப்போலே; 4. "அந்தரிக்ஷக3த: ஸ்ரீமா''னுடைய மகளான அனலையைப் போலே. ஸ்ரீவிபீ4ஷணாழ்வானுக்குமில்லாத பிராட்டிக்குக் கைங்கர்யம் பண்ணவுண்டிறே அனலைக்கு. (வீழ) மேல் பனிவெள்ள மிட, கீழ் பால் வெள்ளமிட, நடு மால் வெள்ளமிட நின்றலைந்து. (வாசல்கடை பற்றி) தண்டியத்தைப்பற்றி நாலாநின்றோம். இத்து4ர்மஹாநியை அறிகிறிலை. 'இவர்கள் படுமலமாப்புக் காண்போம்' என்று பேசாதே கிடக்க—(தென்னிலங்கை) 'பறைச்சேரி' என்பாரைப் போலே பெருமாளோடே கூடியிருக்கிற பிராட்டியைப் பிரித்த படுகுலைக்காரனிருக்கிறவிடமிறே. (கோமானை) 5. "யத்3யத4ர்மோ ந ப3லவாந்'' என்று திருவடி மதித்த ஐஸ்வர்யம். (செற்ற) ஓரம்பாலே தலையைத் தள்ளி விடாதே தேரைத்தள்ளி வில்லைமுறித்து படையைக்கொன்று ஆயுத4ங்களை முறித்து C "தான் போலுமென்றெழுந்தான்'' இத்யாதி3ப்படியே பின்னைத் தலையை அறுத்துவிட்டபடி.

(மனத்துக்கினியானை) வேண்டிற்றுப் பெறுவிட்டால் "சொல்லாய் சீமானே'' என்னுமாபோலே. (பாடவும் நீ வாய்திறவாய்) ராமவ்ருத்தாந்தம் கேட்டது உறங்குகைக்குறுப்பாயிற்றோ? (வாய்திறவாய்) ப்ரீதிக்குப் போக்குவிடவேண்டாவோ? தாங்கள் ஒருதலைப்பற்ற வேண்டியிருக்கிறார்கள்.

(இனித்தான்) எங்களுக்காக உணராவிட்டால் உனக்காக உணரவுமாகாதோ? சூர்ப்பணகி2 உள்ளிட்டார்க்குள்ள இரக்கமும் உன்பக்கல் கண்டிலோமே. (ஈதென்ன பேருறக்கம்) எம்பெருமான் பரார்த்த2மாக உணரும். ஸம்ஸாரிகள் ஸ்வார்த்த2மாக உணருவர்கள். இது ஒருபடியுமன்று. ஆர்த்தி கேட்டு உணராதொழிவதே! "பையத்துயின்ற பரமன்'' (2) 6. "பக3வதஸ்த்வராயை நம:'' என்னும்படி ஆர்த்தி கேட்டால் அப்படி படுமவனோடே வர்த்தித்து இங்ஙனே கிடப்பதே!

(அனைத்தில்லத்தாருமறிந்து) உன் வாசலிலே வந்தெழுப்ப நீ எழுந்திராதது எல்லாரும் அறியும்படியாய்த்து. இனி உணராய். ஊராரறியாதபடி பக3வத்3விஷயத்தை அனுப4விக்க வேணுமென்றிராதேகொள். 12.

---

A திருவாய் 6-7-2, B திருவாய் 3-3-11 C பெரியதிரு 4-4-6.

## நாலாயிரப்படி — பன்னிரண்டாம்பாட்டு

அவ :— பன்னிரண்டாம்பாட்டு. க்ருஷ்ணன் வளரவளரத் தீம்பிலே கைவளரப் புக்கவாறே ஸ்ரீ நந்த3கோ3பர் வ்ருத்3த4ராகையாலும், நம்பிமூத்தபிரான் விலக்கமாட்டாதே அவன் வழியே போகையாலும், இவனைக் காக்க இளையபெருமாளைப்போலே அவனைப்பிரியாதே போகிறான் ஒருத்தன் தங்கையை எழுப்புகிறார்கள்.

வ்யா :— (கனைத்து) இளையபெருமாள் அக்3நிகார்யத்துக்கு உறுப்பாமன்றிறே இவன் எருமைகளை விட்டுக் கறப்பது. தவிர்ந்தவனோடு செய்கிறவனோடு வாசியில்லை; இரண்டும் உபாயமன்று. யாதொன்று பேற்றை ஸாதி4த்துத்தருவது, அதுவே உபாயம். அபி4சாரத்தைப்பற்ற காம்யகர்மம் புண்யம்; ஜ்யோதிஷ்டோமாதி3க்கு ப4க்தி தன்னேற்றம். 'எல்லாத்தையும் விட்டு என்னைப்பற்று' என்றவனுடைய த்யாஜ்யமாம். ஜீயர் பிள்ளை திருநறையூரரையர்க்கு அருளிச்செய்த வார்த்தை:— 'விடுகையும் உபாயமல்ல; பற்றுகையும் உபாயமல்ல; விடுவித்துப் பற்றுவிக்குமவனே உபாயம்' என்று. 1. "ந தே3வலோகாக்ரமணம்" 2. "பரித்யக்தா" இத்யாதி3யிற்படியே ப்ராப்யவிரோதி4களில் நசையற்றபடியாகவுமாம். (கனைத்து) கறப்பாரில்லாமையாலே 'இவ்வகத்து நாம் கன்றுகாலியாய்ப்பட்டதோ!' என்று கூப்பிடாநிற்கும்; (இளங்கற்றெருமை) இளங்கன்றாகையால் பாடு ஆற்றமாட்டாமை. (கன்றுக்கிரங்கி) எம்பெருமான் ஆஶ்ரிதவிஷயத்தில் இருக்குமாபோலேகாணும்; அவன் எருமை கறவாவிட்டால் அவை படும் பாட்டை நாங்கள் உன்னாலே படாநின்றோம்.

(நினைத்து) கன்றை நினைத்து ப4ாவநாப்ரகர்ஷத்தாலே முலையிலே வாய் வைத்ததாய்க் கொண்டு பால் சொரியாநிற்கும். நினைவு மாறிலிறே பால் மாறுவது. (முலைவழியே) கன்றின் வாய் வழியாதல், கறக்கிறார் கைவழியாதலன்றிக்கே முலை வழியே. (நின்று பால் சோர) கேட்பாரின்றிக்கே, விம்மலாலே ப4க3வத்3 கு3ணங்களைச் சொல்லுவாரைப் போலே. மேக4த்துக்குக் கடலிலே முகந்து கொண்டு வரவேணும். இவற்றுக்கு அதுவேண்டா. (நனைத்தில்லம் சேறாக்கும்) 'பாலின் மிகுதியாலே அகமெல்லாம் வெள்ளமிடும்; அவற்றின் காலாலே பின்னைத் துகையுண்டு சேறும். சேறால் புகுரவொண்கிறதில்லை' என்ன, 'அளற்றுப் பொடியிட்டுப் புகுருங்கோள்; அவ்வளவின்றிக்கே மேலே மேலே வெள்ளமிட்டதாகில் ஓடமேறிப்புகுருங்கோள்'.

(நற்செல்வன்) 3. "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" — தோற்றி மறையும் நற்செல்வமல்ல; நிலைநின்ற ஸம்பத்து. 3. [ஸம்பந்ந:] A "ஊரும் நாடுமுலகமும் தன்னைப் போல்" B "வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம்புகழ" என்னும்படியே அவனுடைய வைஷ்ணவஸ்ரீயாலே ஜக3த்துக்களுடைய வைஷ்ணவத்வமுண்டாம்படியிருக்கை. 4. "ஸௌமித்ரே பு4ங்க்ஷ்வ போ4கா3ம்ஸ்த்வம்" 5. "யத்3 விநா ப4ரதம் த்வாம் ச ஶத்ருக்4நம் சாபி மாநத3". (தங்காய்) கு3ணஹாநிக்கு 6. "ராவணஸ்யாநுஜோ ப்4ராதா" என்னுமாபோலே, கு3ணத்துக்கு அவனில் இவளுக்குத் தன்னேற்றமும் அத்தனைபோரும். 7. "அந்தரிக்ஷக3த: ஸ்ரீமாந்" என்ற ஸ்ரீவிபீ4ஷணாழ்வானுக்கு மகளான த்ரிஜடை போலே. ஸ்ரீவிபீ4ஷணாழ்வானைப் போலன்றியே இவள் பிராட்டிக்கு

---

A திருவாய் 6-7-2 B திருவாய் 3-3-11.

அடிமைசெய்யப் பெற்றுளிறே. அப்படியே இங்கு தமையன் க்ருஷ்ணனுக்குத் துணையாய்த் திரிய, இவள் நப்பின்னைப் பிராட்டிக்கு அடிமை செய்யப் பிறந்தவள். (பனித்தலை வீழ) மேல் பனி வெள்ளமிட, கீழ் பால் வெள்ளமிட, நடுவே மால் வெள்ளமிட நின்றமை இது. (வாசல் கடை பற்றி) 'மேலைப்படியையும் தண்டியத்தையும் பற்றி நாலாநின்றோம். இத்தர்மஹாநியை அறிகின்றிலே' என்கிறார்கள். 'இவர்கள் படும் அலமாப்புக் காண்போம்' என்று பேசாதே கிடக்க, தீராமாற்றமாக நெஞ்சாரல் பண்ணி முகம் காட்டாத க்ருஷ்ணனென்றால், பெண்கள் சிவட்கென்று 'இதொரு பித்து' என்பர்களென்று பார்த்து, 'க்ருஷ்ணனால் பட்ட நெஞ்சாரலடையத் தீர்ந்து நெஞ்சுகள் குளிரும்படி, பெண் பிறந்தார்க்குத் தஞ்சமான சக்ரவர்த்தித் திருமகனைச் சொல்லுவோம், இவளெழுந்திருக்க' என்கிறார்கள் :—

(சினத்தினால்) ஆஶ்ரிதர் கார்யம் செய்யாதானுயிரான் க்ருஷ்ணனைப் போலே. இவன் தன் கார்யந்தானுயிருக்கும். A "தான் தன சீற்றத்தினை முடிக்கும்". 1. "த்விஷதந்நம் ந போக்தவ்யம்" — ஆஶ்ரிதருடைய ஶத்ருக்களே தனக்கு ஶத்ருக்கள். பகவதபசாரம் பாகவதாபசாரம் என்று இரண்டில்லை போலே இருந்தது. 2. "மம மத்பக்தபக்தேஷு ப்ரீதிரப்யதிகா ந்ருப" என்று, 'ஆஶ்ரிதர்க்கு நல்லவர்கள் தனக்கு நல்லவர்கள்' என்றிருக்கும்; மஹாராஜர்க்கு சீற்றம் பிறந்தபோது வாலியை எய்தார்; அவர் அழுதபோது கூட அழுதார். 3. "ஸஞ்ஜாதபாஷ்ப:". (தென்னிலங்கை) அவன் செய்த அநீதியை நினைத்து 'பறைச்சேரி' என்பாரைப்போலே அத்திக்குங் காணவேண்டாதேயிருக்கிறபடி. ஒரு ப்ராணனை இரண்டாக்கினாற்போலே தாயையும் தமப்பனையும் பிரித்த படுகொலைக் காரனிருக்கிறவிடமிறே. (கோமான்) 4. "யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேஶ்வர: । ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸஶக்ரஸ்யாபி ரக்ஷித ॥" என்று திருவடி மதித்த ஐஶ்வர்யம். (செற்ற) ஓரம்பாலே தலையைத் தள்ளிவிடாதே மொட்டும் நெம்பும் பாறும் கலங்கும்படி தேரை அழித்து, வில்லை முறித்து, படையைக் கொன்று, ஆயுதங்களை அறுத்து, B "தான் போலுமென்றெழுந்தான் தரணியாளன்" என்று கிளர்ந்து வந்த அபிமானத்தையும் அழித்து, நெஞ்சாரல் படுத்தி, 5. "கச்ச அநுஜாநாமி" என்கிறபடியே படையைச் சிரைத்துவிட்ட படியான எளிவரவு முதலிக்கைக்கு ஆளில்லையாம் என்று கொல்லாதே விட்டார். 6. "யோ வஜ்ரபாதாஶநி" 7. "மாதங்க இவ" 8. "ப்ரஹ்மதண்டப்ரகாஶாநாம்" என்று; 9. "தஸ்யாபிஸங்க்ரம்ய ரதம் ஸசக்ரம் ஸாஶ்வத்வஜச்சத்ரமஹாபதாகம் । ஸஸாரதிம் ஸாஶநிஶூலகட்கம் ராம: ப்ரசிச்சேத ஶரைஸ்ஸுபுங்கை: ॥" 10. "ஸ ஏவமுக்தோ ஹததர்ப்பஹர்ஷ: நிக்ருத்தசாபோ நிஹதாஶ்வஸூத: । ஶரார்த்தித: க்ருத்தமஹாகிரீட: விவேஶ லங்காம் ஸஹஸா ஸ ராஜா ॥"

(மனத்துக்கினியானை) வேண்டிற்றுப் பெறுவிட்டால், "சொல்லாய் சீமானே" என்றாப்போலே. C "வேம்பேயாக வளர்த்தாள்" என்னும் க்ருஷ்ணனல்லவே. பெண் கனைக்கொன்று துடிக்க விட்டுவைத்துத் துளி கண்ணநீரும் விழவிடாதே நிற்கும் க்ருஷ்ணனையொழிய, 3. "ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா" என்று ஶத்ருக்களுக்கும் கண்ணநீர் பாய்ந்து, D "உண்ணாதுறங்காதொலிகடலையூடறுத்து" தன்னைப்பிரிந்து

A திருவாய் 6-4-7, B பெரிய திரு 4-4-6, C நாச்-திரு 13-7, D நாச்-திரு 11-7

நாம் படுவுற்றை நம்மைப் பிரிந்து தான் படவல்லன். (பாடவும் நீவாய்திறவாய்) 1. "இத உபரி ம்ருதஸஞ்ஜீவநம் ராமவ்ருத்தாந்தம்" என்றத்தைக் கேட்டும் உனக்கு உறங்குகைக்கு உறுப்பாயிற்ருே? (வாய்திறவாய்) ப்ரீதிக்குப் போக்குவிடவேண்டாவோ? தாங்கள் ஒரு தலைப் பற்றவேண்டியிருக்கிருர்கள்.

(இனித்தானெழுந்திராய்) எங்களுக்காக உணராவிட்டால் உனக்காக உணரவுமாகாதோ? எங்களாற்ருமை அறிவித்தபின்பும் உறங்கவல்லையாவதே! அகம்பநன் சூர்ப்பணகைஃயுர்ளிட்டார்க்குள்ள இரக்கமும் உன்பக்கல் கண்டிலோம். (ஈதென்ன பேருறக்கம்) எம்பெருமான் பரார்த்த2மாக உணரும்; ஸம்ஸாரிகள் ஸ்வார்த்த2மாக உணருவர்கள். இது இரண்டுபடியுமன்று; ஆர்த்திகேட்டும் உணராதொழிவதே! "பையத்துயின்ற பரமன்" (2) 2. "ப4க3வதஸ் த்வராயை நம:" ஆர்த்தி கேட்டால் அப்படி புறப்படும் அவனேடொக்கப் பழகிவைத்து இங்ஙனே கிடப்பதே! அக்கு3ணங்கள்தானே உன்னை உறக்குகிறதோ?

(அனைத்தில்லத்தாருமறிந்து) 'உன் வாசலிலே எல்லாரும் வந்து எழுப்ப நீ எழுந்திராதொழிந்தாய் என்கிற வேண்டப்பாடு எல்லாருமறியவேண்டியிருந்தாயாகில் அதுவும் செய்ததுகாண், இனி உணராய்' என்ன; "க்ருஷ்ணனையும் நம்மையும் சேரவொட்டாத ஊரிலே, பதினைந்து நாழிகையிலே வந்து எல்லாரும் கேட்க 'மனத்துக்கினியான்' என்பது 'க்ருஷ்ணன்' என்பது, 'எழுந்திராய்' என்பதாய்க் கூப்பிட்டால் நம்மை என் சொல்வார்கள்?" என்ன; "நீ நீயாக, நாங்கள் நாங்களாக வந்துபோய் ப்ரஸித்3த4மாயிற்று; இனி அத்தை விடாய்" என்கிருர்கள். 'ரஹஸ்யமாக ப4க3வத்3விஷயமநுப4விக்குமத்தனையொழிய, புறம்பிதுக்காளுண்டோ' என்றிருந்தாயாகில், "நீ பிறந்த பின்பு இதொரு வ்யவஸ்தை2யுண்டோ? எல்லாரும் உன்னைப் போலேயாம்படி அதுபோய் ப்ரஸித்3த4மாயிற்றுக் கிடாய்" என்ருமாம். எம்பெருமானுர் திருவவதரித்தாற்போலே காணும்; இந்நாச்சியார் அவதரித்த பின்பு எல்லாரும் ப4க3வத்3விஷயமறிந்தது. 12.

## ஸ்வாபதே3ஶ வ்யாக்2யாநம் — பன்னிரண்டாம் பாட்டு

அவ :— பன்னிரண்டாம் பாட்டு. (கனைத்து இத்யாதி3) இப்பாட்டில், பா4க3வதாபி4மாநநிஷ்ட2ரை எழுப்புகிருர்கள்.

வ்யா :— (கனைத்து) ஸ்வாசார்யன், தனக்கும் ஸ்வஸந்தாநத்துக்கும் ப4க3வத்3கு3ணாநுப4வம் பண்ணுவிக்கவில்லையென்று வ்யஸநப்பட்டு. (இளங்கற்றெருமை) பா3லஸந்தாநமுடைய ஶிஷ்யர்: (கன்றுக்கிரங்கி) ஸ்வஸந்தாநத்திலே த3யைபண்ணி. (நினைத்து) ஸ்வாசார்யன் தன்னை அதி4ஷ்டி2த்துக்கொண்டு ஸ்வஸந்தாநத்துக்கு ப4க3வத்3கு3ணாநுப4வம் பண்ணுவித்தருளுகிருனென்று நினைத்து. (முலைவழியே நின்று பால்சோர) பா4வநாப்ரகர்ஷத்தாலே ஸ்வாசார்யாபி4மாநமடியாக ப4க3வத்3கு3ணங்கள் சுரக்க. (நனைத்து இல்லம் சேருக்கும்) ஶ்ரோதாக்களுடைய ஹ்ருத3யத்தை ஸாம்ஸாரிகதாபமெல்லாம் ஆறும்படி குளிரப்பண்ணி, கு3ணாநுப4வத்தாலே களிக்கும்படி பண்ணுகிற. (நல்செல்வன்) ஶ்லாக்4யமான ஸம்பத்தையுடைய பா4க3வதனுடைய. (தங்காய்) ஸோத3ரியானவளே!

(பனித்தலைவீழ) பனியானது தலைமேலே சொரிய. அதாவது A மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளாலே வரும் ப4க3வத்3 கு3ணாநுப4வம். (நின்வாசல் கடைபற்றி) கீழ் ஆசார்யோபதே3ஶமடியாக வரும் ப4க3வத்3கு3ணாநுப4வப்ரவாஹமென்ன, மேலே A மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களால் வரும் கு3ணாநுப4வப்ரவாஹமென்ன, நடுவே ப4ாக3வதகு3ணாநுப4வப்ரவாஹமென்ன, இப்படி ப்ரவாஹத்ரயத்திலே அகப்பட்டு அலைகிற நாம், உனக்கு ப்ரதிபாத3கமான நமஸ்ஸிலே த்3வார வர்த்தியான நகாரமாகிற அவலம்ப3த்தைப்பற்றி; கீழ்ச்சொன்ன கு3ணாநுப4வங்களில் பே4ாக்த்ருத்வபு3த்3தி4 வாராதபடி தடுக்கிற நகாரத்தைப் பற்றி என்றபடி. (சினத்தினால் தென்னிலங்கைக்கோமானைச் செற்ற மனத்துக்கினியானை) கோபத்தினாலே, யமவஶ்யதாமூலமான ஸம்ஸாரத்துக்கு நிர்வாஹகமான அஹங்காரத்தை நஶிப்பித்து, அத ஏவ மனத்துக்கினியனான சக்ரவர்த்தித்திருமகனை. (பாடவும் நீ வாய்திறவாய் இனித்தானெழுந்திராய்) எங்களாற்றாமை காணவேணுமென்று இருந்தாயாகில் கண்டபின்பும் உறங்குமித்தனையோ? எழுந்திராய். (ஈதென்ன பேருறக்கம்) காலமுணர்த்த உணரும் ஸம்ஸாரிகள் நித்3ரை போலுமன்றிக்கே, ஆஶ்ரிதர்களார்த்தி உணர்த்த உணரும் ஈஶ்வரனுடைய உறக்கமும் போலன்றிக்கே, உப4யவிலக்ஷணமான இம்மஹாநித்3ரையேது? ஸம்ஸாரிகள் நித்3ரை, தமோபி4பூ4தியாலுண்டானதாகையாலே ஸத்த்வோத்தரமான காலத்திலே தீரும்படியாயிருக்கும்; ஈஶ்வரனுடைய நித்3ரை, ஜக3த்3ரக்ஷண சிந்தாரூபமாகையாலே பிறரார்த்திகாணத் தீரும்; இவளுடைய நித்3ரை, சரமபர்வ நிஷ்டரானுடைய ஆற்றாமை காணத் தீருமதாகையாலே, அதுக்கு அதி4காரிகள் கிடையாமையாலே பேருறக்கமாயிருக்கும். (அனைத்தில்லத்தாருமறிந்து) ''நாங்கள் உன்னை எழுப்புகிறது எல்லாரும் அறியவேணுமென்றிருந்தாயாகில், அது எல்லோரும் அறிந்தார்கள்; எழுந்திராய்'' என்கிறார்கள். 'ப4க3வத்3விஷயம் ரஹஸ்ய மென்றிருந்தாயாகில் அது எங்கும் ப்ரஸித்3த4மாய்த்து, எழுந்திராய்' என்கிறார்கள்.

கீழ்ப்பாட்டில் ''கற்றுக்கறவைக் கணங்கள் பலகறந்து'' என்று ஸ்வவர்ணோசித த4ர்மாநுஷ்டா2நத்தைச்சொல்லி, இப்பாட்டில் சொல்லாமையாலே அநுஜ்ஞாகைங்கர்ய நிஷ்டனுக்கு ஆஜ்ஞா கைங்கர்ய ஹாநி ஸ்வரூபவிரோதி4 மன்றென்கிறது. இவன் எருமை கறவாமைக்கு இளையபெருமாளை த்3ருஷ்டாந்தமாக அருளிச்செய்து, உபாயாந்தரத்யாக3த்துக்கு ப்ரமாணமாக 1. ''ந தே3வலோகாக்ரமணம்'' என்கிற ஶ்லோகத்தை உதா3ஹரித்தது ஐஸ்வர்ய கைவல்ய ப4க3வல்லாப4ங்களில் அபேக்ஷையில்லாதவர்க்கு தத்ஸாத4நாநுஷ்டா2நத்தில் அபேக்ஷை பிறவாது என்னும் அபி4ப்ராயத்தாலே.

12.

---

A திருவாய் 1-1-1

## பதின்மூன்றும் பாட்டு

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா வரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்ப்
பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம்புக்கார்
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று
புள்ளுஞ் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்!
குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ பாவாய்நீ நன்னாளால்
கள்ளந் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்.

பதவுரை:— புள்ளின் வாய் கீண்டானை—பறவையுருவங்கொண்டு **வந்த ப3காஸுர**னுடைய வாயைக் கிழித்தெறிந்தவனும், பொல்லா அரக்கனை கிள்ளி களைந்தானை — பொல்லாங்குகளுக்கு உறைவிடமான இராவணனை விளையாட்டாக அழித்துப்போட்டவனுமான எம்பிரானுடைய, கீர்த்திமை பாடி போய்—வீரச்செயல்களைப் பாடிக்கொண்டு சென்று' பிள்ளைகள் எல்லாரும்—எல்லாப் பெண்பிள்ளைகளும், பாவைக்களம்—(க்ருஷ்ணனும் தாங்களும்) நோன்பு நோற்கைக்காகக் குறித்தவிடத்திற்கு, புக்கார் — புகுந்தனர்; வெள்ளி எழுந்து—சுக்கிரன் மேலெழுந்து, வியாழம் உறங்கிற்று—கு3ரு அஸ்தமித்தது; (மேலும்) புள்ளும் சிலம்பின காண்—(பறவைகளும் இரைதேடச்) சிதறிச்செல்கின்றன; போது அரி கண்ணினாய்—பூவையும், மானையும் ஒத்துள்ள கண்ணையுடையவளே! பாவாய் — இயற்கையாகவே ஸ்த்ரீத்வத்தைப் பெற்றவளே! நீ—நீ, நல் நாள்—க்ருஷ்ணனும் நாமும் கூடப் போகும் இந்த நல்ல நாளில், கள்ளம் தவிர்ந்து—(கிருஷ்ண கு3ணங்களைத் தனியிருந்து அநுப4விக்கையாகிற) கபடத்தை விட்டு, கலந்து—(எங்களோடு) சேர்ந்து, குள்ளக் குளிர குடைந்து நீராடாதே—மிகக் குளிர்ச்சியாயிருக்கும் நீரில் நன்றாக நீராடாமல், பள்ளி கிடத்தியோ—படுக்கையில் கிடந்து உறங்குகின்றாயோ? ஆல்—ஆச்சரியம்!

## மூவாயிரப்படி—பதின்மூன்றும் பாட்டு

அவ:— பதின்மூன்றும் பாட்டு. a நம் கண் உண்டாகில் தானே வருகிறானென்று கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

வ்யா:— b (புள்ளின்வாய் கீண்டானை) c A 'புள்ளத்தில் மேயும்' c2 இத்யாதி3; ப3காஸுரனைப் பிளந்தபடி. d (பொல்லா அரக்கனை) e தாயையும் தமப்பனையும், e2 உடலையும் உயிரையும் பிரித்தாற்போலே பிரித்த நிர்க்4ருணன்.

---

பெ. அ. பதின்மூன்றும்பாட்டு. (புள்ளின்வாய் இத்யாதி3) a "போதரிக்கண்ணினாய்" என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை (நம் கண் இத்யாதி3) 'நம் கண்ணுண்டாகில்' என்றது — கண்ணழகு உண்டாகிலென்றபடி.

b, c "புள்ளின்வாய் கீண்டான்" என்றதுக்கு — அஸுரனாகையாலே கீண்டானென்னுமத்தை ப்ரமாணமுகே2ந த3ர்ஶிப்பித்துக்கொண்டு ஶப்3த3ார்த்த2ம் அருளிச் செய்கிறார் (புள்ளத்தில் இத்யாதி3) c2 "இத்யாதி3" என்றவநந்தரம் "என்கிறபடியே" என்று ஶேஷம். e2 1. "ராமஸ்ய த3யிதா ப4ார்யா நித்யம் ப்ராணஸமா ஹிதா"

---

A பெரியாழ்-திரு-2-5-4.

A "சுரிகுழல் கனிவாய்" இத்யாதி3; f B "முன்பொலாவிராவணன்" என்னு மித்தனைபோக்கி அவன் தண்ணிமைக்கு ஒரு பாசுரமில்லையிறே. g அத்தாலேயிறே பிராட்டியும் 1. "த்வம் நீச ஶஶவத் ஸ்ம்ருத:" என்றது; h 2. "விபீ4ஷணஸ்து த4ர்மாத்மா" என்று — நல்ல அரக்கனும் உண்டென்கை. (கிள்ளிக்களைந்தானை) i திருவிளையாடு சூழலிலே நோய்புக்கவிடங்களைக் கிள்ளிப்பொகடுமாபோலே, தோ3ஷாம்ஶத்தை வாங்கிப் பொகட்டபடி. j (கீர்த்திமை) k 3. "ஶத்ரோ: ப்ரக்2யாத வீர்யஸ்ய" என்று எதிரிகளுக்கும் k2 நெஞ்சு உளுக்கும்படியான வீர சரிதத்தை. l 3. "ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" என்று — உகவாதார்க்கும் விட வொண்ணுத வீரம், உகந்த பெண்களுக்குச் சொல்லவேணுமோ? 4. "லோகாம்ஶ்ச லோகாநுக3தாந் ப3ஶம்ஶ்ச ஹித்வா ஶ்ரிதாஸ் த்வச்சரணுதபத்ரம் l பரஸ்பரம் தத்3கு3ணவாத3 ஶீது4 பர்யூஷ நிர்யாபிததே3ஹயாத்ரா: ll" m ராவணன்

---

பெ. அ. என்றத்தைப்பற்ற (உடலையும் உயிரையும்) என்றது. f, g திருவினைப் பிரித்தமையைப் பொல்லாங்காக்கி, விஶேஷபரமாகக் கீழ் ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து ஸாமாந்யமாக ஸகலவித4மான பொல்லாங்கையும் விவக்ஷித்துத் தாத்பர்யாந்தரத்தை ப்ரமாண பூர்வகம் அருளிச்செய்கிருர் (முன்பொலா இத்யாதி3 வாக்ய த்3வயத்தாலே) h "அரக்கன்" என்ருல் போராதோ? "பொல்லா" என்னவேணுமோ? என்ன — அருளிச்செய்கிருர் (2. விபீ4ஷணஸ்து இத்யாதி3) k2 நெஞ்சு உளுக்கும்படி — மநஶ்ஶைதி2ல்யம் பிறக்கும்படி, l ஸௌந்த3ர்யாதி3களைப் பாடவேண்டியிருக்க வீரசரிதத்தைப் பாடுகிறதென்னென்ன, அருளிச்செய்கிருர் (3. ரஞ்ஜநீயஸ்ய இத்யாதி3) m ப்ரதிகூலர் வீரத்துக்கு உகக்கக் கூடுமோவென்ன த்3ருஷ்டாந்தம் காட்டிக்கொண்டு உபபாதி3க்கிருர் (ராவணன் இத்யாதி3)

---

சி. அ. பதின்மூன்ரும் பாட்டு. (புள்ளின் வாய் கீண்டானை) d,e,f.h "பொல்லா அரக் கன்" என்றதுக்கு மூன்று பொருள். e பிராட்டியையும் பெருமாளையும் பிரித்த நிர்க்4ருணன் என்னுதல்; f ஹேயனென்னுமித்தனைபோக்கி அவன் தண்மைக்குப் பாசுரமில்லை என்னுதல்; h விபீ4ஷணுழ்வானை வ்யாவர்த்திக்கிறது என்னுதல். h இதுக்கு ப்ரமாணம் (உ. விபீ4ஷணஸ்து த4ர்மாத்மா) என்று. i (திருவிளையாடு சூழலிலே நோய்புக்க இடங்களைக் கிள்ளிப் பொகடுமா போலே) என்றது-உத்3யானத்திலே புழுக்களுற்ருல் அந்த இலையைக் கிள்ளிப்பொகடுமா போலே, அனுகூலரான ஸ்ரீவிபீ4ஷணுழ்வானை நிறுத்தி, தோ3ஷாம்ஶமான ராவணுதி3களை வாங்கிப் பொகட்டான் என்றபடி. j கீர்த்திமை-கு3ணப்ரதை2, k,l,m கீர்த்திமைக்கு மூன்று பொருள்; k முந்தினது ஶத்ருக்கள் ப4யப்படும் வீர்யம் என்று (ஶத்ரோ: ப்ரக்2யாதவீர்யஸ்ய இத்யாதி3) l இரண்டாம் அர்த்த2ம் (ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை: இத்யாதி3) அதாவது—உகவா தார்க்கும் ஆகர்ஷகமான விக்ரமம் என்றபடி. m மூன்ரும் அர்த்த2ம் (ராவணன் பெருமாள்

---

கூ. அ. பதின்மூன்ரும்பாட்டு (புள்ளின்வாய் கீண்டானை இத்யாதி3) d, e, f "பொல்லா அரக்கனை" என்றதுக்கு இரண்டு பொருள். e 'நிர்க்4ருணன்' என்னுதல், f இரண்டாம் தாத் பர்யம் (முன்பொலாவிராவணன் என்று தொடங்கி) இத்தால் தோ3ஷபா3ஹுள்யம் சொல்லுகிறது. d,h வ்யதிரேகத்திலே தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (விபீ4ஷணஸ்து த4ர் மாத்மா இத்யாதி3) இது மூன்ரும் தாத்பர்யம் என்றும் அருளிச்செய்வர். அதாவது—பொல்லா அரக்கரையொழிய நல்ல அரக்கரை ரக்ஷிக்குமென்று பெருமாள் கு3ணத்திலே தாத்பர்யம். i (திருவிளையாடு சூழலில் நோய்) என்றது திருத்தோப்புக்குண்டான நோய் என்றபடி.

---

A பெரியதிரு 5-7-7 B திருக்குறு 15.

பெருமாள் வீரத்துக்கு இலக்கானுன்; m2 தங்கை அழகிலே கண்கலங்கினுள்; m3 தம்பி ஶீலத்துக்கு இலக்கானுன். n (பாடிப்போய்) o இவர்களுக்குப் பாதே2யம் இருக்கிறபடி; p 1. "பாதே2யம் புண்ட3ரீகாக்ஷநாமஸங்கீர்த்த நாம்ருதம்" என்று வழிக்கு த4ாரகம் திருநாமமிறே. q A "தன்தாள்பாடி" என்னக்கடவதிறே.

(பிள்ளைகள் இத்யாதி3) நாம் சென்று எழுப்பவேண்டும் ப3ாலைகளும் உனக்கு முன்னே உணர்ந்து புறப்பட்டார்கள். r (பாவைக்களம் புக்கார்) க்ருஷ்ணனும் தாங்களும் s கழகமிடும் t ஸங்கேதஸ்த2லம் புக்கார்கள்.

'அவர்கள் போகைக்குப் போதுவிடிந்ததோ?' என்ன (வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று) u வெள்ளி உச்சிப்பட்டது; v வியாழம் அஸ்தமித்தது. w உங்களுக்கு நக்ஷத்ரமெல்லாம் வெள்ளியும் வியாழமுமாயிறேயிருப்பதென்ன, அதுவேயன்று. (புள்ளும் x சிலம்பினகாண்) புட்கள் உணர்ந்தமாத்ரமேயன்றிக்கே இரைதேடிச் சிலம்பிப்போயிற்றின.

y (போதரிக்கண்ணினுய்) z புஷ்பம்போலேயும் மான்போலேயுமிருந்துள்ள கண்; அரியென்று — மான். a அன்றிக்கே, பூவிலே வண்டு இருந்தாற்போலே

---

பெ. அ. n, o, p, q "பாடி" என்றது, "போய்" என்றதுக்கு ஹேதுவாகத் தோன்றுகையாலே, அத்தை ப்ரமாணபூர்வகம் உபபாதி3க்கிருர் (இவர்களுக்கு இத்யாதி3 வாக்யத்ரயத்தாலே) q A "தானுகந்தவூரெல்லாம் தன் தாள்பாடிப் பூங்கோவலூர்தொழுதும் போது நெஞ்சே" என்று பாடுகை வழிக்கு த4ாரகமென்றதிறே என்றபடி.

s கழகம் — ஓலக்கம். t ஸங்கேதஸ்த2லமாவது—வர்ஷார்த்த2மாக இந்த்3ராணியையும் ஸம்ஶ்லேஷார்த்த2மாக ரதியையும் நோற்கைக்குப் பெண்கள் திரளுமிடம்.

---

சி. அ. வீரத்துக்கு இத்யாதி3) அதாவது கீர்த்திமை என்று கு3ணவத்தா ப்ரதை2யைச் சொல்லி அந்த கு3ணங்களுக்கு ஈடுபட்டபடி சொல்லுகிறது. m2(தங்கை)ஶூர்ப்பணகை2. m3 (தம்பி) விபீ4ஷணன். m2(அழகிலே) என்றது 2. "தருணௌ" இத்யாதி3யையும், m3 (ஶீலத்துக்கு) என்றது 3. "ஸர்வலோகஶரண்யாய" என்றத்தையும் பற்ற. r,t. பாவைக்களம் — ஸங்கேதஸ்த2லம், u வெள்ளி—ஶுக்ரன். v வியாழம் — ப்3ருஹஸ்பதி. w (உங்களுக்கு நக்ஷத்ரமெல்லாம் வெள்ளியும் வியாழமுமாயிறே இருப்பது) என்றது — ப3ால்யத்தாலும், ப்ராவண்யத்தாலும் கண்டதெல்லாம் வெள்ளியும் வியாழமுமாய் இருந்தது என்றபடி, x சிலம்பினகாண் — சிதறின காண்-பரந்தனகாண். y,z,a b, "போதரிக் கண்ணினுய்" என்றதுக்கு மூன்று தாத்பர்யம். z போதென்று புஷ்பமாய், அரி என்று மானுய், புஷ்பம்போலும் மான்போலும் இருக்கிற கண் என்னுதல்; a அன்றிக்கே, போதென்று புஷ்பமாய். அரி என்று வண்டாய், பூவிலே வண்டு

---

கு. அ. y,z,a,b, "போதரிக்கண்ணினுய்" என்றதற்கு மூன்று தாத்பர்யம். z போதென்று புஷ்பம்; அதாவது நெய்தல் என்றபடி; அரி என்றுமான்; அத்தாலே மான்கண்களைச் சொல்லுகிறது; இத்தால் குவளைப்பூப்போலேயும். இளமான்கண்களைப்போலேயும் இருக்கிற கண் என்னுதல். a அன்றிக்கே 'அரி' என்று வண்டாய், பூவிலே வண்டு படிந்திருந்தாற்போலே என்னுதல்.

---

A திருநெடு 6.

என்றுமாம்; ''அரி'' என்று — வண்டு. b அன்றியே, போதை ஹரிக்கிற கண் என்றுமாம். c பூவோடே சீறுபாறென்னும் கண் என்னவுமாம். d (குள்ளக் குளிர) ஆதித்யனுதித்து நீர் கொதிப்பதற்கு முன்னே. e (குடைந்து நீராடாதே) f 1. ''ஸரயூமவகா3ஹதே'' என்னும்படியே $f_2$ க்ருஷ்ணவிரஹமாற நீராடப்போகாதே. g நமக்குச் செல்லுகிற க்ருஷ்ணவிரஹதாபம் ஶமிக்கைக்கும், இனி ஒருகால் க்ருஷ்ண விஶ்லேஷம் பிறவாமைக்காகவும் $g_2$ க்ருஷ்ண கு3ணங்களிலே அவகா3ஹித்து அநுபவிக்கப்பெறுதே. h (போதரிக்கண்ணினாய்) i உன் கண்ணாலே க்ருஷ்ணனைத் தோற்பித்து, அவன் கண்ணாலே குமிழி நீருண்ணப்பாராதே. A நெடுங்கணிளமான் இவள்; A அனைத்துலகுமுடைய அரவிந்தலோசநன் அவன். இருவர்கண்ணுக்கும் இலக்கானவர்களிறே இவர்கள். j உன்னுடைய ஸௌந்த3ர்யம் எங்கள் பேற்றுக்கு உடலென்றிருந்தோம்; அங்ஙனன்றிக்கே, இழவுக்கு உடலாகாநின்றதோ? k (பள்ளிக்கிடத்தியோ) l க்ருஷ்ணஸ்பர்ஶமுடையதொரு படுக்கையை மோந்துகொடு கிடக்கிறுயோ? விளைந்து கிடக்க m உதிர்நெல் பொறுக்குகிறுயோ?

---

பெ.அ. c ''அரி'' என்று — ஶத்ருவாய், அத்தை அருளிச்செய்கிறுர் (பூவோடே இத்யாதி3) g ஸ்வாபதே3ஶத்துக்குச்சேர அர்த்த2ம் அருளிச்செய்கிறுர் (நமக்கு இத்யாதி3) h, i இவளைக் கண்ணழகையிட்டுச் சொல்லுகிறது நீராடுகைக்கு உபயுக்தமென்னுமது தோற்றுகைக்காக என்று ப்ரதீகக்3ரஹணபூர்வகம் ப4ாவம் அருளிச்செய்கிறுர் (உன்கண்ணாலே இத்யாதி3) k, l கண்வளர்ந்திருக்கும் பெண்ணை ''பள்ளிக்கிடத்தியோ'' என்றதுக்கு ப4ாவம் அருளிச்செய்கிறுர் (க்ருஷ்ணேத்யாதி3)

---

சி.அ. இருந்தாற்போலே இருக்கிற கண் என்னுதல்; b அன்றிக்கே புஷ்பத்தை ஹரிக்கிறகண் என்னுதல். e ''குடைந்து நீராடாதே'' என்றதுக்கு இரண்டு பொருள். $f_2$ க்ருஷ்ண விரஹதாப மாறும்படி நீராடப்போகாதே என்னுதல்; f அதுக்கு ப்ரமாணம்(ஸரயூம் இத்யாதி3) $g_2$ அன்றிக்கே க்ருஷ்ண கு3ணங்களிலே அவகா3ஹித்து அநுப4விக்கப்பெறுதே என்னுதல். $e_2$,h,i 'போதரிக் கண்ணினாய்' என்றத்தோடே கூட்டி ''நீராடாதே'' என்றதுக்கு க்ருஷ்ணனுடைய கடாக்ஷத் தில் அவகா3ஹியாதே என்று தாத்பர்யம் (உன் கண்ணாலே) என்று. h''போதரிக்கண்ணினாய்'' என்று கண்ணழகைச் சொல்லுகிறதுக்குத் தாத்பர்யம் —உன்னுடைய கண்ணழகாலே க்ருஷ் ணனை ஸ்வவஶமாக்கிக்கொண்டு க்ருஷ்ணனோடே இவர்கள் சேரும்படி புருஷீகரிக்கை. e குடைந்து-அவகா3ஹித்து. d குள்ளக் குளிர—மிகவும் குளிர. m (உதிர்நெல்) என்றது உஞ்ச2

---

கு.அ. b அதுவுமன்றிக்கே, நெய்தல்பூவைத் திரஸ்கரிக்கிற கண் என்னுதல். இப்போது 'அரி' என்று ஹரிக்கிற என்றபடி, d ''குள்ளக்குளிர''—மிகவும் குளிர. $e_2$.$f_2$ ''நீராடாதே'' என்றதுக்கு முந்தினது க்ருஷ்ணவிரஹதாபமாறும்படி நீராடாதே என்று; $e_2$,g இரண்டாம்தாத்பர்யம்(நமக்குச் செல்லுகிற க்ருஷ்ண விரஹதாபம் இத்யாதி3) $e_2$,h,i ''போதரிக்கண்ணினாய்'' என்றத்தோடே கூட்டி 'நீராடாதே'' என்றதுக்கு க்ருஷ்ணனுடைய கடாக்ஷத்தில் அவகா3ஹியாதே என்று அரு ளிச்செய்கிறுர் (உன் கண்ணாலே க்ருஷ்ணனைத்தோற்பித்து)என்றுதொடங்கி, இத்தால் க்ருஷ்ண ஸம்ஶ்லேஷம் சொல்லுகிறது. h.j அன்றிக்கே ''போதரிக்கண்ணினாய்'' என்ற பத3த்துக்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிறுர் (உன்னுடைய ஸௌந்த3ர்யம்) என்று தொடங்கி. அதாவது–

---

A திருவாய் 6-7-10.

n (பாவாய்நீ) o தனிக்கிடை கிடக்க வல்லளல்லையே நீ. (நன்னாளால்) க்ருஷ்ணன்கிடாய் பெண்கள்கிடாய் என்கிற நாட்டாரும் இசைந்து அவனும் நாமுமாய் ஜலக்ரீடை$_3$பண்ணி அவன் மடியிலே சாயலாம் காலத்தைப் பெற்று வைத்து, படுக்கையை மோந்துகொடு கிடப்பதே! p (நன்னாளால்) q மேல்வருகிற நாள் ராவணாதி$_3$களைப்போலே பிரிக்கிற நாளிறே. r (கள்ளம்தவிர்ந்துகலந்து) கள்ளமாவது — தனியே க்ருஷ்ணகு$_3$ண சேஷ்டிதங்களை நினைத்துக்கிடக்கை. அத்தைத் தவிர்ந்து எங்களோடே கலந்து; s 'எங்களுக்கு உன்னைக்காட்டாதே மறைக்கையாகிற t ஆத்மாபஹாரத்தைத் தவிர்ந்து எங்களோடே கல' என்றுமாம். u ஶேஷத்வத்தை அபஹரித்தால் ஶேஷியை க்ஷமைகொள்ளலாம்; v ஶேஷித்வத்தை அபஹரித்தால் பொறுத்தோமென்பாரில்லை; குற்றம் நின்றேபோமித்தனை.

கலந்து — குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே பள்ளிக்கிடத்தியோ என்று அந்வயம். 13.

---

பெ. அ. n, o பாவையாயிருக்குமவளை 'பாவாய்' என்று மீளவும் ஸம்போ$_3$தி$_4$க்கைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தனி இத்யாதி$_3$)

u, v தன்னை மறைத்தால் வந்த விரோத$_4$மென்னென்ன அருளிச்செய்கிறார் (ஶேஷத்வத்தை இத்யாதி$_3$) 13.

---

சி. அ. வ்ருத்தி. p, q "நன்னாளால்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (மேல் வருகிற நாள் இத்யாதி$_3$) r,s, "கள்ளம் தவிர்ந்து" என்கிறதுக்குத் தாத்பர்யாந்தரம் (எங்களுக்கு உன்னை இத்யாதி$_3$) u ஶேஷத்வத்தை அபஹரிக்கை - இதரஶேஷமாகை. t (ஆத்மாபஹாரத்தை) ஶேஷியான உன்னுடைய அபஹாரத்தை என்றபடி. v ஶேஷித்வாபஹாரத்தால் வந்த ஹானி ஏதென்ன அருளிச்செய்கிறார் (ஶேஷித்வத்தை அபஹரித்தால் இத்யாதி$_3$) ஶேஷித்வத்தை அபஹரிக்கை—ஸ்வதந்த்ரையாகை.

இப்பாட்டுக்கு ஸ்வாபதே$_3$ஶம்-ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வ பரிகரமான ஜ்ஞான வைராக்$_3$ய ப$_4$க்திகளாலே பரிபூர்ணராயிருக்குமவர்கள் திறத்தில் ததா$_3$ர்த்த$_2$மாக ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸாபேக்ஷராயிருக்கை ஸ்வரூபம் என்று. 13.

---

கு. அ. கண்ணழகாலே க்ருஷ்ணனை ஸ்வவஶமாக்கிக்கொண்டு க்ருஷ்ணனோடு இவர்கள் சேரும்படி புருஷீகரிக்கை.

[புள்ளின்வாய் கீண்டானை என்று தொடங்கி, போதரிக்கண்ணையுடைய பாவாய்! நீ நன்னாளால்—கள்ளம் தவிர்ந்து கலந்து குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே பள்ளிக்கிடத்தியோ] என்று அந்வயம். 13.

## ஆறுயிரப்படி பதின்மூன்றும் பாட்டு

அவ:— பதின்மூன்றும் பாட்டு. (புள்ளின்) தன் கண்ணழகை நினைத்து, 'இக்கண்ணழகுடைய நானிருந்தவிடத்தே எல்லாரும் வருமத்தனையன்றோ; நானோ போவேன்?'என்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். "மனத்துக்கினியானைப்பாடவும்" (12) என்று-இவர்கள் சொன்ன பாசுரத்தை அசல் மாளிகையிலே கேட்டுக் கிடப்பாளொரு பெண்பிள்ளை, நம் அபராதந்தீர இவர்களுக்கு வார்த்தை சொல்லுவோமென்று, "பெண்காள்! இங்கு ராமவ்ருத்தாந்தம் சொன்னதுண்டோ?" என்ன; 'ராமவ்ருத்தாந்தமுஞ் சொன்னோம்; க்ருஷ்ணவ்ருத்தாந்தமுஞ் சொன்னோம்; ஸ்ரீராமாயணமும், பாரதமும், ஸ்ரீபாஞ்சராத்ரமுமகப்படச் சொன்னோம்' என்கிறார்கள்.

வ்யா:— (புள்ளின்வாய் கீண்டானை) A "பள்ளத்தில் மேயும் பறவையுருக்கொண்டு கள்ளவசுரன்" "கள்ளச்சகடம்" (6) என்னுமாபோலே, மேய்கிற கொக்கிலே அஸுரன் ஆவேசித்து நலியப்புகுந்தான். A "பொதுக்கோ" என்று-கீண்ட சடக்கைச் சொல்லுகிறது. (புள்ளின்வாய்கீண்டானை) இது இவர்களுக்கு ராவண வதம் பண்ணினபடி. இத்தலைக்கு அநுமதியிறே வேண்டுவது. விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கை அவன் பணியிறே. இவனுடைய அநுமதியும் அவனுடைய ரக்ஷகத்வமும் ஸ்வரூபத்திலே புகுமத்தனை. கர்மஜ்ஞாநங்களை ஸஹகாரியாகக்கொண்டு பக்தி உபாயமென்றிருக்குமவர்களன்றே; தன்னுடைய அஜ்ஞாநாஶக்திகளையும், அவனுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகளையும் ஸஹகாரியாகக் கொண்டு அவனே உபாயமென்றிருக்குமவர்களிறே. கீழிற் பாட்டிலும் இப்பாட்டிலும் ராமவ்ருத்தாந்தத்தைச் சொன்னால் "ஒருகால் சொன்னத்தையே சொல்லாநின்றார்களோ" என்று நினைக்கக்கூடும் என்று, தங்கள் பாழியான க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தையும் கூட்டிச்சொல்லுகிறார்கள். தங்களுக்குப் பள்ளமடையான க்ருஷ்ணவ்ருத்தாந்தம் சொல்லிற்றாகில், பின்னை ராமவ்ருத்தாந்தமென்னென்னில்; தங்களோடொருகோவையான பிராட்டி பிரிவு பொறுக்கமாட்டாதவருடைய வ்ருத்தாந்தமென்று சொல்லுகிறார்கள். (பொல்லாவரக்கனை) உயிரையுமுடலையும் பிரித்தாற்போலே, தாயையும் தமப்பனையும்ஓரிடத்தில் சேரவிருக்கவொட்டாதே பிரித்த நைர்க்ருண்யத்தாலே வந்த தண்மையை நினைத்து "பொல்லா" என்கிறது. B "முன்பொலாவிராவணன்" என்னுமத்தனை போக்கி, அவன் தண்மைக்குப் பாசுரமில்லையிறே; C திருவினைப் பிரித்த கொடுமையிறே; 1. "துர்வ்ருத்த:" என்னுமித்தனையிறே. இத்தண்மையை. பிராட்டியும், 2. "த்வந்நீச" என்றாளிறே. (பொல்லாவரக்கனை) 3. "விபீஷணஸ்து தர்மாத்மா" என்று-நல்லவரக்கனுமொருத்தனுண்டிறே. (பொல்லாவரக்கனை) 4. "ஜகத்ஸஶைலம் பரிவர்த்தயாம்யஹம்" என்ற நிலைமாறி, தண்ணிய பையல்களளவிலே பர்யவஸித்தபடி. (அரக்கரை) மாயாம்ருகத்தைக் காட்டுவார், மாயாஶிரஸ்ஸைக் காட்டுகைக்கு ஸஹகரிப்பார், க்ருத்ரிமத்தாலே பிரித்த

---

A பெரியாழ் திரு 2-5-4, B திருக்குறு 15, C பெரிய திரு 5-7-7.

விடம் அழகியதாய்ச் செய்ததென்பாராய், ராவணனில் தண்ணியாரில்லையிறே இஜ் ஜாதிக்குள். (கிள்ளிக்களைந்தானை) விரபத்நியாகையாலே A ''கல்லெடுத்து'' என்னுமா போலே, ''கிள்ளி'' என்கிறார்கள். திருவிளையாடுசூழலில் நோவுபட்ட இடங்களைக் கிள்ளிப்பொகடுமாபோலே, தோ3ஷாம்ஶத்தை வாங்கிப் பொகட்டபடி. (கீர்த்திமை பாடி) 1. ''ஶத்ரோ: ப்ரக்2யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:'' என்று-எதிரிகளும் மேலெழுத்திடும்படியான வீர்யமிறே. உகவாதார்க்கும் விடவொண்ணாத வீரம் உகந்த பெண்களுக்குச் சொல்லவேணுமோ? எதிரம்புகோத்த ஸம்ஸாரிகள் 2. ''நமோ நாராயணாய'' என்று-தங்களுடைய தோல்விக்கும் அவனுடைய ரக்ஷகத்வத்துக்கும் மேலெழுத்திட்டுக் கொடுத்தாற்போலே. ராவணன் பெருமாள் வீரத்துக்கிலக்கானான்; தங்கை அழகிலே கலங்கினாள்; தம்பி ஶீலத்துக்கிலக்கானான். 'விரஹ து3ர்ப்ப3லைகளானவர்கள் போனபடியென்?' என்னில் — (பாடிப்போய்) பாட்டே த4ாரகமாகப் போனார்கள். கால்நடைதருகைக்கு த4ாரகம் திருநாமமிறே. 3. ''பாதே2யம் புண்ட3ரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ருதம்''—ஸாக்ஷாத்பாதே2யம் திருநாமஸங்கீர்த்தநம் B ''தன்தாள்பாடி'' என்னக்கடவதிறே. (பாடிப்போய்) 4. ''ப4க3வதோ ப3லேந'' என்கிறபடியே. (பிள்ளைகளெல்லாரும்) நாம் சென்று எழுப்பிக் கொண்டுபோக வேண்டும்படி ப3ாலைகளான பெண்களெல்லாருமுணர்ந்து புறப்பட்டு, க்ருஷ்ணன் பெண்களை மெய்க்காட்டுக்கொள்ளும் ஸங்கேதஸ்த2லத்தேறப்போனார்கள். ''பாவைக் களம்'' என்று-இந்த்3ராணியை, ரதியை நோற்கைக்குப் பெண்கள் திரளுமிடம். திரளுமிடத்தை, ''நெற்களம், போர்க்களம்'' என்னுமாபோலே.

''ப3ாலைகளாகையாலே அவர்கள் காலமறியாமே போகக்கூடும், அறிந்த நாம் அகாலத்திலேபோகவொண்ணாதிறே, ஶுக்ரன் உதி3த்தானாகில் பாருங்கோள்'' என்ன— (வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று) ஶுக்ரப4க3வானும் மத்4யக3தனானான், ப்3ருஹஸ்பதியும் அஸ்தமித்தான். ''நீங்களும் அபி4நிவிஷ்டைகளாகையாலே நக்ஷத்ரஸாத்3ருஶ்யத்தைக்கொண்டு; நக்ஷத்ரமெல்லாம் ஶுக்ரப்3ருஹஸ்பதிகளாயிறே தோற்றுவது. C நின்றகுன்றத்தினை நோக்கி நெடுமால் என்னுமவர்களன்றோ; ஆகையால் அதுவிடிவுக்குடலன்று; வேறடையாளமுண்டாகில் சொல்லுங்கோள்'' என்ன 'நாங்களித்தனைபேர் திரண்டு வந்ததடையாளமன்றோ?' என்கிறார்கள்; 'பிரிந்தார் திரளிலன்றோ திரட்சியாவது; D ''ஈட்டங்கண்டிடக் கூடுமேல்'' என்றும், E ''ஒருகாலும் பிரிகிலேன்'' என்றும் திரியுமவர்களன்றோ நீங்கள்; உங்கள் திரட்சி விடிவுக்குடலன்று; வேறுண்டாகில் சொல்லுங்கோள்' என்ன—(புள்ளுஞ் சிலம்பினகாண்) கீழேயும் ''புள்ளுஞ் சிலம்பின'' (6) என்றது, அங்கு-கூட்டில் நின்றும் சிலம்பினபடி சொல்லிற்று; இங்கு-கூட வழியே போமிடமெல்லாம் போய், ஆஹாரார்த்த2மாகச் சிதறினபடி சொல்லுகிறது.

'திர்யக்குக்களினுடைய வ்ருத்தாந்தங்கொண்டோ காலநியதிபண்ணுவது?'என்று அவள் பேசாதே கிடந்தாள்; ''நாங்கள் சொன்ன வார்த்தைகளுக்கெல்லாம் விபரீதஞ் சொல்லுகிறது உன் கண்ணழகை நினைத்திறே'' — (போதரிக்கண்ணினாய்) உபாஸ்யமிருந்தவிடத்திலே உபாஸகன் வருமித்தனையன்றோ. 5. ''அஸிதேக்ஷணே'' புண்ட3ரீ

A திருநெடு 13, B திருநெடு 6, C திருவாய் 4-4-4, D பெரு - திரு 2-1, E பெரிய திரு 7-4-4.

காக்ஷனிருந்தவிடத்தில் போகக்கடவளோ? என்கிறுர்கள். A ''நெடுங்கணிளமான்'' A ''அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனன்'' என்று-அவனுடைய விபூ4தியும் இவள் கண்ணில் பரப்பிலே ஒரு மூலைக்கும் போராதென்றதிறே. (போது அரிக் கண்ணி) பூவும் மானும் போன்ற கண்; பூவில் படிந்த வண்டு போன்ற கண் என்னவுமாம்; பூவோடே சிறுபாறு என்ற கண் என்னவுமாம்; உலாவுகின்ற மான்போலே இருக்கிற கண் என்னவுமாம். ''அரி'' என்று- மானென் னவுமாம் வண்டென்னவுமாம், ஶத்ருவென்னவுமாம். (குள்ளக் குளிர) ஆதி3த்யகிரணம் பட்டுக்கொதிப்பதுக்கு முன்னே. ஆழ முழுகினுலும் விரஹதாபம் அங்கும் புகுந்து சுடுமென்னுமிடமறியார்களே. (குடைந்து நீராடாதே) 1. ''ஸரயூமவ கா3ஹதே'' என்னுமாபோலே, க்ருஷ்ணவிரஹதாபமாற நீராடப்போராதே. நமக்குச் செல்லுகிற க்ருஷ்ணவிரஹதாபம் ஶமிக்கைக்கும் இனி ஒருகாலும் க்ருஷ்ணவிஶ் லேஷம் பிறவாமைக்காகவும். க்ருஷ்ண கு3ணங்களை அவகா3ஹித்து அநுப4விக்கப் போராதே. உன் கண்ணாலே க்ருஷ்ணனைத் தோற்பித்து, அவன் கண்ணாலே குமிழி நீருண்ணப்போராதே. இருவர்கண்ணுக்குமிலக்கானவர்களிறே நாங்கள். உன்னுடைய ஸௌந்த3ர்யம் எங்கள் பேற்றுக்குடல் என்றிருந்தோம்; அங்ஙனன்றே? (பள்ளிக் கிடத்தியோ) நாமுமவனுமாய் அவன் முழுக்கூட்ட, அவனோடே ஜலக்ரீடை3பண்ணி அவன் மடியிலே சாயக்கடவ அத்தைவிட்டு. அவன் ஒருகால் கிடந்த படுக்கையென்று அத்தை மோந்து கொண்டு கிடக்கிறுயோ? 2. ''தவாங்கே ஸமுபாவிஶம்''. பார்த்த பார்த்தவிடமெங்கும் விளைந்துகிடவாநிற்க, உஞ்ச2வ்ருத்திபண்ணி ஜீவிப்பாரைப்போலே.

(பாவாய் நீ) க்ருஷ்ணனுடைய கண்ணுக்கிலக்காம்படியான நிருபாதி4க ஸ்த்ரீத்வத்தையுடைய நீ தனிக்கிடை கிடக்கவல்லையோ? (நன்னுளால்) ''காலம் வயோऽஸ்யா ஹ்யதிவர்த்ததே'' என்று ஶோகிக்கும்படியன்றேயிருப்பது. காலக்ருதபரிணாமமில்லாத தே3ஶத்தி லுள்ளவர்களும் ஆறியிராநின்றார்களோ? அன்றிக்கே, (நன்னுளால்) இனிச் சற்றுப் போது கழிந்தால் எங்களைத்தான் உன் வாசலிலே நிற்கவொட்டுவர்களோ? ''க்ருஷ் ணன் கிடாய், பெண்கள் கிடாய்'' என்கிற நாட்டாரிசைந்து, க்ருஷ்ணன் முகத்திலே விழிக்கப் புகுகிறநாளன்றே; ஆறியிருக்கிறதென்? (கள்ளம் தவிர்ந்து) கள்ளமாவது- தனியே க்ருஷ்ணகு3ணசேஷ்டிதங்களை நினைத்துக் கிடக்கை; அத்தைத் தவிர்ந்து, எங்களோடே கலந்து. (கள்ளம் தவிர்ந்து) அவனோடே கலந்த உடம்புகாண உகக்கு மவர்களன்றே நாங்கள்; எங்களுக்கு மறைக்கிறதென்? அந்த ஆத்மாபஹாரத்தைத் தவிர்ந்து எங்களோடே கலக்கப்பாராய். 4. ''சோரேணாத்மாபஹாரிணா'' என்று- ஶேஷத்வத்தை அபஹரித்தால் ஶேஷியை க்ஷமைகொள்ள, இக்குற்றம் அவன் பொறுக்கத் தீரும்; ஶேஷித்வத்தை அபஹரித்தால் ஶேஷியுடைய குற்றம் பொறுத்தோமென்பாரில்லை; குற்றம் நின்றநுப4வித்தே போமித்தனை; ஆனபின்பு அவனோடே கலந்த உடம்பைக் காட்டாத எங்களுடைய குற்றம்போலன்றுகாண் உன்னுடைய குற்றம்.

''கள்ளந்தவிர்ந்து கலந்து-குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே-பாவாய் நீ, நன்னுளால்-பள்ளிக்கிடத்தியோ'' என்று அந்வயம். 13.

A திருவாய் 6-7-10

## ஈராயிரப்படி — பதின்மூன்றும் பாட்டு

அவ:— பதின்மூன்றும் பாட்டு. இவளையெழுப்புகிறது அசலகத்தே கேட்டுக் கிடந்தாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

வ்யா:— (புள்ளின்வாய் கீண்டானை) கொக்கின் வடிவு கொண்டு வந்த பகாஸுரனைப் பிளந்தவனை. (பொல்லாவரக்கனை) தாயையும் தமப்பனையும் பிரித்த நிர்க்ருணனை. A "சுரிகுழல் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையில் கடுவிசையரக்கன்". (பொல்லா) B "முன்பொலா இராவண"னிறே. பிராட்டி 1. "த்வம் நீசஶஶவத்" என்றாள். 2. "விபீஷணஸ்து தர்மாத்மா ந து ராக்ஷஸ சேஷ்டித:" என்று நல்ல அரக்கனும் உண்டென்கை.

(கிள்ளிக்களைந்தானை) மறுவலிடாதபடி கிழங்கோடே வாங்கினபடி; தோஷாம்ஶத்தை வாங்கிப் பொகட்டபடி; குணாம்ஶம் ஸ்ரீவிபீஷணாழ்வான். (கீர்த்திமை) எதிரிகள் நெஞ்சு உளுக்கும்படியிறே பெருமாள் பராக்ரமம் இருக்கும்படி. 3. "ஶத்ரோ: ப்ரக்யாத வீர்யஸ்ய" என்னும்படியான வீர்யம். ராவணன் வீர்யத்துக் கிலக்காணுன். தங்கை அழகுக்கிலக்காணுள். தம்பி ஶீலத்துக்கிலக்காணுன். தங்களுக்கு பலமுண்டாக அவன் விஜயத்தையே அநுஸந்திக்கிருர்கள்; பரம சேதனன் உபாயமாமிடத்தில் அது 4. "ஜ்ஞாநஶக்திக்ருபாஸு" என்கிற ஜ்ஞான ஶக்தி க்ருபைகள் வேண்டுகையாலே, அவற்றை அநுஸந்தித்து மார்விலே கை வைத்து உறங்குமவர்கள் இவர்கள். 5. "குணவாந் வீர்யவாந்" இறே. (பாடிப்போய்) கால் கொண்டு போய் என்கை. (பிள்ளைகளெல்லாருமித்யாதி) "இன்னமுணர்ந்து முணராத சிறு பிள்ளைகளை எழுப்பிக்கொண்டு விடிந்தவாறே போகிருேம்" என்ன, 'அவர்கள் முன்னே உணர்ந்து க்ருஷ்ணன் மெய்க்காட்டுக்கொள்ளுமிடம்புக்கார்கள்' என்கிருர்கள். (பாவைக்களம்) "போர்க்களம் நெற்களம்" என்பாரைப்போலே. (பிள்ளைகளெல்லாரும்) எல்லாரும் — நாம் சென்றெழுப்ப வேண்டும்படியான பாலைகளும். (பாவைக்களம்) ஸங்கேதஸ்தலம். "அவர்கள் போனார்களாகிலும் அகாலத்திலே போகவேணுமோ? விடிந்தால் போருங்கோள்" என்ன — (வெள்ளி யெழுந்து) 'நினைக்கிறபடியே வெள்ளியுச்சிப்பட்டு வியாழனும் அஸ்தமித்தது' என்ன; "நக்ஷத்ரங்கள் கண்டதெல்லாம் வெள்ளியாயும் வியாழமாயுமன்றே உங்களுக்குத் தோற்றுவது; அவை புனர்பூசமும் பூசமுமாகக் கொள்ளீர்: மற்றடையாளமுண்டோ" என்ன, 'நாங்கள் திரண்டு தோன்றுமதுஅல்லவோ?'என்ன, 'நீங்கள் பிரியிலன்றே திரளவேண்டுவது. மற்றடையாளமுண்டோ?' என்ன—(புள்ளும் சிலம்பினகாண்) புள்ளும் சிதறிப் போந்தன. (போதரிக்கண்ணினாய்) "இக்கண்ணுடைய எனக்கு ஓரிடத்தே புறப்படவேணுமோ என்ன? என்காலிலே விழுகிருர்கள்" என்று கிடக்கிருயோ? (அரி) வண்டு. பூவிலே வண்டிருந்தாற் போலே. 6. 'அஸிதேக்ஷணா' யாகையாலே, அவனும் அவன் விபூதியும் கண்ணிலொரு மூலைக்குப் போராது. இக்கண்ணாலே அவனைக் குமிழிநீருண்ணப்பாராய். (குள்ளக்குளிர) ஆதித்ய கிரணங்களாலே நீர் வெதும்புவதற்கு முன்னே. (குடைந்து நீராடாதே) தாங்களாகையாலே உள்ளே கிடந்தாலும் தங்கள் ஸம்பந்தத்தாலே கொதிக்குமென்று அறிகிறிலள். (பள்ளிக்கிடத்தியோ) பிள்ளைகள் தாங்களும்

A பெரியதிரு 5-7-7. B திருக்குறு 15.

படுக்கையை விட்டுப் போகாநிற்க, நீ படுக்கையிலே கிடப்பதே! அவன் கிடந்து போன படுக்கையென்று மோந்து கொண்டு கிடக்கிருயோ? பயிர் விளைந்து கிடக்க, கதிர் பொறுக்கி ஜீவிக்கிருயோ? (பாவாய் நீ) தனி கிடக்கவல்லளோ நீ? (நன்னுள்) அடிக்கழஞ்சு பெற்ற இந்நாளிலே. இந்நாலு நாளும் போனுல், மேலில் நாள்கள் ராவணனைப்போலே பிரிக்கும் நாள்கள்.

(கள்ளம் தவிர்ந்து) 1. "சோரேணாத்மாபஹாரிணா" என்று தத்3வஸ்துவிலும் ததீ3யவஸ்துவை அபஹரிக்கையன்றோ பெருங்களவு. "கலந்து குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே" என்று க்ரியை. 13,

## நாலாயிரப்படி — பதின்மூன்ரும் பாட்டு

அவ:-பதின்மூன்ரும்பாட்டு. இவளை எழுப்புகிறது அசலகத்திலே கேட்டுக்கிடந்தா ளொருத்தி தன்னபராத4த்தைத் தீர உணர்ந்தாளாய், 'பெண்காள்! இங்கும் ராமவ்ருத் தாந்தம் சொல்லி எழுப்பினிகோளோ?' என்ன, 'ராமவ்ருத்தாந்தமும் சொன்னேம், க்ருஷ் ணவ்ருத்தாந்தமும் சொன்னேம், ஸ்ரீராமாயண மஹாப4ாரதங்களிரண்டும் சொன்னேம்' என்று கண்ணழகியாளொருத்தியை எழுப்புகிருர்கள்.

வ்யா:— (புள்ளின் வாய்கீண்டானை) கொக்கின் வடிவு கொண்டு வந்த அஸு ரனைப் பிளந்தபடி. A "பள்ளத்தின் மேயும்". இத்தலைக்கு இசைவேயிறே வேண்டுவது. விரோதி4 போக்குகை அவன் படியென்றிருக்கை. நம்முடைய அநீதிகளுக்கு ஈஶ்வரன் பண்ணும் அநுமதி வைஷம்ய நைர்க்4ருண்யத்தில் புகாதாப்போலே, இவ்வநுமதி உபாயத்தில் புகாது. இருவர்க்கும் இரண்டநுமதிகளும் ஸ்வரூபத்திலே கிடக்குமத் தனை. (பொல்லாவரக்கனை) தாயையும் தமப்பனையும் பிரித்த நிர்க்4ருணனை. B "சுரிகுழல் கனிவாய்த் திருவினைபபிரித்த கொடுமையில் கடுவிசையரக்கன்". (பொல்லா) C "முன் பொலாவிராவணன் தன் முதுமதிளிலங்கைவேவித்து". பிராட்டி 2. "த்வம் நீச ஶஶவத் ஸ்ம்ருத:" என்ருள். இவள் தானும், D "அன்றின்னுதன செய்சிசுபாலன்" என்ருள். 3. "விபீ4ஷணஸ்து த4ர்மாத்மா நது ராக்ஷஸ சேஷ்டித:" என்று நல்லவரக்கனு முண்டென்கை. 4. "ஸீதாயாஶ்சரிதம் மஹத்" என்கிற பிராட்டிவ்ருத்தாந்தம் ஸ்ரீராமாயணமானபடியென்னென்னில்; 5. "கு3ணவாந்" என்றது அவனையும் அவளை யும் கூட்டி வாழ நினைக்குமவர்களோடு பரிமாறினபடி. 5. "வீர்யவாந்" என்றதுபிரிக்க நினைத்தார் முடியும்படி. 5. "த4ர்மஜ்ஞ:" என்றது அவர்கள் ஸ்வரூபமுணர்ந்திருக்கும்படி.

(கிள்ளிக்களைந்தானை) மறுவலிடாதபடி கிழங்கோடே வாங்கினபடி. திருவிளை யாடு சூழலில் புழுத்தவிடம் கிள்ளிப் பொகடுமாபோலே, ஆஶ்ரிதர் குடியில் தே3ாஷாம் ஶத்தை வாங்கிப்பொகட்டபடி. (கீர்த்திமை) எதிரிகள் நெஞ்சு உளுக்கும்படி. என்னும்படியிருக்கும் வீரம். 6. "ஶத்ரோ: ப்ரக்2யாதவீர்யஸ்ய" 7. "க இதி ப்3ரஹ் ஶத்ருக்களும் மேலெழுத்திட்டுக்கொடுக்கும் வீரம். மேலெழுத்திட்டுக் மணோ நாம" என்று பரரானவர்கள் ப4க3வத்பரத்வத்துக்கு கொடுக்குமாபோலே; ஆத்மாபஹாரிகள் எதிரம்பு கோக்கை தவிர்ந்து 8. "நமோ நாரா ணாய" என்று அவ்னுடைய ஶேஷத்வத்துக்கு மேலெழுத்திட்டுக்கொடுக்குமாபோலே. (ரஞ்ஜநீயஸ்ய) தோளாலே நெருக்குண்ட பிராட்டியார் சொல்லுமாபோலே சொல்லுவதே!

---

A பெரியாழ் திரு 2-5-4, B பெரிய திரு 5-7-7, C திருக்குறு 15, D நாச்-திரு 4-7.

உகவாதார்க்கும் விடவொண்ணாத வீரம் உகந்த பெண்களுக்கு விடவொண்ணாமைக்குச் சொல்லவேணுமோ? ராவணன் பெருமாள் வீரத்துக்கிலக்கானான், தங்கை அழகுக்கிலக்கானாள்; தம்பி ஶீலத்துக்கிலக்கானான். தாங்கள் அப$_{3}$லைகளாகையாலே தங்களுக்கு ப$_{3}$லமாக அவன் விஜயத்தை அநுஸந்தி$_{4}$க்கிறபடி. கர்மஜ்ஞாநப$_{4}$க்திகள் உபாயமாமிடத்தில் இவனும் கூடவேணும். பரமசேதநனான இவன்தானே உபாயமாமிடத்தில் 1- "பாபீயஸோபீத்யாதி$_{3}$ —த்வஜ் ஜ்ஞாநஶக்திகருணாஸு ஸதீஷு" என்று ஜ்ஞாநஶக்திக்ருபையே ஸஹகாரமாகையாலே அவற்றை அநுஸந்தி$_{4}$த்து மார்விலே கைவைத்துக்கொண்டு உறங்குவார்களிவர்கள். (பாடிப்போய்) இவர்களுக்குக் கால்நடை தருகைக்கு மிடுக்குக்கா[illegible] கொண்டு போகை. ஸுகுமாரரான பிள்ளைகள் 'உண்டுண்டு வழிபோய்' என்னுமாபோலே. 2. "பரஸ்பரம் தத்$_{3}$கு$_{3}$ண[illegible] நிர்யாபிததே$_{3}$ஹயாத்ரா:" 3. "பாதே$_{2}$யமித்யாதி$_{3}$". A போழ்துபோக உள்ளகிற்கும் புன்மையில்லாதவர்கள் இவர்கள். அவர்களுக்கு A "வாழ்துணையா வடமதுரைப் பிறந்தவ" னன்றோ; இவர்களுக்குச் சொல்ல வேணுமோ?

(பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார்) 'இன்னமுணர்ந்தும் உணராத சிறுபிள்ளைகளையும் எழுப்பிக்கொண்டு விடிந்தவாறே போகிறோம்' என்ன; 'அவர்கள் உனக்கு முன்னே உணர்ந்து க்ருஷ்ணன் மெய்க்காட்டுக் கொள்ளுமிடம் புக்கார்' என்கிறார்கள். (பாவைக்களம்) 'போர்க்களம்' 'நெற்களம்' என்னுமாபோலே; (எல்லாரும்) நாம் சென்றெழுப்பவேண்டும்படியான ப$_{3}$ாலைகளும். (பாவைக்களம்) ஸங்கேதஸ்த$_{2}$லம். 'அவர்கள் போனார்களாகிலும் அகாலத்திலே போகவொண்ணாது; வெள்ளி எழுந்ததோ பாருங்கோள்' என்ன—(வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று) நீ நினைக்கிறவளவு தப்பி வெள்ளி உச்சிப்பட்டு வியாழம் அஸ்தமித்தது.

'நக்ஷத்ரம் கண்டதெல்லாம் வெள்ளியாயும் வியாழமாயுமன்றோ உங்களுக்குத் தோற்றுவது; அவை புனர்பூசம் பூசங்களாகக் கொள்ளீர்; மற்றடையாளமுண்டோ?' என்ன; 'நாங்கள் திரண்டதொன்றுமல்லவோ?' என்ன, 'நீங்கள் பிரியிலன்றோ திரளவேண்டுவது, மற்றடையாளமுண்டோ?' என்ன — (புள்ளும் சிலம்பினகாண்) அது ப்ரமாணமன்றாகில் புள்ளும் சிதறிப்போயிற்றின. பண்டு ஒருகால் 'புள்ளும் சிலம்பின' (6) என்றது; அப்போது கூட்டிலேயிருந்து சிலம்பிற்று; இப்போது பறந்து போகத் தொடங்கிற்று என்கை. (போதரிக்கண்ணினாய்) 'உங்கள் வார்த்தை பழகிறிலேன்' என்று பேசாதே கிடக்க, 'இக்கண்ணுடைய எனக்கு ஓரிடத்திலே புறப்படவேணுமோ? எல்லாரும் என்காலிலே வந்து விழுகிறார்கள்' என்று கிடக்கிறாயோ? (போது அரி) பூவும் மானும் போன்றகண்; பூவிலே வண்டிருந்தாற்போலே என்றுமாம்; பூவோடே சீறுபாறென்றுமாம். 4. "அஸிதேக்ஷணை"யாகையாலே 'புண்ட$_{3}$ரீகாக்ஷன் பக்கல் போகவேணுமோ?' என்னும். தான் B "நெடுங்கணிளமான்"; அவன் B "அனைத்துலகமுடைய அரவிந்தலோசனன்"; அவனும் அவன் விபூ$_{4}$தியும் இக்கண்ணிலே ஒரு மூலைக்குப் போராது. (போதரிக்கண்ணினாயித்யாதி$_{3}$) இக்கண்ணிலே அவனைக் குமிழிநீரூட்டி அவன் கண்ணிலே நாம் குமிழிநீருண்ணப் பாராய் என்கை. (குள்ளக்குளிர) ஆதி$_{3}$த்யகிரணத்தாலே நீர் வெதும்புவதற்கு முன்னே

A திருவாய் 9-1-8. B திருவாய் 6-7-10.

புறப்பட்டு. பெண்களும் புறப்பட்டு, நீர் வெதும்புவதற்கு முன்னே என்னவுமாம். (குடைந்து நீராடாதே) தாங்களாகையாலே உள்ளே குடைந்தாடும் தங்கள் ஸம்ப3ந்த4த்தாலே கொதிக்குமென்றறிகிறிலள்.

(பள்ளிக் கிடத்தியோ) பிள்ளைகள் படுக்கையிலே விட்டுப் போகாநிற்க, நீ படுக்கையிலே கிடப்பதே அவன் கிடந்துபோன படுக்கையை மோந்து கொண்டு! பயிர் விளைந்து கிடக்கக் கதிர் பொறுக்கி ஜீவிக்கிறுயோ? (பாவாய் நீ) தனிக்கிடக்க வல்லளோ நீ? (நன்னாள்) அடிக்கழஞ்சு பெற்ற நாளிறே; இந்நாலு நாளும் போன வாறே பெண்களும் க்ருஷ்ணனும் என்று புகுகிறுர்கள் கிடாய்? இந்நாலுநாளும் போம்போறே மேல் நாள்கள் ராவணனைப் போலே பிரிக்கும் நாட்கள். ஆண்டாள் திருவேகாதசி பட்டினிவிட்டு ப4ட்டரை 'தீர்த்த2ம் தாரும்' என்ன, 'இப்பெரிய திருநாளிலே இதொரு திருவேகாதசி எங்ஙனே தேடி எடுத்துக்கொண்டிகோள்' என்றருளிச்செய்தார்.

(கள்ளம் தவிர்ந்து) 1. "சோரேணாத்மாபஹாரிணா" என்ற தத்3வஸ்துவிலும் ததீ3யவஸ்துவை அபஹரிக்கையன்றோ பெருங்களவு. A "என்னுடை நாயகனே" என்னும்படியே ஸ்வாமித்வத்தைச்சொல்லி, ஶேஷபூ4தனுக்கு ஶேஷத்வத்தை அபஹரித்தால் ஶேஷியை க்ஷமை கொள்ளலாம். ஶேஷிக்குத் தன் ஶேஷித்வத்தை அபஹரித்தால் க்ஷமை கொள்ளுகைக்குப் பொறுத்தோமென்பாருமில்லையே; குற்றம் நின்றேபோமித்தனை. "கலந்து குள்ளக்குளிரக்குடைந்து நீராடாதே பாவாய் பள்ளிக் கிடத்தியோ" என்று க்ரியை. 2. "தஸ்யோபவநஷண்டே3ஷு" இத்யாதி3. 13.

## ஸ்வாபதே3ஶ வ்யாக்2யாநம் — பதின்மூன்றும் பாட்டு

அவ:— பதின்மூன்றும் பாட்டு. (புள் இத்யாதி3) இப்பாட்டில். — நமக்கு ஸ்வரூபஜ்ஞாநமுண்டாகில், அவன்தானே வருகிறனென்று நிர்ப்ப4ரராயிருக்கு மவரை எழுப்புகிறுர்கள்.

வ்யா:— (புள்ளின் வாய்கீண்டானை) ஸ்வாஶ்ரிதருக்கு ஸ்வாநுப4வ விரோதி4யான காமாதி3தோ3ஷ நிவர்த்தகனுய். (பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தானை) பொல்லாத அப்ராப்த விஷயபூ4தமான அஹங்காரத்தை; அஹங் காரத்துக்கு நன்மை தீமைகளாவன — "அஹம், மம" என்றுல் ஈஶ்வரனும் ஈஶ்வர விபூ4தியும் ஸ்வாபி4மாந விஷயமாகத் தோன்றுகை-அஹங்காரத்துக்கு நன்மை யாவது; தே3ஹமும் ஆத்மாவும் ஸ்வதந்த்ரமாகத் தோன்றுகை-தீமையாவது; அநுகூலமான அஹங்காரத்துக்கு அழல்தட்டாதபடி நிரஸித்தவனுடைய. (கீர்த்திமை பாடிப்போய்) கல்யாண கு3ணங்களை ப்ரீதிக்குப் போக்கு வீடாகப் பாடி அதுவே த4ாரகமாகப் போய். (பிள்ளைகளெல்லாரும்) நாம் சென்று ஏழுப்ப வேண்டிய அகி2ல (அபி4நவ) ப4ாக3வதரும். (பாவைக்களம் புக்கார்) அநந்யார் ஹரான ஸ்ரீவைஷ்ணவர்கள் நிருபகமான ஸங்கேத ஸ்த2லத்தை ப்ரவேஶித்தார்கள்.

A பெரியாழ் திரு 5-4-3.

## பதினான்காம் பாட்டு

**உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்**
**செங்கழுநீர் வாய்நெகிழ்ந்(து) ஆம்பல்வாய் கூம்பினகாண்**
**செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்**
**தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்**
**எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்**
**நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்!**
**சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்**
**பங்கயக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய்.**

பதவுரை:— எங்களை—(உன் தோழியராகிய) எங்களை, முன்னம் எழுப்புவான்—முதன் முதலில் எழுப்புவதாக, வாய்பேசும்—வாயாலே சொல்லிவைத்த, நங்காய்—பரிபூர்ணையே! நாணாதாய்—('சொன்னபடி செய்யாதொழிந்தோமே' என்னும்) வெட்கமுமற்றவளே! நா உடையாய்—(இன் சொற்களைப் பொழியும்) நாவை உடையவளே! உங்கள் புழைக்கடை தோட்டத்து வாவியுள்—உங்களுடைய புழைக்கடையிலுள்ள தோட்டத்தில் விளங்கும் குளத்தினுள், செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து—செங்கழுநீர் மலர்கள் மலர்ந்து, ஆம்பல் வாய் கூம்பினகாண்—கருநெய்தல் மலர்கள் குவிந்துகொண்டன காண்! (மேலும்) செங்கல் பொடி கூறை—காஷாயம் படிந்த உடையை அணிந்தவரும், வெண்பல்—வெளுத்தபற்களையுடைய வரும், தவத்தவர்—தபோவேஷத்தை உடையவருமான சைவஸந்யாஸிகளும், தங்கள் திருக் கோயில்—தங்களுடைய தெய்வஸந்நிதிகளில், சங்கு இடுவான் — சங்கு ஊதுகைக்காக, போகின்றார்—செல்கின்றனர்; சங்கொடு சக்கரம்—சங்கத்தையும் சக்கரத்தையும், ஏந்தும்—(இரு கைகளிலும்) லாக4வமாக தரிக்கும், தட கையன் — பெரிய கைகளை உடையவனாய், பங்கய கண்ணானை—செந்தாமரை போன்ற கண்களை உடையவனான ஸர்வேஶ்வரனை. பாட—(ப்ரீதிக்குப் போக்குவிட்டுப்) பாடுவதற்காக, எழுந்திராய்—எழுந்திருப்பாயாக.

---

ஸ்வா:- அதாவது-காலக்ஷேப கூடம். (வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று) பரிஶுத்3த4மான ஜ்ஞாநம் அபி4வ்ருத்3த4மாய், அஜ்ஞாநம் தலைமடிந்தது. (புள்ளுஞ் சிலம்பினகாண்) மற்றுமுள்ள பா4க3வதரும் த்வரித்துக்கொண்டு போந்தார்கள். (போதரிக்கண்ணினாய்) ஸ்வச்ச2மாய் ஶ்லாக்4யமாய் ஸாரக்3ராஹியான ஜ்ஞா நத்தையுடையவரே! (குள்ளக்குளிர) அவனைப்பிரிந்திருந்த வ்யஸநமெல்லாம் நிஶ்ஶேஷமாய்ப்போம்படி. (குடைந்து) காலக்ஷேபகூடத்திலே ப்ரவேஶித்து. (நீராடாதே) ப4க3வத3நுப4வத்தைப் பண்ணாதே. (பள்ளிக்கிடத்தியோ) தனித்து கு3ணாநுப4வம் பண்ணுகிறாயோ? (பாவாய் நீ) தனித்து கு3ணாநுப4வம் பண்ண வல்லையோ? (நன்னாளால்) ஸத்த்வோத்தரமான காலம் நேர்பட்டபடி என்தான்! (கள்ளம் தவிர்ந்து) உன்னை எங்களுக்குக் காட்டாமலிருக்கிற களவை விட்டு. (கலந்து) எங்களோட ஒருநீராகக் கலந்து எங்கள் ஸத்தையை உண்டாக்காய். 13.

## மூவாயிரப்படி — பதினுன்காம் பாட்டு

அவ:— பதினுன்காம்பாட்டு. a இவையெல்லாவற்றுக்கும் தானே கடவளாய், எல்லாரையும் தானே எழுப்பக்கடவதாகச் சொல்லிவைத்து, அது செய்யாதே உறங்குகிருளொருத்தியை எழுப்புகிருர்கள்.

வ்யா:— b (உங்கள் $b_2$ புழைக்கடை இத்யாதி$_3$) c 'செங்கழுநீர் அலர்ந்து ஆம்பல் மொட்டிக்கும்படி போது விடிந்தது; உறங்குவதே இன்னம்!' என்ன; 'நீங்கள் வயலிலே போனிகளோ?' என்ன; 'புழைக்கடைத்தோட்டத்து வாவியுள் செங்கழுநீர் அலர்ந்து ஆம்பல் மொட்டித்தன' என்ன; d 'அது பின்னை நீங்கள் வலிய அலர்த்தினிகோள்' என்ன; (உங்கள் புழைக்கடைத் e தோட்டத்து வாவியுள் செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பின) எங்களுக்குப் புகுரவொண்ணுதே அஸாதா்யம்பஸ்யமான உங்கள் புழைக்கடைத்தோட்டத்து வாவியுள் செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் மொட்டித்தன: f வெயில்

---

பெ. அ. பதினுலாம்பாட்டு. (உங்கள் இத்யாதி$_3$) a "நங்காய்" என்றதையும் "எங்களை முன்னமெழுப்புவான் வாய்பேசும்" என்றதையும் கடாக்ஷித்து அவதாரிகையிடுகிருர் (இவையெல்லாவற்றுக்கும் இத்யாதி$_3$)

$b_2$, c "புழைக்கடை" என்று விஶேஷித்ததுக்கு உக்திப்ரத்யுக்திமுகே$_2$ந ப$_4$ாவம்அருளிச்செய்கிருர் (செங்கழுநீர் இத்யாதி$_3$) b, d "உங்கள்" என்ற பத$_3$ப்ரயோக$_3$த்துக்கு உக்திப்ரத்யுக்திமுகே$_2$ந ப்ரயோஜநம் அருளிச்செய்கிருர் (அது பின்னை இத்யாதி$_3$) இவர்களுக்குப் புகுரவொண்ணுத புழைக்கடையில் அலருகையையும் மொட்டிக்கையையும் புறம்புள்ளவற்றைக் கண்டு அநுமித்துச்சொல்லுகிருர்களென்று கருத்து. e, f "தோட்டம்" என்று விஶேஷித்ததுக்குப் ப$_2$லிதார்த்த$_2$ம் அருளிச்செய்கிருர் (வெயில் இத்யாதி$_3$) இத்தால்—கிரணஸ்பர்ஶத்தாலொழிய அலருகையும் மொட்டிக்கையும் கூடாதென்று அவள்பண்ணுகிற

---

சி. அ. பதினுலாம்பாட்டு (உங்கள்) b,c,d "செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய்
கூம்பினகாண்" என்ன, உள்ளேயிருக்கிறவள் "என்னைக்காணப்புகுகிருேம் என்று மலர்ந்த
உங்களுடைய கண்களையும், நான் வார்த்தை சொல்லாமையாலே சிவட்கென்று முகுளித
மான உங்களுடைய வாய்களையும் கண்டு செங்கழுநீர் மலர்ந்து ஆம்பலும் கூம்பின என்று
ப்$_4$ரமித்திகோளாகவடுக்கும்" என்ன, புறத்திலே இருக்கிறவர்கள் "வயலிலும் செங்கழுநீர்
நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பிற்றின காண்" என்ன, உள்ளிருக்கிறவள் "நான் எழுந்தி
ருக்கவேணும் என்று நீங்கள் வலிய அலர்த்துகைக்கும் மொட்டிக்கப்பண்ணுகைக்கும்
வயலிலே போனீர்களோ?" என்ன, புறத்திலிருக்கிறவர்கள் "உங்கள் புழைக்கடை" என்
கிருர்கள். இப்படி அத்$_4$யாஹரித்துக் கொள்ளவேணும். f (வெய்யில் பட்டன்றிக்கே கால
பாகத்தாலே என்கை) என்றதுக்குத் தாத்பர்யம்—ஸூர்யோத$_3$யமானல் வெய்யில்பட்டு
விகஸிக்கிற வயல்களிலே இருக்கிற செங்கழுநீர்மாத்ரமன்றிக்கே, ஆதி$_3$த்யகிரண ஸஞ்சார
மில்லாத புழைக்கடையில் வாவியிலுள்ள செங்கழுநீர் விகஸிதமாயிற்றின என்றபடி. இத்தால்
மிகவும் வெய்யில் ஏறிற்று என்றபடி, b, $f_2$ "உங்கள் புழைக்கடை" என்று வேறிட்டுச்

பட்டன்றிகே f2 காலபாகத்தாலே என்கை. g இவள் எழுந்திராத இன்னுப்பாலே, "உங்கள் புழைக்கடை" என்று வேறிட்டுச் சொல்லுகிறர்கள்.

'அலர்ப்புகுகிறவளவிலே கழிய அலர்ந்ததென்று சொல்லுகிறிகோள்; வேறு அடையாளம் உண்டோ?' என்ன; b (செங்கற் பொடிக்கூறை இத்யாதி3) i அளற்றுப்பொடியிலே புடைவையைப் புரட்டி, ப்3ரஹ்மசர்யம் தோற்றப் பல்லை விளக்கி j த3ண்ட3பரிஹாரார்த்த2மாகத் தபோவேஷத்தையுடையரான ஸிவத்3விஜருங்கூடத் தங்கள் தே3வதைகளை ஆராதி4க்குங் காலமாய்த்து, "திருக்கோயில்" என்றது—அவர்கள் சொல்லும் பாசுரத்தாலே. k "சங்கு" என்று - ஆராத4நோபகரணத்துக்கு உபலக்ஷணம்; l குச்சியிட என்றுமாம். இத்தால் m அஸூத்3த4ருங் கூட எழுந்திருக்கும் காலமாய்த்து என்கை. n ஸந்யாஸிகள் ஸந்த்4யாவந்த3நம் பண்ணித் தங்களுடைய அகங்களிலே திருவாராத4நம்பண்ணும் காலமாய்த்து என்றுமாம்.

---

பெ.அ. அந்யதா2ஸித்3தி4யைப் பரிஹரித்தார்களென்று சொல்லிற்றுய்த்து. g இவளுடைய தோட்டமென்று தோற்றவேண்டில் "இந்தப்புழைக்கடை" என்னலாயிருக்க, "உங்கள்" என்று — மமகாரமுண்டானவர்களைப்போலே சொல்லக்கூடுமோவென்ன, அருளிச்செய்கிறர் (இவள் இத்யாதி3)

j 'த3ண்ட3பரிஹாரார்த்த2மாக' என்றது-ராஜாக்கள் த3ண்ட3ம்கொள்வர்; அது வாராமைக்கு என்றபடி. k "சங்கிடுவான்" என்றதுக்கு, சங்காலே நீர்விடுகை அர்த்த2மாய், தாத்பர்யம் அருளிச்செய்கிறர் ('சங்குஎன்று' இத்யாதி3) இது எம்பார் நிர்வஹிக்கும்படி. h, n "செங்கல்பொடிக்கூறை" என்று-காஷாயவஸ்த்ரதா4ரிகளென்றும், "வெண்பல்" என்று-தாம்பூ3லாதி3களில்லாமையாலே போ4க்3யத்3ரவ்யங்களில் விரக்தரென்றும், "தவத்தவர்" என்று-ஸாத்விகரென்றும் ஸப்3தா3ர்த்த2ம் விவக்ஷித்து, திருமலைநம்பி அருளிச்செய்த யோஜநாந்தரம் அருளிச்செய்கிறர் (ஸந்யாஸிகள் இத்யாதி3)

---

சி.அ சொல்லுகையாலே கட்டும் காவலுமாயிருக்கையாலே தமக்கு ப்ரவேஸிக்கப்போகாது, வலிய அலர்த்துகைக்கு; காலபாகத்தாலே அலர்ந்தன என்றபடி. i அளற்றுப்பொடியாவது — செங்கல்லாலே வைத்த சுவரில் உதிர்ந்த பொடி. k,l, "சங்கிடுவான்" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்; k ஸங்க2ம் பிடிக்கைக்காக என்னுதல், l சங்கு என்று குச்சியாய், குச்சி திறக்கைக்காக என்னுதல். m (அஸூத்3த4ருங் கூட எழுந்திருக்கும் காலமாய்த்து) என்றதுக்குத் தாத்பர்யம் தாமஸராகையாலே உதி3த்த பிற்பாடொழிய எழுந்திரார்கள் என்றபடி. h,n "செங்கற் பொடிக்கூறை" என்றதுக்கு இரண்டாம் அர்த்த2ம்—காவிதோய்த்த புடவையையுடையராய், வெளுத்த பல்லையுமுடையராய், நல்ல தபஸ்ஸையுமுடைய ஸந்யாஸிகள் தம்முடைய திருவாராத4னமான பெருமாள்கோயில் குச்சி திறக்கைக்காக என்று. h "தங்கள் கோயில்" என்று பிரித்துச் சொன்னதுக்குத் தாத்பர்யம்—முந்தினபொருளுக்கு அநாத3ரோக்தி; இரண்டாமர்த்த2த்துக்கு A "தங்கள் தேவரை" என்னுமாபோலே ஸந்யாஸிகளே தமக்கு உத்3தே3ஸ்யர் என்றபடி. h,n ஸந்யாஸிகளை "தவத்தவர்" என்கிறது—1. "தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாம

---

ஞ. அ. பதினலாம்பாட்டு (உங்கள் புழைக்கடை இத்யாதி3) h,i செங்கல்பொடிக்கூறை-செங்கல் பொடியிலே புரட்டினபுடைவை. k சங்கென்று ஆராத4னத்துக்கு உபகரணமாயிருக்கும் ஸங்க2மாகவுமாம்; l சங்கென்று குச்சியாகவுமாம். n (ஸந்யாஸிகள்) என்றது—த்ரித3ண்டி3கள் என்றபடி. h,n ஸந்யாஸிகள் என்ற பக்ஷத்தில் காவித் திருப்பரியட்டமும், வெளுத்திருக்கும்

---

A நாச். திரு-10-10.

o தம:ப்ரசுரரநுஷ்டா2நம் ப்ரமாணமோ? 1. ''த4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேத3ாஶ்ச'' அன்றோ? என்ன; 'த4ர்மஜ்ஞையான உன்னுடைய ஸமயமும் ப்ரமாணமன்றிறே' என்கிறார்கள்— p (எங்களை முன்னமெழுப்புவான் வாய்பேசும்) 'எல்லாரையும் நானேயெழுப்புகிறேனென்று சொன்னது உன்பக்கல் கண்டிலோமீ!' என்கிறார்கள். (வாய்பேசும்) உக்திமாத்ரமேயாய், அநுஷ்டா2நம் இன்றிக்கேயிருக்கை. க்ருஷ்ணனோடே பழகின உனக்குப் பொய்சொல்லுகை q வம்போ? r (நங்காய்) s பூர்ணையிறே. t எனக்கு உங்களையொழியச் செல்லாதென்று சொல்லும்படியும், $t_2$ உன் நைரபேக்ஷ்யமும் எல்லாம் $t_3$ கண்டோமிறே. u சொலவும் செயலும் சேராதார்க்கு ஒரு $u_2$ பூர்த்தியும் வேணுமோ? v (எழுந்திராய்) w எங்கள் குறைதீர்க்க $w_2$ எழுந்திராய்.

x (நாணாதாய்) y சொல்லிவைத்துச் சொன்னபடி செய்யப்பெற்றிலோமென்னும் லஜ்ஜையுமின்றிக்கேயிருந்ததீ! z நீ இருந்தவூரில் $z_2$ பூசனியும்

---

பெ. அ. o ''நங்காய்'' என்றதே அமைந்திருக்க, ''எங்களைமுன்னமெழுப்புவான் வாய்பேசும்'' என்று விஶேஷித்ததுக்கு - அவள் ஶங்கிக்குமிடத்தில் ஸோபாலம்பே4ாத்தரமாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தம:ப்ரசுரர் இத்யாதி3) தம:ப்ரசுரர்க்கு அநுஷ்டா2நத்தில் ஐத3ம்பர்ய மில்லாமையாலே அவர்களெழுந்திருக்குமது விடிந்தமைக்கு அடையாளமாக மெய்க்கொள்ளப்போகாதென்று ஶங்கைக்குக் கருத்து. p திருமலைநம்பி நிர்வாஹத்தில், விடிவுக்கு அடையாளமாக ஸந்யாஸிகளெழுந்திருந்தார்களென்னச் செய்தேயும் நிருத்தரையாகக் கிடக்கையாலே வெறுக்கிறாளென்று ''எங்களை முன்னம்'' இத்யாதி3க்கு ஸங்க3தி கண்டுகொள்வது q ''வம்போ' என்றது-புதுமையோ? என்றபடி. r,s ஶப்3த3ார்த்த2கத2நமுகே2ந உபாலம்ப4ம் தோற்ற அருளிச்செய்கிறார் (பூர்ணையிறே என்று.) t, u இது உபாலம்ப4மான படியை உபபாதி3க்கிறார் (எனக்கு இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே.) $t_2$ 'உன் நைரபேக்ஷ்யமும' என்றது-உனக்கு எங்களையொழியச் செல்லும்படியிருக்கையும் என்றபடி. $t_3$ ''கண்டோமிறே'' என்ற அநந்தரம் ''ஆகையாலே'' என்று ஶேஷம். $u_2$ (பூர்த்தியும் வேணுமோ) என்றது-பூர்த்தியுண்டென்றிருக்க வேணுமோ என்றபடி. v,w ''எழுந்திராய்'' என்று ப்ரார்த்த2னை தோன்றியிருக்கையாலே இதுக்குச்சேரக்கூட்டி அர்த்த2ம் அருளிச்செய்கிறார் (எங்கள் இத்யாதி3) வெறுத்ததெல்லாம் ந்யாயநிஷ்டு2ரோக்தியாகையாலே இப்படி ப்ரார்த்தி2க்கத் தட்டில்லை,

x,y, நாணில்லாதவளேயென்று ஶப்3த3ார்த்த2மாய் அத்தை ஹேதுபூர்வகம் அருளிச்செய்கிறார் (சொல்லி இத்யாதி3) z நாணையும், பூசனியுடைய சரசரப்பையும் சுணையென்று வ்யவஹரிக்கையாலே, இவள் சுணையற்றவளாகையாலே, இவளிருந்தவூரிலும் சுணையற்றமையை ஸித்3த4வத்கரித்து, அது இல்லாவிட்டால் காய் காயாதென்கிற ப்ரஸித்3தி4யைப் பற்ற ஹார்த்த3ப4ாவத்தை அருளிச்செய்கிறார் (நீ இருந்த இத்யாதி3) இத்தால், இவளுக்கு லஜ்ஜாஶூந்யதையை நிருபகமாகச் சொல்லுகையால் இப்படிசொல்லலாமென்று திருவுள்ளம். 14.

---

சி. அ. திரிக்தமாஹு:'' என்கிற தபஶ்ஶப்3த3வாச்யமான த்3வயநிஷ்ட2தையைப்பற்ற. இத்தை அருளிச்செய்கிறார் (எனக்கு இத்யாதி3) u விவரணம் (சொலவும் இத்யாதி3) r,s ''நங்காய்''—பூர்ணையிறே என்னுதல்; t வெறுப்பாதல்; v, $w_2$ எழுந்திராய்—எழுந்திருக்கவேணும். $z_2$ (பூசனியும் காயாதோ) என்றது பூசனிக்குச் a நாவுடையாய் — வாக்3மிதையையுடையாய்.

---

கு. அ. திருமுத்துமுடைய தபஸ்விகள் என்றபடி; இந்தப் பக்ஷத்தில் ''தங்கள் கோயில்'' என்றது ஸந்யாஸிகள் தங்களுக்கு உத்3தே3ஶ்யர் என்று தோற்றுகைக்காக: q வம்போ—புதுமையோ என்றபடி. 14.

காயாதோ? என்கை. a (நாவுடையாய்) 'என்னை க்ஷேபித்துக்கொண்டாகிலும் வருகிறதென்?' என்ன; 1. ''நாந்ருக்3வேத3விநீதஸ்ய நாயஜுர்வேத3 தா4ரிண:'' என்றும், 2. ''நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நம்'' என்றும், 3. ''ஸம்ஸ்ரவே மது4ரம் வாக்யம்'' என்றும் உன்பேச்சிலினிமை கேட்க; இவள் எல்லாம் படுத்தினலும் விடவொண்ணுத நாவீறுடைமை.

'உங்களுக்குச் செய்யவேண்டுவதென்?' என்ன, b (சங்கு இத்யாதி3) திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் ஏந்தி அந்த ஸ்பர்ஶத்தாலே வளர்ந்த திருக்கைகளை. உடையனய், ஆழ்வார்களிலே வந்து அலையெறிகிற கண்களை யுடையவனே. c A ''இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவேசெய்து விழிக்கும்பிரான்'' என்று இவர்களைத் தோற்பித்துக்கொள்ளும் கண்ணிறே. d B ''ஆழியொடும் பொன்னார்சார்ங்கமுடைய அடிகளை இன்னாரென்றறியேன்'' என்று - அனுப4விப் பாரைப் பிச்சேற்றக்கடவ திருவாழியையும், திருமேனிக்குப் பரபா4கமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், d2 முற்படத் தன்னை எழுதிக்கொடுத்துப் பின்னை எழுதிக் கொள்ளுகிற திருக்கண்களையுமுடையவனே. (பாட) உன் ப்ரீதிக்குப் போக்குவிட்டு எங்களையும் உஜ்ஜீவிப்பிக்க. க்ருஷ்ணன்கையில் இப்போது ஆழ்வார்களுண்டோ? என்னில்:- எப்போதும் உண்டு; அது பெண்களுக்குத் தோற்றும்; அல்லாதார்க்குத் தோற்றுது. 4. ''உபஸம்ஹர'' என்றதும் உகவாதார்க்குக் கூசியிறே, இவர்களுக்குத் தோற்றத்தட்டில்லையே. 14.

சி. அ. சுணையுண்டு. கணையென்றது லஜ்ஜைக்கும் வாசகமாய், அதுக்குண்டான லஜ்ஜையும் உனக்கில்லை என்றபடி. b, d ''சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையன் பங்கயக்கண்ணனை'' என்று இவற்றை இப்படி சொன்னதேதுக்கு மற்றையவற்றைச் சொல்லாதே? என்ருல் இதுக்குத்தாத்பர்யம் (ஆழியொடும் இத்யாதி3) c.d2 (முற்படத் தன்னை எழுதிக்கொடுத்துப் பின்னை எழுதிக்கொள்கிற) என்றது (இளவாய்ச்சியர்) என்கிற வாக்யத்துக்கு உபபாத3கம்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதே3ஶம்- ப4க3வத்3விஷயத்திலே மூட்டுகையிலே அதி4கரித்த நிர்வாஹகர்முன்பாக ப4க3வத3னுப4வம் பண்ணுகை ஸ்வரூபம் என்று. 14.

## ஆருயிரப்படி — பதினன்காமபாட்டு

அவ:— பதினைலாம்பாட்டு. (உங்கள்) இத்திரளுக்கெல்லாம் நிர்வாஹகையாய், எல்லார்க்கும் முன்னே உணர்ந்து எல்லாரையுமெழுப்பக்கடவேனென்று சொல்லிவைத்து, அத்தை மறந்து சுருக்கமொழிய உணர்ந்து கிடக்கிருளொருத்தியை எழுப்புகிருர்கள்.

வ்யா;-(உங்கள் இத்யாதி3) 'நாங்கள் வந்து உன்வாசலிலே நிற்க எழுந்திராதொழிவதே!' என்ன; 'விடிவுக்கு அடையாளமென்? எழுந்திருக்கும்போது விடியவேணுமே' என்ன; (செங்கழுநீர்வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண்) 'செங்கழுநீரலர்ந்து ஆம்பல்மொட்டிக்குமது அடையாளமன்ருே?' என்ன; 'நீங்கள் இவ்வா

A திருவாய் 1-7-5. B பெரிய திரு-10-10-9.

சலிலே வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே உங்கள் கண்கள் அலர்ந்து, நான் வார்த்தை சொல்லாவிட்டவாறே நீங்கள் வெறுத்து லஜ்ஜித்து வாய்மூடினதும், செங்கழுநீ ரலர்ந்ததாகவும் ஆம்பல் மொட்டித்ததாகவும் தோற்றுகிறது' என்ன; 'அது ஊரிலதிறே, வாவியில் செங்கழுநீர்காண்' என்ன: 'வயலெல்லாமுலாவி அலருவன அலர்த்தி. மொட்டிப்பன மொட்டுவிக்கையன்றோ உங்களுக்கு இராவெல்லாம் பணி' என்ன; (தோட்டத்துவாவியுள்) 'A தடமணி வயல்களிலும், B அல்லிக்கமலம் முகங்காட்டுங் கழனிகளிலும் உள்ளவையல்ல; தோட்டத்திலவைகாண்' என்ன; 'அவ்விடங்களிலும் நீங்களுலாவினிகோளாமத்தனை' என்ன; 'புழைக்கடைத் தோட்டங்காண்' என்ன; 'அத்தனையிடம் போகவேண்டாதே அணித்தானவத்தனை யன்றோ' என்ன; (உங்கள் புழைக்கடைத்தோட்டம்) என்கிறுர்கள். 'அஸூர்யம் பஶ்யமான உன்னுடைய தோட்டத்திலே வெய்யில்பட்டன்றிக்கே காலபாகத்தாலே அலர்ந்தவையும் மொட்டித்தவையுமடையாளமன்றோ? சோலைச்செறிவாலே உச்சிப் பட்டாலும் ஆதி3த்யரஶ்மி காணவொண்ணுத உன்னுடைய புழைக்கடையிலவை யன்றோ' 'தாங்கள் புறம்பே உள்ளுப் புகுரப்பெருதே நிற்கிறவர்கள், இவள் புழைக் கடையில் அலர்ந்தவை யறிந்தபடியென்?' என்னில்; புறம்புள்ளவை அலர்வன மொட்டிப்பனவானபடியைக்கண்டு அநுமித்துச் சொல்லுகிறுர்கள். இவளெழுந் திராத இன்னுப்பாலே 'உங்கள் புழைக்கடை' என்று வேறுகூறிட்டுச் சொல்லு கிறுர்கள். 1, 'த்3வ்யக்ஷரஸ்து ப4வேந்ம்ருத்யு:'' என்றும், C "நீர் நுமது" என்றும், D "யானே என்றனதே" என்றும்—அஹங்காரமமகாரம் த்யாஜ்யமாக உணர்ந்தவர்கள், 'உங்கள், எங்கள்'' என்கை விருத்3த4மன்றோ? என்னில்; ப4க3வத்ஸம்ப3ந் தே3ஹாத்மாபி4மாநத்தால் வரும் அஹங்காரம் த்யாஜ்யமாவது; ப4க3வத்ஸம்ப3ந் த4த்தால் வருமது உத்3தே3ஶ்யமென்னுமிடத்தை 2. "அச்யுதாஹம் தவாஸ்மி" என்றும் E "அபிமானதுங்கன்" என்றும், F "என்னுடைய பந்துங்கழலும்" என்றும் சொல்லிற்றிறே. 'பதா3ர்த்த2ங்களாகிறன—காலக்ருத பரிணமியாயன்றோ இருப்பது' என்ன, ஸந்த்4யாஸமயத்தில்படியாயன்றே மத்4யராத்ரியில்படியிருப்பது.

'அலர உபக்ரமித்தமாத்ரத்தைக்கொண்டு கழியவலர்ந்ததாகவும், மொட்டிக்கத் தொடங்கினபோதே மொட்டித்ததாகவும். உங்கள் த்வரையாலே ப்ரத2மத3ஶை யிலே இப்படியே தோற்றுகிறது; இது ப்ராதர்லக்ஷணமன்று; வேறடையாள முண்டாகில் சொல்லுங்கோள்' என்ன — (செங்கல்பொடிக்கூறை) 'தம:ப்ரசுரருங்கூட உணருங்காலமாய்த்து; இது விடிவுக்கு உடலன்றோ' என்கிறுர்கள். (செங்கல்பொடிக் கூறை) அளற்றுப்பொடியிலே புடவையைப் புரட்டி, இராவெல்லாம் வெற்றிலை தின்றுகிடந்து ப்3ரஹ்மசர்யமும் விரக்தியுந்தோற்றப் பல்லை விளக்கி 'ஸபையார், பெரியவர்கள், கோமுற்றவர், த3ண்ட3ங்கொள்வார்'' என்று தபோவேஷத்தையுடைய வரான ஶிவத்3விஜருங்கூட ப4யப்பட்டுணர்ந்து தங்கள் தே3வதைகளை ஆராதி4க்குங் காலமாய்த்து. "திருக்கோயில்'' என்றது—அவர்கள் சொல்லும்படி, "சங்கு"

A திருவாய் 10-1-1 B பெரியதிரு 7-5-10 C திருவாய் 1-2-3 D திருவாய் 2-9-9.
E திருப்பல் 11. F திருவாய் 6-2-1.

என்று-பரிகரத்துக்கும் கொத்துக்கும் உபலக்ஷணம். சங்கிடுவானென்றது - குச்சியிடுவானென்றுமாம். ''தாமஸப்ரக்ருதிகளைச் சொல்லுகிறது'' என்று எம்பார். ''தம:ப்ரசுரர் உணர்ந்தார்கள் என்று சொல்லியோ எழுப்புவது என்று அவள் நினைத்திருக்கும் என்று, ஸத்வநிஷ்டரான ஸந்யாஸிகளைச் சொல்லுகிறது'' என்று திருமலைநம்பி. 1. ''யத3ஹரேவ விரஜேத், தத3ஹரேவ ப்ரவ்ரஜேத்'' 2. ''பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோऽபரமாத்மநி'' என்று ப4க3வத்3விஷயத்தில் ஸக்தராய், இதர விஷயங்களில் விரக்தராய், காஷாயவஸ்த்ரங்களை த4ரித்து போ4க்3யத்3ரவ்யங்களில் விரக்தராய் ஸாத்த்விகராயிருக்கும் ஸந்யாஸிகள் ஸந்த்4யாவந்த3னங்களைப் பண்ணி அக்ங்களிலே திருவாராத4நம் பண்ணும் காலமாய்த்தென்ன. '3. ''ஸததம் கீர்த்தயந்தோ மாம்'' 4. ''நமஸ்யந்தஶ்ச மாம் ப4க்த்யா நித்யயுக்தா உபாஸதே'' என்று அநவரதம் ஸ்நேஹத்தோடே உபாஸிப்பர்களென்று சொல்லப்படுகிறவர்கள் விடிவோறே ஒருகால் ஸமாராத4நம்பண்ணி அல்லாதபோது பேசாதேயிருப்பார்களோ? இது விடிவுக்கடையாளமன்றே; இதுதான் ப்ரமாணமுமன்றே?' என்ன; அதுக்கு உத்தரமாகச் சொல்லுகிறதுமேல் — (எங்களை முன்னமெழுப்புவான்) '5. ''து4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேத3ாஶ்ச'' 6. ''யத்3யதா3சரதி ஶ்ரேஷ்ட2:'' ''மேலையார் செய்வனகள்'' (26) என்னுமது ப்ரமாணமாக நீ சொன்னயே, ஸாத்த்விகாக்3ரேஸரையாயிருக்கிற நீ எங்களை எழுப்புவதாகச் சொல்லிவைத்து அத்தை மறந்துகிடந்து உறங்குகிறுயன்றே. த4ர்மஜ்ஞையான உன்னுடைய ஸமயமும் ப்ரமாணமன்றிறே' என்கிறுர்கள். (எங்களைமுன்னமெழுப்புவான்) 'எல்லாரையும் நானே எழுப்புகிறேன்' என்று சொன்னது உன்பக்கல் கண்டிலோமே. (வாய்பேசும்) ஹ்ருத3யத்திலில்லாதது வாயாலே பேசலாமோதான்? உக்திமாத்ரமேயாய் அநுஷ்டா2நமின்றிக்கேயிருக்கை. நினைவும் சொலவும் விபரீதமாயிருக்கும். க்ருஷ்ணனேடே பழகிச் சேர்த்தியாயிருக்கிற உனக்குப் பொய் சொல்லுகை வம்போ? (நங்காய்) 'உன்னுடைய லாப4த்துக்கு நாங்கள் வேண்டாதபடியாயிருந்ததிறே. எங்களையொழிய நீ நிரபேக்ஷையாயிருந்தாயிறே. ''எனக்கு உங்களையொழியச்செல்லாது'' என்றிருந்ததெல்லாம் கண்டோமிறே. சொலவும் செயலும் சேராதார்க்கு ஒரு பூர்த்தியும் வேணுமோ? இரண்டும் சேர்ந்தவிடத்திலேயன்றே பூர்த்தியுள்ளது. அதில்லாதவிடத்தில் ஆதி3த்யாதி3கள்பக்கல் ஔபசாரிகமாகச் சொல்லும் ப4க3வச்ச2ப்3த3ம்போலேயன்றே. A ''ஒருகாலும்பிரிகிலேன்'' என்றத்துக்குப் பொருளிதுவோ? (எழுந்திராய்) எங்கள்குறைதீர்க்க எழுந்திராய்.

(நாணுதாய்) நீதானெழுந்திருக்க வேணுமோ? நாம் பிற்பாடரானேமென்று கிடந்தவிடத்தே கிடந்து சொன்னபடி செய்யப்பெற்றிலோமென்று லஜ்ஜிக்கத்தான் பெற்றதோ? நீயிருந்தவூரில் பூசனியுங்காயாதோ? 7. ''ஹ்ரீரேஷா ஹி மமாதுலா'' என்னுமவனேடேயன்றே உனக்கு வாஸநை. (நாவுடையாய்) எங்களை லஜ்ஜிப்பிக்கத்தான் பெற்றேமோ? நாட்டாரளவோ உனக்கு

A பெரிய திரு-7-4-4.

நாக்கு? (நாவுடையாய்) என்னை க்ஷேபித்துக்கொண்டாகிலும் வருகிறதென்? என்ன, 1.''நாந்ருக்3வேத3விநீதஸ்ய நாயஜுர்வேத3த4ாரிண:'' என்றும். 2. ''நூநம்வ்யாகரணம் க்ருத்ஸ்நம்'' 3. ''ஸம்ஸ்ரவே மது4ரம் வாக்யம்'' என்றும் நீ எல்லாம் படுத்தினலும் உன் பேச்சிலினிமை கேட்கும்படி நாவிறுடையவளன்றே. 'நான் உங்களுக்குச் செய்ய வேண்டுவதென்?' என்ன; (சங்கொடு சக்கரமேந்தும்) க்ருஷ்ணன் திருநாமங் களைப்பாட. திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுமேந்தி அந்த ஸ்பர்ஶத்தாலே வந்த வளர்த்தியையுடைய திருக்கைகளையுடையனாய், ஆழ்வார்களிலே வந்து அலை யெறிகிற கண்களையுமுடையனான க்ருஷ்ணனை. A ''கூரார்ஆழி வெண்சங்கேந்தி'' B ''ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடையவடிகளை''. அசைப்படப்பண்ணுமதுவும் அறிவுகெடப்பண்ணுமதுவும் தி3வ்யாயுத4ங்களோட்டைச் சேர்த்தியேயிறே. (பங்கயக் கண்ணனை) முற்படப் பெண்களுக்குத் தன்னையெழுதிக்கொடுத்து எழுத்து வாங்கப் பண்ணும் கண்கள்: C ''தூதுசெய் கண்கள்'' D ''விடவே செய்து விழிக்கும்'' E''கண் களுக்கு அற்றுத்தீர்ந்தும்'' 4. ''ஜிதந்தே'' F ''தாமரைக்கண்ணனை விண்ணோர் பரவுந்தலைமகன்'' என்று-உப4யவிபூ4தியையுந்தோற்பிக்குங் கண்ணழகுடையவனை. சந்த்3ராதி3த்யர்கள் சேரவுதித்தாற்போலேயிருக்கிற இரண்டு தி3வ்யாயுத4ங்களையும் கண்டு G ''ஆங்குமலருங்குவியும்'' என்கிற திருநாபீ4கமலம்போலே, திருக்கண்களும் அலருவதுமொட்டிப்பதாகாநிற்கும்- 'க்ருஷ்ணன் கையில் ஆழ்வார்களுண்டோ?' என்னில்; எப்போதுமுண்டு; அதுபெண்களுக்குத்தோற்றும்; ஆண்களுக்குத் தோற்றாது. 5. ''உபஸம்ஹர'' என்றது உகவாதார்க்குக் கூசியிறே. H ''நெய்த்தலைநேமியுஞ் சங்கும் நிலாவிய'' என்று - யஶோதைப்பிராட்டி தாலாட்டுகையாலே இவர்களுக்குத் தோற்றத் தட்டில்லையே. (பாட) உன் ப்ரீதிக்குப் போக்குவிட்டுப்பாடி, ஒரு நீர்ச்சாவி போலே கிடக்கிற இத்திரள் உஜ்ஜீவிக்கும்படி வர்ஷியாய். (பங்கயக்கண்ணனைப் பாட) 6 ''உத்3க3ாயாதீநாமரவிந்த3லோசநம்''. 14.

## ஈராயிரப்படி — பதிஞலாம் பாட்டு

அவ:— பதிஞைாம் பாட்டு. இதுக்கெல்லாம் 'கடவளாய் எல்லாருக்கும் முன்னே தான் உணர்ந்து எல்லாரையும் உணர்த்தக்கடவளாக ப்ரதிஜ்ஞை பண்ணிஞளொருத்தியை எழுப்புகிருர்கள்.

வ்யா:— (உங்கள் புழைக்கடையித்யாதி3) இவர்கள் வாசலிலே வந்து ''போது விடிந்தது எழுந்திராய்'' என்ன, 'அடையாளமென்?' என்ன; 'பஞ்ச லக்ஷம் குடியில் பெண்களும் போய், பேசுவாரும் பேசாதிருப்பாருமாய் வந்து நிற்கிறது விடிந்தமைக்கடையாளமன்றோ' என்று, செங்கழுநீர் அலர்ந்தாப் போலேயும் ஆம்பல் மொட்டித்தாப் போலேயும் என்று தங்கள் வாயைச் சொல்ல, 'உங்கள் வாய் நீங்கள் வேண்டின போது அலர்ந்து மொட்டியாதோ?'

---

A திருவாய் 6-9-1. B பெரியதிரு-10-10-9. C திருவாய் 9-9-9, D திருவாய்-1-7-5. E திருவாய்-7-3-3. F திருவாய்-2-6-3. G மூன் திருவ-67. H பெரியாழ் திரு-1-2-12-

என்ன; 'வயலில் அவையும் அப்படியே' என்ன; 'நீங்கள் போய் அலர்த்தியும் மொட்டிக்கப் பண்ணியும் வைத்தீர்கள்' என்ன: 'தோட்டத்தில் வாவியில் அவையும் அப்படியே' என்ன, "வயலிலணித்தன்றோ உங்களுக்குத் தோட்டத்து வாவி' என்ன, 'புழைக்கடைத் தோட்டத்தில் வாவிகளிலவையும் அப்படி அலர்ந்து மொட்டித்தது' என்ன, "அது உங்களுக்குக் கைவந்த இடமன்றோ" என்ன, 'அஸூர்யம்பஶ்யமாய் க்ருஷ்ணனுக்கும் புகுரவொண்ணாதபடியான உங்கள் புழைக்கடைத் தோட்டத்தில் வாவியில் செங்கழுநீர் அலர்ந்து ஆம்பல் மொட்டித்தது' என்ன;

"அலரப்புக்க மாத்ரத்திலே கழிய எல்லாமலர்ந்தது' என்றும், மொட்டிக்கப் புக்க மாத்ரத்திலே 'முட்ட மொட்டித்தது' என்றும் சொல்லுகிறீர்கள். இதொழிய அடையாளமுண்டானால் சொல்லுங்கோள்" என்ன (செங்கற்பொடிக் கூறை இத்யாதி3) அளற்றுப் பொடியிலே புடவையைப் புரட்டி ப்3ரஹ்மசர்யம் தோற்றப் பல்லை விளக்கி, "ஸபை4யார் பொடிகிறார்கள். கோமுற்றவன் தண்டம் கொள்ளுகிறான்" என்று போதுவைகிற்றென்று தபசிகளுமகப்பட உணர்ந்தார்கள். (தங்கள் திருக்கோயில்) அவர்கள் சொல்லும் ப்ரகாரம். "சங்கு" என்று குச்சியைச் சொல்லுகிறது. சங்கு ஸமாராத4னத்துக்கு உபலக்ஷணம், வெள்ளையைத் தவிர்ந்து காஷாயத்தை உடுத்து பே4ாகோ3பகரணங்களைத்தவிர்ந்து தபச்சர்யை உடையராயிருக்குமவர்கள் ஸந்த்4யாவந்த3னாதி3கள் சமைந்து அகங்களில் திருமுற்றத்திலே எம்பெருமான்களை ஆராதி4க்கும் காலமாயிற்றென்றுமாம். இரண்டு ப்ரகாரத்தாலும் ஸாத்விகரோடு தமோபி4பூ4தரோடு வாசியற உணர்ந்ததென்கிறார்கள். 1. "த4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம்; வேதா3ஶ்ச" (எங்களை முன்னமித்யாதி3) "நேற்று எங்களை 'எழுப்புகிறேன், க்ருஷ்ணன்பாடு கொடு போகிறேன்' என்றது கண்டிலோமே" என்கிறார்கள். (வாய்பேசும்) பொய் சொல்ல உகக்கும் க்ருஷ்ணனோடேயிறே பழகுகிறது. பொய்யை நினைத்ததுக்கு மேலே பிறர் அறிய வேணுமோ? (நங்காய்) சொன்னத்தோடே சிலவாகிலும் கூட்டாதேயிருப்பார்க்கு ஒரு பூர்த்தியும் வேணுமோ? என்கை. (எழுந்திராய்) இவர்கள் பேச்சே அமைந்தது இவளுக்கு. எங்கள் குறைதீராய். (நாணாதாய்) 'நீயிருந்த ஊரில் பூசனியும் காயாதோ?' என்கை. (நாவுடையாய்) வாயேயிறே உனக்குள்ளதென்கை.

(சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையனித்யாதி3) இவர்களை த4ரிப்பிக்கைக்காக. "நாவாலுள்ள காரியம் கொள்ளுங்கோள்" என்ன, 'அவன் திருநாமங்களைப்பாடு' என்கிறார்கள். (சங்கொடு சக்கரம்) A "இன்னாரென்றறியேன்" இத்யாதி3. (பங்கயக்கண்ணனை) 2. "ஜிதம் தே புண்ட3ரீகாக்ஷ". சங்கு சக்கரங்களைக் கொண்டு திருநாபீ4கமலம் போலேயிருக்கை. B "தூதுசெய்கண்களிறே". C "இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவே செய்து விழிக்கும் பிரான்". 14.

A பெரியதிரு 10-10-9. B திருவாய் 9-9-9 C திருவாய் 1-7-5.

வேணுமோ? (நங்காய்) சொன்னத்தோடே செயல் கூடாதேயிருப்பார்க்கு ஒரு பூர்த்தியும் வேணுமோ? என்கை. (எழுந்திராய்) இவர்கள் பேச்சேயமைந்தது இவளுக்கு; உன் பூர்த்தியாலே எங்கள் குறையையும் தீராய். 'இப்படி சொல்லி வைத்துச் செய்யப் பெற்றிலோம்' என்னும் லஜ்ஜையும் கூட இன்றிக்கேயிருப்பதே! (நாணாதாய்) நீயிருந்த ஊரில் பூசனியும் காயாதோவென்கை. (நாவுடையாய்) வாயேயிறே உனக்குள்ள தென்கை. 1. "நாந்ருக்3வேத3விநீதஸ்ய" இத்யாதி3. இவள் எல்லாம் படுத்தினாலும் விடவொண்ணாத நாவீறுடைமை. விண்ணப்பம் செய்வார் எல்லா அநீதிகள் செய்யிலும் ஸத்துக்கள் தலையாலே சுமக்கிறது நாவீறன்றோ,

நான் உங்களுக்குச் செய்யவேண்டுவதென்னென்ன; (சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையன்பங்கயக்கண்ணானைப்பாட)'இவர்களிதெல்லாம் சொல்லுகிறது, தங்களார்த்தி யிறே' என்று பார்த்து, இவர்களை த4ரிப்பிக்கைக்காக, 'நாவாலுள்ள கார்யம் கொள் ளுங்கோள்' என்ன, அவன் திருநாமங்களைப் பாடென்கிறார்கள் — (ஏந்துந்தடக்கையன்) பூவேந்தினாற்போலே திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் ஏந்தி அந்த ஸ்பர்சத் தாலே வளர்ந்த திருக்கைமலர்களையுடையவனாயிருக்கை. A "இன்னாரென்றறியேன்" என்று மதிகெடுக்கும் கையில் திருவாழியையும் சொல்லுகிறது. (பங்கயக்கண்ணானை) 2. "ஜிதம் தே புண்ட3ரீகாக்ஷ" B "தாமரைக்கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை" என்னப்பண்ணும் கண்ணையுடையவனை. C "ஆங்கு மலரும்" இத்யாதி3 — ஸ்ரீ பாஞ்ச ஜந்யத்தைச் சந்த்3ரனென்றும் திருவாழியாழ்வானை ஆதி3த்யனென்றும், திருநாபீ4 கமலம் மொட்டிப்பது அலருவதாமாபோலே கண்ணாகிற தாமரையும் மொட்டிப்பது அலருவதாமென்கை. சந்த்3ர ஸூர்யர்களையும் தாமரைப்பூவையும் ஒரு கலம்பகமாலையா கத் தொடுத்தாற்போலே இருக்கும்படியைச் சொல்லுகை. (பங்கயக்கண்ணானை) கண்ணாலே நமக்கு எழுத்துவாங்கி நம்மை எழுத்துவாங்குவித்துக் கொள்ளுமவன். D "தூதுசெய்கண்கள்" E "இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவேசெய்து விழிக்கும்பிரான்" (பாட) உன்னுடைய ப்ரீதிக்குப்போக்குவிட்டு எங்கள் பறட்டேட்டைத்தீராய். 14.

## ஸ்வாபதே3ஶ வ்யாக்2யாநம் — பதினான்காம் பாட்டு

அவ:— பதினான்காம் பாட்டு. (உங்கள் இத்யாதி3) இப்பாட்டில் பா4க3வத ஸமுதா3யத்துக்கெல்லாம் தாமே கடவராய், இவர்களுக்கெல்லாம் பா4க3வத்வைப்ரத்ய ப்ரத்யு ... பா4க3வதஸமுதா3யத்துக்கெல்லாம் தாமே கடவராய், இவர்களுக்கெல்லாம் பா4க3வத்வைபந்த4 கடகர் தாமேயாம்படி ஜ்ஞாந ப4க்தி வைராக்3யங்களாலே பூர்ணரான பா4க3 வதரை எழுப்புகிறார்கள்.

வ்யா:— (உங்கள் புழைக்கடை இத்யாதி3) ஆகாரத்ரய விசிஷ்டரான உங்களுடைய விஹாரஸ்த2ாநமான திருமந்த்ரத்தினுடைய மத்4யே வர்த்திக்கிற நமஸ்ஸிலே பாரதந்த்ர்யம் ப்ரகாஶமாய் ஸ்வாதந்த்ர்யம் தலைமடிந்ததுகாண்.

(செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர் தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்) ராக3ப்ரயுக்தமான ஶேஷத்வ ஜ்ஞாநமுடைய மந்த3 ஸ்மிதமுடையரான ப்ரபந்நாதி4காரிகள் தங்கள் தங்கள் எம்பெருமான் ஸந்நிதி4 யிலே திருவாராத4நம் பண்ணுகைக்குப் போந்தார்கள்.

(எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும் நங்காய் எழுந்திராய்) எங் களையெல்லாம் நாங்கள் அபேக்ஷிப்பதற்குமுன்னே ஜ்ஞாநிகளாக்கும்படி

A பெரிய திரு 10-10-9, B திருவாய் 2-6-3, C மூன் திருவ 67, D திருவாய் 9-9-9 E திருவாய் 1-7-5.

# நாலாயிரப்படி — பதினலாம் பாட்டு

அவ:— பதினலாம் பாட்டு. இதுக்கெல்லாம் கடவளாய், எல்லார்க்கும் முன்னே தானுமுணர்ந்து, எல்லாரையும் உணர்த்தக்கடவளாக ப்ரதிஜ்ஞை பண்ணின ளொருத்தியை எழுப்புகிறது.

வ்யா:— (உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள் செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண்) இவள் வாசலிலே வந்து 'போது விடிந்தது காண், எழுந்திராய்' என்ன, 'விடிந்தமைக்கு அடையாளமென்?' என்ன, 'பஞ்சலக்ஷம் குடியில் பெண்களும் வாய்பேசுவாரும், பேசாதிருப்பாருமாய் வந்து நிற்கிறது விடிந்தமைக்கு அடையாளமன்றோ?' என்று செங்கழுநீர் அலர்ந்தாற்போலேயும் ஆம்பல் மொட்டித்தாற்போலேயும் என்று தங்கள் வாயைச்சொல்ல, 'உங்கள் வாய் நீங்கள் வேண்டினபோது அலர்ந்து மொட்டியாதோ?' என்ன, 'வயலிலவையும் அப்படியே' என்ன, 'நீங்கள் போய் அலர்த்தியும் மொட்டிக்கப்பண்ணியும் வந்திகோள்' என்ன, 'தோட்டத்துவாவியும் அப்படியே' என்ன, 'வயலிலணித்தன்றோ உங்களுக்குத் தோட்டத்துவாவி' என்ன 'புழைக்கடைத் தோட்டத்து வாவியும் அலர்ந்து மொட்டித்தது' என்ன, 'அது உங்களுக்குக் கைவந்ததன்றோ' என்ன, 'அஸூர்யம்பஶ்யமாய் க்ருஷ்ணனுக்கும் புகுரவெண்ணாத புழைக்கடையில் தோட்டத்து வாவியில் செங்கழுநீர் அலர்ந்து ஆம்பல் மொட்டித்தது' என்ன;

'அலரப்புக்கமாத்ரத்திலே கழிய அலர்ந்ததென்றும், மொட்டிக்கப்புக்க மாத்ரத்திலே முட்ட மொட்டித்ததென்றும் சொல்லுகிறீர்கள்; இதுவொழிய வேறடையாளமுண்டோ சொல்லுங்கோள்' என்ன, 'ஸாத்விகரோடு தமோபி4பூ4தரோடு வாசியற உணர்ந்தது பார்' என்கிறார்கள் — (செங்கல் பொடிக்கூறை இத்யாதி3) அளற்றுப் பொடியிலே புடவையைப்புரட்டி ப்3ரஹ்மசர்யம் தோற்றப் பல்லைவிளக்கி, 'ஸபையார் பொடிகிறார்; கோமுற்றவன் தண்டம் கொள்ளுகிறான்' என்று போதுவைகிற்றென்று போம் அஶுசிகளுமகப்பட உணர்ந்தார்கள். (தங்கள் திருக்கோயில்) அவர்கள் சொல்லும் ப்ரகாரம். "சிறுபதத்தூற்றத்துறையிலே ஒரு தபசி பரிசிலிலேறி ஆற்றினுள்ளே புக்கு; காவேரிதேவிக்குச் சங்கூதுகிறேனென்று அங்கே ஊத, பரிசிலிலே போகிற குதிரை மிதித்து அதிலேறின மனிச்சரடைய செத்துப்போச்சுது" என்று எம்பாரருளிச் செய்தவார்த்தை. 'சங்கு' என்று குச்சியைச் சொல்லிற்றாகவுமாம். வெள்ளை தவிர்ந்து, காஷாயத்தை உடுத்து, போ4க்3ய போ4கோ3பகரணங்களைத் தவிர்ந்து, தபஶ்சர்யையை உடையராயிருக்குமவர்கள், ஸந்த்4யாவந்த3நாதி3களைச் சமைந்து அகங்களிலே திருமுற்றத்தெம்பெருமானை ஆராதி4க்குங்காலமாயிற்று என்றுமாம். சங்கு ஸமாராத4நத்துக்கு உபலக்ஷணம். 'தம:ப்ரசுரர் லக்ஷணத்தையோ ஸத்வஸ்த்த2ரான நமக்குச் சொல்லுவது. **1.** "த4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேத3ாஶ்ச" என்று, ஸத்வஸத்த2ர்படியைச் சொல்லவேண்டாவோ?' என்ன, 'ஸத்வஸ்த்தை2களான நாங்கள் சொன்னபடியையும் செய்கிறிலை' என்கிறார்கள்.

நான் செய்ததென்னென்ன — (எங்களை முன்னமெழுப்புவான் வாய் பேசும்) நேற்றே எங்களை எழுப்புகிறேனென்றும், க்ருஷ்ணன் பாடே கொண்டு போகிறேனென்றும் சொன்னது கண்டிலோமே என்கிறார்கள். (வாய்பேசும்) பொய் சொல்லத் தகும் க்ருஷ்ணனோடேயிறே பழகுகிறது; பொய்யே நினைத்து அதுக்குமேலே பிறாறிய

## பதினைந்தாம் பாட்டு

**எல்லே இளங்கிளியே! இன்ன முறங்குதியோ?**
**சில்லென் றழையேன்மின் நங்கைமீர் போதர்கின்றேன்**
**வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்**
**வல்லீர்கள் நீங்களே நானேதா னாயிடுக**
**ஒல்லைநீ போதா யுனக்கென்ன வேறுடையை**
**எல்லாரும் போந்தாரோ போந்தார்போந் தெண்ணிக்கொள்**
**வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க**
**வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்.**

பதவுரை :— இளம் கிளியே — (பேச்சிலும் அழகிலும்) இளமை தங்கிய கிளி போலிருப்பவளே! எல்லே — (உன் பேச்சின் இனிமை) என்னே! இன்னம் — எல்லோரும் வந்து நின்ற பிறகும், உறங்குதியோ — தூங்குகிருயோ? (என்று எழுப்ப), நங்கைமீர் — பெண் பிள்ளைகளே! சில் என்று அழையேன்மின் — சிலுகு சிலுகு என்று அழைக்காதீர்கள். போதர்கின்றேன் — (இப்போதே) புறப்பட்டு வருகிறேன் (என்று உள்ளிருப்பவள் விடை கூற), வல்லை — (வாய்ப்பேச்சில் நீ) ஸமர்த்தை2யாயிரா நின்ருய், உன் கட்டுரைகள் — உன்னுடைய கடுஞ்சொற்களையும், உன் வாய் — உன்னுடைய வாயையும், பண்டே அறிதும் — நெடுங்காலமாகவே நாங்கள் அறிவோம் (என்று எழுப்புகிறவர்கள் சொல்ல) நீங்களே வல்லீர்கள் — (இப்படி எதிர்வாதம் செய்யும்) நீங்களே வாய் வன்மையுடையவர்கள், நானே தான் ஆயிடுக — (அன்றிக்கே) நானே வாய் வன்மையுடையவளாய் இருக்கட்டும் (உங்களுக்கு நான் செய்ய வேண்டுவதென்? என்று உள்ளிருப்பவள் கேட்க) நீ — நீ, ஒல்லை போதாய் — சீக்கிரம் எழுந்திருப்பாயாக; உனக்கு என்ன வேறு உடையை — உனக்கு என்று வேறு என்ன பலனை நீ உடையவளாயிருக்கிருய்? (என்று உணர்ந்தவர்கள் வினவ), எல்லாரும் போந்தாரோ — (வரவேண்டியவர்) யாவரும் வந்தனரோ? (என்று உள்ளிருப்பவள் கேட்க), போந்தார் — (எல்லோரும்) வந்தனர், போந்து எண்ணிக்கொள் — (நீயும்) வந்து எண்ணிப்பார்த்துக்கொள் (என்று உணர்ந்தவர்கள் சொல்ல), 'நான் வெளி வந்து செய்யவேண்டுவதென்' என்று உள்ளிருப்பவள் உசாவ), வல்லானை — (குவலயாபீடம் மென்னும்) வலிய யானையை, கொன்றானை — அழித்தவனும், மாற்றாரை — சத்துருக்களை, மாற்று அழிக்கவல்லானை — வலியற்றவர்களாகச் செய்யவல்லவனும், மாயனை — ஆச்சரியமான செய்கைகளை உடையவனுமான கண்ணனை, பாட — பாடுவதற்காக (எழுந்திராய் என்று அழைக்கிறுர்கள்).

ஸ்வா:- ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்யும் பூர்த்தியை உடையவரே! எழுந்திராய். (நாணுதாய்), சொல்லும் செயலும் ஒத்திராதார்க்கு நாணமுமின்றிக்கே யொழி வதே!. இப்படி என்னை க்ஷேபித்துக்கொண்டாகிலும் என்பக்கல் ஸாபேக்ஷராய் வருவதேதென்ன; (நாஉடையாய்) வாங்மாது4ர்யமுடையவரே! நீர் அஹ்ருத3ய மாகச் சொல்லிலும் பேச்சின் இனிமையைப் பார்த்தால் ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனை ஈஶ்வரனுக்கும் 'இது ஸஹ்ருத3யம்; அவஶ்யம் கர்த்தவ்யம்' என்னும்படியா யிருக்கை, (சங்கொடு இத்யாதி3).

ஜ்ஞாநமுண்டானல் செய்வதென்? என்ன, [1] ''ஏதத் ஸாம கா3யந் ஆஸ்தே'' என்கிறபடியே திருவாய்மொழி பாடுகையே ப்ரயோஜநம், எழுந்திராய் என்கிறுர்கள்.

1. ''ஏதத் ஸாம கா3யந் ஆஸ்தே''

# மூவாயிரப்படி - பதினைந்தாம் பாட்டு

அவ;— பதினைந்தாம்பாட்டு. a எல்லாருடைய திரட்சியும் காணவேண்டி யிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

வ்யா:— b (எல்லே b$_2$ இளங்கிளியே) c ''சங்கொடு சக்கரமேந்துந்தடக் கையன் பங்கயக்கண்ணானைப் பாட'' (14) என்று அசலகத்துப் பெண்பிள்ளையை எழுப்புகிற பாசுரத்தைக் கேட்டு, இவள் அந்தப் பாசுரத்தைத் தன்மிடற்றிலே யிட்டுப் பாட, எழுப்புகிறவர்கள், அந்த த்$_4$வநிவழியே கேட்டுச்சென்று, இவள் பேச்சிலினிமையாலே (எல்லே ! இளங்கிளியே!) என்கிறார்கள். d (இளங்கிளியே) e கிளியை வ்யாவர்த்திக்கிறது; கிளி இவள்பேச்சுக்கு ஒப்பாமித்தனை; பருவத் துக்கு ஒப்பன்றென்கை. (எல்லே) என்னே! ''எல்லே'' என்று–பேச்சிலினி மையாலே ஆஶ்சர்யப்படுகிறார்கள். f (இன்னம் உறங்குதியோ) g இவர்க ளழைக்கிறது தன் அநுஸந்த$_4$ாநத்துக்கு விக்$_4$நமாகையாலே பேசாதே கிடக்க, 'இன்ன முறங்குதியோ' என்கிறார்கள். h க்ருஷ்ணவிரஹத்தாலே தளர்ந்து உறக்கமின்றிக்கே உன்கடாக்ஷமே பற்றாசாக நாங்கள் நின்றபின்பும் உறங்கு மத்தனையோ? i க்ருஷ்ணாநுப$_4$வத்துக்கு ஏகாந்தமான காலம் ஸித்$_3$தி$_4$த்திருக்க, உறங்கக்கடவையோ? என்றுமாம்,

---

**பெ. அ.** பதினஞ்சாம் பாட்டு. (எல்லே இத்யாதி$_3$) a ''எல்லாரும் போந்தாரோ?'' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார் (எல்லாருடைய இத்யாதி$_3$)

b$_2$, c உறங்குகிறவளைப் பேச்சிலினிமை கேளாதபோது ''கிளியே'' என்று ஸம்போ$_3$தி$_4$க்கைக்கு ப்ரஸக்தியேதென்ன அருளிச்செய்கிறார் (சங்கொடு இத்யாதி$_3$) d, e பேச்சிலினிமையையிட்டு ''கிளியே'' என்று ஸம்போ$_3$தி$_4$க்குமிடத்து ''இளம்'' என்றதுக்கு ப்ரயோஜநமில்லாமையாலே, இளமையுடையளாயும் கிளிபோன்றவளாயுமிருக்குமவளேயென்று ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கிளியை இத்யாதி$_3$) f, g பேச்சைக்கேட்டு 'கிளி' என்று ஸம்போ$_3$தி$_4$த்தவர்கள், ''இன்னமுறங்குதியோ'' என்னக் கூடுமோ? என்ன; அதுக்குச்சேரத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி$_3$) f, h, i ''இன்னம்'' என்றதுக்கு இரண்டுவித$_4$மாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ண இத்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே)

---

**சி. அ.** பதினஞ்சாம் பாட்டு. (எல்லே) b$_2$, c இவள் வார்த்தையை அறிந்தபடியென்? என்ன (சங்கொடு சக்கரமித்யாதி$_3$) b$_2$ இளங்கிளியே — இளமையையும் கிளியினுடைய பேச்சுப் போலேயிருக்கிற பேச்சையுமுடையவளே! என்றபடி. கிளி பா$_3$ல்யத்தில் வார்த்தை சொல்ல அறியாமையாலும், பா$_3$ல்யத்தில் வார்த்தை நன்றாயிராமையாலும் இப்படி கொள்ள வேணும். g இவள் பேசாதே கிடக்கிறதென்? என்ன -- (இவர்கள் அழைக்கிறது தன் அநுஸந்த$_4$ானத்துக்கு இத்யாதி$_3$) f, h, i ''இன்னமுறங்குதியோ'' என்றதுக்கு இரண்டு

j "உத்3தே3ஶ்யம் கைபுகுந்தாலும் உறங்குவாருண்டோ?'' என்ன- k (சில்லென்று அழையேன்மின்) l தன் அநுஸந்த4ாநத்துக்கு இவர்களழைக்கிறது விக்4நமாகையாலே, 'சிலுகிடாதே கொள்ளுங்கோள்' என்கிருள். 'இவர்கள் வார்த்தை அஸஹ்யமோ?' என்னில்? - m திருவாய்மொழி பாடாநின்றால் n செல்வ ரெழுந்தருளுகையும் அஸஹ்யமாமாபோலே. o (நங்கைமீர் போதர்கின்றேன்) p 'நாங்களும் எங்கள் சொல்லும் பொருதபடி உன்பூர்த்தி இருந்தபடியென்?' என்ன; சிவிட்கென்னக்கூசி. q (நங்கைமீர் q2 போதர்கின்றேன்) r 'நீங்கள் வாய் திறவாதிருக்கவல்லிகோளாகில் நான் புறப்படுகிறேன்' என்ன;-

s (வல்லே உன்கட்டுரைகள் பண்டே s2 உன்வாய் அறிதும்) t 'நங்கைமீர்' என்று - உறவற்ற சொல்லாலே, t2 வெட்டிமை யெல்லாம் சொல்லவல்லே என்

---

பெ.அ. j இவர்களெல்லாரும் தன்வாசலிலேவந்திருக்கையும் க்ருஷ்ணாநுப4வத்துக்கு ஏகாந்தம் ஸித்3தி4க்கையும் இவளுக்கு உத்3தே3ஶ்ய மென்று திருவுள்ளம் பற்றி, யோஜநாத்3வயத்துக்கும் சேர உக்தார்த்த2ாநுவாத3ரூபேண மேலுக்கு ஸங்க3தியைக் காட்டுகிருர் (உத்3தே3ஶ்யம் இத்யாதி3) k, l "இன்னமுறங்குதியோ'' என்றதுக்கு — "நங்கைமீர் போதர்கின்றேன்'' என்று இவ்வளவே சொல்லவேண்டியிருக்க, மத்4யே அநாத3ரம் தோற்ற "சில்லென்றழை யேன்மின்'' என்னக்கூடுமோ? என்ன அருளிச்செய்கிருர் (தன் அநுஸந்த4ாநத்துக்கு இத்யாதி3) m திருவாய்மொழிபாடுகை — திருப்புன்னைக்கீழே. k, o, p கீழே "சில்லென்றழை யேன்மின்'' என்று சொல்விவைத்து, "நங்கைமீர்'' என்று பூர்த்தியையிட்டு இவள் ஸம்பே3ாதி4க்கைக்கு ப்ரஸக்தி அருளிச்செய்கிருர் (நாங்களும் இத்யாதி3) q2 "போதர் கின்றேன்'' என்ற அநந்தரம் "என்கிருள்'' என்று ஶேஷம். q, r நீங்கள் பூர்ணைகளன்ருே? வாய் திறவாதிருந்தால் நானும் எழுந்திருந்து வருகிறேனென்று அநுநயவசநருபமாகக் கீழுக்குத் தாத்பர்யத்தைச் சொல்லாநின்றுகொண்டு மேலுக்கு அவதாரிகையிடுகிருர் (நீங்கள் இத்யாதி3)

q, s, t ஸகி2களைக்குறித்து "நங்கைமீர்'' என்று பூர்ணதையையிட்டுச் சொல்லுகை உறவற்ற சொல்லாகத் திருவுள்ளம்பற்றி, "நங்கைமீர்'' இத்யாதி3 "வாயறிதும்'' என்ற அளவுக்கும் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிருர் (நங்கைமீர் இத்யாதி3) t2 வெட்டிமை —

---

சி.அ. தாத்பர்யம். j (உத்3தே3ஶ்யம் கை புகுந்தாலும்) என்றது மூன்ரும் தாத்பர்யமாகவுமாம். உத்3தே3ஶ்யம் - ததீ3யஸம்ஸர்க்க3ம்; அதாவது — தாங்கள் வாசலிலே வந்திருக்கை. m திருவாய்மொழி பாடுகை — சந்த்3ரபுஷ்கரிணியின் திருப்புன்னைக் கீழே. n (செல்வர் எழுந்தருளுகையும் அஸஹ்யமாமாபோலே) என்றது — திருக்கோட்டியூர் நம்பி பெரியநம்பி முதலானுர் திருவாய்மொழி அநுஸந்தி4த்திருக்க, செல்வர் எழுந்தருளினுப்போலே அஸஹ்யம் என்றபடி. o,p "நங்கைமீர்'' என்றதுவும் வ்யங்க்3யோக்தி. k, q, r "சில்லென்றழையேன்மின்'' என்றத்தோடு கூட்டி அருளிச்செய்கிருர் (நீங்கள் வாய் திறவாதிருக்கவல்லிகோளாகில் இத்யாதி3) s, t "வல்லையுன் கட்டுரைகள் பண்டே உன் வாயறிதும்'' என்றது 'நீ கட்டுரைகள் சொல்லவல்லே என்று பண்டே உன் வாயறிதும்' என்றபடி. s2 'உன்' என்றது நீ என்றபடி. q, s, t "நங்கைமீர்'' என்ற பத3த்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிருர் (நங்கைமீர் என்று உறவற்ற சொல்லாலே இத்யாதி3) t2 (வெட்டிமைச்சொல்) கடி2னோக்தி. k, s, u "சில்லென்

னுமிடம் நாங்கள் இன்றுக அறிகிறேமோ? “ u சொல்லிற்றைச் சொல்லி, $u_2$ எங்கள் தலையிலே குற்றமாம்படி வார்த்தை சொல்லவல்லை என்னுமிடம் பண்டே அறியோமோ?” என்றுமாம்.

v (வல்லீர்கள் $v_2$ நீங்களே) “w ‘இன்னம் உறங்குதியோ’ என்றும், ‘வல்லையுன்கட்டுரைகள்’ என்றும் வெட்டிமை உங்களதன்றே?” என்ன; x ‘உன்வாசலிலே வந்து எழுப்ப, “சில்லென்றழையேன்மின்” என்றது-உன்னதன்றே வெட்டிமை?’ என்ன; y அது என்குற்றமன்று. அதுவும் $y_2$ உங்கள் குற்றமே; z நம்முடைய வார்த்தை கேட்க உகக்குமிவள், நம் வார்த்தை அஸஹ்யமாம்படியிறே க்ருஷ்ண கு3ணங்களல்ல அவகா3ஹித்தது என்று உகக்கவேணடியிருக்க, அதிலே தோ3ஷத்தை ஏறிட்ட உங்களதன்றே குற்றம்? a அதுகிடக்க; 1. “பரஸ்பர நீசபா4வை:” என்றன்றே ஸ்வரூபமிருப்பது; ஆகையாலே b (நானேதான் ஆயிடுக) c இல்லாத குற்றத்தையும் சிலர் “உண்டு” என்றால், இல்லை செய்யாதே இசைகையிறே வைஷ்ணவலக்ஷணம். d 2. மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்” என்று - பிறர் குற்றத்தையும் தன்னுடைய பாபப2லம் என்றுனிறே ஸ்ரீபூ4ரதாழ்வான்.

---

பெ.அ. நிஷ்டு2ரம். k, s, u உன்னுடைய கட்டுரைகளை—சொற்களைப் பார்த்தால், நீ—வல்லை—ஸமர்த்தை2யாகையாலே, உன்வாய் — உன்னுடைய வார்த்தையை, பண்டே அறிதுமென்று ஶப்3த3ார்த்த2ம் திருவுள்ளம்பற்றி “சில்லென்றழையேன்மின்” இத்யாதி3யை உட்கொண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறுர் (சொல்லிற்றை இத்யாதி3) $u_2$ (எங்கள் தலையிலே குற்றமாம்படி) என்றதுக்கு — நாங்கள் சிவிட்கென்றதாய் நீ சூசி அநுநயம் பண்ணி நல்ல வார்த்தை சொல்ல ஸமர்த்தை2 என்று கருத்து.

v. w ஏவகாரம்தவிர “வல்லீர்கள் நீங்கள்” என்றதுக்கு பூ4ர்வம் அருளிச்செய்கிறுர் (இன்னம் இத்யாதி3) $v_2$, x, y ஏவகாரத்துக்கு - நான் வல்லையன்று என்று அர்த்த2ஸித்3த4மாகையாலே, இதுக்கு ப்ரஸக்தியை அருளிச்செய்யாநின்றுகொண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறுர் (உன்வாசலிலே இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) $y_2$, z “உங்கள் குற்றமே” என்றத்தை உபபாதி3க்கிறுர் (நம்முடைய இத்யாதி3) a மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறுர் (அதுகிடக்க இத்யாதி3) b, c ஸ்வரூபத்தையுணர்ந்தால் இல்லாத குற்றத்தையும் அங்கீ3கரிக்கவேண்டுவானென்? என்ன அருளிச்செய்கிறுர் (இல்லாத இத்யாதி3) b, d, “நானே தானுயிடுக” என்று பிறர்பக்கல் குற்றத்தை இல்லைசெய்து, தன்மேலே ஆக்கிக்கொண்ட பேர் உண்டோ? என்ன அருளிச்செய்கிறுர் (மத்பாபம் இத்யாதி3)

---

சி. அ. றழையேன்மின்” என்ற வாக்யத்தைக் கடாக்ஷித்துக் கொண்டு அருளிச்செய்கிறுர் (சொல்லிற்றைச் சொல்லி இத்யாதி3) b, x “நான்தான் ஆயிடுக” என்னுதே “நானே” என்ற ஏவகார வ்யாவர்த்யம் (உன் வாசலிலே இத்யாதி3) e, f, g “ஒல்லை நீ போதாய்” என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். j (ஆழ்வான் வார்த்தையை நினைப்பது) என்றது க்ருமிகண்ட2ன் உபத்3ரவத்தாலே எம்பெருமானுர் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளினபோது ஆழ்வான் பெருமாளை ஸேவிக்க எழுந்தருள, திருவாசலிலே இருந்தவர்கள் சிலர் ‘வேண்டா’ என்று தகைய, அதிலே சிலர் “ஆழ்வான் நல்லவர்; போகவிடுங்கோள்” என்ன, “இந்த

'உங்களுக்குச் செய்யவேண்டுவது என்?' என்ன, e (ஒல்லை நீ போதாய்) f எங்களுக்கு ஒருக்ஷணமும் உன்னையொழியச் செல்லாமையாலே எங்கள் திரளிலே $f_2$ சடக்கெனப் புகுந்துகொடு நில்லாய். g A "சாதுகோட்டியுட் கொள்ளப்படுவாரே" என்று அவளுக்கும் இத்திரளேயிறே ப்ராப்யம். h (உனக்கென்ன வேறுடையை) பஞ்சலக்ஷங்குடியில்பெண்களுக்கு உள்ளதொழிய, தனியே ஸ்வயம்பாகம் பண்ணுவாரைப்போலே உனக்கு வேறே சில உண்டோ? i வைஷ்ணவ விஷயத்தை ப$_3$ஹிஷ்கரித்துப் பற்றும் ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தோடு தே$_3$வதாந்தரத்தோடு வாசியில்லை; "நீ ஒருவர்க்கும் விரோதியல்லை; நீ புக்குத் திருவடிதொழு" என்ன, j ஆழ்வான் வார்த்தையை நினைப்பது.

(எல்லாரும் போந்தாரோ) k 'எனக்கு உங்களையொழிய ஸுக$_2$முண்டோ? உணர அறியாத சிறு பெண்களும் உணர்ந்தால் புறப்படவிருந்தேன்; எல்லாரும் போந்தாரோ?' என்ன; (போந்தார்) 'க்ருஷ்ண விரஹத்தாலே துவண்ட பெண்களடைய உன்னைக் காண்கைக்கு உன்வாசலிலே வந்து கிடந்தார்கள்' என்ன, ஆகில், உள்ளே புகுரவிடுங்கோளென்ன; - (போந்து எண்ணிக் கொள்) புறப்பட்டு l மெய்க்காட்டுக் கொள், m மெய்க்காட்டுக்கொள்ளுகைக்கு ப்ரயோஜநம் தனித்தனியே பார்க்கையும் $m_2$ அநுப$_4$விக்கையும்.

---

பெ. அ. e, $f_2$ "ஒல்லை" என்றதின் அர்த்த$_2$ம் 'சடக்கென' என்றது. g இவர்களைப்போலே அவளுக்கும் செல்லாமையுண்டானாலிறே சடக்கென வரக்கூடுமென்ன அருளிச்செய்கிறார் (சாது இத்யாதி$_3$) i இவளுக்குத் தனியே க்ருஷ்ணநுப$_4$வமில்லையோவென்ன அருளிச்செய்கிறார் (வைஷ்ணவ இத்யாதி$_3$) j ஆழ்வான் வார்த்தையாவது-எம்பெருமானார் ஸம்ப$_3$ந்தி$_4$களை "கோயிலுக்குள்ளே புகுரவொண்ணாது" என்ன; "எம்பெருமானார் ஸம்ப$_3$ந்த$_4$மே போரும்" என்று திரும்பிச் சொன்ன வார்த்தை.

h,k, "உனக்கு என்ன வேறு உடையை" என்றத்தால்-தன்னிடத்தில் ஸ்வாதந்த்ரியத்தை ஏறிடுகையாலே அஞ்சினமைதோன்ற ப$_4$ாவம் அருளிச்செய்கிறார் (எனக்கு உங்களை இத்யாதி$_3$) l மெய்க்காட்டுக்கொள்—எண்ணிக்கை பிடித்துக்கொள் என்றபடி. $m_2$ 'அநுப$_4$விக்கையும்' என்றது-ஸம்ஶ்லேஷித்து அநுப$_4$விக்கையும் என்றபடி.

---

சி. அ "எம்பெருமானார் ஸம்ப$_3$ந்த$_4$முடையாரைப் பெருமாளை ஸேவிக்கப் போகாதபடி தகைந்து கிடக்கிறது" என்ன, ஆத்மகு$_3$ணங்கள் ஆசார்ய ஸம்ப$_3$ந்த$_4$த்துக்குடலென்று சொல்லுவர்கள்; என்னுடைய ஆத்மகு$_3$ணங்கள் எம்பெருமானார் ஸம்ப$_3$ந்த$_4$த்தை அறுத்துக் கொள்ளுகைக்குடலாயிற்று" என்று ப$_4$ாரப்பட்டருளி, "நமக்குப் பெருமாள் வேண்டா; எம்பெருமானார்ஸம்ப$_3$ந்த$_4$மே அமையும்" என்று மீண்டெழுந்தருளினாராம். அத்தை நினைக்கிறது என்றபடி. m (மெய்க்காட்டுக் கொள்ளுகைக்கு ப்ரயோஜனம் தனித்தனியே /பார்க்கையும் அநுப$_4$விக்கையும்) என்றது—எழுந்திருக்கும்போது தங்களை ப்ரத்யேகம் ப்ரத்யேகம் கடாக்ஷிக்கையும் ஸ்பர்ஶிக்கையும் வர்த்தமானமேது?" என்று ஆழ்வான் கேட்டருள,

---

A பெரியாழ்-திரு-3-6-11.

நாமெல்லாரும் கூடினல் செய்வதென்? என்ன,—n (வல்ஆனைகொன்ருனை) o குவலயாபீட3த்தைக் கொன்று நம் ஜீவநமான தன்னை நோக்கித் தந்தவனை. p (மாற்ருரை மாற்றழிக்க வல்லானை) q எதிரிட்ட கம்ஸாதி3களை அநாயாஸேந நஶிப்பித்து, 1. ''ந ஸமம் யுத்3த4மித்யாஹு:'' என்று அஞ்சின பெண்களை வாழ்வித்தவனை. r (மாயனை) s தன்கையில் $s_2$ அவர்கள் படுமத்தைத் தான் பெண்கள் கையிலே படுமவனை. t (வல்ஆனை கொன்ருனை) u அங்கே குவலயா பீட3த்தைக் கொன்ருற்போலே நம்முடைய ஸ்த்ரீத்வாபி4மாநத்தைப் போக்கின வனை. v (மாற்ருரை மாற்றழிக்க வல்லானை) w சாணூர முஷ்டிகாதி3களை நிரஸித் தாற்போலே, நம்மைத் தன்னேடு சேரவொட்டாத இடையருடைய ஸங்கல்பத்தைப் போக்கினவனை. (மாயனை) எதிரிகளைத் தான் தோற்பிக்குமா போலே நம்கையிலே தோற்ற ஆஶ்சர்யபூ4தனை. x (பாட) y நமக்கு அவன் தோற்கும் தோல்விக்குத் தோற்றுப்பாட. 15.

---

பெ. அ. n.o வலியதாய் - ப3லிஷ்ட2மாயிருக்கிற, ஆனை என்ருய், அத்தைக் கொல்லுகை கு3ணமாம்படி தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (குவலயா இத்யாதி3) p, q ''மாற்று'' என்று - பொன்னினுடைய வர்ணேத்கர்ஷமாய், இங்கே ப3லாதிஶயத்தைச் சொல்லுகையாலே, 'மாற்ருரை பலம் போக்கும் மிடுக்கனை' என்று ஶப்3தா3ர்த்த2ம் திருவுள்ளம் பற்றிப் ப2லிதார்த்த2த்தை அருளிச்செய்கிருர் (எதிரிட்ட இத்யாதி3) r,s கீழைக் கடாக்ஷித்து ப4ாவம் அருளிச் செய்கிருர் (தன்கையில் இத்யாதி3) அதாவது - தன் கையில் எதிரிகள் படுமவற்றை யெல்லாம் பெண்கள் கையிலே தான்பட்டு, பெண்களுக்குத் தான் தோற்ற தோல்வியாலே அவர்களை வென்றிருக்குமவனென்கை. t,u,v,w ''வல்லானை'' இத்யாதி3க்கெல்லாம் தாத்பர்யாந்த ரங்களை அருளிச்செய்கிருர் (அங்கே இத்யாதி3) x, y ''வல்லானை'' இத்யாதி3க்கெல்லாம் சொன்ன இரண்டு ப4ாவத்தையும் திருவுள்ளம் பற்றி, ''பாட'' என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிருர் (நமக்கு இத்யாதி3) ''பாடப்போந்தார்'' என்று அந்வயம் கண்டு கொள்வது. 15

---

**சி. அ.** என்றபடி. p ''மாற்ருரை மாற்றழிக்கவல்லானை'' - ஶத்ருக்களுடைய ஶாத்ரவத்தைப் போக்கவல்லானை; மாற்று — ஶாத்ரவம். t,u,v,w ''வல்லானை கொன்ருனை'' இத்யாதி3க்குத் தாத்பர்யாந்தரம் (அங்கே குவலயாபீட3த்தை இத்யாதி3 வாக்யத்3வயேந) $s_2$ (அவர்கள் படுமத்தை) தன் கையிலே ஶத்ருக்கள் தோற்குமத்தை.- (மாயனைப் பாடுகைக்கு ஒல்லை நீ போதாய்) என்று அந்வயம்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதே3ஶம் — ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸமவாயத3ர்ஶநம் அபி4மத மாயிருக்குமவர்களைக் கண்டக்கால் அந்த ஸமூஹமாக அவர்களை உகக்கை ஸ்வரூபம் என்று. 15.

---

**கு. அ.** பதினைஞ்சாம் பாட்டு. (எல்லேஇளங்கிளியே இத்யாதி3) [மாயனைப்பாடுகைக்கு, எல்லே இளங்கிளியே என்று தொடங்கி, போந்தெண்ணிக்கொள்] என்று அந்வயம். 15.

## ஆறுயிரப்படி — பதினைந்தாம்பாட்டு

அவ:— பதினைந்தாம்பாட்டு. (எல்லே) பெண்களெல்லாருடையவும் திரள் காண வேண்டியிருப்பாளொருத்தியை எழுப்புகிறாள்கள். கீழ்ப்பத்துப் பாட்டாலும் சொன்ன உக்திப்ரத்யுக்தியை முக்தகண்டமாகச்சொல்லுகிறது-இப்பாட்டில். அந்விதாபி₄த₄ாநம் பண்ணியிறே கிடக்கிறது. திருப்பாவையாகிறது இப்பாட்டிறே. ப₄க₃வத்₃விஷயத்தி லிருக்கும்படியெல்லாம் சிற்றஞ்சிறுகாலையிலே (29) சொல்லுகிறது; ப₄ாக₃வத விஷயத்திலிருக்கும்படியெல்லாம் இப்பாட்டிலே சொல்லுகிறது.

வ்யா:— ''பங்கயக் கண்ணானைப்பாட'' (14) என்று - அசலகத்தில் பெண் பிள்ளையையெழுப்புகிற பாசுரத்தைக் கேட்டு, இவர்கள் பாசுரத்தைத் தன் மிடற் றிலேயிட்டு நுடங்கிப் பாடுகிறபடியைக்கேட்டு, த்₄வநிவழியேசென்று பேச்சிலினிமை யாலே, ''எல்லே! இளங்கிளியே'' என்கிறாள்கள். (எல்லே இளங்கிளியே) யாழிலே யிட்டுப்பாடி, அது பண்பட்டு இனிதானவாறே தந்தாம் மிடற்றிலே மாற்றுவாரைப் போலே, தங்கள் பேச்சுக்கு இவள்பேச்சு. (எல்லே இளங்கிளியே) திருவான மிடறும் பாட்டுமிருந்தபடி என்தான்! பேச்சிலினிமையிருந்தபடி - எழுப்புகை சால த₄ர்மஹாநியாயிருந்ததீ! பேச்சிலினிமையாலே, ''எல்லே'' என்று ஆஶ்சர்யப் படுகிறாள்கள். (எல்லே) ஸம்போ₄த₄நமாகவுமாம். (இளங்கிளியே) என்று-கிளியை வ்யாவர்த்திக்கிறது. பசுமைக்கும் பேச்சுக்கும் கிளி ஒப்பாமித்தனை; பருவத்துக்கு ஒப்பாகமாட்டாது; ஒக்கிலும், பிராட்டிமார் பருவத்துக்கு ஒப்பாமித்தனை. இவர்கள் கிளி; தான் இளங்கிளி. A ''மென்கிளிபோல் மிக மிழற்றும்'' B ''அணிமழலைக்கிளி மொழியாள்'' என்னக்கடவதிறே. ''நாணாதாய் நாவுடையாய்'' (14) என்று- கீழ்ப்பாட்டிலே அவளையுட்பட வெறுத்தவர்கள், அவளிலும் பிற்பாடையாய், லாப ராதை₄யாய்க்கிடக்கிற நம்மை ஶ்லாகி₄க்கக் கூடாது. C ''மாசுடையுடம்பொடு தலை யுலறி வாய்ப்புறம் வெளுத்து'' என்னும்படியே - தங்களுடம்பு விவர்ணமாய் வாயும் வெளுத்திருக்க, க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்தாலே உடம்பு பசுகுபசுகென்று வாயுஞ் சிவந்து நாம் குறியழியாதிருந்தோமென்று நம்மை நிந்தி₃க்கிறாள்கள்: இவ்வளவில் இவர்களுக்கு வாய்திறக்கில் வெறுப்பாமென்று பேசாதேகிடக்க, (இன்னம் உறங் குதியோ) என்கிறாள்கள். நாங்கள் வருவதுக்கு முன்பு உறக்கத்தைப் பொறுத்தோ மாகிலும், நாங்கள் வந்தால் உறங்கக் கடவதோ? (இன்னம் உறங்குதியோ) க்ருஷ்ண விரஹத்தாலும் உன் கடாக்ஷம் படாமையாலும் துவண்ட எங்கள் ஆர்த்தத்₄வநி கேட்டும் கண் உறங்குவதே உனக்கு! (இன்னம் உறங்குதியோ) உத்₃தே₃ஶ்யம் கைபுகுந்தால் உறங்குவாருண்டோ? க்ருஷ்ணாநுப₄வத்துக்கு ஏகாந்தம் பெற்றாலும் உறங்கக்கடவதோ?

தான் அநுப₄விக்கிற பங்கயக்கண்ணனுடைய அநுஸந்த₄ாநத்துக்கு, ''இளங் கிளியே'' என்பது, ''இன்னமுறங்குதியோ'' என்பது, இவர்கள் சொல்லுகிறவை

A திரு நெடு-15. B திருவாய்-9-7-11. C நாச் திரு-1-8.

விக்4நமாகையாலே, 'சிலுகிடாதேகொள்ளுங்கோள்' என்கிறாள் — (சில்லென்றழையேன் மின்) திருவாய்மொழி பாடாநின்றால் செல்வரெழுந்தருளுகையும் அஸஹ்யமா யாபோலே; பிராட்டிமாரும் ஸர்வேஶ்வரனும் கூட எழுந்தருளியிருந்தால் ஒட்டுவட்டில் காளாஞ்சியோபாதி பிரியாதேயிருக்கக்கடவ ஸ்ரீநாரத3ப4க3வானையும், ஶ்வேதத்3வீபத் திலே எழுந்தருளுகிறபோது 'உன் வன்மை அவர்கள் பொறுதேயிருக்கக்கூடும்' என்று "நான் வருமளவுமிங்கேயிரு'' என்று அருளிச்செய்து எழுந்தருளினாரிறே. 'தன்னை லல்லது செல்லாத எங்களைச் சிவிட்கென்பதே!' என்று இன்னாதாய், 'நாங்களும் எங்கள் த3ர்ஶநமும் எங்கள் பேச்சும் அஸஹ்யமாம்படி உன்னுடைய பூர்த்தி யிருந்தபடியென்'' என்ன; (நங்கைமீர் போதர்கின்றேன்) 'என் ப்ரக்ருதியறியாதே "இளங்கிளியே'' என்று என்னை பா3தி4க்கிற நீங்களன்றோ பூர்ணைகள்; வாய் திறவாதிருக்கவல்லிகோளாகில் நான் புறப்படுகிறேன்' என்ன;

(வல்லையுன் கட்டுரைகள்) எங்கள் தலையிலே குற்றஞ்சொல்லலாவதெல்லாஞ் சொல்லி, உன்தலையில் குற்றமில்லையென்னும்படி உபபாதி3க்கவல்லையிறே. (பண்டே உன்வாய் அறிதும்) ' "நங்கைமீர்'' என்று உறவற்ற சொல்லாலே வெட்டிமை சொல்லவல்லையென்னுமிடம் நாங்கள் இன்றாக அறிகிறோமோ? பண்டேயறியோமோ? கு3ணதோ3ஷங்களென்று ஒன்றுண்டோ? நீசொல்லிற்று வார்த்தையாமித்தனையன்றோ. உன்வாசலிலே நாங்கள் எத்தனை காலமுண்டு துவளுகிறது?' என்ன; (வல்லீர்கள் நீங்களே) 'உங்கள் வாசலிலே நான் வந்து துவள, பேசாதே கிடந்து வெட்டிமை சொல்லிப் படுத்தவல்லிகோள் நீங்களன்றோ. உங்கள் வாசலிலே வந்தெழுப்ப நான் எத்தனை பண்ணை(டை)க்கேட்டேன்' என்ன; 'அது ஸாத்4யம், இது ஸித்3த4ம்; ப்ரத்யக்ஷம் கிடக்க அநுமாநத்தைக் கொள்ளவோ?' என்ன; பதகம் மூட்டினவாறே—(நானேதான் ஆயிடுக) 1. "பரஸ்பரநீசபா4வை:'' என்றன்றோ ஸ்வரூபமிருப்பது. இல்லாத குற்றத்தைச் சிலர் "உண்டு'' என்றால், இல்லைசெய் யாதே இசைகையிறே வைஷ்ணவலக்ஷணம். 2. "மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்'' என்று-பிறர் குற்றத்தையும் தன் குற்றமாக இசைந்தாரிறே ஸ்ரீப4ரதாழ்வான். ஸ்வகு3ணபதா3நத்துக்காக கௌ3ரவ்யரை அதிநிர்ப்ப3ந்த4ம் பண்ணலாகாதென்னும் வேதா3ர்த்த2ம் ப்ரகாஶிக்கிறது,

'இப்படி தோ3ஷது3ஷ்டையான நான் உங்களுக்குச் செய்யவேண்டுவதென்?' என்ன; (ஒல்லை நீபோதாய்) உன் குற்றத்துக்கு இசைந்தபின்பு சடக்கெனப் புறப்பட்டு இத்திரளிலே புகுந்து பொறுப்பித்துக்கொள்ளாயோ? (ஒல்லை) A "ஒல்லைக் கூடுமினோ'' என்றாரிறே. B "சாதுகோட்டியுட்கொள்ளப்படுவார்'' என்று-ஸ்ரீவைஷ் ணவ கோ3ஷ்டி2யிலே புகுருகை ஏற்றமென்று அருளிச்செய்தாரிறே. (ஒல்லை நீ போதாய்) உன்னை அரைக்ஷணம் காணாதொழியில் எங்களுக்கு ப்ராணஹாநி; புறப் படாதொழியில், உனக்கு அநர்த்த2மாய்த் தலைக்கட்டும். 'ஆகில் புறப்படாநின்றேன்' என்னத் துடித்துக்கொண்டு புறப்பட்டுநின்று தாங்கள் பட்டது படாமையாலே சிவிட்

A திருப்பல் 4. B பெரியாழ் திரு-3-6-11,

கென்று-(உனக்கு என்ன வேறுடைமை) என்கிறுர்கள்—இவள் சற்று விளம்பித்துப் புறப்படுங்காட்டில். அஞ்சுலக்ஷம் குடியில் பெண்களுக்கொழிய உனக்கென்ன ஒரு ஸ்வயம்பாகம் வேணுமோ? உன் ஸ்வயம்பாகம் தவிர்ந்திலேயோ பெரும்பானை கண்ட பின்பும்? வைஷ்ணவ விஷயத்தை பஹிஷ்கரித்துப் பற்றும் பகவத்விஷயத்தோடு தேவதாந்தரத்தோடு வாசியில்லை.

இளையபெருமாள், ஸ்ரீபரதாழ்வானுடைய வதத்திலே உத்யோகித்து, வில்லிலே நாணேறிடுவது, அம்பைத் திரிப்பதாகிறபடியைக் கண்டு, பெருமாளுக்கு அஸஹ்யமாய், ''அவனுக்கு ராஜ்யத்தில் ஶ்ரத்தையில்லை, உனக்கு அபேக்ஷையுண்டாகில் வாங்கித்தருகிறேம்'' என்று அருளிச் செய்தபோது இளையபெருமாள் தரைப்பட்டாற்போலே, இவளும் ''உனக்கென்ன வேறுடைமை'' என்றது பொறுக்க மாட்டாமே-(எல்லாரும் போந்தாரோ) 'உங்களையொழிய எனக்கு ஒரு ஸுகமுண்டோ? நம்மிலே சிலர் உறங்கிக்கிடக்கப் போகவொண்ணுதென்னும் இன்னுப்பாலே சொன்னேனித்தனையன்றே. உணரவறியாத சிறுபெண்களும் உணர்ந்தால் புறப்படுவதாக விருந்தேன், எல்லாருமுணர்ந்து புறப்பட்டார்களோ?' என்ன; (எல்லாரும் போந்தார்) க்ருஷ்ணவிரஹத்தாலே துவண்ட பெண்களடைய உன்னைக் காண்கைக்கு உன்வாசலிலே வந்து கிடக்கிறது. 'நான் எழுந்திருக்கைக்காக ஒன்றைச் சொல்லுகிறிகோளத்தனையன்றே; வந்தார்களாகில் உள்ளே புகுரவிடுங்கோள்?' என்ன; (போந்தெண்ணிக்கொள்) வந்தமை நிஶ்சிதம்; புறப்பட்டு மெய்க்காட்டுக்கொள். மெய்க்காட்டுக்கொள்ளுகைக்கு ப்ரயோஜநமாக இவர்கள் நினைக்கிறது—தனியே பார்க்கையும், பேர்சொல்லுகையும், தொட்டு எண்ணுகையும், ஸ்பர்ஶஸுகமநுபவிக்கையும், பெண்களுக்கு ஸங்க்யையில்லாமையாலே எண்ணிமுடிக்குந்தனையும் இவளைப்பிரியாதே அநுபவிக்கையும்.

'நாமெல்லாருங்கூடிச் செய்யப்பார்த்ததென்?' என்ன: க்ருஷ்ணனுடைய விஜயங்களை நீ பாட நாங்கள் கேட்கவேணுமென்கிறுர்கள் - (வல்லானை கொன்றானை) பெருகுவலயாபீடத்தைக்கொன்று நம் ஜீவநமான தன்னை நோக்கித்தந்தவனை. பெருமிடுக்குண்டாம்படி மதப்படுத்திநின்ற குவலயாபீடத்தைக் கொன்று 1. ''ஸக்ஷமட்டைப் பஶ்யத'' என்று A காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழவீதிவந்து நம்மோட்டைப் பெண்களை வாழ்வித்தவனை. B ''கவளயானைக் கொம்பொசித்த கண்ணன்'' என்றிறே பெண்கள் வாய்வெருவுவது. C ''கவளமால் யானை கொன்ற கண்ணன்'' என்று-ஆண்களை எழுதி முடிக்கப் பண்ணினது, பெண்களையெழுத்துவாங்குவிக்கச் சொல்லவேணுமோ? D 'வெஞ்சினவேழ மருப்பொசித்த வேந்தர்கோலேந்திழையார் மனத்தைத் தஞ்சுடையாளர்கொல்'' என்னக்கடவதிறே. E ''வாரணத்தை மருப்பொசித்த பிரானென் மாதவனே'' F ''பாரணங்காளன் வாரணந் தொலைத்த காரணன்'' G ''பின்னை மணாளனைக் கருந்தாள்களிறென்றெசித்தான்'' என்று

A பெரிய திரு-3-3-7. B பெரிய திரு-4-8-1. C திருமாலை-45. D பெரிய திரு 9-2-6. E திருவாய்-2-7-2. F திருவாய்-10-5-2. G பெரிய திரு-8-6-6.

ப்ரதா₄நமஹிஷிகள் மூவரும் இவ்வபதா₃நத்துக்கிறே தோற்றுக்கிடப்பது. ஸ்ரீகு₃ஜேந்த்₃ராழ்வானை ரக்ஷித்ததிலுங்காட்டில் இத்தை கு₃ணமாக A "ஒரானைகாத்துஒரானை கொன்று" என்று அருளிச்செய்தாரிறே. (மாற்றாரைமாற்றழிக்கவல்லானை) சக்ரவர்த்தித் திருமகனைப்போலே, 1. "க₃ச்ச₂" என்றுவிடாதே, குவலயாபீட₃த்தின் கொம்பைப்பிடுங்கி, மல்லரங்க₃த்திலே புக்கு சாணூரமுஷ்டிகர் தொடக்கமான மல்லரைக்கொன்று உயர்ந்த மஞ்சத்திலேயிருந்த கஞ்சனை மயிரைப் பிடித்திழுத்து, பூ₄தலத்திலே புரட்டித் திருவடிகளாலே உதைத்து, மதிப்பறுத்து, B குஞ்சிபிடித்தடித்து, தன்னை யுபகரித்து, 2. "ந ஸமம் யுத்₃த₄மித்யாஹு:" என்றஞ்சின பெண்களை வாழ் வித்தவனை; C "வார்கடாவருவி"யில் செய்தவற்றையெல்லாம் நினைத்துச்சொல்லு கிறார்கள். (மாயனை) தன் கையிலே எதிரிகள் படுவதெல்லாம் நம் கையில் தான் பட்டு நமக்குத்தோற்று அத்தோல்வியாலே நம்மை வென்றிருக்குமவனை. (வல்லானை கொன்றானை) குவலயாபீட₃த்தை அழித்தாற்போலே நம்முடைய ஸ்த்ரீத்வாபி₄ மாநத்தைப்போக்கி, மல்லரை நிரஸித்தாற்போலே தன்தோளோடு அணையவொட்டாத இடையருடைய ஸங்கல்பத்தைப்போக்கி, எதிரிகள் தனக்குத்தோற்றாற்போலே, நமக்குத் தான் தோற்றிருக்கிற ஆஶ்சர்யபூ₄தனை. (பாட) நம்முடைய தோல்வியும் அவனுடைய வெற்றியும் தோற்றப் பாட. D "ஏத்துகின்றோம் நாத்தழும்ப" என்று தோற்றவர்கள் பாடுமாபோலே; "வாயினால்பாடி" (5) என்று—அவதாரக்ரமம் பாடினபடி சொல்லிற்று; "கேசவனைப் பாட" (7) என்றும், "பாடிப்பறை கொண்டு" (27) என்றும், "கீர்த்திமைபாடி" (13) என்றும்-விரோதி₄ நிவர்த்தகத்வம் பாடினபடி சொல்லிற்று; "முகில் வண்ணன்பேர்பாட" (11) என்று-வடிவழகுக்குத் தோற்றுப்பாடினபடி; "சங்கொடு சக்கரமேந்தும்" (14) என்று-தி₃வ்யாயுத₄ங்களுக்கும் அவயவஶோபை₄க்கும் தோற்றுப்பாடினபடி; இங்கு, வெறுங்கையோடே நின்று வென்றபடிக்கும், தங்களுக்குத் தோற்றபடியையும் பாடுகிறார்கள்.

"எல்லே இளங்கிளியே" என்று-ப₄க₃வத்₃ விஷயத்திலே ருசியுடையார் பேச்சும் உத்₃தே₃ஶ்யமென்கிறது; "இன்னமுறங்குதியோ" என்று-பா₄க₃வத ஸஹவாஸம் ஸித்₃தி₄த்தால் புறம்பு அந்யபரதைபண்ணுமிடம் தப்பென்கிறது; "சில்லென்றழையேன்மின்" என்றத்தால்-ருசியுடையார்க்கு எல்லாஞ் சொன்னாலும் பொறுக்க வேணுமென்னுமிடம் சொல்லுகிறது; "நங்கைமீர் போதர்கின்றேன்" என்கிறத்தால்-சாபலத்தாலே சில பிறந்தாலும் ப₄க₃வத்₃விஷயத்தில் அவகா₃ஹித்த வர்களை, சாபலத்தால் பிறந்தவற்றை நினையாதே, கௌரவ்யதை தோற்றச் சொல்லவேணுமென்கிறது; "வல்லையுன்கட்டுரைகள்" என்றத்தால்-"சில்லென்றழை யேன்மின்" என்றது இவர்களுக்கு உத்₃தே₃ஶ்யமானவோபாதி உன் வெட்டிமை யறிந்தோமென்றதும் அவளுக்கு உத்₃தே₃ஶ்யமாகக்கடவதென்கிறது; - "வல்லீர்கள் நீங்களே நானேதான் ஆயிடுக" என்கிற இத்தால்-பரதோ₃ஷத்தையும் ஸ்வதோ₃ஷ மாக்கிக் கொள்ளவும், கௌரவ்யரை அதிநிர்ப்ப₃ந்த₄ம் பண்ணக்கடவதல்லவென்

A திருச்சந்த-40. B பெரிய திரு-3-10-3. C திருவாய்-8-4. D பெரிய திரு-10-3-1.

னுமிடத்தையும் சொல்லுகிறது. ''ஒல்லை நீ போதாய்'' என்கிற இத்தால் பாகவத ஸம்ஶ்லேஷம் ஸத்தாஸித்தி என்கிறது; ''உனக்கென்ன வேறுடையை'' என்கிற இத்தால்—1. ''யதா தே தத்ர வர்த்தேரந்'' என்கிற வேதாந்த ப்ரக்ரியையாலே ஶ்ரேஷ்டர் வர்த்தித்தபடி வர்த்தியாதொழிகை தப்பென்கிறது; ''எல்லாரும் போந்தாரோ'' என்கிற இத்தால் — ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் உத்தேஶ்யரென்கிறது; ''போந்தெண்ணிக்கொள்'' என்கிற இத்தால் — ஒருவர் குறைந்தாலும் பகவதநுபவத்துக்குக் குறையென்கிறது; ''வல்லானைகொன்றானை'' என்றுதொடங்கி—திரண்ட பாகவதர்களுக்கு உஜ்ஜீவநம் A ''உண்ணுஞ்சோறு'' என்கிறபடியே பகவத் விஷயாநுபவமென்கிறது. 15.

## ஈராயிரப்படி — பதினைந்தாம் பாட்டு

அவ:— பதினைந்தாம் பாட்டு— இவர்கள் தங்களிலேகூடிப் பாடின பாட்டைக் கொண்டு அசல் திருமாளிகையிலே கேட்டுக் கிடப்பாளொரு பெண் பிள்ளையை, தன்னிலே நுடங்கிப்பாடுகிறபடியைக் கேட்டு ''எல்லே இளங்கிளியே'' என்கிறார்கள்.

வ்யா:— 'திருவான பேச்சு இருந்தபடியென்' என்று கொண்டாடுகிறார்கள் யாழிலேயிட்டுப் பாடி இனிதானவாறே மிடற்றிலே இட்டுப் பாடுவாரைப் போலே முற்படப் பெண் பாடக்கேட்டு அவர்கள் பாடுகிறார்கள்.

(எல்லேயித்யாதி) ''இளங்கிளி'' என்று கிளியை வ்யாவர்த்தித்தபடி. தாங்கள் கிளிகள், இவள் இளங்கிளி. பாட்டிலினிமையும் அப்படியே; இதொரு பேச்சே என்று கொண்டாடுகிறார்கள். இவர்கள் பாட்டுக்கொண்டாடினத்தை. பயத்தாலே தங்களுடைய உடம்பும் வாயும் வெளுத்திருக்க, க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்தாலே நம் உடம்பு பசுமையுண்டாய் வாயும் சிவந்திருக்கிறது என்று ஒன்றும் பேசாதே கிடந்தாளாயிருந்தவாறே—(இன்னமுறங்குதியோ) உத்தேஶ்யம் கைபுகுந்தாலும் உறங்குவாருண்டோ? (சில்லென்றழையேன்மின்) தான் அநுஸந்திக்கிற அநுஸந்தானத்துக்கு இவர்கள் அழைக்கிற சொல் விக்னமாகையாலே 'சிலுகிடாதே கொள்ளுங்கோள்' என்கிறாள். திருவாய்மொழி பாடாநின்றால் செல்வரெழுந்தருளுகையும் அஸஹ்யமாமாபோலே. (நங்கைமீர் போதர்கின்றேன்) இவர்கள் சிவிட்கென்ன, 'நாங்களும் எங்கள் சொல்லுமாகாதபடி உன் குறை வறுகை இருந்தபடி யென்?' என்ன; 'நீங்களன்றோ குறைவற்றீர்கள்: படுத்தாதே கொள்ளுங்கோள்; புறப்படாநின்றேன்' என்ன (வல்லையுன் கட்டுரைகளித்யாதி) 'நீ சொல்லிற்றைச் சொல்லி எங்களதே குற்றமாம்படி வார்த்தை சொல்லவல்லை என்னுமிடம் இன்றேயல்ல அறிகிறது; எத்தனை காலமுண்டு உன்னோடே பழகுகிறது' என்ன;

(வல்லீர்கள் நீங்களே) 'உங்கள் வாசலிலே வந்து உங்களாலே படாததுண்டோ?' என்ன 'அது ஸாத்யம்; இது ஸித்தமன்றோ; ப்ரத்யக்ஷத்துக்கு அநுமானம் வேணுமோ?' என்ன; (நானேதானாயிடுக) என்று. ஸ்ரீபரதாழ்வான்

A திருவாய்-6-7-1.

1. "மத்பாபமேவாத்ர" என்றாப்போலே; 2. "மத்3ப4ாக்3யஸங்க்ஷயாத்" இறே. பர ஸ்துதியோடொக்கும் ஸ்வநிகர்ஷம். (ஒல்லை நீ போதாய்) அவள் புகுராவிடில் தங்களுக்கு ப்ராணஹாநியாகையாலும், அவளுக்கும் அனர்த்த2மாகையாலும் 'சடக்கெனப் புறப்பட்டுக் கொடுநில்' என்ன, வைஷ்ணவ கோ3ஷ்டி2யைப் பிரியா திருக்கை நன்று. (உனக்கென்ன வேறுடையை) "பஞ்சலக்ஷம் குடியில் பெண் களுக்குள்ளதொழிய உனக்கு வேறே சில உண்டோ? உன் ஸ்வயம்பாகம் இன்னம் தவிர்ந்ததில்லை, பெரும்பானை கண்ட பின்பும்" என்கிறார்கள். அதாவது— மத்4யமபத3மும் மூன்றாம் பதமும். காட்டில் இளையபெருமாளுக்கு ஸ்ரீப4ரதாழ் வானைக்காண்கை அஸஹ்யமானவாறே, பெருமாள் "ஆகில் நீர் ராஜ்யத்தை ஆள வேணும்" என்ன, இளையபெருமாள் தரைப்பட்டாற்போலே, இவளும் "உனக் கென்ன வேறுடையை' என்ன, அப்படி தரைப்பட்டாள். A சாதுகோட்டியுட் கொள்ளப் படுவாரென்கை புருஷார்த்த2ம். இக்கோ3ஷ்டி2க்குப் புறம்பாயிருக்கைக்கு மேற்பட அனர்த்த2முண்டோ? விஷயங்களைப்பற்றிப் புறம்பாயிருக்கவுமாம், ஈஶ்வரனைப் பற்றிப் புறம்பாயிருக்கவுமாம்; ஆத்மாவைப் பற்றிப் புறம்பாயிருக் கவுமாம். 3. "ஸசைலவனம் ப4ரதம் க3த்வா ஹநிஷ்யாமி ந ஸம்ஶய:' 4. "ராஜ்ய மஸ்மை ப்ரதி3யதாம்" 5. "ஸ்வாநி க3ாத்ராணி லஜ்ஜயா"

(எல்லாரும் போந்தாரோ) உங்களையொழிய எனக்கொரு ஸுக2முண்டோ? உணரவறியாத சிறுபெண்களும் இழக்கவொண்ணாது; அவர்களும் உணர்ந்தால் புறப்படவேணுமென்று கிடந்தேன். (எல்லாரும் போந்தாரோ) 'அடைய வந்து புறப்பட்டு மெய்க்காட்டுக் கொள்' என்ன; மெய்க்காட்டுக்கு ப்ரயோஜனம் தொட்டெண்ணுகையும், தனித்தனி எல்லாரையும் தழுவுகையும்.

(வல்லானை கொன்றானை) 'இனி உங்களுக்குச் செய்யவேண்டுதென்?' என்ன, உன் அழகிய மிடற்றாலே 'வல்லானை கொன்றானை' என்னாய் என்கிறார்கள். "ஒருநாள் செய்த உபகாரம் அமையாதோ நமக்கு" என்று கொண்டாடு கிறார்கள். (வல்லானை கொன்றானை) B "புகுவாய் நின்ற போதகம் வீழப் பொரு தான்" என்று வாசலிலே ஆனையை நிறுத்தி, பிள்ளையை ஆனை நலிந்ததாகக் கேட்போமிறே என்று கம்ஸன் அம்மானாயிருக்கப் பார்க்க, அத்தைக்கொன்று அவ்வூரில் பெண்களையும் நம்மையும் உளோமாம்படி பண்ணி, ஜீவனமான தன்னை நோக்கித்தந்தவன். (மாற்றாரையித்யாதி3) சக்ரவர்த்தித் திருமகனைப் போலே "நாளை வா" என்னாதே அக்ஷணத்திலே கம்ஸாதி3கள் நினைத்த நினைவை அவர்கள்தங்களோடே போக்கி, தாய்தமப்பன் காலில் விலங்கைப் போக்கி வாழ்வித்தவன்.

(மாயனை) தன் கையில் எதிரிகள் அகப்படுமவற்றைத் தான் பெண்கள் கையிலே அகப்பட வல்லவன். (பாட) நமக்கு அவன் தோற்கும் தோல்விக்குத் தோற்றுப்பாட. இவ்விஷயத்திலே ஜயம் ப்ரணயித்வத்துக்குக் கொத்தை:ஆதலால் தோல்வி விஜயமான இடமிறே இவ்விடம். 15.

---

A பெரியாழ் திரு-3-6-11, B பெரிய திரு-6-5-6-

## நாலாயிரப்படி — பதினைந்தாம் பாட்டு

அவ :— பதினைந்தாம் பாட்டு. பெண்களெல்லாருடையவும் திரளைக் காண வேண்டியிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள்.

வ்யா :— இவர்கள் தங்களிலே கூடிப் பாடின பாட்டான 'சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையன் பங்கயக்கண்ணானைப் பாட.' என்ற பாட்டைக் கேட்டு அசல் திருமாளிகையிலே கிடந்தாளொரு பெண்பிள்ளை தன்னிலே கிடந்து நுடங்கிப்பாடுகிற படியைக்கேட்டு — (எல்லேயிளங்கிளியே) 'திருவான பேச்சிருந்தபடி என்!' என்று கொண்டாடுகிறார்கள். யாழிலேயிட்டுப்பாடி இனிதானவாறே மிடற்றிலேயிட்டுப் பாடுவாரைப்போலே முந்துறப் பெண்கள் பாடக்கேட்டு இவள் பாடுகிறாள். (இளங்கிளியே இன்னமுறங்குதியோ) 'எல்லே' என்றது என்ன ஆஶ்சர்யமென்றபடி, ஸம்போ3த4நமாகவுமாம். (இளங்கிளியே) கிளியை வ்யாவர்த்தித்தபடி. தாங்கள் கிளிகள்; இவள் இளங்கிளி; பாட்டில் இனிமையாலே உறங்கி இவள்பேச்சுக்கிடையாதென்னும்படியிருக்கை. 'இதொரு பேச்சு' என்று கொண்டாடினார்கள். இவர்கள் பேச்சைக்கேட்டுக் கொண்டாடிச் சொன்னத்தை, தன் ப4யத்தாலே தங்களுடைய உடம்பும் வாயும் வெளுத்திருக்க, க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்தாலே நம்முடைய உடம்பு பசுமையுண்டாய், வாயும் சிவந்திருக்கிறதென்கிறார்கள்; இவ்வளவிலே வாய் திறக்கில் பழியிடுவார்களென்று நினைத்து 'நானிங்ஙனே பசுகுபசுகென்று சிறகுகளும் தானுமாயிருந்தேனோ?' என்று பேசாதே கிடந்தாள். (இன்னமுறங்குதியோ) உத்3தே3ஶ்யம் கை புகுந்தால் உறங்குவாருண்டோ? எங்களுக்கு க்ருஷ்ணவிரஹத்தாலே தளர்வதுக்கு மேலே உறக்கமில்லை; அதுக்கு உன் கடாக்ஷமும் பெறுதொழிவதே! உன்பாட்டுக் கேட்கப் பெறுதொழிவதாய் உயிர்க்கொலையாக்கி இட்டுவைத்தால் த4ரிக்கவொண்ணுமோ?

(சில்லென்றழையேன்மின்) பிராட்டிமாரோடே கூட எழுந்தருளியிருந்தாலும் படிக்கத்தோபாதி அந்தரங்க3ருயிருக்கக்கடவ ஸ்ரீநாரத3ப4க3வானை ஶ்வேதத்3வீபத்துக்கெழுந்தருளினபோது உள்ளே புகப்புக்கவாறே, இவன் வெட்டத்தனம் அவர்களுக்குப் பொருதென்று 'நீ இங்கே நில்லு' என்று எழுந்தருளினாற்போலே, தான் அநுஸந்தி4க்கிற விக்4நமாகையாலே 'சிலுகிடாதே அநுஸந்த4ாநத்துக்கு இவர்கள் அழைக்கிற சொல் திருப் கொள்ளுங்கோள்' என்கிறாள். 'இவர்கள் வார்த்தை அஸஹ்யமோ?' என்னில்; செல்வர் எழுந்தருளுகையும் அஸஹ்புன்னைக்கீழே திருவாய்மொழி பாடாநின்றால், செல்வர் எழுந்தருளுகையும் அஸஹ்யமாமாபோலே. (நங்கைமீர் போதர்கின்றேன்) இவர்கள் சிவிட்கென்று, 'நாங்களும் எங்கள் சொல்லும் ஆகாதபடி உன் குறைவறுகை இருந்தபடியென்?' என்ன, 'நீங்களன்றோ குறைவற்றிகோள்; என்னைப் படுத்தாதே கொள்ளுங்கோள்; புறப்படாநின்றேன்' என்ன; (வல்லையுன் கட்டுரைகள் பண்டே உன்வாய் அறிதும்) 'நங்கைமீரென்ற உறவற்ற சொல்லாலே நீ சொல்லிற்றைச் சொல்லி, எங்கள் திறத்தே குற்றமாம்படி வார்த்தைசொல்லவல்லை என்னுமிடம் இன்றேயல்ல; எத்தனைகாலமுண்டு உன்னோடே பழகுகிறது' என்றார்கள்.

(வல்லீர்கள் நீங்களே) 'இன்னமுறங்குதியோ வல்லையுன் கட்டுரைகள்' என்னும் வெட்டிமை உங்களதே; நான் உங்கள் வாசலிலேவந்து படாததுண்டோ?

என்ன; 'அது ஸாத்4யம்; இது ஸித்3த4மன்றோ; ப்ரத்யக்ஷத்துக்கு அநுமாநம் வேணுமோ' என்கிறார்கள். (நானே தானாயிடுக) பதகம் மூட்டினவாறே சிறிது போதாகிலும் பேசாதேயிருப்பார்களிறே என்று 'நானே தானாயிடுக' என்கிறாள்; ஒருவனுக்கு வைஷ்ணவத்வமாவது ஸ்வதோ3ஷத்தை இல்லைசெய்யாதே, இல்லாதத்தையும் சிலருண்டென்றால் அத்தை இசைகையே ஸ்வரூபம் என்னும் வேதா3ர்த்த2ம் சொல்லிற்றாகிறது. ஸ்ரீ பரதாழ்வான், 1. "மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்" என்றான். பரஸ்துதியோடொக்கும் ஸ்வநிகர்ஷம். அத்தோ3ஷம் என் தலையிலே கிடக்கிறது. 'உங்களுக்குஇப்போது செய்யவேண்டுவதென்?' என்ன; அரைக்ஷணம் தங்களுக்கு அவளையொழியச் செல்லாமையாலும், அவளுக்குத் தங்களையொழியச் செல்லாமையாலும் சடக்கெனப் புறப்பட்டுக்கொண்டு நில்லென்கிறார்கள் — (ஒல்லை நீ போதாய்) உன் படுக்கையில் கிடக்கிற க்ருஷ்ணனை இட்டுவைத்து நீ கடுகப்போராய்; "அரைக்ஷணம் வைஷ்ணவகோ3ஷ்டி2யைப் பிரிய நின்று வரும் மாத்4யஸ்த்2யம் எனக்கென்செய்ய?" என்கிற ஸுப்3ரஹ்மண்யப4ட்டர் வார்த்தையை ஸ்மரிப்பது. (உனக்கென்ன வேறுடையை) அஞ்சுலக்ஷம் குடியில் பெண்களுக்குள்ளேதொழிய உனக்கு வேறே சில உண்டோ? உன் ஸ்வயம்பாகம் இன்னம் தவிர்ந்திலையோ எங்கள் பெரும்பானை கண்ட பின்பும்? அதாவது — மத்4யமபத3மும் உத்தரபத3மும் 2. "ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்3ரஹ்மணா விபஶ்சிதா" என்னக் கடவதிறே; A "கோதில் வாய்மையினாயொடுமுடனே உண்பன் நான்" என்னுமா போலே. இளையபெருமாள் கைகேயியின் மகன் வருகிறானென்று ஸ்ரீப4ரதாழ்வானைச் சீறி, 'வில்லையோட்டிக் கொல்ல' என்ன, பெருமாளுக்கு அது அஸஹ்யமாய் 'பிள்ளைக்குச் சொல்லிக்கொள்ளுகிறோம், நீ இங்ஙன் அலமாக்கிறது ராஜ்யத்தை ஆசைப்பட்டன்றோ; நீ ராஜ்யத்தைப் பண்ணு' என்று சொன்ன வார்த்தையைக் கேட்டு இளையபெருமாள் தரைப்பட்டாற் போலே இவளும் 'உனக்கென்ன வேறுடையை' என்ன அப்படிப்பட்டாள். 3. "ஸஸைந்யம் ப4ரதம் க3த்வா ஹநிஷ்யாமி ந ஸம்ஶய:" 4. "ராஜ்யமஸ்மை ப்ரதீ3யதாம்" 5. "ஸ்வாநி கா3த்ராணி லஜ்ஜயா" B 'சாது கோட்டியுட் கொள்ளப்படுவார்" என்று புருஷார்த்த2மான இக்கோ3ஷ்டி2க்குப் புறம்பாயிருக்கைக்கு மேற்பட்ட அநர்த்த2முண்டோ? விஷயங்களைப் பற்றிப் புறம்பாயிருக்கவுமாம். ஈஶ்வரனைப் பற்றிப் புறம்பாயிருக்கவுமாம். ஆத்மாவைப் பற்றிப் புறம்பாயிருக்கவுமாம்.

(எல்லாரும் போந்தாரோ) "உங்களையொழிய எனக்கொரு ஸுக2முண்டோ? உணரவறியாத சிறு பெண்களுமகப்பட இழக்கவொண்ணாதென்று பார்த்து, அவர்களுமுணர்ந்தால் புறப்படவேணுமென்று கிடந்தேனித்தனை; எல்லாரும் போந்தார்களாகில் புறப்படுகிறேன்" என்றாள். (போந்தார் போந்தெண்ணிக் கொள்) மெய்க் காட்டுக்கு ப்ரயோஜநம் தொட்டெண்ணுகையும் தனித்தனியே எல்லாரையும் தழுவுகையும்.

"எல்லாரும் வந்தாராகில் இனி உங்களுக்குச் செய்யவேண்டுவதென்?" என்ன; "வேறுண்டோ! உன்னுடைய அழகிய மிடற்றாலே ஒரு கால் 'வல்லானை கொன்றானை' என்னாய்" என்கிறார்கள் — (வல்லானை கொன்றானை) 'ஒரு நாள் செய்த உபகாரம் அமையாதோ நமக்கு' என்று கொண்டாடுகிறார்கள். C "புகுவாய் நின்ற போதகம் வீழப் பொருதான்" என்று வாசலிலே யானையை நிறுத்தி, பிள்ளையை யானை நலிந்ததாகாதே

---

**A** பெரிய திரு-5-8-2. **B** பெரியாழ் திரு-3-6-11. **C** பெரிய திரு-6-5-6.

கேட்போமிறே என்று கம்ஸன் அம்மானுப் முறைகேடாக்கியிருக்கப் பார்க்க, அதனைக் கொன்று அவ்வூரில் பெண்களையும் நம்மையும் உளோமாம்படி பண்ணி, நம் ஜீவநாத்3ருஷ்டமான தன்னை நோக்கித் தந்தவன். (மாற்றாரை மாற்றழிக்க வல்லானை) சக்ரவர்த்தித் திருமகனுரைப் போலே, நாளை வாவென்று விடாதே அக்ஷணத்திலே கம்ஸாதி3கள் நினைத்த நினைவை அவர்கள் தங்கள் நினைவோடே போக்கி, தாய் தமப்பன் கால் விலங்கைப் போக்கி வாழ்வித்தவனை.

(மாயனை) தன் கையில் ஶத்ருக்கள் படுமவற்றைப் பெண்கள் கையிலே படுமவன். (பாட) நமக்கு அவன் தோற்கும் தோல்விக்குத் தோற்றுப் பாட. இவ்விஷயத்தில் விஜயம் ப்ரணயித்வத்துக்குக் கொத்தையாய், தோற்க, அத்தோல்விக்கு அவனைப் பாடவேணும். 15.

## ஸ்வாபதே3ஶ வ்யாக்2யாநம் — பதினைந்தாம் பாட்டு

அவ:— பதினஞ்சாம்பாட்டு. (எல்லே இத்யாதி3). இப்பாட்டில் பா4க3வத கோ3ஷ்டி2யைக் காண ஆசைப்பட்டிருப்பாரொருவரை எழுப்புகிருர்கள்.

வ்யா:- (எல்லே) அசலகத்துப் பிள்ளையை எழுப்புகிறவர்கள், ''சங்கொடு சக்கரம்'' (14) இத்யாதி3யைப்பாட, அப்பாசுரத்தைத் தன்மிடற்றிலே வைத்துப் பாடுகையாலே அதுதானும் இவர்களுக்கு அத்யந்தம் ஆகர்ஷகமாயிருக்கையாலே, அவரைக் கொண்டாடுவதற்கு முன்பு ''எல்லே'' என்று ஆஶ்சர்யப்படுகிருர்கள். (இளங்கிளியே) கிளி பேச்சுக்கு ஒப்பாமத்தனையல்லது பருவத்துக்கு ஒப்பாமோ? இவ்விடத்தில், பருவமென்பது - அபி4நிவேஶத்தை; அவற்றுக்கு அபி4நிவேஶ பூர்வகமாக வார்த்தை சொல்லவேணுமென்கிற நிர்ப்ப3ந்த4மில்லையிறே. (இன்னம் உறங்குதியோ) நாங்களனைவரும் வந்த பின்பும் உறங்கக்கடவையோ?

(சில்லென்று அழையேன்மின்) இப்படி அவர்களழைக்கை ஸ்வாநுப4வ விரோதி4யாகையாலே, ''சில்லென்றழையேன்மின்'' என்கிருர். (நங்கைமீர் போதர்கின்றேன்) 'நாங்களும் நம் பேச்சும் போராதபடி உன்பூர்த்தி என்?' என்ன, 'நம் பாசுரத்தை மிடற்றிலே வைத்துப் பாடுகிற இவ்வநுப4வத்துக்கு விரோத4ம் பண்ணலாகாதேயென்று எழுப்பாதேயிருக்கவேண்டியிருக்க, அது பொருதே எழுப்புகிற நீங்களன்ரே பூர்ணைகள். நீங்கள் வெறுமனே இருந்தி கோளாகில் நான் புறப்பட்டு வருகிறேன்' என்ன:

(வல்லை உன்கட்டுரைகள்) நீர் கட்டுவார்த்தை சொல்ல ஸமர்த்த2ர். (பண்டே உன் வாயறிதும்) இவ்வர்த்த2ம் முன்பே உம் பாசுரங்களாலே அறிவோம். (வல்லீர்கள் நீங்களே) 'உங்கள் பாசுரத்தை அநுப4விக்கிற என்னுடைய அநுப4வத்துக்கு விரோத4த்தைப் பண்ணி, அதுக்குமேலே என்மேலே பழியாம்படி வார்த்தை சொல்லவல்ல நீங்களன்ரே ஸமர்த்த2ர்கள்' என்ன; (நானேதான்

## பதினறும் பாட்டு

நாயக ஞய்நின்ற நந்தகோ பனுடைய
கோயில்காப் பானே கொடித்தோன்றும் தோரண
வா(ச)யில்காப் பானே மணிக்கதவம் தாள்திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக் கறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால்முன் னமுன்னம் மாற்ருதே யம்மாநீ
நே(ச)ய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்.

பதவுரை :— நாயகன் ஆய் நின்ற — (எங்களுக்கு) ஸ்வாமியாயிருக்கிற, நந்த கோபனுடைய — நந்தகோபருடைய, கோயில் — திருமாளிகையை, காப்பானே — காக்குமவனே! கொடி தோன்றும் — த்4வஜங்கள் விளங்காநிற்கும், தோரண வாயில் — தோரண வாசலை, காப்பானே — காக்குமவனே! மணி — ரத்தினங்கள் பதிக்கப்பெற்ற, கதவம் — கதவினுடைய, தாள் — தாழ்ப்பாளை, திறவாய் — திறக்கவேணும்; ஆயர் சிறுமிய ரோமுக்கு — இடைச்சிறுமிகளான எங்களுக்கு, மாயன் — ஆச்சரியச்செயல்களையுடையவனும், மணிவண்ணன் — நீல ரத்தினம் போன்ற திருநிறத்தையுடையவனுமான கண்ணபிரான், நென்னலே — நேற்றே, அறை பறை வாய் நேர்ந்தான் — ஶப்3தி3க்கும் பறையைக் கொடுப்பதாக வாக்களித்தான்; துயில் எழ — (அவன்) தூக்கத்திலிருந்து எழுந்திருக்கும்படி, பாடுவான் — பாடுவதற்காக, தூயோமாய் வந்தோம் — பரிஶுத்3தை4களாக வந்திருக்கின்ருேம்; அம்மா — ஸ்வாமி! முன்னம் முன்னம் — முதன் முதலில், வாயால் — (உம்முடைய) வாயினலே, மாற்ருதே — மறுக்காமல். நேயம் நிலை கதவம் — (கண்ணனிடம்) பேரன்புபூண்ட நிலைமையையுடைய கதவை, நீ — நீயே, நீக்கு — நீக்கவேணும்.

---

ஸ்வா:— ஆயிடுக)ப4ாக3வத ஶேஷத்வம் ஸ்வரூபமாஞல் அவர்களிடும் பழியும் தம்மேலேறிட்டுக்கொள்ளுகை ஸ்வரூபமன்ருே; ஆகையாலே, நானே அபராதி4யாயிடுக.

(ஒல்லை நீ போதாய்) இப்படி பழியைத் தம்மேலே ஏறிட்டுக்கொண்ட இவரை, சடக்கென இக்கோ3ாஷ்டி2யிலே ப்ரவேஶியாய் என்கிருர்கள். (உனக் கென்ன வேறுடையை) உனக்கென்று ப்ருத2க்கான ப4க3வத்3கு3ணுநுப4வம் என்? ‘நாம் புறப்படுகைக்கு எல்லாரும் போந்தாரோ?’ என்ன; (போந்தார் போந்தெண்ணிக்கொள்) எல்லாரும் போந்தார்கள்; நீயும் இக்கோ3ாஷ்டி2யிலே ப்ரவேஶித்து மெய்க்காட்டுக்கொள்.

புறப்பட்டுச் செய்யவேண்டியது என்? என்ன, — (வல்லானை இத்யாதி3) ஸ்வயத்நத்தால் கடக்க அரிதாய், ப்ராயஶ்சித்தவிநாஶ்யமுமின்றிக்கேயிருக்கிற அஹங்கார நிவர்த்தகனுய் மற்றுமுள்ள காம க்ரோத4ாதி3களுக்கும் நிவாரகனுய், ஆஶ்ரிதபரதந்த்ரனைப்பாட; ‘‘ஒல்லை நீ போதாய்’’ இத்யந்வய:.

## மூவாயிரப்படி - பதினாறும் பாட்டு

அவ:— பதினாறும் பாட்டு. a கீழில் பத்துப்பாட்டாலும் - முற்பட உணர்ந்தவர்கள் உறங்குகிறவர்களை எழுப்ப, எல்லாருங் கூடி வந்து ஸ்ரீநந்த3கோ3பர் திருமாளிகையிலே சென்று கோயில்காப்பானையும் திருவாசல்காப்பானையும் எழுப்புகிறார்கள். b "செய்யாதன செய்யோம்" (2) என்று பண்ணின ப்ரதிஜ்ஞையை

---

பெ. அ. பதினாறும்பாட்டு. (நாயகன் இத்யாதி3) 'முதலஞ்சு பாட்டாலே — ப4க3வத3நுப4வோபகரணங்களை அருளிச்செய்து, எழுப்புகிற பத்துப்பாட்டிலும் வைத்துக்கொண்டு முதல் பாட்டில் — ப4க3வதே3க பே4ாக3ரான ஸ்ரீவைஷ்ணவர்கள் அநந்ய ப்ரயோஜநராய் இவ்விஷயத்தில் தே3ஶிகரன்றிக்கேயிருப்பாரை அவர்கள் பக்கல் பரிவாலே தே3ஶிகராக்குகை தங்களுக்கு க்ருத்யமென்றிருக்கை — ஸ்ரீவைஷ்ணவத்வலக்ஷணமென்று அவர்கள் ஸ்வபா4வத்தைச் சொல்லுகிறது; இரண்டாம் பாட்டில் — ப4க3வத்3விஷயத்தில் ஜ்ஞாதமான அர்த்த2ம் ஒருவனுக்கு விஸ்ம்ருதமானால், தங்கள் பரிவாலே, 1. "போ3த4யந்த: பரஸ்பரம்" என்கிறபடியே அறிவிக்கை — ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது; மூன்றாம் பாட்டில் — ப4க3வத3நுப4வத்தில் ப்ரத்யாஸந்நராய் இருப்பாரைக் குறித்து ஸாபேக்ஷராயிருக்கையும், அவர்களை முன்னிட்டு ஈஶ்வரனைப் பற்றுகையும் — ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது; நாலாம் பாட்டில் 2. "தத் தஸ்ய ஸத்3ருஶம் ப4வேத்" என்று — பூர்வார்த்த4நிஷ்ட்ட2ராயிருப்பாரை ப4க3வத் ப்ரேமாதிஶயத்தாலே ததீ3யபே4ாக3ராயிருப்பார் பே4ாக3ார்த்த2மாக ப்ரேரிக்கை — ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது: அஞ்சாம் பாட்டில் — 3. "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" என்றும் 4. "அஹம் ஸ ச மம ப்ரிய:" என்றும் அவன் பக்ஷபதித்திருப்பார் திறத்து நித்யஸாபேக்ஷராயிருக்கை — ஸ்வரூபம் என்கிறது; ஆறாம் பாட்டில் — ப4க3வத்ஸம்ப3ந்த4ம் விச்சே2தி3யாதே போந்த ஆசார்ய ஸந்தாந ப்ரஸூதர் நமக்குப் பூஜ்யர்; அவர்களடியாக ப4க3வத்ஸமாஶ்ரயணம் பண்ணுகையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது; ஏழாம்பாட்டில்—ப4க3வத்3 விஶ்லேஷம் அஸஹ்யமாம்படி அவகா3ாஹித்தவர்கள் நமக்கு உத்3தே3ஶ்யராமளவன்றிக்கே, தத்ஸம்ப3ந்தி4 ஸம்ப3ந்தி4களும் உத்3தே3ஶ்யரென்றிருக்கை-ஸ்வரூபம் என்கிறது; எட்டாம் பாட்டில்-ப4க3வத3நுப4வபரிகரமான ஜ்ஞாந வைராக்3ய ப4க்திகளால் பூர்ணராயிருப்பார் திறத்து, தத3ர்த்த2மாக ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸாபேக்ஷராயிருக்கை — ஸ்வரூபம் என்கிறது: ஒன்பதாம் பாட்டில் — ப4க3வத்3 விஷயத்தில் மூட்டுகையில் அதி4கரித்த நிர்வாஹகர் முன்னாக ப4க3வத3நுப4வம் பண்ணுகை—ஸ்வரூபம் என்கிறது; பத்தாம்பாட்டில் — ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸமூஹமாக, அவர்களையுகக்கை ஸமூஹம் அபி4மதமாயிருக்குமவர்களைக் கண்டால் அந்த ஸ்வரூபம் என்கிறது' என்று ஆறாயிரப்படியிலே அருளிச்செய்த ஸ்வாபதே3ஶத்தைக் கண்டு கொள்வது. a ஆக, கீழ்ப்பத்துப்பாட்டுக்கும் இப்பாட்டுக்கும் பேடிகாஸங்க3தியை அருளிச்செய்கிறார் (கீழ் இத்யாதி3) கோயில்காப்பானாயிருக்கும் திருவாசல்காப்பானை எழுப்புகிறார்களென்றும் ஓர் அவதாரிகை கண்டுகொள்வது. b முன்பு பெண்களிடங்களிலே போய் அவரவரைப் பேரைச்சொல்லி எழுப்பினாற்போலே, இங்கு நோன்புக்கு வந்து எழுப்புங் கோளென்று சொல்லிப்போந்த க்ருஷ்ணன் பேரைச்சொல்லிக் கூப்பிட வேண்டியிருக்க, இவர்களை அழைக்கிறதென்? என்ன / அருளிச்செய்கிறார் (செய்யாதன இத்யாதி3)

---

சி. அ. பதினாறும் பாட்டு. (நாயகன்) b த்3வாரபாலனை எழுப்புகிறது ஏதுக்கென்ன (செய்யாதன செய்யோம் இத்யாதி3) எல்லாரும் கூட எழுப்பவேணுமோ? ஒருத்தர் வந்து

அனுஷ்டா2நபர்யந்தமாக்கவேணுமே. ததீ3யரை முன்னிட்டுப் பற்றுத அன்று முறைதப்பின சூர்ப்பணகைப2ட்டது படுமத்தனை. A ''வல்லபரிசு வருவிப்பரேலதுகாண்டும்'' என்னும் c பெரியாழ்வார் திருமகளிறே இவள்,

வ்யா:— d (நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய கோயில்காப்பானே) e ஸ்ரீநந்த3கோ3பர் திருமாளிகைக்குக் காவலாய் எங்களுக்கு நிர்வாஹகனானவனே! ''நாயகன்'' என்று - ஸ்ரீநந்த3கோ3பரைச் சொல்லிற்றாகவுமாம், f இவர்களால் பெறுமவனன்றோ நாயகனாவான், இவனை ''நாயகன்'' என்கிறது என்?' என்ன; g''1. பாரிஷ்ட2: க்ஷத்ரப3ந்து4ஶ்ச புண்ட3ரீகஶ்ச புண்யக்ருத் | ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாதா3சார்யவாந் ப4வேத் ||'' என்று-ப2லஸித்3தி4 ஆசார்யனாலே யாகையாலே, உபகாரகனை ''நாயகன்'' என்கிறார்கள். h ப்ரதா4நஶேஷியிற்காட்டில் த்3வார ஶேஷிகளே எங்களுக்கு ஶேஷிகளென்கிறார்கள். i (நந்தகோபனுடைய கோயில்) j நாங்கள் ஆஶ்ரயிக்கிறவன் பரதந்த்ரன்; k தங்களை ஶேஷிகளாகவைக்க இசைவாரோடே கலந்து பரிமாறவிறே இவன் இங்குவந்து அவதரித்தது. l B 'அடியார் நிலாகின்ற வைகுந்தமோ'' என்று—பரமபத3த்திலும் தான்

---

பெ. அ. c (பெரியாழ்வார் திருமகளிறே இவள்) என்றதுக்கு — ஆண்டாளே இத்தனை கோ3பிமாராக பா4வித்திருக்கையாலே இங்ஙன் சொல்லலாமென்று கருத்து.

d, e ''நாயகனாய் நின்றவனே! நந்தகோபனுடைய கோயில்காப்பானே!'' என்று ஶப்3தா3ர்த்த2ம் விவக்ஷித்து, நாயகனாகைக்கும் கோயில்காப்பானாகைக்கும் ஹேதுவாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸ்ரீநந்த3கோ3பர் இத்யாதி3) f (இவர்களால் பெறுமவன்) என்றது — இப்பெண்களால் பெறப்படுமவனான க்ருஷ்ணன் என்றபடி. d, g, h ஆசார்யனைப் போலே உபகாரகத்வேந உபசரித்து ''நாயகன்'' என்றார்களென்று ஒரு பரிஹாரம் அருளிச்செய்து, ஶேஷித்வத்தைப் பற்றச் சொல்லுகிறார்களென்று பரிஹாராந்தரம் அருளிச்செய்கிறார் (ப்ரதா4நேத்யாதி3) h2 ஸ்வாபதே3ஶத்தில் த்3வாரஶேஷிகள்—ததீ3யர். i, j 'நீங்கள் ''க்ருஷ்ணன் கோயில்'' என்னாதே ''நந்தகோபன் கோயில்'' என்கிறது என்?' என்ன;

---

சி. அ. எழுப்பினால் போராதோ? என்ன (செய்யாதன இத்யாதி3) என்றுமாம். அன்றிக்கே பெண்களை ஒருத்தரை ஒருத்தர் எழுப்புகிறதற்கு ப்ரயோஜனமென்? என்ற ஶங்கைக்கு உத்தரமாகவுமாம். f, h (இவர்களால் பெறுமவனன்றோ நாயகனாவான்) என்ற ஶங்கைக்குப் பரிஹாராந்தரம் (ப்ரதா4நஶேஷியிற் காட்டில் இத்யாதி3) அதாவது — அவனே நாயகன் என்றபடி; h ப்ரதா4னஶேஷி க்ருஷ்ணன்; h2 நந்த3கோ3பர் த்3வாரஶேஷி; சாடுவாய் வாசல் காக்கிறவனாதல், ததீ3யராதல். i, j ''க்ருஷ்ணன் கோயில்'' என்னாதே ''நந்தகோபனுடைய கோயில்'' என்பானென்? என்ன அருளிச்செய்கிறார் — (நாங்கள் ஆஶ்ரயிக்கிறவன் இத்யாதி3) k C ''அயர்வறுமமரர்களதிபதி'' என்று பரமபத3த்திலே ஸ்வதந்த்ரனாயிருக்கிற க்ருஷ்ணனைப் பரதந்த்ரன் என்பானென்? என்ன, ''அங்கும் ஸ்வதந்த்ரனன்று, பரதந்த்ரனாயிருக்கும்; அப்படியிருந்தாலும் தன்னுடைய பாரதந்த்ர்யத்துக்கு நித்யஸூரிகள் இசையாமையாலே தங்களை ஶேஷிகளாக இசைந்திருக்கிற ஸம்ஸாரிகளோடே பரிமாற இங்கே வந்து அவதரித்தான்'' என்கிறார் (தங்களை ஶேஷிகளாக இத்யாதி3) l அங்கே

---

A நாச்-திரு-10-10. B திருவிருத்தம் 75, C திருவாய் 1-1-1.

ஸ்வரூபம் பெற்று, 1. "ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து" என்று — ஸ்வரூபாநுரூபமான பலம் பெற்றதும் பிராட்டியை ஆஸ்ரயித்தபின்பிறே.

புருஷகார பூதையான பிராட்டியைப் பேரவைத்து புஜிக்கவந்த சூர்ப்பணகை, துறையறியாமல், அந்தரப்பட்டாள். A "தன்னை நயந்தாளை" என்கிறது குற்றமுண்டாயன்றே; B 'கொல்லையரக்கி'யாகையாலேயிறே அநர்த்தப்பட்டது. பிராட்டிதன்னை முறைதப்பப் பற்றின ராவணன் முடிந்துபோனான்; இருவரையுஞ்சேரப் பற்றின விபீஷணன் அல்லல்தீர்ந்து வாழ்ந்துபோனான். C "மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா!" என்றாரிறே ஆழ்வார். தன்னுடைய கர்மஜ்ஞாநாத்யுபாயங்களாலே எம்பெருமானைப் பெறவிருக்குமது இளிம்பு: அவற்றைவிட்டு எம்பெருமானுடைய க்ருபையாலே பெறுகை சதிர்; அந்த க்ருபைக்கடியான பிராட்டியை முன்னிட்டுக்கொண்டு பெறுகை மாசதிர். D "எனக்கேயருள்கள்செய்ய விதிசூழ்ந்ததால்" என்றார். அதுக்கடியாக E "மாதவனென்றதே கொண்டு" என்றார். உபாயத்தில் வந்தால் உக்திமாத்ரமமைந்தது; பலத்திலே வந்தவாறே ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் செல்ல வாழ்ந்துபோய்த்தது என்கிறார். F "திருக்கண்டேன்" என்று தொடங்கி, G "தேனமரும் பூமேல்திரு — சார்வு நமக்கென்றும்" என்றருளிச்செய்தார். இவையடியாக இழிந்த எம்பெருமானாரும் கத்யத்திலே முதலிலே தமக்கு த்வயநிஷ்டையுண்டாகவேணுமென்று பிராட்டியை ஶரணம்புக்கார்; இவர்களும் அப்படியே ஒரு பாட்டாலே நப்பின்னைப்பிராட்டியை ஶரணம்புக்கு, அநந்தரம் அந்த:புரபரிகரமாய் நின்று பயங்கெட்டு, ஒருபாட்டாலே உபாயஸித்திக்குடலாக அவனைப்பற்றி, ஒருபாட்டாலே உபேயஸித்திக்குடலாக அவனையுமவளையும் பற்றி, ஆக மூன்று பாட்டாலே — நப்பின்னைப்பிராட்டியையெழுப்பி, அவள்வழியாக எம்பெருமானை எழுப்புகிறார்கள்.

அபிநிவேஶப்ரேரிதைகளாகையாலே, கலக்கத்தாலே க்ருஷ்ணன் பக்கலிலே மேல் விழுந்தார்கள்; ஆஸ்ரயணதஶையும் போகதஶையும் பேதிக்கவொட்டாதபடி உபக்ரமதஶையிலே கலக்குமிறே விஷயஸ்வபாவம். 'பிராட்டி முன்னாக ஶரணம் புகவன்றோ ப்ரமாணங்கள் சொல்லிற்று, இங்கு நப்பின்னைப் பிராட்டியையன்றோ ஶரணம்புகுகிறது' என்னில்; பெரியபிராட்டியார்க்கு அல்லாத நாய்ச்சிமார் ஸ்ரக்சந்தநாதிகளோபாதி உபகரணகோடிகளாகையாலும் இவர்களை அவயவ கோடியிலே அவள் நினைத்திருக்கையாலும், பிராட்டிக்குத் திருவடிகளோபாதியாக நினைத்திருக்கையாலே இவளைப் பற்றுகிறார்கள். பரதஶையில் நாய்ச்சிமார் மூவரையும் முன்னிடக்கடவது; H "கூந்தல்மலர்மங்கை" இத்யாதி. வ்யூஹாவஸ்தையில் நாய்ச்சிமாரிருவரை முன்னிடக்கடவது; I "சந்தணி மென்முலை மலராள் தரணிமங்கை" என்னக்கடவதிறே. ராமாவதாரத்தில் பெரிய பிராட்டியாரொருவரையுமாயிருக்கும். ஸ்ரீவராஹப்ராதுர்ப்பாவத்தில் ஸ்ரீபூமிப்

A பெரியதிருமடல் 146, B நாச்-திரு 10-4, C திருவாய் 2-7-1, D திருவாய் 2-7-6, E திருவாய் 2-7-3, F மூன்-திருவ 1, G மூன்-திருவ 100, H திருவாய் 5-6-11, I பெரியதிரு 2-10-2.

பிராட்டியை முன்னிடும்; க்ருஷ்ணவதாரத்துக்கு ப்ரதா₄நமஹிஷி இவளாகையாலே நப்பின்னைப்பிராட்டியை முன்னிடுகிறார்கள்.

வ்யா:— (உந்துமதகளிற்றன்) க்ருஷ்ணனை ''நந்தகோபன் குமரன்'' (1) என்று ஆத₃ரிக்குமாபோலே, இவனைப்பற்றுவார்க்கும் இவளுகப்பது சொல்ல வேண்டுகையாலே ஸ்ரீநந்த₃கோ₃பரை ப்ரஸங்கி₃த்து அவரை ஶ்லாகி₄க்கை இவளுக்கு உகப்பென்று அவர்மிடுக்கைச் சொல்லுகிறார்கள். (உந்துமதகளிற்றன்) நாங்கள் வந்தெழுப்பும்படி A 'வாரணம் பையநின்றூர்வதுபோல்' மகன் செருக்கித்திரிகிறது— இவர்வயிற்றில் பிறப்பிறே. (உந்துமதகளிற்றன்) மத்தக₃ஜத்தின் மிடுக்குப் போலே ப்ராப₃ல்யம் கனக்க உண்டாகையாலே, களிற்றைத் தள்ளாநின்றுள்ள மிடுக்கையுடையவரென்றுமாம். ஆனைகளோடே பொருது அவற்றை நூக்கும் படியான மிடுக்கையுடையவரென்கை. க்ருஷ்ணன் ஆனைகொன்றது ஸர்வஶக்தித்வத்தாலன்றிறே; இவர்மகனாகையாலேயிறே. (உந்துமதகளிற்றன்) மத்தக₃ஜங்களையுடையவரென்றுமாம். 'ஆனையுண்டோ இவர்க்கு?' என்னில்: ஸ்ரீவஸுதே₃வரும் தாமும் ஒருமிடறாயிருக்கையாலே அங்குள்ளது இங்கேயாய், இங்குள்ளது இங்கேயாய் ஒன்றாய்ப்போருகையாலேயும், த₃த்தபுத்ரனுக்கு இரண்டிலும் ப்ராப்தி யுண்டாகையாலும், ஆனையுண்டாகத் தட்டில்லை. B ''வாரணமாயிரஞ்சூழ'' என்று திருவாய்ப்பாடியில் ஆனைகளும் பசுக்களும் கலந்து திரியுமத்தனையிறே.

(ஓடாததோள்வலியன்) 1. ''யுத்₃தே₄ சாப்யபலாயநம்'' என்கிறபடியே எதிரிகளைக்கண்டால் 'ப்ரதிபக்ஷமிறே' என்று பிற்காலியாத தாள்வலியை யுடையவன். கம்ஸன் மாளிகைக் கீழே பிள்ளைவளர்க்கவல்ல வலியிறே. 'குடி உடன்படக் கடமைகொண்டு இருந்தானாகிலிருக்கிறான்; மிகைத்தானாகில் உழக்கோல் கொண்டு தகர்க்கிறோம்' என்றிருப்பர். அவனும் அது அறிந்திறே புகுந்து அபி₄ப₄வித்தல், 'விட்டுக் காட்டுங்கோள்' என்னுதல் செய்யாதே, தான் முடியுந் தனையும் களவிலே நலியப்பார்த்தது. C ''அங்கோராய்க்குலம்'' என்று அஞ்சினான் புகலிடமானவூரிறே. கம்ஸன் படைவீடென்று அஞ்சினாரச்சங்கெடுவது இவ்விடைச் சேரியை நினைத்திறே. (தோள்வலியன்) நித்யஸம்ஸாரியானவன் தன்னுடைய அநீதிகளை நினைத்து அஞ்சினால் 2. ''ந பி₃பே₄தி குதஶ்சந'' 3. ''அத₂ ஸோS-ப₄யங்க₃தோ ப₄வதி'' என்று எம்பெருமானுடைய கு₃ணங்களை அநுஸந்தி₄த்து பு₃த்₃தி₄பூர்வகமான பாபத்துக்கு ப₄யங்கெட்டு மார்பிலே கைவைத்து உறங்குமாபோலே, க்ருஷ்ணன் தீம்பை அநுஸந்தி₄த்து அஞ்சின பெண்களுக்கு இவர் தோள்மிடுக்கை நினைத்து அச்சங்கெட்டிருக்கலாயிருக்கை; 4. ''பா₃ஹூ ராமஸ்ய ஸம்ஶ்ரிதா'' என்று பிராட்டி பெருமாள் தோளை அண்டைகொண்டு அச்சங்கெட்டிருக்குமாபோலே. (தோள்வலியன்) 'எம்பெருமானுக்கு என்புகுருகிறதோ?' என்று அஸ்தா₂நே ப₄யஶங்கை பண்ணி மங்க₃ளாஶாஸநம் பண்ணுமவர்களாகையாலே, க்ருஷ்ணனைப்போலே D பின்னை

A பெரியாழ்திரு 1-8-1, B நாச்-திரு 6-1 C திருவாய் 6-4-5 D திருவாய் 1-7-8

நெடும்பணைத்தோளை விரும்புதல், அல்லாதபெண்களைப்போலே. A பின்னைதன் காதலன்றன் பெருந்தோள் நலம்பேணுதல் செய்யாதே, தங்கள் த1நமான அம்மிது2நத்துக்குக் காவலுண்டென்று இவருடைய தோள்மிடுக்கை அநுஸந்தி4க்கிறார்கள் தங்கள் ப4யநிவ்ருத்திக்காக. (ஓடாததோள்வலியன்) க்ருஷ்ணன், தோளில் சாந்தழியாமல் மல்லரைத் தகர்க்கவல்லனாய்த்து — பு4ஜப3லமுடைய இவர் வயிற்றில் பிறப்பிறே. (ஓடாத) நாட்டில் நடையாடாத தோள்வலியை உடையவன் என்னவுமாம்.

(நந்தகோபாலன்) ஐஶ்வர்யத்தாலும் பு4ஜப3லத்தாலுமுண்டான மேன்மைக்குத் தமக்கவ்வருகில்லாதாப்போலே, ''நந்தகோபாலாவெழுந்திராய்'' (17) என்று பெண்களோடொக்க எழுப்பலாம்படி தாழ்ந்தாருடைய ரக்ஷணத்திலே அதி4கரித்துத் தம்மையமைத்த நீர்மையைச் சொல்லுகிறது. (மருமகளே) ''ஸ்ரீகும்ப4ர்மகளே'' என்றால் அறியாள்; ஸ்ரீநந்த3கோ3பர் ஸம்ப3ந்த4மேயாய்த்து அறிந்திருப்பது. ஸ்ரீநந்த3கோ3பர் மாமனாய், க்ருஷ்ணனுக்கு மச்சினியாய் முறையாலே பா3ல்யத்திலே இங்கே வளருகையாலும், இங்கே வாழ்க்கைப்பட்டபடியாலும், 'இவர் மருமகள்' என்று தன்னை நினைத்திருக்கையாலும், இவள் உகக்குமதாகையாலும், இவள் விரும்பியிருப்பது இவருடைய ஸம்ப3ந்த4ம். (மருமகளே) முக்தனுக்கு ஸம்ஸாரம் போலே, இவளுக்குப் பிறந்தகம். புருஷகாரமாவார்க்கு க்ருபைவேணுமிறே. மனிச்சர் நோவறிந்து கார்யஞ்செய்யுமிடத்தில் ''அறஞ்செய்யும் நந்தகோபாலனுக்கு மருமகள்'' என்னலாயிருக்கும். 1. ''ஸ்நுஷா த3ஶரத2ஸ்யாஹம் ஶத்ருஸைந்ய ப்ரதாபிந'' என்று 'எங்கள்மாமனார் இருந்தாராகில் நானிவர்கள் நடுவே இவ்விருப்பிருக்கவும் இவ்வார்த்தை சொல்லவும் வையாரிறே' என்றாள் பிராட்டி. 'திருவாய்ப்பாடியில் க்ருஷ்ணன் பிறந்ததுக்குப் பின்பு கம்புக்கற்றையும் ஒழிந்தார் இந்த ப்ராப்தியில்லாதாருண்டோ? பஞ்சலக்ஷம் குடியில் பெண்களெல்லார்க்கும் ஸாத4ாரணமன்றோ? நமக்கு விஶேஷணமென்?' என்று பேசாதே கிடந்தாள்;— (நப்பின்னாய்) என்கிறார்கள். தங்களுடைய க்லேஶம் தீர்க்கைக்கும், தங்களுடைய ஆர்த்தி இவளுடைய நெஞ்சிலே படுத்துகைக்காகவும் ''நப்பின்னாய்'' என்று பேரைச் சொல்லுகிறார்கள். தாங்களார்த்தைகளாய் நம் வாசலிலே வர நம்முடைய நீர்மையாலுள்ளது தாங்கள் பெறுதபடியாலே, 2. ''ஹே க்ருஷ்ண'' என்று அர்ஜுநன் க்ருஷ்ணனை அஸத்கரித்து வார்த்தை சொல்லுமாபோலே, ''நப்பின்னாய்'' என்று சிவட்கென்கிறார்கள். 'இங்கு வெறும் க்ருஷ்ணனேயாய் நாமில்லையென்னுமிடந் தோற்றவேணும்' என்று பேசாதேகிடந்தாள்.

(கந்தம் கமழும் குழலீ) என்கிறார்கள். நீ இல்லையாகில் உள்ளு இப்படியாமோ? ஸமுத3ாயபரிமளமும் வ்யாவ்ருத்த பரிமளமும் நாங்களறியோமோ? 3. ''ஸர்வக3ந்த4:'' என்கிற வஸ்துவுக்கும் B 'வாசஞ்செய்பூங்குழலா'ளாகையாலே நாற்றங்கொடுக்கும் குழலையுடையவளன்றோ. (கந்தங்கமழும்) நீ ப்ரதிவசநம் பண்ணிற்றிலையாகிலும் உன்குழலில் பரிமளம் ப்ரதிவசநம் பண்ணாநின்றதுகாண்!

A பெரியதிரு 3-7-7, B திருவாய் 10-10-2

(கமழும்குழலி) பரிமளந்தான் நிறம்பெறுவது இவள் குழலிலே சேர்ந்த பின்பு;
A "வாசப்பூங்குழல் பின்னைதோள்கள் மணந்ததும்" என்னக்கடவதிறே. (கடை
திறவாய்) "மலரிட்டு நாம் முடியோம்" (2) என்கிற ப்ரதிஜ்ஞைக்கு விபரீதமாகப்
பூமுடித்தோம் என்று நினைக்கிறார்களாகக்கொண்டு பேசாதேகிடக்க; நாங்களும்
எங்கள் B சென்னிப் பூவைச் சூடும்படி வாசலைத் திறவாயென்கிறார்கள். அப்பரிம
ளத்தைத் தலைநீர்ப்பாட்டிலே அநுப$_4$வித்து, அப்பரிமளத்தினுடைய வெள்ளத்திலே
அழுந்திக் கிடந்து, அவனைத்தனியே அநுப$_4$விக்கவமையுமோ? வாசலைத் திறந்து
எங்களையும் கூட்டிக்கொண்டு அநுப$_4$விக்கப்பாராய். (கடைதிறவாய்) கிண்ணகத்தை
அணைசெய்துகொடு கிடப்பாரைப்போலே அடைத்துக்கொடு கிடவாதே, க்ருஷ்ண
னுடையவும் உன்னுடையவும் தேங்கிநிற்கிற பரிமளத்தைக்கடைவெட்டிவிட்டு
எல்லாரும் வாழும்படி புறப்படவிடாய். பெருவெள்ளத்தை அணைசெய்வாருண்டோ?
எங்களார்த்தி தீராயாகில் பெருவெள்ளத்திலும் போக்குவிட வேண்டாவோ?
உன்னுடைய போ$_4$க்$_3$யதையிலே அவனழுந்திக்கிடக்கும்; அவனை அநுப$_4$விக்கைக்கு
நாங்கள் வேண்டாவோ? அநுப$_4$விப்பார்தான், அவயவங்களோடும் ஸ்ரக்சந்த$_3$நாதி
களோடுமன்றோ அநுப$_4$விப்பது. C "உன்றன் திருவுள்ளம்இடர்கெடுந்தோறும்"
என்னக்கடவதிறே.

'மத்$_4$யராத்ரத்திலே எழுப்புகிறதென்? கதவு திறக்கும்போது விடிய
வேண்டாவோ?' என்ன; 'போது விடிந்ததுகாண்' என்ன; 'விடிந்தமைக்கு
அடையாளமென்?' என்ன; 'விடிந்தமைக்கு அடையாளமன்றோ கோழி கூவுகிறது?'
என்ன; 'ஒரு கோழி கூவிற்றாகில் விடிந்ததாகவேணுமோ?' என்ன; 'திரள் கூவா
நின்றது' என்ன; 'ஒன்றினுடைய ஶப்$_3$த$_3$த்தைக் கேட்டுப் பலவுமுணர்ந்தது' என்ன;
(எங்கும்) 'ஸர்வதோதி$_3$க்கமாகக் கோழி கூவாநின்றதுகாண்' என்ன; 'உணர்ந்
தவையெல்லாங்கூட எங்குமொக்கக் கூப்பிட்டுப் பின்னையும் உறங்குமாகையாலே
இப்போதே கூப்பிட்டு அடங்கும்' என்ன:— (வந்தெங்குங் கோழி அழைத்தன
காண்) என்கிறார்கள். வாசலைப்பற்றித் 'திற' என்பாரைப்போலேயன்றோ அழைக்
கின்றன. (கோழியழைத்தனகாண்) D "கோழிகூவென்னுமால்" என்று உனக்கு
வயிறெரிகைக்குடலல்லாமையாலே தெரியாதே. எங்களைப்போலே E 'கோழியழைப்
பதன் முன்னம்' குளிக்கவும் வேண்டாவே உனக்கு. 'எங்கும் சாமக்கோழி
கூவக்கடவதாயன்றோ இருப்பது; அவையிப்போதே கிளர்ந்தடங்கும்; இது அடையாள
மாகமாட்டாது; வேறு அடையாளமுண்டாகில் சொல்லுங்கோள்' என்ன (மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்) 'குயில்கூவினது அடையாள
மன்றோ' என்ன; 'ஒரு குயில் கூவுங்காட்டில் விடிந்ததாகவேணுமோ?' என்ன;
'குயிலினங்கள் கூவிற்று' என்ன; 'ஒரு திரளாக ஒருகால் கூவும்போது
விடிவுக்குடலோ?' என்ன; 'திரள் திரளாகப் பலகால் கூவுமது உடலன்றோ?'

A திருவாய் 6-4-2. B திருக்குறு 6 C திருவாய் 10-3-9. D பெரியதிரு
10-10-6. E நாச்திரு 3-1.

என்ன, ‘உறக்கத்தாலே அநந்தலிலே பலகால் வாய்வெருவிற்றித்தனைகாணுங்கோள்’ என்ன; (மாதவிப் பந்தல்மேல்) இப்பூம்படுக்கையினின்றும் இவை உணரும்போது விடிந்ததாக வேண்டாவோ? 1. ‘‘நோபஜநம் ஸ்மரந்’’ என்று முக்தன் ஸம்ஸாரயாத்ரையை மறக்குமாபோலே, படுக்கைவாய்ப்பாலே கிடந்துறங்குகிற அவையும் உணரும்போது விடிந்ததாகவேண்டாவோ? (பல்கால்) உன்நோக்கும் உன்பேச்சுமே தூரகமாக இருக்கக்கடவ இவை, உன்னைக்காணுமே கதறி நாக்கு ஒட்டக்காண் புகுகிறது. A ‘‘தயிர்ப்பழம் சோற்றெடு’’. (இனங்கள்) மேலே ஒரு திரள் கூவா நின்றது; கீழே ஒரு திரள் கூவாநின்றது; இவையொன்றுங் கேளாதே உறங்குகிறாய் நீயேயிறே ‘‘B ‘கண்படை கொள்ளுமிளங்குயிலே’ என்று உறங்குகிற குயில்களையும் எழுப்பிக் கூவச்சொல்லுமவர்களாகையாலே, கூவாதபோது நீங்கள் C இங்குற்று நின்றுந்துரத்திவிடுவிகோளென்று ஊரிலிருக்கிறத்தைக் கூலியாகக் கொண்டு கூப்பிடுகிறதித்தனை; விடிந்ததன்று’’ என்று பேசாதே கிடந்தாள்;— (பந்தார் விரலி) நாங்கள் சொன்னவற்றுக்கெல்லாம் ஓரோ உத்தரஞ்சொல்லி உள்ளே கிடக்கிறது உன் குறைவறுகையிறே. (பந்தார்விரலி) நாங்கள் சொன்ன தெல்லாம் உன் நெஞ்சில் படாதொழிகிறது உன் செருக்கிறே க்ருஷ்ணனை ஒருகையாலும் பந்தை ஒருகையாலும்காணும் அணைத்துக்கொண்டு கிடக்கிறது லீலோபகரணங்களை உறங்கும் போதும் கைவிடாதபடியாய்த்து மௌக்த்யமிருக் கிறபடி. இவளுக்கு போகோபகரணம் க்ருஷ்ணன்; பந்து லீலோபகரணம். அவன் செண்டையொருகையாலும் இவளையொருகையாலும் அணைத்துக்கொண்டு கிடக்குமா பாலே; அவனுக்கு லீலாயஷ்டிபோலே இவளுக்குப் பந்து; ஒருகையிலே விபூதி, விபூதிமான் ஒருகையிலே; நாரம் ஒருகையிலே, அயநம் ஒருகையிலே; ஶேஷி ஒருகையிலே, ஶேஷம் ஒருகையிலே; போக்யம் ஒருகையிலே, போகஸ்தாநம் ஒருகையிலே. (பந்தார்விரலி) நாங்களும் அசேதநமானோமாகில் பந்தோபாதி எங்களையும் பேண உன்கைக்குள்ளே கிடக்கலாய்த்தே. நீயுமவனுங் கூடவிருந்த சேர்த்தியிலே நாங்கள் கிட்டி, எங்கள் கையிலிருக்க வேண்டாவோ பந்து? எங்கள் கையிலும் பந்து தேங்கும்படி பண்ணி பந்து பிடிக்க வேண்டாவோ உனக்கு? உனக்கு, சேர்த்தியாலே பந்து கையில் பொருந்திற்று; எங்களுக்குத் தழும்புங்கூட மறைந்து போயிற்று. 2. ‘‘ஜ்யாகிணசர்க்கஶ:’’ என்று அவனுக்கு வில்பிடித்த தழும்புபோலே, இவர்களுக்குப் பந்துபிடித்த தழும்பு. ‘செருக்காலே உங்களை நினைத்திலேனாகச் சொல்லாநின்றிகோள். நீங்கள்தான் வந்த கார்யம் ஏது? என்செய்ய நினைக்கிறது?’ என்ன; — (உன்மைத்துனன் பேர்பாட) நீயும் அவனும் மைத்துனமை கொண்டாடி ஒருவர்க்கொருவர் உத்தரஞ்சொல்லி ஒத்துநில்லாமே, உன்பக்ஷத்திலே நின்று உனக்காக அவனை ஒத்தனசொல்ல, நீஒன்றுக்கு ஒன்பது சொல்லும்போது நாங்கள் அவனுடைய தோல்வியும் உன்னுடைய வெற்றியுந் தோற்ற உனக்கு வேண்டுவனவெல்லாஞ்சொல்லி உபகரிக்க வந்தோம்.

---

A திருவாய் 9-5-8. B நாச் - திரு 5-6. C நாச் - திரு - 5-10.

இருவரும் ஒன்றுய்ச் செல்லுமன்றும் பிரிந்தவன்றும் தாய் கூற்றிலேயிறே ப்ரஜைகள் நிற்பது. 1. ''அஸ்மிந் மயா ஸார்த்தம்'' என்று பெருமாள் தோல்வியைப் பிராட்டி இளையபெருமாளுக்கு அருளிச்செய்ய, அவர் பிராட்டி பக்ஷத்திலே நின்றாற்போலே. (உன்மைத்துனன்) த்வயத்தில் ப்ரதமபதத்திற்படியே சொல்லுகிறுர்கள். (பேர்பாட) A 'நாமம் பலவுமுடை நாரணநம்பி'யிறே. ''இன்னுளடியான், இன்னுளடியான்'' என்று படைத்தபேருக்கு ஒரு அவதியில் . A [நாரணநம்பி] நீர் ஊர்ப்பொதுவாம்படி ஸர்வாதிகரன்ருே. A [நம்பீ] 'உனக்கு நாங்கள் வேணுமோ? எங்களையொழியவே பூர்ணரன்ருே?' என்று இப்படி அவனுக்குள்ளன சொல்லிக்கொடுக்க, 'ஆகில் க்ருஷ்ண திற' என்ருள்; 'உன்னுடையார்க்கு நானே திறப்பேன்' என்றன்; 'நீங்கள் வருவுதிகோளென்று யந்த்ரத்தாலே திறக்கலாம்படி பண்ணிவைத்தேன்; திறந்துகொண்டு புகுருங் கோள்' என்ருள்;

'எங்களாலே பெறவிருக்குமவர்களோ நாங்கள்? உன்னாலே பெறவிருக்கும வர்களன்ருே, உன்கை பார்த்திருக்கிறவர்களன்ருே' என்கிறுர்கள்.—(செந்தாமரைக் கையால்) 2. ''மாஶுச:'' என்னும் கைபார்த்திருப்பவர்களோ நாங்கள்? 3 ''பவேயம் ஶரணம் ஹி வ:'' என்னும் கைபார்த்திருக்கிறவர்களன்ருே நாங்கள். நீங்கள் பண்ணின பாபத்துக்கு அஞ்ச வேண்டாவென்கிறது பெருமா ளுடைய ''அஞ்சேல்'' என்ற திருக்கை; ஈஶ்வரஸ்வாதந்த்ரியத்துக்கு அஞ்சவேண்டா வென்கிறது பெரியபிராட்டியார் வைத்தஞ்சலென்ற கை. அவனுமாசைப்படும் கையிறே. B ''கைமேலென்கைவைத்து'' என்று C 'அணிமிகு தாமரைக்கை'க்குமேலே யிருக்கும் கை. (செந்தாமரைக்கையால்) பந்துபிடித்துச் சிவந்தகை. இவர்கள் உருவியிருக்க வளையோசை செவிப்படவொண்ணுதென்று வளையை ஏறக்கடுக்கித் திறக்கப்புக்காள்;— சீரார்வளை யொலிப்ப) மேகம் முழங்கி வர்ஷிக்குமாபோலே. (சீரார்வளை) கலியர் சோற்றை வர்ணிக்குமாபோலே, வளையைக்கொண்டாடுகிறுர்கள். வளைக்குச் சீர்மையாவது — கையில் நின்றும் கழலாதொழிகை. விஶ்லேஷவ்யஸநம் அநுபவியாத வளை. D ''சங்குதங்குமுன்கை'' E ''ஒண்டொடியாள் திருமகள்'' என்னக்கடவதிறே. F 'இருகையில் சங்கிவைநில்லா'விறே. G 'கழல் வளையே யாக்கினர்'' என்று வெறுக்கிறவர்களிறேயிவர்கள். ''சூடகமே தோள்வளையே'' (27) என்று இவர்கள் ப்ரார்த்திக்தபடியே அவர்கள் பூட்டினுலிறே இவர்களுக்கு வளையுள்ளது. (ஒலிப்ப) க்ருஷ்ணனும் ஓசையிலே உணர்ந்து, நாங்களும் இத்வநி கேட்டு வாழும்படிஆகவேணும்.

க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்துக்கு விரோதமாகவொண்ணுதென்று கிடந்த விடத்தே கிடந்து திறக்கப்புக்காள்; (வந்து திறவாய்) 'எங்களுக்காக நாலடிவந்தாய்' என்னும் தரம் நாங்கள் பெறும்படி வந்து திறக்கவேணும். நாலடிபோய் வந்தா கிலும் திறக்கவேணும். அவனும் நாங்களும் உன் நடையழகு கண்டு வாழும்படி

A பெரியதிரு 10-8-4. B நாச்-திரு 6-9. C திருவாய் 10-3-5 D திருச்சந்த 57. E திருவாய் 4-9-10. F திருநெடு 24. G நாச்-திரு 11-2.

வரவேணும். (மகிழ்ந்து) பெண்கள் ஆர்த்தைகளாய் வந்தார்களென்று ஶாஸ்த்ரார்த்தம் கொண்டாடவொண்ணாது, உகந்துவந்து திறக்கவேணும். (மகிழ்ந்து) ''மார்கழி நீராட'' (4) என்று நாங்கள் நோற்ற நோன்புக்கு உன்னுடைய மகிழ்ச்சி காண்கையன்றோ. யதேஷ்டாபாஸநம் பலமாக வேண்டாவோ?

(மகிழ்ந்து) தர்மத்துக்குத் திறக்கவொண்ணாது, பேறு உன்னதாகவேணும். அவன்பக்கலிலுங் காட்டில் அவனுடையார் பக்கல் நீ இருக்குமிருப்பு உன்னுடைய முகவிகாஸங்களிலே தோற்றும்படி ஆகவேணும். (வந்துதிறவாய்) கண்ணுக்கு இரையிடவேணும். (வளையொலிப்ப) செவியின் பட்டினி தீர்க்கவேணும். (பேர்பாட) நாக்குப்பட்டினி ஒழியவேணும். (செந்தாமரைக்கையால்) ஸ்பர்ஶேந்த்ரியம் வயிறு நிறையவேணும். (கந்தம்கமழும்குழலீ) க்ராணேந்த்ரியத்துக்கு இரையிடவேணும். (மகிழ்ந்து) இப்படி ஸர்வேந்த்ரியங்களுக்கும் விடாய் தீர்ந்தால் மாநஸமான உகப்பு உன்னதாக வேணும். எம்பெருமானார் விஶேஷித்து உகந்திருக்கும்பாட்டு இப்பாட்டு. 18

## ஈராயிரப்படி — பதினெட்டாம் பாட்டு

அவ :— பதினெட்டாம் பாட்டு. இனிமேல் மூன்று பாட்டாலே நப்பின்னைப் பிராட்டியை எழுப்பி, அவள் வழியாலே எம்பெருமானை எழுப்புகிறது. பிராட்டியையொழிந்தால் பலஸித்தியில்லையோவென்னில்; இல்லை. எங்ஙனே? என்னில்: இளையபெருமாள் பிராட்டி முன்னிலையாகப் பெருமாளைப்பற்றினார். அபராதத்தினுடைய எல்லையிலே நின்றாலும், இவள் ஸன்னிதியாலே காகம் ப்ரபந்நர் பெறும் பேற்றைப் பெற்றது. திருவடி பிராட்டி கடாக்ஷம் பெற்ற பின்பு 1. ''ஸீதாமாஶ்ரித்ய தேஜஸ்வீ'' ஆனதுமன்றிக்கே ராமதாஸனானான். 2. 'ஏஷ ஸர்வஸ்வபூத:''. எம்பெருமானாரும் கத்யத்திலுமப்படியே. ஆகையாலே இவர்களும் ஒரு பாட்டாலே அவள்தனக்கு அடிமைபுக்கு, பின்னை ஒரு பாட்டாலே உபாயத்துக்கு உடலாக அவனைப் பற்றி, பின்னை ஒரு பாட்டாலே உபேயத்துக்கு உடலாக அவளையும் அவனையும் பற்றுகிறார்கள்.

வ்யா :— (உந்துமதகளிற்றன்) உந்துகை — முறுக்குகை. அதாவது — பொருகிற யானையை நினைவையறிந்து நடத்த வல்லனென்றபடி. மதத்தை உந்து களிறென்றுமாம். களிறுண்டோ இவனுக்கென்னில், ஸ்ரீவஸுதேவரும் ஸ்ரீநந்தகோபரும் ஒரு மிடறாயிருக்கையாலே அங்குள்ளதெல்லாமிங்குண்டு. ஆனைகளோடே பொரும்படியான மிடுக்கையுடையவன் என்கை. ஆகையன்றோ பிள்ளைகள் போய் ஆனையோடே போருற்றது. 1 ''அவஶ்யம் பிதுராசாரம்'' இறே. 2. ''குணைர் தஶரதோபம:'' இறே. (ஓடாத தோள்வலியன்) எதிரிகளைக் கண்டு பிற்காலியாதே கொல்லவல்ல மிடுக்கு. /நம்முடைய தனத்துக்குக் காவலுண்டு என்கிறார்கள்.

3. ''ஸ்நுஷா தஶரதஸ்யாஹம் ஶத்ருஸைந்யப்ரதாபிந:'' என்று பிராட்டியருளிச் செய்தாற்போலே ஸ்ரீநந்தகோபரைக் கொண்டாடுகிறார்கள். அதுதன்னையே

"நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்" என்கிறார்கள். அவள் பின்னை "திருவாய்ப்பாடியில் பெண்களானவர்கள் நந்தகோபாலன் மருமகளல்லாதாருண்டோ? நமக்கென்" என்று பேசாதே கிடந்தாள். அதுக்காக "நப்பின்னாய்" என்கிறார்கள்.

(கந்தம் கமழும் குழலீ) முன்பு க்ரமமறிகிலோமென்ன; "என்னை நீங்கள் சொல்லுகிறதென்" என்ன; "எங்களையும் க்ருஷ்ணனையும் சேர்த்து விடாய்" என்ன; "இங்கவனுண்டோ?" என்ன "ஆண் நாறு நின்றது; வ்யாவ்ருத்த பரிமளமும் ஸமுதா3யபரிமளமும் அறியோமோ?" என்ன, அவன் 1. "ஸர்வக3ந்த4:" என்று பூவுக்கு நாற்றம் கொடுக்குமாபோலே அவனுக்கு நாற்றம் கொடுக்க வல்ல குழல் இவளதென்கை. உன் குழலில் பரிமளத்தாலே அவனழுந்திக் கிடக்கும். அனுப4விக்கைக்கு நாங்கள் வேண்டாவோ? (கடை திறவாய்) கிண்ணக வெள்ளத்தைக் கரைகட்டினாற்போலே, அடைத்துக் கொண்டு திறவாமல் கிடவாதே வெட்டி விடாய் எல்லாரும் அனுப4விக்கும்படி. இவர்கள் அவளுக்கு அவயவமாகையாலும், ஸ்ரக்சந்த3னாதி3களோபாதியாகையாலும், போ4கோ3பகரணமாகையாலும் இவளோடு அவன் பு4ஜிக்கும்போது அவனுக்குத் தன் திருமுலைத் தடத்தாலே நெருக்கினவோபாதி ப்ரியமாகையாலும் அவளையெழுப்புகிறார்கள். A "உன்தன் திருவுள்ளமிடர் கெடுந்தோறும்" இத்யாதி3வத்.

(வந்தெங்கும் கோழியழைத்தனகாண்) "கதவு திறக்கப் போது விடிய வேண்டாவோ?" என்ன, "விடிந்தமைக்கடையாளமன்றோ கோழி கூவுகிறது" என்ன, 'ஒரு கோழி கூவப் போது விடியுமோ?' என்ன; 'எங்கும் கோழி கூவா நின்றது' என்ன, 'அது சாமக் கோழி; மற்றடையாளமுண்டோ?' என்ன— (மாதவியித்யாதி3) 'இப் பூம்படுக்கையினின்றும் இவை உணரும்போது விடிய வேண்டாவோ?' என்ன; அதுமேலே கூவ நாங்கள் கீழே கூவாநின்றோம். (மாதவிப்பந்தல் மேல்) ஸுக2ஸ்பர்ஶத்தாலே படுக்கையிலே உறங்குகிறவை.

(பந்தார்விரலி) க்ருஷ்ணனை ஒருகையாலும், பந்தை ஒருகையாலும் அணைத்துக் கொண்டு கிடக்கை. அவன் செண்டை ஒரு கையாலும் இவளை ஒரு கையாலும் அணைத்துக்கொண்டு கிடக்கும். அப்பந்தானுமாகில் எங்களைக் கைவிட வேண்டாவே. இவளுக்கு அவன் போ4கோ3பகரணம்; பந்து லீலோபகரணம். (உன் மைத்துனன் பேர் பாட) நீங்கள் வந்ததென்னென்ன "நீயும் அவனுமொருவர்க்கொருவர் உத்தரம் சொல்லும்போது ஒத்து நில்லாமே உன்பக்ஷத்திலே நின்று உனக்காக அவனை ஒத்தன சொல்லி அவன் தோல்வி கண்டு உன் விஜயம் பாட" 2. "அஸ்மிந்மயா ஸார்த்த4ம்" என்று இளையபெருமாள் பிராட்டி பக்ஷத்திலே நின்றாற்போலே பேர் பாட. B "நாமம் பலவுமுடை நாரணநம்பி" என்று அவனுக்குள்ளவையெல்லாம் சொல்லிக்கொடுக்கைக்கு.

(செந்தாமரைக் கையால்) அவனுமாசைப்படும் கை. அவனுக்கும் C "அணிமிகு தாமரைக்கை". எங்களை 3. "மா ஶுச:" என்னும் கை. "நீங்கள்

A திருவாய் 10-3-9. B பெரியதிரு-10-8-4. C திருவாய் 10-3-5

பண்ணுகிற பாபத்துக்கு நீங்கள் அஞ்சவேண்டா. நானுளேன்'' என்கிறது இப்பெருமாளுடைய அஞ்சலென்றகை. 1. "ப₄யேபம் ஶரணம் ஹி வ:" என்னும்கை "ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கு நீங்கள் அஞ்ச வேண்டா" என்கிறது பெரிய பிராட்டியார் அஞ்சலென்றகை. (சீரார் வளையொலிப்ப வளையையேறக் கடுக்கித்) திறக்கப் புக்காள், அங்ஙனொண்ணாது. அவனும் நாங்களும் நடையழகைக் கண்டு வாழவேணும்.

(மகிழ்ந்து) பேறு உன்னதாகவேணும். த₄ர்மத்துக்குத் திறக்கவொண்ணாது. அடியே பிடித்து 1. "ப₄யேயம் ஶரணம் ஹி வ:" என்னவேணும். எம்பெருமானார் விஶேஷித்து உகந்த பாட்டு இது 18.

## நாலாயிரப்படி — பதினெட்டாம் பாட்டு.

அவ - பதினெட்டாம் பாட்டு :— பெண்பிள்ளைகளெல்லாரையுமெழுப்பி, திருவாசல் முதலிகளையும் நந்த₃கோ₃பருள்ளிட்டாரையுமெழுப்பினார்கள். இந்நேர்த்தியெல்லாம் பிராட்டியையெழுப்பி, அவளோடே கூட அவளையும் முன்னிட்டு எம்பெருமானைப் பற்றுவிட்டால் ப₂லவ்யாப்தமாகமாட்டாமையாலே, இனி மூன்று பாட்டாலே நப்பின்னைப் பிராட்டியை எழுப்பி, அவ்வழியாலே எம்பெருமானைப் பற்றுகிறது. 'பிராட்டியையொழிந்தால் ப₂லவ்யாப்தமாகாதோ?' என்னில், ஆகாது. எங்ஙனே என்னில்; இளையபெருமாளை நில்லுமென்ன, பிராட்டியைப் பற்றி, அவன் ஸங்கல்பத்தையழித்துப் பெருமாளோடு கூடப்போனார். காகம், அபராத₄த்தினெல்லையிலே நின்றுவைத்து இவள் ஸந்நிதி₄யுண்டாகையாலே ப்ரபந்நர் பெறும் பேற்றைப் பெற்றது. ராவணனுக்கு அத்தனை அபராத₄மின்றியிருக்க, பிராட்டி ஸந்நிதி₄ இல்லாமையாலே தலையறுப்புண்டு போனான். பிராட்டி ராவணனைக் குறித்து அருளிச்செய்த ஹிதம் — ஶிம்ஶுபாவ்ருக்ஷத்திலே மறைந்திருந்த திருவடிக்கும் ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானுக்கும், அவன் பரிகரத்துக்குமுடலாய், பிராட்டியை முன்னிட்டுப் பெருமாளைப் பற்றுகைக்கு உடலாயிற்று. எம்பெருமான் அர்ஜுநனை நோக்கி அருளிச்செய்த ஹிதம் நம் ஆழ்வார்கள் கொண்டுபோய் விட்டாற்போலே. திருவடி பிராட்டியைக் காண்பதற்கு முன்பு 2. "வாநரோஹம்" என்றான். பிராட்டியைத் திருவடி தொழுத அநந்தரம் 3. "தா₃ஸோஹம்" என்றான்.

மற்றும் ப₂லபர்யந்தமான இடங்களெல்லாம் ஆராய்ந்தால் இப்படியேயாயிருக்கும். எம்பெருமானார் க₃த்₃யத்திலே தமக்கு த்₃வய நிஷ்டை₂ உண்டாகைக்காக முதலிலே பிராட்டியை ஶரணம் புக்கார். இவர்களும் ஒரு பாட்டாலே அவள் தனக்கு அடிமை புக்கு, ஒரு பாட்டாலே உபாயத்துக்கு உடலாக அவனைப் பற்றி, ஒரு பாட்டாலே உபேயத்துக்கு உடலாக அவளையும் அவனையும் பற்றுகிறார்கள். A "மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" என்னக்கடவதிறே. தன்னுடைய கர்மாத்₃யுபாயங்களாலே எம்பெருமானைப் பெறப்பார்க்கை இளிம்பு. அவற்றைப் பொகட்டு எம்பெருமானுடைய க்ருபையாலே எம்பெருமானைப்

---

A திருவாய் 2-7-1.

பெறப் புகுகிறது சதிர். அந்த க்ருபைக்கும் அடியான பிராட்டி ஸம்ப3ந்த4ங்கொண்டு அவனைப் பெறவிருக்கை மாசதிர். A "எனக்கே அருள்கள் செய்ய விதிசூழ்ந்ததால்" என்றார். அதுக்கடியாக B 'மாதவன்' என்றார். 'உபாயத்திலே வந்தவாறே உக்தி மாத்ரமே அமைந்தது. ப2லத்தில் வந்தவாறே ஸம்ப3ந்த4 ஸம்ப3ந்தி4களும் வாழ்ந்து போயிற்று' என்றார். அவருடைய பெண்பிள்ளையன்றோ. முறை தப்பாமல் எம்பெருமானைப் பற்றுகிறாள். எம்பெருமானை முறைதப்பிப் பற்றின சூர்ப்பணகை2 அந்தரப்பட்டாள். பிராட்டியை முறைதப்பிப் பற்றின ராவணன் அந்தரப்பட்டான். இருவரையும் முறையாலே பற்றின ஸ்ரீ விபீ4ஷணாழ்வான வாழ்ந்துபோனான்.

வ்யா-(உந்து மதகளிற்றன்) மத்தக3ஜம்போலேயிருந்துள்ள ப3லத்தையுடையவன். மத3மூதி3தமான களிற்றையுடையவனென்றுமாம். உந்துகை—தள்ளுகையாய் ஊர்ப்படுகை. மிடுக்கையும் மத3த்தையும் உந்துகளிறு என்னவுமாம். 'களிறுண்டோ இவர்க்கு' என்னில், ஸ்ரீவஸுதே3வரும் ஸ்ரீநந்த3கோ3பரும் ஒரு மிடறாயிருக்கையாலே அங்குள்ளதுமொன்றாய்ப் பரிமாறும். C "வாரணமாயிரம் சூழவலம்" இத்யாதி. திருவாய்ப்பாடியில் பசுக்களும் ஆனைகளும் ஒக்கத்திரியுமத்தனை. த3த்தபுத்ரனுக்கு இரண்டிடத்திலும் கூறுண்டாகக்கடவதன்றோ. ஆகையாலேயன்றோ பிள்ளைகள் போய் ஆனைகளோடே போருற்றது. 1. "கு3ணைர் த3ஶரதோ2பம:" என்று எல்லாவற்றுக்கும் அவரை ஒப்பாகச் சொல்ல வேண்டுகை. (ஓடாத தோள்வலியன்) ப்ரதிபக்ஷம் காணப் பணைக்கும் தோள்வலியையுடையவன். 2. "யுத்3தே4 சாப்யபலாயநம்" என்கிறபடியே எதிரிகளைக் கண்டு பிற்காலியாதே கொல்லவல்ல மிடுக்கு. இப்போது இவர் மிடுக்குச் சொல்லுகிறது தங்கள் ப4யம் கெடுகைக்காக. கம்ஸனுக்குக் குடிமக்களாயிருந்தே அவனுக்கு அஞ்சார்கள். பசு மேய்க்கிற கோலாலே தகர்க்கிலும் தகர்த்து விடுவார்கள். D "அங்கோராய்க்குலம்" என்று அஞ்சினான் புகலிடம். ஸ்ரீமது4ரையை நினைத்து அஞ்சினார்க்கு அச்சம் கெடுக்குமூர். (தோள்வலியன்) 3, "ந பி3பே4தி குதஶ்சந" என்ற நம்முடைய அநீதியை நினைத்தால் எம்பெருமான் தோளை நினைத்து ப4யம் கெடுமாபோலே, க்ருஷ்ணனுடைய தீம்புகளை நினைத்தால் அவருடைய தோளை நினைத்து ப4யம் கெடலாயிருக்கை. நம்முடைய த4னத்துக்குக் காவலுண்டென்கிறார்கள்.

(நந்தகோபாலன் மருமகளே) 4. "ஸ்நுஷா த3ஶரத2ஸ்யாஹம் ஶத்ருஸைந்ய ப்ரதாபிந:" என்று பிராட்டி அருளிச்செய்தாற்போலே 'ஸ்ரீ கும்ப4ர்மகள்' என்னுமதிலும் மாமனாரையிட்டுச் சொல்லுகை அவளுக்கும் ப்ரியமாயிருக்கையாலே மருமகளென்று சொல்லுகிறார்கள். இங்கே மைத்துனமையாடி வளர்ந்து வாழ்க்கைப்படுகையாலே, ஸ்ரீநந்த3கோ3பர் ஸம்ப3ந்த4மல்லது இன்னான் மகளென்றால் அறியார்கள். இப்படி சொன்னவாறே "திருவாய்ப்பாடியில் கம்புக்கற்றையுமகப்பட ஸ்ரீநந்த3கோ3பர் மருமகளல்லாதாருண்டோ? நமக்கென்?" என்று பேசாதேகிடந்தாள்—(நப்பின்னாய்) என்று விஶேஷிக்கிறார்கள்.

(கந்தங்கமழுங் குழலீ) முன்பு க்ரமமறியாதே அவனையெழுப்பினமை தாழ்க்கைக்கடி என்று முறையாலே எழுப்புகிறார்கள். "என்னை நீங்கள் சொல்லுகிறதென்?"

---

A திருவாய் 2-7-6, B திருவாய் 2-7-3, C நாச்-திரு 6-1, D திருவாய் 6-4-5,

என்ன, 'எங்களையும் க்ருஷ்ணனையும் கூட்டிவிடாய்' என்ன, 'இங்கு அவன் உண்டோ' என்ன, 'பூநாறுகின்றது; வ்யாவ்ருத்த பரிமளமும் ஸமுத₃ாய பரிமளமும் அறியோமோ?' என்ன, அவன் 1. ''ஸர்வக₃ந்த₄ஸ் ஸர்வரஸ:''என்று பூவுக்கு நாற்றம் கொடுக்குமாபோலே அவனுக்கு நாற்றங் கொடுக்கவல்ல குழல் இவளதென்கை. உன் பரிமளபோக₃த்திலே அவன் அழுந்திக் கிடக்கும். அநுப₄விக்கைக்கு நாங்கள் வேண்டாவோ? (கடை திறவாய்) கிண்ணகை வெள்ளத்தைக் கரைகட்டினாற்போலே அடைத்துக் கொண்டு கிடவாதே எல்லாரும் அந்வயிக்கும்படி வெட்டிவிடாய். இவர்கள் அவளுக்கு அவயவத்தோபாதியாகையாலும், ஸ்ரக்சந்த₃நாதி₃களோபாதியாகையாலும். போ₄கோ₃ப கரணமாகையாலும், அவர்களோடே பு₄ஜிக்கும்போது தன் திருமுலைத் தடத்தாலே நெருக்கினவோபாதி அவளுக்கு ப்ரியமாயிருக்கையாலும் அவளை எழுப்புகிறார்கள். உன்றன் திருவுள்ளமிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்க வின்புறுதும்'' என்னக் கடவதிறே.

''மத்₄யராத்ரத்திலேவந்து எழுப்புகிறதென்? போதுவிடியவேண்டாவோ?'' என்ன 'போதுவிடிந்தது' என்ன, 'விடிந்தமைக்கு அடையாளம் சொல்லுங்கோள்' என்ன. 'கோழி கூவா நின்றது' என்ன 'அது சாமக்கோழிகாண்' என்றாள். 'என்ன வொண்ணாது (வந்தெங்கும் கோழியழைத்தனகாண்)' என்கிறார்கள். 'உணர்ந்தவையெல்லாம் கூடக் கூப்பிட்டு. பின்னையுறங்கப் புகும்; அது அடையாளமாகமாட்டாது. வேறடையாள முண்டாகில் சொல்லுங்கோள்' என்று பேசாதேகிடந்தாள். (மாதவிப் பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்) இப் பூம்படுக்கையில் நின்றும் இவையுணரும் போது விடிந்ததாகவேண்டாவோ? 'உன்னுடைய ஸ்பர்ஶமும் நோக்கும் த₄ாரகமா யிருக்கிற குயில்கள், விடிந்தபின்பும் உன்னைக்காணப் பெருமையாலே நாக்கொட்டிப் பலகால் கூப்பிட்டு நின்றனகாண்' என்கிறார்கள். அவையும் மேலே கூவ நாங்கள் கீழே கூவாநின்றோம். (மாதவிப்பந்தல்மேல்) ஸுக₂ஸ்பர்ஶத்தாலே 2. ''நோபஜநம் ஸ்மரந்'' என்கிற படுக்கையிலே உறங்குகிறவை.

(பந்தார் விரலி) பந்தும்கையும் பொருந்தினபடி. க்ருஷ்ணனை ஒருகையாலும் பந்தை ஒருகையாலும் அணைத்துக்கொண்டு கிடக்க, சென்னை ஒருகையாலும் அவளை ஒருகையாலும் அணைத்துக்கொண்டு கிடக்கும். 'அந்தப்பந்து நாமாகில் எங்களைக் கைவிடவேண்டா' என்கிறார்கள். இவன் இவளுக்கு போ₄கோ₃பகரணம். பந்து-லீலோபகரணம். ஒருகையிலே நாரமாயிற்று. ஒருகையிலே அயாநமாயிறறு. ஒருகையிலே விபூ₄தியாயிற்று. ஒருகையிலே விபூ₄திமானாயிற்று. இப்போது பந்துப்ரஸங்கமென்? என்ன. 'க்ருஷ்ணனோடே பந்தடித்து, அவனைத்தோற்பித்த கர்வமோ வாய்திறவாதொழிகிறது' என்னுமத்தாலே. 'திறந்தால் நீங்கள் செய்யக்கடவதென்?' என்ன; (உன்மைத்துனன் பேர்பாட) 'நீயுமவனும் மைத்துனமை கொண்டாடி ஒன்றுக் கொன்பது சொல்லி இட்டீடு கொள்ளும்போது மத்₄யஸ்த்த₂ராய் நில்லாதே உன்பக்ஷத்திலே நின்று அவன் தோல்விக்குக் கவிபாடக்கடவோம்' என்கிறார்கள். இருவரும் ஒன்றாய்ச செல்லுமன்று செல்லவும், பிரிந்தவன்றும், தாய் பக்ஷத்திலே ப்ரஜைகள் நிற்பது. 3. ''அஸ்மிந் மயா ஸார்த்த₄ம்'' என்கிறபடியே இளைய பெருமாள் பிராட்டி பக்ஷத்திலே நின்றாற்போலே. (பேர்பாட) B ''நாமம்பலவுமுடை நாரணநம்பி'' என்று அவனுக்குள்ளனவெல்லாம் சொல்லிக்கொடுக்கைக்கு.

---

A திருவாய் 10-3-9. B பெரியதிரு 10-8-4.

(செந்தாமரைக்கையால்) அவனும் ஆசைப்படும் கை. அவனுடையது A தாமரைக் கையிறே. 1. "தடெ$_3$ள ப$_3$ஹு". எங்களை 2. "மாஶுச:" என்னும் கை. 3. "ப$_4$வேயம் ஶரணம் ஹி வ:" என்னும் கை. 'நீங்கள் பண்ணுகிற பாபங்களுக்கு நீங்களஞ்ச வேண்டா; நானுளன்' என்கிறது பெருமாளுடைய அஞ்சலென்ற கை. 'ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்துக்கு நீங்களஞ்சவேண்டா' என்கிறது, பெரியபிராட்டியார் அஞ்ச லென்ற கை. (சீரார்வளையொலிப்ப) வளையையேறக்கடுக்கித் திறக்கப்புக்காள்; 'அங்ஙனொண்ணாது. நாங்களும் அவனும் த்$_4$வநிகேட்டு வாழவேணும்'. B "சங்கு தங்கு முன்கை" இவளது; C "இருகையில் சங்கிவைநில்லா"விறே இவர்களுக்கு. கலியர் சோற்றை வர்ணிக்குமாபோலே வர்ணிக்கிறார்கள். "சூடகமே தோள் வளையே" (27) என்று அவர்கள் பூட்டினுலிறே இவர்களுக்குள்ளது. எம்பெருமானார் விசேஷித்துகந்த பாட்டு.

(வந்து திறவாய்) யந்த்ரத்தாலே கண்வளர்ந்தருளினபடியே கிடந்து திறக்கப் புக்காள்; அதுவொண்ணாது. அவனும் நாங்களும் நடையழகு கண்டு வாழும்படியாக வேணும். (மகிழ்ந்து) பேறு உன்னதாகவேணும். த$_4$ர்மத்துக்குத் திறக்கவொண்ணாது. வழியே பிடித்து 3. "ப$_4$வேயம் ஶரணம் ஹி வ:" என்னவேணும். 18.

## ஸ்வாபதே$_3$ஶ வ்யாக்$_2$யாநம் — பதினெட்டாம் பாட்டு

அவ :— பதினெட்டாம் பாட்டு. (உந்து இத்யாதி$_3$) இப்பாட்டில் ஆசார்யன் முன்னாக நம்பிமூத்தபிரானை முன்னிட்டு எழுப்பினவிடத்திலும் எழுந்திராமை யாலே, அவனை எழுப்புகைக்காகப் புருஷகாரபூ$_4$தையான நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகிறார்கள்.

வ்யா :— (உந்துமத களிற்றன்) உந்மஸ்தகமான அஹங்காரத்தை வெல்லும் ப$_3$லத்தையுடையவனாய். (ஓடாத தோள்வலியன்) ஜக$_3$த்$_3$வில D "ஞானக்கை" என்னக் க்ஷணமான ஜ்ஞாநப$_3$லத்தையுடையவனாய்; கடவதிறே. அஹங்காரத்துக்குப் பிற்காலியாத ஜ்ஞாந ப$_3$லத்தையுடையவ னென்றுமாம். (நந்தகோபாலன்) ஆநந்த$_2$நிர்ப்ப$_4$ரனாய், ஆஶ்ரிதரக்ஷகனான ஆசார்யனுடைய. (மருமகளே) ஆசார்யனுக்கு எம்பெருமான் புத்ரவத்$_3$ விதே$_4$யனானல், பிராட்டி மருமகளாகக் குறையில்லையிறே. (நப்பின்னாய்) திருநாமம். (கந்தங்கமழுங்குழலீ) 4. "ஸர்வக$_3$ந்த$_4$:" என்னுமவனுக்கும் வாஸனையைக் கொடாநிற்கிற ப$_4$க$_3$வத்$_3$விஷயவ்யாமோஹத்தை உடையவளே! இத்தால் — ஸ்வவ்யாமோஹத்தாலே ஈஶ்வரனை வஶீகரித்து, ஆஶ்ரிதரக்ஷணத் திலே மூட்டி, அவனை எல்லாரும் கொண்டாடும்படி பண்ணுகிறாளென்னுமிடம் தோற்றுகிறது. (கடைதிறவாய்) அவனுடைய பரிமளமும் உன்னுடைய பரிமளமும் காட்டிலெரித்த நிலாவாகாமே நாங்கள் அநுப$_4$விக்கும்படி, தத்$_3$விரோதி$_4$யான எங்களுடைய அஜ்ஞாநத்தை நீக்காய்.

'அஜ்ஞாநம் போகைக்கு ஸத்வோத்தரமான காலமாயிற்றோ?' என்ன — 'ஆயிற்று' என்ன; 'அதுக்கு அடையாளம் என்?' என்ன; — (வந்து எங்கும்

A திருவாய் 7-6-1. B திருச்சந்த 57. C திருநெடு 24. D திருவாய் 2-9-2.

## பத்தொன்பதாம் பாட்டு

குத்து விளக்கெரியக் கோட்டுக்காற் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா வாய்திறவாய்
மைத்தடங் கண்ணினாய் நீயுன் மணாளனை
எத்தனை போதுந் துயிலெழ வொட்டாய்காண்
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவ மன்று தகவேலோ ரெம்பாவாய்.

---

ஸ்வா- கோழியழைத்தனகாண்) 'ஸத்வோத்தரமான காலமானவாறே ஸர்வதோதி3க்கமாக பா4க3வதர் எழுந்திருந்து ப4க3வத்கைங்கர்யார்த்த2மாக ஒருத்தரையொருத்தர் எழுப்பாநின்றார்கள்' என்ன; 'அவர்களை உறங்கவொட்டாமைக்கு நீங்களுண்டே' என்ன; — (மாதவிப்பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்) வேத3ாந்தங்களிலே வேத3ாந்தார்த்த2ங்களை அநுப4வியாநிற்கும் நாத2யாமுநர்போலும் பரமபா4க3வதஸமூஹங்கள் ஸத்வம் தலையெடுத்த பின்பும் உன்னைக் காணாமையாலே நாக்கு ஒட்டினமை தோற்றப் பலகால் கூவாநின்றனகாண்.

இப்படி எழுப்பினவிடத்திலும் எழுந்திராமையாலே, ஜாலகரந்த்4ரத்தாலே பார்த்து 'பந்தார்விரலி' என்கிறார்கள். 'ஸத்த்வம் தலையெடுக்குந்தனையும் சேதநரைக்கொண்டு லீலாரஸம் அநுப4வித்து, ஸத்த்வம் தலையெடுத்தவாறே ஒருகையாலே லீலோபகரணபூ4தரான சேதநவர்க்க3த்தையும், ஒருகையாலே இத்தைக் கொண்டு தன்னை லீலாரஸம் அநுப4விப்பித்த ஈஶ்வரனையும் அணைத்துக்கொண்டு கிடப்பதே! இதென்ன ஐஶ்வர்யம்!' என்கிறார்கள். 'இப்போது எழுந்திருந்து செய்யவேண்டுவதென்?' என்ன; — (உன் மைத்துனன் பேர் பாட) நீயும் அவனும் பந்தடிக்கையில் உனக்கு அவன் தோற்ற தோல்விக்கு அவன் திருநாமங்களைப் பாட. 'ஆகில், கதவைத்தள்ளி உள்ளே புகுங்கோள்' என்ன; அது கூடாது; — (செந்தாமரைக்கையால்) ஸௌந்த3ர்ய ஸௌகுமார்ய ஸௌக3ந்த்4யங்களாலே தாமரைபோன்ற திருக்கையாலே. இவ்விடத்தில், கையாவது — ஜ்ஞாநம்; A "ஞானக்கை தா" என்றாரிறே ஆழ்வார். ஜ்ஞாநத்துக்கு ஸௌந்த3ர்ய ஸௌகுமார்ய ஸௌக3ந்த்4யங்களாவன: — இதர விஷய நிவ்ருத்தி — ஸௌந்த3ர்யம்; ஸ்வபே4ாக்த்ருத்வநிவ்ருத்தி — ஸௌகுமார்யம்; நிரதிஶய ப்ரேமாத்மகத்வம் — ஸௌக3ந்த்4யம்; இப்படியிருந்துள்ள ஜ்ஞாநத்தாலே. (சீரார்வளையொலிப்ப) நிரந்தர ப4க3வத்ஸம்ப3ந்த4த்தாலே பூர்ணங்களாய் ப4க3வத்ஸம்ப3ந்த4 ஸூசகங்களான ரஹஸ்யத்ரயார்த்த2ங்கள் ப்ரகாஶிக்க. (வந்துதிறவாய்) நம்முடைய ப்ரயத்நத்தை அபேக்ஷியாமல் நீயே வந்து ஸ்வரூபோபாய புருஷார்த்த2 விரோதி4 விஷயமான தத்தத3ஜ்ஞாநத்தைப் போக்காய். (மகிழ்ந்து) புருஷார்த்த2ம் உன்னதாகவேணும். 18.

---

A திருவாய் 2-9-2.

பதவுரை :— குத்துவிளக்கு — நிலைவிளக்கானது, எரிய — எரியாநிற்க, கோடு கால் கட்டில் மேல் — யானைத் தந்தங்களால் செய்த கால்களையுடைய கட்டிலிலே, மெத்தென்ற — மெத்தென்றிருக்கும், பஞ்ச சயனத்தின் மேல் ஏறி — பஞ்சினாலான படுக்கையின் மீது ஏறி, கொத்து அலர் பூ குழல் — கொத்துக் கொத்தாக மலரும் பூக்களை அணிந்த குழலையுடைய, நப்பின்னை — நப்பின்னைப் பிராட்டியுடைய, கொங்கை மேல் — திருமுலைத்தடங்களின் மேலே, வைத்துக் கிடந்த மலர் மார்பா — (தன்னுடைய) அகன்ற மார்பை வைத்துக் கிடப்பவனே! வாய் திறவாய் — வாய் திறந்து வார்த்தை சொல்லுவாயாக; மை தடம் கண்ணினாய் — மையிட்டலங்கரித்த பரந்த கண்களை உடையவளே! நீ — நீ, உன் மணாளனை — உனக்குக் கணவனான கண்ணனை, எத்தனை போதும் — ஒரு கணநேரமும், துயில் எழ — திருப்பள்ளியெழ, ஒட்டாய் காண் — சம்மதிக்கிறாயல்லை; எத்தனை யேலும் — சிறிதுபோதும், பிரிவு ஆற்றகில்லாய் ஆல் — (அவனை விட்டுப்) பிரிந்திருப்பதைப் பொறுக்கிறாயல்லை அன்றோ; தத்துவம் அன்று — (இது) உன் ஸ்வரூபத்துக்கும் தகுந்ததன்று; தகவு அன்று:—உன் ஸ்வபா4வத்துக்கும் தகுந்ததன்று. 19.

## மூவாயிரப்படி — பத்தொன்பதாம் பாட்டு

அவ:— பத்தொன்பதாம்பாட்டு. a இவள் திறக்கப்புக, a2 'நம்முடையார்க்கு இவள் திறக்க முற்பட்டாளாகவொண்ணாது' என்று இவளைத் a3 திறக்கவொட்டாதே கட்டிக்கொடு கிடக்கிற க்ருஷ்ணனை எழுப்பி, அங்கு மறுமாற்றங்கொள்ளாமையாலே மீளவும் அவளை உணர்த்துகைக்காக அவளை எழுப்புகிறார்கள். b இத்தால் — ஆஶ்ரிதர்க்கு மாறிமாறிப் பரிகைக்கு A "என்னடியார் அதுசெய்யார்" என்னுமவனும், 1. "ந கஶ்சிந் நாபராத்4யதி" என்னுமவளும் இருவருமுண்டென்கை.

பெ. அ. பத்தொன்பதாம் பாட்டு. (குத்துவிளக்கு இத்யாதி3) a "நப்பின்னைகொங்கை மேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா" என்றத்தைக் கடாக்ஷித்து, அவளைக் கட்டிக்கொண்டு கிடக்கிற க்ருஷ்ணனை எழுப்புகிறார்களென்று திருவுள்ளம் பற்றி, கீழ்ப்பாட்டில் நப்பின்னை கதவுதிறக்கைக்கு உத்3யோகித்தமை தோற்றியிருக்க, அதுக்கு விரோத4மாகக் கட்டிக்கொண்டிருக்கக்கூடுமோ? என்னும் ஶங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு, அவளோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே மயங்கிக் கதவு திறவாமல் உறங்குகையாலே அதுக்காக நப்பின்னையை எழுப்புகிறார்களென்று ஸங்கதியிடுகிறார் (இவள் இத்யாதி3) a2 'நம்முடையார்க்கு' என்றது — இவளைப் புருஷகாரமாகப் பற்றினவர்கள் நம்மையே பற்றினவர்களென்னும் நினைவாலே என்றபடி. a3 'திறக்கவொட்டாதே' என்றது — 'தானே முற்பட்டுத் திறக்கவேணும்' என்னும் நினைவாலே. b 'இத்தால்' என்றது — கீழ்ப்பாட்டில் க்ருஷ்ணன் நப்பின்னை திறக்க உத்3யோகித்ததாலும், இப்பாட்டில் தானே திறக்க உத்3யோகித்ததாய்ச் சொன்னதாலும் என்றபடி.

சி. அ. பத்தொன்பதாம் பாட்டு. (குத்து விளக்கு) a "நப்பின்னை கொங்கை மேல் வைத்துக்கிடந்த" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை. d பத்நீத்வத்தைப் பற்ற

A பெரியாழ் திரு 4-9-2.

வ்யா:— (குத்துவிளக்கெரிய இத்யாதி$_3$) c 'அர்த்தி$_2$கள் வாசலிலே நிற்க ஓரநுப$_4$வமுண்டோ? 'என்கிறார்கள் d † 'எங்களைப்போலே $d_2$ ஊராரிசைவும் வேண்டாதே, "கீழ்வானம் வெள்ளென்றது" (8) என்கிற ப$_4$யமுமின்றிக்கே, A "நள்ளிருட்கணென்னையுய்த்திடுமின்" என்று இருட்டுத்தேடவும் வேண்டாதே, $d_3$ பகலை இரவாக்கிக்கொண்டு விளக்கிலே $d_4$ க்ருஷ்ணன்முக$_2$த்தைப் பார்த்துக்கொண்டு படுக்கையிலே கிடக்கப்பெறுவதே! இதென்ன ஐஸ்வர்யம்!' என்கிறார்கள். e 1. "அதீவ ராம: ஶுஶுபே$_4$" என்று, இவள் அவனுக்கும் ப்ரகாஶகமான விளக்காயிருக்க, ஓர் நிலைவிளக்கு $e_2$ உண்டாவதே! f (கோட்டுக்கால் கட்டில்மேல்) g குவலயாபீட$_3$த்தின் கொம்பைப் பறித்துக்கொண்டுவந்து செய்த கட்டிலிறே. h வீரபத்நியாகையாலே இவளுக்கு இதில்லது கண் உறங்காது. i எங்களைப்போலே ஸ்ரீப்$_3$ருந்தா$_3$வநம் தேடிப் போகவேண்டாதே உள்ளகத்துக்குள்ளே கூச்சமறக் கிடக்கப்பெறுவதே! இது என்ன பா$_4$க்$_3$யம்? j (கட்டில்) k மாணிக்கத்தாலே செய்

---

பெ. அ. c பாட்டுக்கெல்லாம் ந்யாயநிஷ்டூ$_2$ரம் சொல்லுகிறார்களென்று தொகுத்துத் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அர்த்தி$_2$கள் இத்யாதி$_3$) d "நப்பின்னை கொங்கைமேல்" என்னுமளவுக்கும் ஹார்த்த$_2$ப$_4$ாவத்தை அருளிச்செய்கிறார் (எங்களை இத்யாதி$_3$) $d_2$ 'ஊராரிசைவும் வேண்டாதே' என்றது — நந்த$_3$ாதி$_3$களெல்லாருங்கூட இவர்களை நோக்கிக்கொண்டிருக்கும்படி மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேலே கண்வளர்ந்தருளுகையாலே அர்த்த$_2$ஸித்$_3$த$_4$ம். $d_3$ (பகலை இரவாக்கிக்கொண்டு) என்றது — ராத்ரி செய்யும் க்ருத்யத்தை விடிந்தும் செய்கை; அதாவது — விடிந்தும் விளக்குவைத்துக்கொண்டு ஸம்ஶ்லேஷித்திருக்கை. $d_4$, e நந்தர் மருமகளாகையால் விளக்கு உண்டாயிருக்கை அர்த்த$_2$ஸித்$_3$த$_4$மாயிருக்கவும், "குத்துவிளக்கெரிய" என்று இவர்கள் சொன்னதுக்கு 'விளக்கிலே க்ருஷ்ணன் முக$_2$த்தைப் பார்த்துக்கொண்டு, அத்தால் வந்த அழகின்மிகுதியை அநுப$_4$வித்துக்கொண்டிருக்கிறாளிறே' என்று கீழ் ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, 'அவளே விளக்காயிருக்க இதுவும் வேணுமோ' என்னும் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அதீவ இத்யாதி$_3$) $e_2$ (உண்டாவதே) என்றது — உண்டாகவேணுமோ என்றபடி. f, g, h 'கட்டில்கால் குவலயாபீட$_3$த்தின் கொம்பேயாகவேணுமோ' என்ன; அருளிச்செய்கிறார் (வீரபத்நி இத்யாதி$_3$) f, i "கட்டில்மேல்" என்றத்தால் — ஒரு ஶயநக்$_3$ருஹ விஶேஷம் அர்த்த$_2$ஸித்$_3$த$_4$மாகையாலே, அதுக்கு வ்யாவர்த்யபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எங்களை இத்யாதி$_3$) j, k நப்பின்னையும் க்ருஷ்ணனும் கண்வளர்ந்தருளுகைக்கு யானைத$_3$ந்தத்தாலே செய்து ஶ்லாக$_4$யமாயிருந்தத்தை "திருப்பள்ளிக்கட்டில்" என்று உபசரித்துச் சொல்ல வேண்டியிருக்க, "கட்டில்" என்று சொல்லக்

---

சி. அ. (நம்மைப்போலே ஊராரிசைவுமித்யாதி$_3$) $d_3$ பகலை இரவாக்குகை — ராத்ரி செய்யும் க்ருத்யத்தை விடிந்தும் விளக்கு வைத்துக்கொண்டு ஸம்ஶ்லேஷிக்கை. அன்றிக்கே, (பகலை இரவாக்கி) என்கிறதை அவ்விளக்கு ப்ரகாஶத்தாலே இரவைப் பகலாக்கி என்று அந்வயித்தல். g, h ஸாமான்யேந ஆனைக்கொம்பு என்னாதே (குவலயாபீட$_3$த்தின் கொம்பை) என்று விஶேஷிக்கிறதென்? என்ன அருளிச்செய்கிறார் (வீரபத்நியாகையாலே) என்று. i ஆகக்கீழ்ச்சொல்லாவற்றாலும் ப$_2$லித்த ஹார்த்த$_3$ப$_4$ாவம் (எங்களைப்போலே) என்று. j, k தூங்கும் மஞ்சமென்றாற்போலே சொல்லாதே, 'கட்டில்' என்கிறதென்? என்ன.

---

† (பா) நம்மைப்போலே A நாச்-திரு 12-3

யிலும் "கட்டில்" என்று ஜாதிப்பேச்சு. l (மெத்தென்ற) m நாங்கள் ஆர்த்தைகளாய் வந்து கிடக்க, படுக்கையின் m2 உள் m3 மானம் புறமானம் கொண்டாடிக் கொண்டு படுக்கைபொருந்துவதே! கண் உறங்குவதே! (பஞ்சசயனத்தின்மேலேறி) பஞ்சவித4மான படுக்கையின் மேலேறி. அதாவது—அழகு, குளிர்த்தி, மார்த்3வம், பரிமளம், த4ாவள்யம் ஆக இவை. n இவர்களுக்கு A மென்மலர்ப்பள்ளி வெம் பள்ளியாயிறே இருப்பது. o அஞ்சு உருவிட்டுச்செய்த படுக்கை என்றுமாம்: பஞ்சாலே செய்த படுக்கை என்னவுமாம். p (மேலேறி) q 1. "பாதே3நாத்4யாரோஹதி" என்று நாங்கள் மிதித்தேறினலன்றே நீ படுக்கையிலே ஏறுவதென்கை.

r (கொத்தலர் பூங்குழல் நப்பின்னை) s திருக்குழலில் ஸ்பர்ஶத்தாலே கொத்துக் கொத்தாக அலராநின்றுள்ள பூவையுடைத்தான குழல். t காலம் அலர்த்துமா போலே, அவனோட்டை ப்ரணயகலஹத்தாலே அலருகை. u B "வாசஞ்செய்

---

**பெ. அ.** கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (மாணிக்கத்தால் இத்யாதி3) ஆண்டாள் கோ3பிமாரவஸ்தை2யை ப்ராபித்து அருளிச்செய்கையாலே, க்ருஷ்ணன் திருப்படுக்கையானாலும் அந்த ஜாத்யநுகு3ணப4ாஷணம் பண்ணினாரென்று கருத்து. l. m "பஞ்சசயனத்தில்" என்றபோதே மார்த்3வம் அர்த்த2ஸித்3த4மாயிருக்க "மெத்தென்ற" என்றதுக்கு ஸ்வபா4வப4ாவம் அருளிச்செய்கிறார் (நாங்கள் இத்யாதி3) m3 மானம் — அளவு; இவர்களார்த்திமென்றபடி. n இவர்கள் இப்படி விஶேஷித்துச் சொன்னத்தாலே தோற்றுகைக்கு உபபத்தி அருளிச்செய்கிறார் (இவர்களுக்கு இத்யாதி3) o 'அஞ்சுரு' என்றது — பஞ்சவர்ணம் என்றபடி. p, q "மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேலே— நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த" என்னவே, ஏறியிருக்கை அர்த்த2ஸித்3த4மாயிருக்கவும், "ஏறி" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பாதே3ந இத்யாதி3)

r, s "கொத்தலர்" என்றவிடத்தில் — அலராநின்றுள்ள என்று வர்த்தமானமாகத் தோன்றுகையாலே, திருக்குழலோட்டை ஸ்பர்ஶமே இதுக்கு ஹேதுவென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (திருக்குழல் இத்யாதி3) t தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (காலம் இத்யாதி3) நப்பின்னை கதவு திறக்கப்புக, க்ருஷ்ணன் "இவள் முற்படலாகாது" என்று கட்டிக்கொண்டு வரும்போதையில் ப்ரணயகலஹத்தாலே அலர்ந்ததென்று இவ்வாக் யத்துக்குத் தாத்பர்யம். u 'கொத்தாக அலரக்கூடுமோ' என்ன, அருளிச்செய்கிறார் (வாசம் இத்யாதி3) பரிமளத்தையுண்டாக்குகிற குழல், ஶாத்3தை4யையுண்டாக்கும் என்றபடி.

---

**சி. அ.** அருளிச்செய்கிறார் (மாணிக்கத்தாலே இத்யாதி3) m2 (உள்மானம்) இத்யாதி3க்கு, 'படுக்கையினுடைய உள்ளிலுண்டான மார்த்3வத்தைபே4ாக்3யமாகக் கொண்டாடி என்றபடி. m3 மானம்-அளவு, பரீக்ஷை என்றபடி. n "ஏறி" என்று வருத்தமாகச் சொல்லுவானென்? என்ன (இவர்களுக்கு இத்யாதி3) o (அஞ்சுரு) என்றது அஞ்சுவர்ணத்தாலே என்றபடி. r "கொத்தலர் பூங்குழல்" என்றதுக்கு இரண்டர்த்த2ம். அதாவது — s குழல் ஸ்பர்ஶத்தாலே அலருகை என்னுதல், t ப்ரணயகலஹத்தாலே அலருகை என்னுதல். அதாவது — 'இவள் எழுந் திருப்பேன்' என்ன, அவன் 'எழுந்திருக்கவொட்டேன்' என்ன, அந்த ஸம்ப்4ரமத்திலே அலருகை. u முந்தினதிலே ப்ரமாணம் (வாசம் செய்பூங்குழலாள்) என்று.

---

A திருவாய் 9-9-4. B திருவாய் 10-10-2.

பூங்குழலாளிறே. (கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்பா) v கொங்கையைத் தன்மேல் வைத்துக் கிடக்கை; w கொங்கைமேல் தன்னை வைத்துக் கிடந்த என்னவுமாம். x 1. ''ந ஶாஸ்த்ரம் நைவ ச க்ரம:'' என்றிறே ப்ரணயம் இருப்பது. y 2. ''பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச'' என்றும் உண்டிறே; z மலையை அண்டை கொண்டு ஜீவிப்பாரைப் போலே; A ''மலராள் தனத்துள்ளான்'' என்னக்கடவதிறே. a (மலர்மார்பா) 'திருமுலைத்தடங்களுறுத்துகையாலே அகன்றிருந்துள்ள மார்பு. இவ்விக்ருதியால், 3. ''ஸதை$_3$கரூபரூபாய'' என்றதோடு விரோதி$_4$யாதோ? என்னில்,-விரோதி$_4$யாது: அது ஹேயகு$_3$ணங்களில்லை என்கிறது. ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்தில் அவிகாரித்வம் அவத்$_3$யமித்தனையிறே. b (வாய் திறவாய்) c உன் க$_3$ம்பீ$_4$ரமான மிடற்றோசையாலே ஒரு வார்த்தை சொல்லாய். d 4. ''ஆர்த்தோ வா யதி$_3$ வா த்$_3$ருப்த:'' என்ற உனக்கு உன்னையல்லது செல்லாதே உன்புறப்பாடு பார்த்திருக்கிற எங்களுக்கு ஒரு d$_2$ வார்த்தையும் அரிதோ? e அவள் புறப்படவொட்டாளாகில் கிடந்தவிடத்தே கிடந்து, 5. ''மாஶுச:'' என்று ஒரு உக்தி நேருகையும் அரிதோ?

---

பெ.அ. v, x 'நப்பின்னை கொங்கையை, அவன் பள்ளிகொள்ளும்போது தன்மேலே வைத்துக் கொள்ள ஸம்மதிக்கும்படி எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார் (ந ஶாஸ்த்ரம் இத்யாதி$_3$) w, y இரண்டாம் அர்த்த$_2$த்தில் ப்ரமாணபூர்வகம் த்$_3$ருஷ்டாந்தம் காட்டுகிறார் (பர்யாயேண இத்யாதி$_3$) z கொங்கை மேலே தன்னை வைக்கைக்கு நிமித்தம் ஆத$_3$ராதிஶயமென்னுமதுக்கு லௌகிகத்$_3$ருஷ்டாந்தம் காட்டுகிறார் (மலை இத்யாதி$_3$) b, c ''கதவு திறவாய்'' என்னாதே, ''வாய்திறவாய்'' என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உன் இத்யாதி$_3$) ''அநந்யா'' என்னும்படி ஏகத்$_3$ரவ்யம்போலேயிருக்குமவர்களை எழுப்பிக் கதவுதிறக்கச்சொல்லுகை ராவணாதி$_3$களோபாதியிறே என்று நினைத்து, க$_3$ம்பீ$_4$ரமான த்$_4$வநியைக் கேட்க ஆசைப்படுகிறார்களென்று கருத்து. d ''திறவாய்'' என்றத்தை ப்ரார்த்த$_2$நாபரமாக்கி ஒருயோஜனை அருளிச்செய்து, திறவாமல் போனாயென்று வ்யதிரேகபரமாக்கி உபாலம்ப$_4$ம் தோற்றத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆர்த்தோவா இத்யாதி$_3$) 4. ''பரேஷாம் ஶரணாக$_3$த: அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா'' என்று - ஶத்ருவிஷயத்தில் ஆர்த்த அநார்த்தவிபா$_4$க$_3$மற ரக்ஷிக்கும் உனக்கு ஆர்த்தைகளாயிருக்கும் அப$_3$லைகள் விஷயத்தில் ஒருவார்த்தையும் து$_3$ர்லப$_4$மாக வேணுமோ? என்று கருத்து. e (அவள் புறப்படவொட்டாளாகில்) என்றது — அவள் போ$_4$க்$_3$யதை உன்னைப்புறப்படவொட்டாதே போய்த்தாகில் என்றபடி. நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பனாய், அவள் போ$_4$க்$_3$யதையிலே குமிழ் நீருண்டிருக்குமவனுக்கு வார்த்தையும் சொல்லக்கூடாதென்று தங்களுக்கு போ$_4$க்$_3$யதை இடைச்சுவராகத் தோற்றிற்றாகிலும் அவள் மார்விலிருந்தே ஆர்த்தைகளான எங்களுக்கும் ஶோகநிவ்ருத்திக்கு ஒருவார்த்தை மாத்ரம் சொன்னலாகாதோ? என்று இவ்வாக்யத்துக்குக் கருத்து.

---

சி. அ. v, x கொங்கையைத் தன்மேலே வைத்துக் கிடக்கக் கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (ந ஶாஸ்த்ரமித்யாதி$_3$) ஶேஷஶேஷிபா$_4$வம் தலைதடுமாறுநிற்கக்கூடும் என்றபடி. z ''கொங்கைமேல் தன்னை வைத்துக் கிடந்த'' என்ற அர்த்த$_2$த்தைத் தாத்பர்ய ஸஹிதமாக்குகிறார் (மலையை அண்டை கொண்டு இத்யாதி$_3$) a மலர் — விஸ்த்ருதமான. d$_2$, e ''வார்த்தையும் அரிதோ'' என்றத்தை விவரிக்கிறார் (அவள் புறப்படவொட்டாளாகில்

---

A மூன்திருவ 3

f (மைத்தடங்கண்ணினாய்) g இவன் மறுமாற்றம் சொல்லப் புக, 'நம்மை யொழியத் தாங்களே எழுப்புவதே!' என்று, கண்ணாலே ''வாய்வாய்'' என்று $g_2$ வாயை நெரித்தாள். h அழகாலும் பரப்பாலும் கண்ணிலே அகப்பட்டவன் அக்கடலைக் கரைகண்டாலிறே $h_2$ நம்மைப் பார்ப்பது. i 1. ''ந ஜீவேயம் க்ஷணமபி'' என்னப்பண்ணும் கண்ணிறே. j ''மையிட்டெழுதோம்'' (2) என்றிருக்கிற எங்களையும் மையிடப்பண்ணினாலன்றோ நீ கண்ணுக்கு மையிடுவது; k உன்னுடைய கண்ணிலழகும் பெருமையும் $k_2$ எங்கள் பேற்றுக்கு உடலென்றிருந்தோம்; அது இழவுக்கு உடலாவதே!

(நீ) அவனைப் பெறுகைக்கு அடியான நீ அவனை விலக்கக் கடவையோ? l (உன் மணாளனை) m 2. ''கோ₃பீஜநவல்லப₄:'' என்றும், 3. 'லோக ப₄ர்த்தாரம்'' என்றும் சொல்லுகிற பொதுவையொழிய உனக்கே ஸ்வம்மாய் நீ புருவம் நெறித்தவிடத்திலே கார்யஞ் செய்யும்படி ப₄வ்யனாயிருக்கும் இருப்பு எங்களுக்கு உடலென்றிருந்தோம்: அங்ஙனன்றிக்கே $m_2$ இனி உனக்கே சேஷமென்றிருக்கிறோமென்கிறார்கள். n (எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண்) o ஒருக்ஷணமும் அவனை எழுந்திருக்கவொட்டுகிறதில்லை. p புணர்ச்சிக்காகப் பிரியவும் பயப்படுவுதி.

---

பெ.அ. f,g ''நப்பின்னாய்'' என்று ஸம்போ₃தி₄க்கலாயிருக்க, ''மைத்தடங்கண்ணினாய்'' என்று சொன்னவர்களுடைய உட்கருத்தை அருளிச்செய்கிறார் (இவன் இத்யாதி₃) $g_2$ 'நெரித்தாள்' என்ற அநந்தரம் ''உ,கையாலே வாய்திறவாதிருக்கவேணும்'' என்று சேஷம், h 'அவள் கண்ணாலே வாய்நெரித்தவாறே அவன் வாய்திறவாதிருக்கவேணுமோ' என்ன. அருளிச்செய்கிறார் (அழகாலும் இத்யாதி₃) $h_2$ 'நம்மைப்பார்ப்பது' என்றது — நம்முடைய க்லேஶத்தைப் பார்த்து வார்த்தை சொல்வது என்றபடி. i 1. ''ந ஜீவேயம்'' என்றதுக்கு, 1 ''விநா தாமஸிதேக்ஷணம்'' என்னுமளவும் விவக்ஷிதம். f, j ''மைத் தடங் கண்ணினாய்'' என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (மை இத்யாதி₃) i, k பூர்வதாத்பர்யவிவரணம் (உன்னுடைய இத்யாதி₃)

l, m ''மணாளனை'' என்ன அமைந்திருக்க, ''உன்'' என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிறார் (கோ₃பீஜநேத்யாதி₃) n, o 'எத்தனை'' என்றது — எவ்வளவென்றாய், அல்ப காலமென்று விவக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஒரு க்ஷணமும் இத்யாதி₃) p எழுந்திருக்கவொட்டாமைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (புணர்ச்சிக்கு இத்யாதி₃) ஸம்ஶ்லேஷித்திருக்கும்போதே விச்சி₂த்₃ய புநஸ்ஸம்ஶ்லேஷிக்குமதுக்கும் அஞ்சுகையாலே ஒரு க்ஷணமும் எழுந்திருக்கவொட்டாய் என்று தாத்பர்யம்.

---

சி.அ. இத்யாதி₃) $g_2$ (வாயை நெரித்தாள்) என்றது—வாயை மூடினாள் என்றபடி. f ''மைத் தடங்கண்ணினாய்'' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். i 1. ''அஸிதேக்ஷணா'' என்கிறபடியே ஸ்வாப₄ாவிகமான கறுப்பைச் சொல்லுதல்; j அன்றிக்கே மையிட்ட கண் என்னுதல். $k_2$ (எங்கள் பேற்றுக்கு உடலென்றிருந்தோம்) என்றது 'கண்ணழகாலே அவனை வஶீகரித்துப் புருஷீகரிக்கைக்குடலென்றிருந்தோம்' என்றபடி. $m_2$ (இனி உனக்கு சேஷமென்றிருக்கிறோம்) 'க்ருஷ்ணனை உனக்கே சேஷமென்றிருக்கிறோம்' என்றபடி. n o ''எத்தனை போதும்'' என்றது அல்பகாலமுமென்றபடி. p (புணர்ச்சிக்காகப் பிரியவும்) என்றது ஸம்ஶ்லேஷாந்தர வர்த்த₄கமான விஶ்லேஷத்துக்கும், அணைத்த கையை நெகிழ்க்கவும் என்றபடி.

(எத்தனைபேலும் q பிரிவாற்றகில்லாயால்) r அது உன்குறையோ? அவனை க்ஷணகாலமும் பிரியமாட்டாத உன்னுடைய $r_2$ ப3லஹாநியின் குறையன்றோ. s A "அகலகில்லேனிறையும்" என்று க்ஷணகால விஶ்லேஷமும் பொறுக்கமாட்டாமையாலே, அவனோட்டை நித்யஸம்யோக3ம் எங்களுடைய லாப4த்துக்கு உடலாகையொழிய விபரீதப2லமாவதே!

t (தத்துவம் அன்று தகவு) u தத்வம் — ஸத்யம். v தகவன்று — த4ர்மமன்று; எங்களறியாமையில் சொல்லுகிறோமல்லோம்; $v_2$ மெய்யே த4ர்மமன்று, w (தகவு—தத்துவமன்று) x 1. "பாபாநாம் வா ஶுப4ாநாம் வா" என்னும் உனக்கு 2. "அஹத்வா ராவணம் ஸங்க்2யே" என்ற அவனில் வாசியில்லை என்றிருக்கிறோம். அத2வா (தத்துவமன்று) தத்வம் — y ஸ்வரூபம். உன் ஸ்வரூபத்துக்கும் போராது; (தகவன்று) உன்னுடைய $y_2$ ஸ்வபா4வத்துக்கும் போராது; z உன்னுடைய புருஷகாரபா4வத்துக்கும் போராது, க்ருபைக்கும் போராது. 19.

---

பெ. அ. q, r "பிரியாய்" என்னாதே, "பிரிவாற்றகில்லாய்" என்று — பிரிவை ஸஹிக்கமாட்டாயென்கையாலே, அதுக்குச்சேர தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அது இத்யாதி3) $r_2$, s 'ப3லஹாநியென்பானென்? உங்களுக்காகவன்றோ நான் இருக்கிறது' என்று அவளுக்குக் கருத்தாக அருளிச்செய்கிறார் (அகலகில்லேன் இத்யாதி3)

$v_2$ 'மெய்யே த4ர்மமன்று' என்றது — த4ர்மமன்றென்று சொல்லுகிறது ஸத்யமே என்றபடி. w, x தகவு — க்ருபையானது, தத்துவமன்று — ஸ்வாபா4விகமன்றென்று ஶப்3த3ார்த்த2ம் விவக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பாபாநாம் இத்யாதி3) நிர்க்4ருணராகச் சொல்லப்பட்ட பெருமாளுக்கும் க்4ருணைவதியாகச் சொல்லப்பட்ட உனக்கும் வாசியில்லையென்று கருத்து. y, z ஸ்வரூப ஸ்வபா4வங்களை அடைவே விவரிக்கிறார் (உன்னுடைய இத்யாதி3) 19.

---

சி. அ. t, u தத்துவம்—உண்மை. w, x தகவு—க்ருபை. t......z "தத்துவமன்றுதகவு" என்றதுக்கு மூன்று பொருள். அதாவது — தத்துவம் என்று ஸத்யமாய், தகவென்று த4ர்மமாய், மெய்யே த4ர்மமன்று என்னுதல்; அன்றிக்கே, தகவு என்று க்ருபையாய், 'தத்துவம்' என்று ஸ்வரூபமாய், உனக்கு க்ருபையே ஸ்வரூபமன்று என்னுதல்; அன்றிக்கே, தத்துவமுமன்று தகவுமன்று — உன் ஸ்வரூபத்துக்கும் போராது, உன் ஸ்வபா4வத்துக்கும் போராது; அதாவது — உன்னுடைய புருஷகாரபா4வத்துக்கும் போராது, உன் க்ருபைக்கும் போராது என்று. x இரண்டாமர்த்த2த்தை அருளிச்செய்கிறார் (பாபாநாம் வா இத்யாதி3), y, z ஸ்வரூபம் — புருஷகாரம். 19.

---

A திருவாய் 6-10-10

## ஆறுயிரப்படி — பத்தொன்பதாம் பாட்டு

அவ:— பத்தொன்பதாம்பாட்டு. நப்பின்னைப் பிராட்டியையெழுப்பி, ''சீரார் வளையொலிப்ப வந்துதிறவாய்'' (18) என்றவாறே, எழுந்திருந்து கதவைத்திறக்கப் புக்காள்: ''நம்மை ஆஶ்ரயித்தவர்களை இவள் தன்னுடையாரென்று இருக்குமோ பாதி, இவளைப்பற்றினர் நம்முடையாராயன்றோ இருப்பது; நம்முடையார்க்கு இவள் முற்பட்டாளாகவொண்ணாது; இவளைத் திறவென்றார்க்கு நாம் முற்பாடராய்க் கார்யஞ் செய்தோமென்னும் தரம்பெறவேணும்'' என்று, இவளைத் திறக்கவொட்டாதே பின்னிட்டு வந்து மல்கட்டாகக் கட்டிக் கொண்டுபோய்ப் படுக்கையிலே விழவிட்டு, இவளுடைய ஸ்பர்ஶத்தாலே தானும் மயங்கி, இவர்கள் வந்த காரியத்தையும் மறந்துகிடக்க; அவனை எழுப்பினவளவிலே அவனெழுந்திருந்து இவர்களுக்கு ப்ரதிவசநம்பண்ணாதபடி அவனுக்கு முற்பாடுகொடாதே கட்டிக்கொண்டு கிடந்து உறங்குகிற இவள்தன்னையே திரியட்டும் எழுப்புகிறார்கள்—மீளவும் அவனை உணர்த்துகைக்காக. இத்தால்—ஆஶ்ரிதர்க்கு மாறி மாறி ஒருவர்க்கொருவர் பரிந்து நோக்குகையாலே நமக்குத் தஞ்சமாயிருப்பதொரு மிதுநமுண்டென்கிறது. இப்படிக்கொத்த மிதுநத்தைத் தனித்தனியே பற்றுகிறவர்கள் ராவணசூர்ப்பணகைகளோடொப்பார்கள்: பெருமாளைப்பற்றி, திருவடி பிராட்டிதிருவடிகளிலே செல்ல, அவனைக் கடாக்ஷித்து, இளையபெருமாளறியாத காகவ்ருத்தாந்தத்தை அருளிச்செய்தாள்: பிராட்டியைப் பற்றிவந்த ஸ்ரீவிபீஷணாழ்வானை A ''விபீடணற்கு வேறுகநல்லானை'' என்னும்படி விஶேஷஸ்நேஹம் பண்ணியருளினார் பெருமாள். 1. ''ந கஶ்சிந்நாபராத்யதி'' என்னுமவளையும், B ''என்னடியாரதுசெய்யார்'' என்னுமவனையுங்காணும் நாம் தஞ்சமாகப் பற்றியிருக்கிறது. C ''நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு நின்கோயில்சீய்த்து'' என்றாரிறே. D ''ஆள்கின்றானாழியான் ஆரால்குறைவுடையம்—வாள்கெண்டையொண்கண்'' E ''கூரம்பன்'' என்று பகவத்ப்ரபந்நர், அம்பின் புகரையும் கூர்மையையும் நினைத்திருப்பர்கள்; த்வயநிஷ்டர் இவள் கண்ணின் கூர்மையையும் புகரையும் தஞ்சமாக நினைத்திருப்பர்கள்.

வ்யா:— (குத்துவிளக்கெரிய) ''நம்மைப்போலே ஊரார் இசையும் வேண்டாதே, விடிகிறது என்கிற பயமுமின்றிக்கே, இருள் தேடவும் வேண்டாதே, பகலை இரவாக்கவும் வேண்டாதே விளக்கிலே க்ருஷ்ணன் முகத்தைப்பார்த்துப் படுக்கைபடுத்துக்கொண்டு கிடக்கப்பெறுவதே இவளொருத்தி! இதென்ன ஐஶ்வர்யம்!'' என்கிறார்கள். F ''காணிலொட்டார்'', என்னும்படி தங்களுக்கு ஊரார் இசைவும் தேட்டமாய், ''கீழ்வானம் வெள்ளென்றது'' (8) என்கிற பயமும் நடந்து

---

A பெரியதிரு 6-8-5. B பெரியாழ்திரு 4-9-2. C திருவாய் 9-2-1. D திருவாய் 10-4-3. E நான்-திருவ 8. F நாச்-திரு 3-7.

A "நள்ளிருட்கண்" என்று—இருளும் தேட்டமாய், இரா பகலாம்படி விஶ்லேஷத்தோடே க்ருஷ்ணன் முகத்தில் விழிக்கவும் பெறாதே, தறைக்கிடை கிடப்பதாயிறே நாங்கள் படுகிற பாடு: சோரர்க்கு விளக்கும் நிலவும், பகையிறே. இவளுக்கு ப்ரஸித்$_3$த$_4$மான முறையுண்டாகையாலே விளக்கிலே படுக்கை படுக்கத் தட்டில்லையே; க்ருஷ்ணனைப் பற்றினவர்கள் அவனோடு ஸாத$_4$ர்ம்யம் பெறுமோபாதி, "தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய" (9) என்று உன்னுடைய மாளிகையோடு ஸாத$_4$ர்ம்யம் பெற்று, எங்களுடைய மாளிகைகளிலே உன்னைப் பற்றின நாங்களும் உன்னோடு ஸாத$_4$ர்ம்யம் பெற்று, க்ருஷ்ணனும் நாங்களும் எங்களகங்களும் இப்படி விளக்கும் படுக்கையுமானாலன்றோ உன்னுடைய அநுப$_4$வத்துக்கு ப்ரயோஜநமுள்ளதும், இது உனக்குப்பொறுப்பதும். இரா உண்ணாதார்க்கு உண்டார் அடியரன்றோ. (குத்துவிளக்கு) வேண்டினவிடத்திலே பேர்த்துவைக்கலாம் விளக்கு. நீயும் அவனுமாய்க் கண்வளரும்போது வேண்டுமிடங்களிலே எடுத்துவைத்து, அடிமை செய்கைக்கு நாங்களும் வேண்டாவோ? 1. "ரமமாணா வநே த்ரய:" என்னும்படியே. (எரிய) புறம்பே ஒரு கொடிவிளக்குப் புகரழிந்துகிடக்க ஒருநிலைவிளக்கு உள்ளேநின்று ப்ரகாஶியாநின்றது. (எரிய) அப்ரகாஶமுமாய், அந்யாதீ$_4$நப்ரகாஶமுமாயிருப்பதொரு விளக்குண்டாம்படி ஸ்வயம் ப்ரகாஶமுமாய், பரப்ரகாஶகமுமாய் நின்றெரிகிறதொரு விளக்கு. தன்னையுங் காட்டாதே, தன்னைப் புருஷகாரமாகக் கொண்டு காணக்கடவ அவனையுங்காட்டாதேயிருப்பதேயிவள்; 2. "பா$_4$ஸ்கரேண ப்ரபா$_4$ யதா$_2$" ப்ரபை$_4$ தன்னையுங்காட்டி ஆதி$_3$த்யனையுங்காட்டவற்றிறே. B ஆயர்பாடிக்கணிவிளக்கு ப்ரகாஶிக்கைக்கு இட்ட நிலைவிளக்கிறே இவள்தான். ஒன்று ஸ்வயம்ப்ரகாஶமுமாய் பரப்ரகாஶகமுமாயிருக்கும்; ஒன்று அப்ரகாஶமுமாய் அந்யாதீ$_4$நப்ரகாஶமுமாயிருக்கும்; தன்னைத்தான் காட்டாமையாலே அப்ரகாஶமென்கிறது; க்ருஷ்ணன் பாரதந்த்ரியத்தாலே அந்யாதீ$_4$நப்ரகாஶமென்கிறது; இவள் தன்னைக்காட்டுகையாலே ஸ்வயம்ப்ரகாஶமென்கிறது. ஸ்வாஶ்ரயத்தை விளக்குகையாலே பரப்ரகாஶகமென்கிறது: அவனுக்கு விளக்கானவளிறே இவள்தான். 3. "அதீவ ராமஶ்ஶோஶுபே$_4$" என்கிறவனுக்கும் ப்ரகாஶகையாய், ஔஜ்ஜ்வல்யாவஹையாயிறே இவளிருப்பது. C "திகழ்கின்றதிருமார்வில் திருமங்கைதன்னோடும்"

(கோட்டுக்கால் கட்டில்மேல்) இருள்தேட்டமன்றிக்கே ப்ரகாஶம்பொறுத்து நிலை விளக்கெரிகிறதுக்கு மேலே, எங்களைப்போலே ஶ்ரீப்$_3$ருந்தா$_3$வநமும் மணற்குன்றுந்தேடிப் போகவேண்டாதே உள்ளகத்துக்குள்ளே படுக்கை படுத்துக் கூச்சமறக் கிடக்கப்பெறுவதே! இதென்ன பா$_4$க்$_3$யப$_2$லந்தான் என்கிறார்கள். (கோட்டுக்கால்) ஆனைகளை உயிர்ப்பிடியே பிடித்து அவற்றின் கொம்புகளைப் பறித்து அவற்றை ஆதா$_4$ரமாகக் கடைந்து மடுத்துச்செய்த கட்டில். வீரபத்நியாகையாலே இப்படி சமைந்த கட்டிலிலொழிய மற்றையவற்றில் கண்ணுறங்காதாகாதே! 4. "க$_3$ஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வ்யாக்$_4$ரம் வாபி வராநநா!

---

A நாச். திரு 12-3. B நாச்-திரு 13-10. C திருவாய் 10-6-9.

நாஹாரயதி ஸந்த்ராஸம்'' பிராட்டிக்குக் காட்டிலே ஆனையுள்ளிட்டன கண்டால் அபூர்வதர்ஶநத்தாலே வந்த முகவிகாஸம் போக்கி, ஸ்த்ரீத்வ ப்ரயுக்தமான அச்சம் குடிபோய்த்து. அதுக்கடியென்னென்னில்: 1. ''பாஹூ ராமஸ்ய ஸம்ஶ்ரிதா'' தனக்கென்னத் தோள்படைக்கையாலே, உயிரோடே பிடித்துக் கொம்பை வாங்கவல்ல வீரனுடைய பத்நிக்கு அஞ்சவேண்டாவே. வீரபத்நிக்கு நாயகனோடே அணையும்போது கையில் நாண்தழும்பால் வந்த சரசரப்புக் கண்டதில்லையாகில் தங்களோட்டைப் பெண்களை அணைத்தாற்போலே இருக்கும். 2. ''பர்த்தாரம் பரிஷஸ்வஜே'' என்று பிராட்டி பெருமாளுடைய வீரக்கோலங்கண்ட பின்பிறே ஆண் என்று அணைத்தது; மற்றைப்போது 3. ''ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்'' என்றிறே இருப்பாள். ஜ்யாகிணகர்க்கஶமான தோள்களாலே அணைக்கவேணும்: 4. ''மாதங்க இவ ஸிம்ஹேந'' ராவணனாகிற ஆனையை உயிர்ப்பிடிபிடித்த ஸிம்ஹமிறே பெருமாள். 5. ''உபதாய புஜம் தஸ்ய லோகநாதஸ்ய'' என்னும்படியான தோள்களாய்த்து. 5. ''லோகநாதஸ்ய'' என்கிறது, 6. ''பதிம் விஶ்வஸ்ய'' என்கிறபடியே அவனுக்கும் தங்களுக்குமுண்டான முறையை உணர்ந்திருப்பார்க்கு பயப்படவேண்டாவென்றபடி. 7. 'ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந்'' வீரபத்நிகள்படி ப்ரபந்நர்படிபோலே. தந்தாமுக்கென்ன மிடுக்கற்றவர்களுக்கு அவனுடைய பலமே பலமாகவேண்டாவோ? ஆநுகூல்யத்தில் தாரதம்யங்கொண்டு த்யாகஸ்வீகாரம் பண்ணுவது அவன் அபரிபூர்ணனாகிலிறே: பரிபூர்ணனானவனுக்கு இவன் விலக்காமையிறே வேண்டுவது. இவன் பண்ணின ப்ராதிகூல்யத்துக்கு அபுத்திபூர்வகமான ப்ரபத்தி ப்ராயஶ்சித்தமாம்போது ஶரண்யன் நீர்மையே பலிக்கிறவித்தனையிறே; பலத்தோடே ஸந்திப்பிக்குமதிறே உபாயமாகிறது. ஸர்வஸ்வதாநம் பண்ணின வெறுவியனுக்கு நன்மை உண்டாம்போது வேறேயொருவன் அநுக்ரஹத்தாலே பலமாக வேண்டாவோ? இரண்டுக்ரியையாலுமன்றிக்கேயிருந்ததிறே பலம்; அத்தாலேயிறே, 8. ''ஆர்த்தோ வா யதிவா த்ருப்த:'' என்கிறது. அங்ஙனேயாகில் ப்ரபத்திதானென்னென்னில்: சைதந்யகார்யம் வேண்டுகையாலே. இவனுடைய ஸத்தை உபாயமாமன்றிறே ஸ்வீகாரமும் உபாயத்தில் புகுவது. 8. ''ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா'' — அவன் க்ருதாத்மாவாகையாலே இவன் பக்கல் பெற்றது கொண்டு தன் நீர்மையாலே ரக்ஷித்துவிடுமித்தனை. (கோட்டுக்கால்கட்டில்) குவலயாபீடத்தின் கொம்பைப் பறித்துக்கொண்டு போந்து சமைத்த கட்டில். 9. ''ஸக்ய: பஶ்யத'' என்று பார்த்துக்கொண்டு நின்ற பெண்களெல்லாம் கிடக்க, கோடுகள் கொண்டு கட்டில் சமைப்பது ஒக்கப் பட்டங்கட்டின ப்ரதாநமஹிஷியான இவளுக்கிறே; A கோட்டிடையாடிற்றும் இவளுக்கு; கொடுத்ததுமிவளுக்கு. B ''வேழமுமேழ்விடையும்.'' (கோட்டுக்கால்) C ''பின்னைதன் கேள்வன் தான் கண்டுகொண்டு'' என்று மேல் கிடக்கிற மிதுநத்தின் காலிலும், அம்மிதுநத்.

---

A திருவிருத்தம் 21. B பெரியாழ்திரு 1-5-3. C திருவாய் 10-4-3.

னைதச் சுமக்கிற காலிலே தலையை மடுக்கிறார்கள். க்ருஷ்ணன் படுக்கையின் காலைப் பற்றினவர்களிறே — பர்யங்கவித்3யையிற் சொல்லுகிற படுக்கையிற்காலிட்டேறுவார். ஆஸநத்தின் காலைக்கட்டின ஸர்ப்பம் ஆஸநத்தின் A ஆகத்திலே ஏறினாற்போலே. (கட்டில்) பெருவிலையனான பொன்னாலும் ரத்நத்தாலும் சமைத்தாலும், இடையராகையாலே "கட்டில்" என்று ஜாதிப்பேச்சு. (கட்டில்மேல்) ப்3ரஹ்மாதி3கள் வரவிட்ட B சிறுத்தொட்டில்களாகிலிறே C கிழிய உதைத்துப் பொகடுவது; படுக்கைப்பற்றில் படுக்கையாகையாலே ஆத3ரத்தோடே பேணிக்கொண்டு போரும்.

(மெத்தென்ற பஞ்சசயனம்) மெத்தென்ற பஞ்சாலே செய்த படுக்கை, (மெத்தென்ற) நாங்கள் ஆர்த்தைகளாய் வந்து கிடக்க, படுக்கையின் உள்மாநம் புறமாநங்கொண்டாடிக் கண்ணுறங்குவதே! (மெத்தென்ற) நாங்கள் புறம்பே நின்றால் படுக்கை கடி2னமாக வேண்டாவோ? அவனோடு கிலாய்த்தபோது சீறுவது அவன் படுக்கையையிறே; D "தம் பாம்புபோல்". E "சரணோசரண்" என்று திருவநந்தாழ்வானைப் பெரியாழ்வாரோபாதியிறே நினைத்திருப்பது. (பஞ்சசயனம்) பஞ்சவித4மான ஶயநம். ஶீதபரிஹாரமுமாய், உஷ்ணபரிஹாரமுமாய், த3ர்ஶநீயமுமாய், பரிமளவத்துமாய், விஸ்தாரபாண்ட3ரோபேதமுமாயிருக்கை.

(சயனத்தின்மேலேறி) நாங்கள்உள்ளுப் புகுரப்பெறாதே புறம்பே நின்றால், படுக்கை காலிடவொண்ணாதபடி உறுத்தவேண்டாவோ? புத்ராதி3கள் துகையாத படுக்கை பித்ராதி3களுக்கு அஸஹ்யமானாற்போலே, நாங்கள் துகையாத படுக்கை F வெம்பள்ளியாகாதே தண்பள்ளியாவதே! அவர்களுக்கு நெருப்பு நீராம் ஔஷத4ம் உன்கையிலேயுண்டே. (மேலேறி) நாங்களும் மிதித்தேறினாலன்றோ நீ ஏறுவது. 1. "பாதே3நாத்4யாரோஹதி" என்று ஶ்ரிய:பதியினுடைய பர்யங்கவித்3யையிற் சொல்லுகிறபடியே குறைவற்ற படுக்கையிலே சென்றேறக்கடவன் இந்த முக்தாத்மா; அவன் 2. "கோஸி" என்னக்கடவன். இவன் 2. "அஹம் ப்3ரஹ்மாஸ்மி" என்னக்கடவன். 3. "யஸ்யாஸ்மி" என்கிறவன் 2. "ப்3ரஹ்மாஸ்மி" என்கிறது—'ப்3ரஹ்மப்ரகாரபூ4தன் நான்' என்றபடி. இவர்களும் அத்தையிறே கணிசிக்கிறது. (ஏறி) G வெள்ளை வெள்ளத்தின்மேலொருபாம்பை மெத்தையாக விரித்துறங்குகிறவன், 4. "நாக3பர்யங்கமுத்ஸ்ருஜ்ய" இங்கேற வரவிட்ட படுக்கை, இங்கே தனக்கும் முற்பட வந்த விஸ்மயத்தைக்கண்டு ஆஶ்சர்யத்தாலே ஸ்திமிதனாய் அதிலேயேறின வருத்தத்தைச் சொல்லுகிறது.

இப்படிக்கொத்த படுக்கையிலே துகைக்கைக்கு நித3ாநஞ் சொல்லுகிறார்கள் — (கொத்தலர் பூங்குழல் நப்பின்னை) திருக்குழலில் ஸ்பர்ஶத்தால் கொத்துக்கொத்தாக அலராநின்றுள்ள பூவையுடைத்தான குழலையுடைய நப்பின்னை. கொத்தாகப் பறித்துக் குழலிலே சூட்டினால் தன்னிலத்திற்போலே குழலிலேயிருந்து செவ்வி

---

A நான் திருவ 74, B பெரியாழ் திரு 1-3-1, C பெரியாழ் திரு 1-1-9 D நாச் திரு 10-3
E திருவாய் 5-10-11, F திருவாய் 9-9-4, G பெரியாழ் திரு 5-1-7.

மாருமல் அலருமாய்த்து. கொம்பினின்றும் போந்து குழலிலேயிறே அலருகிறது. இவள் மயிரில் பூ அலருகைக்குக் காலத்தோபாதியாகாதே, 1. ''கால: கலயதா மஹம்'' என்றவனுடைய ஸ்பர்ஶம். (கொத்தலர்) ஒரு ப்ரணயகலஹத்திலே எடுப்பும் சாய்ப்புமாக மஹாப4ாரதம் நடவாநின்ருல், பூ அலராதொழியும்படி எங்ஙனே? (பூங்குழல்) ''மலரிட்டு நாம்முடியோம்''(2) என்று எங்கள் குழல் பூவும்மாறி செவ்விப்பூவை வைக்கிலும் தொங்காதே, தொங்கினபூ விரஹாக்3நியாலே சருகாம்படியிருக்க, நீ முடிப்பது எங்கள்தலையில் பூப்பொறுத்தாலன்றோ? இவளை இழவுசொல்லும்போது தங்களோடே கூட்டுவர்கள்; பேறு சொல்லும்போது அவனோடே கூட்டுவர்கள். அவளுக்கு இரண்டு தலையும் விடவொண்ணுது. (நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த) (பூங்குழல் நப்பின்னை) விலக்ஷணமாய் நிரதிஶயமான குழலையுடையவள். கேசவனையும் பிச்சேற்றவல்ல குழலையுடையவள். இவன் குழலை வாருகைக்கு அக்காக்கை வருவது A ''பின்னை மணாளனை'' என்று இவளோட்டை ஸம்ப3ந்த4ம் சொன்னுலாய்த்து.

(கொங்கைமேல் வைத்துக்கிடந்த) நப்பின்னைப் பிராட்டியினுடைய திருமுலைத் தடத்தைத் தன்மேலே வைத்துக்கிடந்த என்னுதல்; கொங்கைமேலே தன்னை வைத்துக்கிடந்த என்னுதல், 2. ''ந ஶாஸ்த்ரம் நைவ ச க்ரம:'' என்றிறே ப்ரணயமிருப்பது; 3. ''பர்யாயேண ப்ரஸுப்த:'' என்னக்கடவதிறே. B ''மலராள் தனத்துள்ளான்'' பர்வதபார்ஶ்வத்தைப்பற்றி ஜீவிப்பாரைப்போலே. (கிடந்த) திறக்கக் கணிசித்தவன் நஞ்சுண்டாரைப்போலே பரவஶனுய் மயங்கிக்கிடக்கிறபடி. (மலர் மார்பா) அவன் அண்டைகொண்ட அரணும் இவள் ஜீவநமும். முலையைப்பற்றி அவன் கிடக்கும், மார்பைப்பற்றி இவள் கிடக்கும். இவள் முலைப்பரப்பெல்லாம் ஒரு மூலைக்குப்போராதபடி அகன்ற மார்பையுடையவனே! C பெரியவரை மார்பிறே அது. D ''முற்ருராவனமுலையாள்... அகலத்துள்ளிருப்பாள்'' என்னக்கடவதிறே.

(மலர்மார்பா) திருமுலைத்தடங்களுறுத்தும்படி அணைத்த ஸ்பர்ஶஸுக2த்தாலே பூ அலருமாபோலே விகஸிதமான மார்பை உடையவனே! 4. ''ஸதை3கரூபரூபாய'' என்னச்செய்தே ''மலர்மார்பா'' என்கிறதிறே இவ்விகாரத்தோடு விரோதி4யாமையாலே. கர்மநிப3ந்த4நமாய் வரும் வ்ருத்3தி4ஹ்ராஸங்கள் தோ3ஷாவஹங்களாகையாலே அவையில்லையென்கிறதித்தனையிறே. நித்யாநபாயிநியாயிருக்கிறவளுடைய ஸம்ஶ்லேஷத்தால்வரும் விகாரம் இல்லையென்கிறதன்றே, ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்தில் அவிகாரித்வம் அவத்3யமித்தனையிறே, இவ்விகாரமுண்டாகுல் கல்யாணகு3ணங்களிலேயாமித்தனையிறே. E ''மலராது குவியாது'' என்கிறவிடம் ஸ்வரூபமிறே. யசோதைப்பிராட்டி கட்டுக்கு அலருகிற மார்பு, இவளுடைய ஸ்தநப3ந்த4த்துக்கு அலரச்சொல்லவேணுமோ? F ''புடைக்கலந்தானை'' G ''வரைநெடுந்தோள் மூர்த்தி கண்டீர்'' இவளோடணைந்த பின்பு இவ்விகாஸம் பிறவாதாகில் இவர்களுக்குத்

A பெரியாழ் திரு 2-5-1, B மூன்-திருவ 3, C மூன்-திருவ 55, D திருநெடு 19.
E திருவாய் 3-1-8, F திருவிருத்தம் 86, G பெரியதிரு 4-4-5.

தான் என்செய்ய? அவனுக்கு விகாஸத்தைப் பண்ணி ஸ்வரூபம் பெறவிருக்கிறவர்களிறே இவர்கள். 1. "நித்யகிங்கர:" A "ஓர் குற்றேவல்"; அவனை விகஸிப்பிக்கை இவர்களுக்கு ஸ்வரூபமாயிறே இருப்பது. ஶேஷியை விகஸிப்பிக்கும்போது ஶேஷவஸ்துவேணும்; இல்லையாகில் ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு வஸ்துவுண்டாய் விகஸிப்பிக்கிறதன்றே. இச்சா2நுகு3ணமாக விளையுமது சைதந்யப்ரயுக்தமிறே.

(வாய்திறவாய்) அவன் ஊமத்தங்காய் தின்றுகிடக்க இவர்கள்தான் ஆரை யெழுப்புகிறது? (வாய்திறவாய்) கிடந்த விடத்தே கிடந்து உன் க3ம்பீ4ரமான மிடற்றோசை கேட்கும்படி ஒருவார்த்தை சொல்லாய். 2. "அநந்யா" என்கிறபடியே ஏகத்3ரவ்யம்போலே இருக்கிறவர்களைப் புறப்படச் சொல்லுவார் ராவணாதி3களோ பாதியிறே; ஆகையாலே "எழுந்திராய்" என்கிறிலர்கள். (வாய்திறவாய்) 3. "ஆர்த்தோ வா யதி3வா த்3ருப்த:" என்று சொல்லி வைத்து, உன்னாலல்லது செல்லாதிருக்கிற எங்களுக்கு ஒருவார்த்தையும் அரிதாம்படி பேசாதே கிடக்கிறதென்? திறக்கிறவர்களையும் திறக்கவொட்டாதே, நீயும் முலைக்கீழே அமுக்குண்டால், கிடந்த விடத்தே கிடந்து 4. "மாஶுச:" என்னவுமரிதோ? (மலர்மார்பா வாய்திறவாய்) மார்பை அவனுக்குக்கொடுத்தால், பேச்சை எங்களுக்குத் தந்தாலாகாதோ? B "கொங்கைமேல்" இத்யாதி3. மார்பது முலையானால் வாயதுமுத்தோ? "வாய்திறவாய்" என்றத்தைக்கேட்டு, "போர நொந்தார்களாகாதே" என்று அவன் மறுமாற்றம் சொல்லப்புக; ஆர்த்த விஷயத்தில் நம்மில் முற்பாடனாகவொண்ணாதென்று, கண்ணாலே "வாய்வாய்" என்று கழுத்தைக்கட்டி அமுக்கிக்கொண்டு கிடந்தாள் — (மைத்தடங்கண்ணினாய்) என்கிறார்கள். நாம் ஆரேனையுமின்னாதாகிறதென், நம்பரிகரம் நமக்குதவாதே கண்ணாலே வாயை நெரியாநிற்க? — (மைத்தடங்கண்ணினாய்) உன்னுடைய கண்ணில்புகரும் பெருமையும் எங்கள் பேற்றுக்கு உடலென்றிருந்தோம், அது இழவுக்கு உடலாவதே! (மைத்தடங்கண்ணினாய்) "மையிட்டெழுதோம்" (2) என்றிருக்கிற எங்களையும் மையிடப்பண்ணினாலன்றோ நீ கண்ணுக்கு மையிடுவது. இரண்டு கண்ணுக்கும் ஒரு மையிறே யிடுவது. C மைப்படி மேனியிறே. (மைத்தடங்கண்) 5. "ந ஜீவேயம் க்ஷணமபி" என்னப்பண்ணுங்கண்ணிறே அவனை. (தடங்கண்) இக்கடலைக் கரை கண்டாலிறே அவன் நம்மைப்பார்ப்பது.

(நீ யுன்மணாளனை) அவன் நினைவே நினைவாயிருக்கும் நீ; உன் நினைவே நினைவாயிருக்கும் அவன். அவனைப் பெறுகைக்கடியான நீ, உன் புருவம் நெறித்தவிடத்திலே குடநீர் வார்க்கும்படி ப4வ்யனாயிருக்கிறவனை விலக்கக்கடவையோ? உன்னுடைய போ4க்3யதையிலே அவன் துவக்குண்கிறது உனக்கு இஷ்ட விநியோக3ார்ஹனாய் எங்களுக்குப் பெறுகைக்குடலென்றிருந்தோம். இனி உனக்கே ஶேஷமென்றிருக்கிறோம். பண்டு, இருவருங்கூட, தங்களுக்கு ஸ்வம் என்றிருக்கையாலே கூடச் சொல்லிப்போந்தார்கள்; இப்போது, அந்யத்வம்தோற்ற ப்ரணயரோஷத்தாலே

---

A நாச்—திரு 3—9. B நாச்—திரு 8—7. C திருவிருத்தம் 94.

வேறிடுகிறார்கள். பேறு அவளாலேயானால் இழவும் அவளாலேயாகத்தட்டில்லையிறே. (உன்மணாளனை) 1. "லோகப$_4$ர்த்தாரம்" என்கிற நாட்டுப்பொதுவைத் தளித்து பு$_4$ஜிக்கக்கடவையோ? 2. "கோ$_3$பீஜநவல்லப$_4$:" என்று விருதுபிடிக்கிற ஊர்ப்பொதுவை உன்னாலே உண்டறுக்கலாமோ? (உன்மணாளனை) இவளையிட்டிறே அவனை இவர்கள் அறிவது. A. "என்திருமகள்சேர் மார்பனே" B "கோல மலர்ப்பாவைக்கன்பாகிய". அவனும் அவ்வழியாலேயிறே உகப்பது.

(எத்தனைபோதும் துயிலெழ வொட்டாய்காண்) ஒரு க்ஷணமும் அவனை எழுந்திருக்கவொட்டுகிறிலை; ஸம்போ$_4$க$_3$வர்த்த$_4$கமாகக் கட்டின கை நெகிழ்க்கிலும் உடம்பு வெளுப்புதி! கலவிக்குடலான வ்யாபாரத்தையும் பிரிவுக்குடலென்று பிழைக்கமாட்டாய். புணர்ச்சிக்காகப் பிரியிலும் தடுப்பது வளைப்பதாவுதி. இவர்கள் புகுந்தாலும் போ$_4$க$_3$த்துக்கு வர்த்த$_4$கரென்றறிகிறிலை. இவர்கள் இச்சேர்த்தியிலே கிஞ்சித்கரிக்க ஆசைப்பட்டிறே வருகிறது. இருவர்க்கு ஒருவரடிமை செய்வதாகவிறே உத்தரார்த்த$_4$த்தில் சொல்லுகிறது, கொண்டு புறப்பட்டாளாகில் உத்தரார்த்த$_4$த்திற்படியே அடிமை செய்கைக்குடலாகிறது; உள்ளே கிடந்து தாழ்த்தாளாகில் பூர்வார்த்த$_4$த்திற்படியே புருஷகாரத்துக்குடலாகிறது.

(எத்தனையேனும் பிரிவாற்றகில்லாயால்) ஒருக்ஷணம் பிரியில் புறம்புநிற்கிற நாங்கள் பட்டது படாநின்றாய். நாங்கள் அகலநின்று படுகிறதெல்லாம் கூடியிருந்து படாநின்றாயீ! நெகிழ்த்து அணைக்கில் பத்துமாஸம் பிரிந்தவள்பட்டது படாநின்றாய். இவ்விடத்தில் இவள் வைலக்ஷண்யஞ் சொல்லுகிறது. (ஆற்றகில்லாயால்) உனக்காகவன்றோ அவன் புறப்படமாட்டாதொழிகிறது: பிரியில் நீ பிழையாய். உன்னையிழக்கில் ஒன்றாகமுடியும்; உன்னையிழவாமைக்கு எங்களையும் விட்டு உன்னோடே பணிபோரும்படியாக்குவதே.

(தத்துவம்) இது உண்மை சொல்லுகிறோம்; எங்களாற்றாமையாலே கண்ணாஞ்சுழலையிட்டுச் சொல்லுகிறோமல்லோம். (தகவன்று) இதுமெய்யே நீர்மைக்கு உடலல்ல, த$_4$ர்மமன்று. (தத்துவம்தகவன்று) ஸத்யமே க்ருபையன்று. மெய்யே உனக்கு க்ருபையில்லை என்னுதல்; தகவு தத்துவமன்றென்னுதல்; உனக்குநீர்மையுண்டென்றுசொல்லுகிறது பரமார்த்த$_2$மன்று, 3. "ந கஶ்சிந்நாபராத்$_4$யதி"என்னலாவது அவன் பரிகரம் நலிகிறபோதோ? உன்பரிகரம் அவனாலே நோவுபடப் பார்த்திருக்குமத்தனையோ?. 4. "க்ஷிபாமி" என்றவனோடு 3. "ந கஶ்சிந்நாபராத்$_4$யதி" என்ற உன்னோடு வாசியில்லை. 5. அஹத்வா ராவணம் ஸங்க்$_2$யே" என்று கொன்றல்லது படைவீட்டில் புகோம் என்றவனோடு, அவன்தனக்கே, 6. "மித்ரமௌபயிகம்" என்ற உன்னோடு வாசியில்லை என்றிருக்கிறோம். 7. "பதிம் விஶ்வஸ்ய" என்று அவனை நினைத்திருக்குமோபாதி, 8. "ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தாநாம்" என்கிற முதன்மையேயுள்ளதென்று நினைத்திருக்கிறோம்; இவளுக்குக் குறைசொல்லுகையாவது அவனோடொக்குமென்னுமித்தனையிறே. நீர்மையால் விஞ்சினளை

---

A திருவாய் 7-2-7. B திருவாய் 10-10-7.

"நீர்மையாலே குறைந்தவர்களோடொப்பர்கள்" என்னுமித்தனையிறே குற்றம். 1. "த்விதா பஜ்யேயம்" என்றிக்குமவனோடு, 2. "ஶரணம் கத:" என்றிருந்தவனோடு வாசியறக் கைக்கொள்வேனென்றவனை கபோதஸ்தாநீயனுக்கினுள், கபோதியில் கெட்ட பிராட்டியில்லையிறே; அரைக்ஷணம் தாழ்த்தது பொறுக்கமாட்டாமல் சொல்லுகிறவையிறே இவை.

அன்றிக்கே, (தத்துவமன்று, தகவுமன்று) உன்னுடைய ஸ்வரூபத்துக்கும் போருமதன்று, ஸ்வபாவத்துக்கும் சேருமதன்று. புருஷகாரமாய்நின்று சேர்ப்பாருடைய ஸ்வரூபத்துக்கும் ஸ்வபாவத்துக்கும் சேருமதோ இது 3. "அகிலஜகந்மாதரம்" என்கிறதுக்கும் சேராது, 3. "அஶரண்யஶரண்யாம்" என்கிறதுக்குஞ் சேராது, 3. "தேவதேவதிவ்யமஹிஷீம்" என்று கட்டின பட்டத்துக்குச் சேருமித்தனை....19.

## ஈராயிரப்படி — பத்தொன்பதாம் பாட்டு

அவ:— பத்தொன்பதாம் பாட்டு. இவள் திறக்கப்புக, "நம்முடையார்க்கு இவள் முற்பட்டாளாகவொண்ணாது" என்று இவளைத் திறக்கவொட்டாதே கட்டிக்கொடு கிடந்து, அந்த ஸுகஸ்பர்ஶத்தால் மறந்து உறங்குகிறவனை எழுப்பி, மறுமாற்றம் கேளாமை பின்பும் அவனை உணர்த்துகைக்காகவும் அவளை எழுப்புகிறார்கள்.

(குத்து விளக்கெரிய) "நமக்குப் போலே இருள் தேட வேண்டாதே பகலையும் இரவாக்கிக்கொண்டு விளக்கெரியக் கிடக்கப் பெறுவதே இவள்!" என்கை. (கோட்டுக்கால்) குவலயாபீடத்தைக்கொன்று அதன் கொம்பாலே செய்த கால்களையுடைய கட்டில்: வீரபத்நியாகையாலே மற்றையவற்றில் கண்ணுறங்காது. (கட்டில்) ஜாதிப்பேச்சு.

(மெத்தென்ற) ஆர்த்தராயலைந்து கிடக்க, படுக்கையில் உள்மானம் புறமானம் கொண்டாடிக் கண் உறங்குவதே! இவர்களுக்கு A மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியிறே: அவனுக்கு நெரும்பு நீராம் ஔஷதமுண்டிறே. (பஞ்ச சயனத்தின் மேலேறி) 4. "பாதேநாத்யாரோஹதி" என்று நாங்கள் மிதித்து ஏறினுலன்றோ நீ படுக்கையிலேறுவது என்கை. அங்கேறில் அவன் 5. "கோஸி" என்ன, இவன் 5. "அஹம் ப்ரஹ்மாஸ்மி" என்னும்; "ப்ரஹ்மம் நான்" என்னப் போமோ? என்னில் 6. "பரவாநஸ்மி" என்னுமாபோலே ப்ரகாரமான ப்ரஹ்மம் என்கை. 7. "ரமமாணா வநே த்ரய:" என்று ஆசைப்படுகிறார்கள்.

(கொத்தலர் பூங்குழல்) பெரிய திருநாளாய்ச் செல்லாநிற்க, குறியழியாதிராதிறே; ஒரு மஹாபாரதத்தாலே அலருகை. காலம் அலர்த்துமாபோலே அவனுடைய ஸ்பர்ஶம். "மலரிட்டு நாம்முடியோம்" (2) என்றது மறந்தாயோ? இழவு சொல்லும்போது தங்களோடே கூட்டுவர்கள்; பேறு சொல்லும்போது அவனோடே கூட்டுவர்கள். (கொத்தலர் பூங்குழல்) B "வாசம் செய் பூங்குழலாள்"

---

A திருவாய் 9-9-4, B திருவாய் 10-10-2.

என்னுமாபோலே. (கொங்கைமேலித்யாதி$_3$) கொங்கையைத் தன்மேலே வைத்துக் கிடத்தல், கொங்கையின் மேலே தன்னை வைத்துக் கிடத்தல். 1. "ந ஶாஸ்த்ரம் நைவ ச க்ரம:" 2. 'பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச" A "மலராள்தனத்துள்ளான்" (மலர்மார்பா) அவனுக்கு உஜ்ஜீவனம். (வாய்திறவாய்) 3. "ஆர்த்தோ வா யதி$_3$ வா த்$_3$ருப்த:" என்று சொல்லிவைத்துப் பேசாதே கிடக்குமித்தனையோ? இருவரும் கூடினபின்பு த்$_3$வயத்தில் உத்தரார்த்த$_4$ம் போலே அனுப$_4$விக்கு மித்தனை. அங்கொன்றும் காணுமை — (மைத்தடங்கண்ணினாய்) என்கிறார்கள். இவன் வாய் திறக்கப்போக, அவள் "நானன்றோ" என்ன, பேசாதே கிடந்தான். நீ கண்ணாலே வலக்க வேணுமா? — (தடங்கண்ணி) இக்கடலைக் கரைகண்டாலிறே நம்மைப் பார்ப்பது. 4. "ந ஜீவேயம் க்ஷணமபி"யிறே. உன்னாலே அவனைப்பெறுகை தவிர்ந்து, இப்போது மற்றைப்படி செய்கை யாய்த்தோ? (உன்மணாளனை) 5. "கோ$_3$பீஜன் வல்லப$_4$" னென்கை. இனி உனக்கே ஶேஷமென்றிருக்கிறோம்.

(எத்தனை போதும் துயிலெழவொட்டாய்காண்) கட்டின கை நெகிழில் பிழைக்க மாட்டாய். புணர்ச்சிக்காகப் பிரியவும் பயப்படுவுதி. (எத்தனையேலு மித்யாதி$_3$) B "அகலகில்லேனிறையும்" என்று நீ நில்லாநின்றாய்; உனக்காக வன்றோ அவன் புறப்படமாட்டாதொழிகிறது; பிரியில் நீ பிழையாய், உன்னை இழக்கவொண்ணாதென்று.

(தத்துவம்) ஸத்யம்; (அன்று தகவு) தகவன்று என்று எங்கள்ஆற்றாமையாலே சொல்லுகிறோமன்று; மெய்யே த$_4$ர்மமன்று. தத்துவமன்று — ஸ்வரூபமன்று. 19.

## நாலாயிரப்படி — பத்தொன்பதாம் பாட்டு

அவ:— பத்தொன்பதாம் பாட்டு. இவள் திறக்கப்புக, 'நம்முடையார்க்கு இவள் முற்பட்டாளாகவொண்ணாது' என்று இவளைத் திறக்க வொட்டாதே மல்கட்டாகக்கட்டிப் படுக்கையிலே விழவிட்டுக் கட்டிக்கொண்டு கிடக்க, மறுமாற்றம் கேளாமையாலே பின்னையும் க்ருஷ்ணனை உணர்த்துகைக்காக 'நீ திறக்கவேணும்' என்கிறார்கள். இத்தால் ஆஶ்ரிதர்க்கு மாறிமாறிப் பரிகைக்கு இருவருமுண்டென்கை. C "என்னடியாரது செய்யார்" என்னும் அவன். இவள் 6. "ந கஶ்சிந்நாபராத்$_4$யதி" என்னும். 'அவர்கள் உள்ளு பிறந்த வ்யாபாரம் அறிந்தபடி எங்ஙனே?' என்னில்; ஸகோ$_3$த்ரிகளாகையாலே அறிவர்களிறே.

வ்யா:— (குத்துவிளக்கெரிய) நாம் புறம்பே பனியிலே தரையிலே நிற்க, ஊராரிசைவும் வேண்டாதே, 'கீழ்வானம் வெள்ளென்றது' (8) என்கிற ப$_4$யமுமின்றிக்கே இருட்டுத் தேடவும் வேண்டாதே, பகலையும் இரவாக்கிக்கொண்டு விளக்கெரியப் படுக்கையிலே கிடக்கப் பெறுவதே! இவள் தன்னை விளக்காகக்கொண்டு

A மூன்-திருவ 3, B திருவாய் 6-10-10, C பெரியாழ் திரு 4-9-2.

ப்ரகாஶிப்பதொரு நிலைவிளக்குண்டாவது என்றுமாம். அப்போது எம்பெருமானுக்குங் கூட அவள் விளக்காயிருக்கிறபடி. 1. "அதீவ ராமஶ் ஶுஶுபே4". (கோட்டுக்கால்) குவலயாபீட3த்தைக் கொன்று அதின் கொம்பாலே செய்த கட்டில். வீரபத்நியாகையாலே மற்றையவற்றில் கண் உறங்காது. மாணிக்கத்தாலே செய்யிலும் பள்ளிக்கட்டிலென்னுமத்தனையிறே. 2. "நாஹாரயதி ஸந்த்ராஸம்" ஆனையுள்ளிட்டன காட்டிலே கண்டால் முக2விகாஸம் பிறக்குமத்தனை. ஸ்த்ரீத்வப்ரயுக்தமான அச்சமில்லை. அதுக்கடி தனக்கென்னத் தோள் படைக்கையாலே. இத்தால் 3. "பதிம் விஶ்வஸ்ய" இத்யாதி3யில் ஓதிக்கிடக்கிறபடியே அவனுக்கும் தங்களுக்கும் உண்டான முறையை உணர்ந்திருப்பார்க்கு ஸ்வரூபப்ரயுக்தமான ப4யமில்லை என்கை. வீரபத்நிகளுக்குத் தோளில் சரசரப்புக்காணுவிடில் தங்களோட்டைப் பெண்களைத் தழுவினத்தோடொக்கும். 4. "ஜ்யாகிண கர்க்கஶை:" 5. "உபதா4ய பு4ஜம் தஸ்ய லோகநாத2ஸ்ய ஸத்க்ருதம்" 6. "பா3ஹூ ராமஸ்ய ஸம்ஶ்ரிதா" உயிரோடே பிடித்துக் கொம்பை வாங்கும் வீரனுடைய பத்நியிறே. வீரபத்நிகள்படி ப்ரபந்நர்படி. 7. "ஆர்த்தோ வா யதி3வா த்3ருப்த:" என்னும்போது அவன்ப2லமே உபாயமாக வேண்டாவோ? பு3த்3தி4பூர்வகமாகப் பண்ணின ப்ராதிகூல்யத்துக்கு அபு3த்3தி4பூர்வகமாகப் பண்ணின ப்ரபத்தி ப்ராயஶ்சித்தமாம்போது ஶரண்யன் நீர்மையே ப2லிக்கிறதத்தனை. ப2லத்தோடே ஸந்தி4ப்பிக்குமதன்றோ உபாயமாவது. அங்ஙனன்றேயாகில் ப்ரபத்தி வேண்டுவானென்? என்னில்; சைதந்யகார்யம் வேண்டுகையாலே. ப்ரபந்நனுக்கும் தத்ஸ்வீகாராதி3களடைய உபாயமாக வேணுமோ? அங்ஙனன்றேயாகில் இவன் தன்னுடைய ஸத்தை உபாயமாகவேணுமே. ஸர்வஸ்வதா3நமும் தூற்றிலே நெருப்பிடுகையும் ஒத்தாப்போலே இங்கும், 7. "ஆர்த்தோ வா யதி3வா த்3ருப்த:" என்கிறது. கட்டில் ஜாதிப்பேச்சு.

(மெத்தென்ற) "நாங்கள் ஆர்த்தைகளாய் வந்துகிடக்க, படுக்கையில் உள்மானம் புறமானம் கொண்டாடிக் கண்ணுறங்குவதே!" என்கிறார்கள். இவர்களுக்கு A மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியிறே. அவளுக்கு நெருப்பு நீராம் ஔஷத4முண்டிறே. (மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேலேறி) பஞ்சவித4மான ஶயநத்தின் மேலேறி. அதாவது — உஷ்ணபரிஹாரமும், ஶீதபரிஹாரமும், த3ர்ஶநீயமாகையும், மெத்தென்றிருக்கையும், பரம்பியிருக்கையும். அஞ்சுருவிட்டுப் பண்ணின படுக்கை என்றுமாம். அழகு, குளிர்ச்சி, மார்த்த3வம், பரிமளம், தா4வள்யம். பஞ்சாலே செய்த என்றுமாம். (மேலேறி) 8. "பாதே3நாத்4யாரோஹதி" என்று நாங்கள் மிதித்தேறினாலன்றோ நீ அப்படுக்கையை ஏறுவதென்கை. அங்கேறினால் அவன் 9. "கோஸி" என்னில்; இவன் 9. "அஹம் ப்3ரஹ்மாஸ்மி" என்னக்கடவன். 'ப்3ரஹ்மம் நானென்னப்போருமோ!' என்னில் 10. "பரவாநஸ்மி" என்னுமாபோலே ப்ரகாரமான ப்3ரஹ்மமென்கை. **11.** "ரமமாணா வநே த்ரய:"என்று ஆசைப்படுகிறார்கள். **12.** "யஸ்ய ஶ்ரீருபப3ர்ஹணம்" என்று பர்யங்கவித்3யையிலே சொல்லுகிறபடியே குறையற்றது; இனி மிதித்தேறுவார் குறை.

---

A திருவாய் 9-9-4

(கொத்தலர் பூங்குழல்நப்பின்னை) இவளோட்டை ஸ்பர்ஶத்தாலே கொத்துக் கொத்தாக அலருகிற பூவையும் குழலையுமுடைய நப்பின்னைப் பிராட்டி. (கொத்தலர் பூங்குழல்) பெரிய திருநாளாய்ச் செல்லாநிற்கக் குறி அழியாதிராதிறே. ஒரு மஹாப4ாரதத்திலே அலருகை. காலம் அலர்த்துமாபோலே அவனுடைய ஸ்பர்ஶத்தாலே அலருகை என்னவுமாம்; இங்குத்தைக்குத் திருப்பூமண்டபம் செய்வானும் தானேயிறே. "மலரிட்டு நாம் முடியோம்" (2) என்றத்தை மறந்தாயோ? இழவு சொல்லும்போது தங்களோடே கூட்டுவர்கள். பேறு சொல்லும்போது அவனோடு கூட்டுவர்கள். அவளுக்கு இரண்டு தலையையும் விடவொண்ணாது. (கொத்தலர் பூங்குழல்) A "வாசம்செய்பூங்குழலாள்" என்னுமாபோலே.

(கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா) கொங்கையைத் தன்மேலே வைத்துக்கிடந்த என்னுதல், கொங்கைமேலே தன்னை வைத்துக்கிடந்த என்னுதல். **1. "ந ஶாஸ்த்ரம் நைவ ச க்ரம:" 2.** "பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச" B "மலராள் தனத்துள்ளான்" மலைப்பார்ஶ்வத்தைப்பற்றி ஜீவிப்பாரைப்போலே. (மலர்மார்பா) அவளுக்கு ஜீவநம். த்3வந்த்3வம் பரஸ்பராஶ்ரயம். (மலர்மார்பா) திருமுலைத்தடங்கள் உறுத்துகையாலே அகன்றிருந்துள்ள மார்பு. அப்போது **3. "ஸதை3கரூபரூபாய"** என்பதுக்குக் குற்றமன்றோ? என்னில், ஹேயகு3ணங்களில்லையென்கை. இது கல்யாணகு3ணங்களிலே புகும். (வாய்திறவாய்) **4. "ஆர்த்தோ வா யதி3வா த்3ருப்த:"** என்று சொல்லிவைத்துப் பேசாதேகிடக்கு மத்தனையோ? அவன் ஊமத்தங்காய் தின்று கிடக்க, இவர்கள் ஆரை எழுப்புகிறது? (வாய் திறவாய்) இருவரும் கூடினபின்பு த்3வயத்தில் உத்தரார்த்த4ம்போலே அநுப4விக்கப் புகுருங்கோள் என்னுமித்தனை. நம்மைப் புறப்படாயென்னில் ராவணனைப்போலேயாவீர்கள். C "அலர்மேல் மங்கையுறை மார்பா"

அங்கொன்றும் காணாமையாலே (மைத்தடங் கண்ணினாய்) என்கிறார்கள். இவன் வாய் திறக்கப்புக்கவாறே, 'இவர்கள் நம்மையொழிய இவனை யெழுப்புவதே' என்று அவனைக் கண்ணாலே 'வாய்வாய்' என்ன, பேசாதே கிடந்தான். **5. "ஆக்2யாதி ஹ்ருத3யம் ஹ்ருத3ா".** "நாம் ஆரேனையுமின்னாதாகிறதென்? நம் பரிகரம் நமக்கு உதவுகிறதில்லை" என்கிறார்கள். இவள் விலக்கவேணுமோ? இக்கண்ணுண்டாகவமையாதோ? இக்கடலைக் கரைகண்டாலிறே நம் அநீதியை அவன் பார்ப்பது. D "அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்" E "மணநோக்கமுண்டான்" **6. "ந ஜீவேயம் க்ஷணமபி"** என்னப் பண்ணுமவையிறே. 'மையிட்டெழுதோம்' (2) என்றவர்களையும் உன்படி ஆக்க வேண்டாவோ? உன்னாலே அவனைப் பெறுகை தவிர்ந்து மற்றைப்படி செய்கையாய்த்த. (உன்மணாளனை) **7. 'கோ3பீஜநவல்லப4:"** என்கை. **8. "லோக ப4ர்த்தாரம்"** என்கை தவிர்ந்து உனக்கு விலையும் ஒத்தியும் செல்லும்படியிருக்கிற இருப்பெல்லாம் எங்களுக்கு உடலென்றிருந்தோம். இனி உனக்கே ஶேஷமென்றிருக்கிறோம்; பண்டு இருவரையும் தங்கள் ஸ்வம் என்றிருக்கையாலே அவனுடைய நீயும் உன்னுடைய அவனும் என்றிருந்தோம். இனி உன்னுடைய மணாளன் என்று கிலாய்க்கிறார்கள்.

---

A திருவாய் 10-10-2, B மூன்-திருவ 3, C திருவாய் 6-10-10, D திருவாய் 3-10-8
E பெரிய திரு 8-10-1.

(எத்தனை போதும் துயிலெழவொட்டாய் காண்) கட்டின கை நெகிழ்க்கில் பிழைக்க மாட்டாய்; புணர்ச்சிக்காகப் பிரியவும் பயப்படுவுதி. (எத்தனையேனும் பிரிவாற்ற கில்லாயால்) A "அகலகில்லேனிறையும்" என்று கிடவாநின்றாய். உனக்காக வன்றோ அவன் புறப்படமாட்டாதொழிகிறது; பிரியில் நீ பிழையாய், உன்னை இழக்கவொண்ணாதென்று.

(தத்துவம்) ஸத்யம்; (அன்றுதகவு)—(தகவன்று) த$_4$ர்மமன்று. எங்களாற்றாமையாலே சொல்லுகிறோமன்று; மெய்யே த$_4$ர்மமன்று—(தத்துவமன்று) ஸ்வரூபமன்று. உன் ஸ்வரூபம் நீர்மையன்று; இனி அவனில் உனக்குவாசியில்லை என்றிருக்கிறோம். 1. "பாபாநாம்" என்றவிடம் பொய் என்கிறார்கள். 2. த்$_3$விதா$_4$ ப$_4$ஜ்யேயம்" என்றதோடு 3 "ஶரணம் க$_3$தி:" என்றத்தோடு வாசியில்லை. இவள் ஸந்நிதி$_4$ யுண்டானால் பெறுகைக்குக் கபோதியில் கெட்ட பிராட்டியுண்டோ? என்றிருந்தார்கள்.

**19.**

## ஸ்வாபதே$_3$ஶவ்யாக்$_2$யாநம் - பத்தொன்பதாம் பாட்டு

அவ:— பத்தொன்பதாம் பாட்டு. (குத்துவிளக்கு இத்யாதி$_3$) இப்பாட்டில் புருஷகாரபூ$_4$தையான பிராட்டி கதவு திறக்கப்புக; "நம்முடையார்க்கு இவள் முற்படுவதே" என்று அவளை எழுந்திருக்கவொட்டாமல் கட்டிக்கொண்டு கிடக்கிற ஈஶ்வரனை எழுப்பி, அங்கு மறுமாற்றம் பிறவாமையாலே மீளவும் அவள் தன்னையே எழுப்புகிறார்கள்.

வ்யா:— (குத்துவிளக்கெரிய) ஜ்ஞாநம் ப்ரஜ்வலிக்க. (கோட்டுக்கால் கட்டில் மேல்) சதுர்த்த$_3$ந்தியான குவலயாபீட$_3$த்தினுடைய த$_3$ந்தங்களாலே செய்யப்பட்ட கால்களையுடைய கட்டில்மேல்; இத்தால் — சதுர்வித$_4$கர்த்ருத்வ மூலமான அஹங்காரகார்யமான ஶேஷத்வேகர்த்ருத்வம் ஜ்ஞாத்ருத்வேகர்த்ருத்வம் கர்த்ருத்வேகர்த்ருத்வம் போ$_4$க்த்ருத்வேகர்த்ருத்வமாகிற கால்களை யுடைத்தாய், அந்தக் கர்த்ருத்வ விஷயமான த$_4$ர்ம அர்த்த$_2$ காம மோக்ஷங்களாகிற பட்டங்களையுடைத்தாய்த் தத$_3$நுஷ்ட$_2$ாநாபி$_4$நிவேஶமாகிற கச்சையை உடைத்தாயிருக்கிற கட்டில்மேல் என்கிறது. (மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேலேறி) ஶேஷத்வாதி$_3$ கர்த்ருத்வ ராஹித்யத்தாலே ம்ருது$_3$வான அர்த்த$_2$பஞ்சகஜ்ஞாநமாகிற படுக்கைமேலேறி.

(கொத்தலர் பூங்குழல் இத்யாதி$_3$) வர்க்க$_3$வர்க்க$_3$மாக விகஸிதஜ்ஞாநரான ஆத்மாக்களாகிற புஷ்பங்களையுடைய ப$_4$க$_3$வத்$_3$விஷய ஸ்வவ்யாமோஹமாகிற அளகப$_4$ாரத்தையுடைய நப்பின்னைப் பிராட்டியுடைய போ$_4$கோ$_3$பகரணமான ப$_4$க்தியை ஸ்வவிஷயத்திலே வைத்துக்கொண்டு, அத்தால் விகஸிதஹ்ருத$_3$யனானவனே! (வாய்திறவாய்) நீ வாய்திறந்து ஒரு வார்த்தை அருளிச்செய்யவேணும் என்றவாறே: அவன் வாய்திறக்கப் புக;

---

A திருவாய் 6-1$_0$-10.